# முன்னுரை

1932-ல் தூலியா (மத்திய பிரதேசம்) சிறையில் இருந்த காலத்தில் ஆசார்ய விநோபா பாவே பிரதி ஞாயிறன்றும் அரசியல் கைதிகளான சகாக்களின் கூட்டத்தில் ஸ்ரீமத் பகவத் கீதையின் ஒவ்வொரு அத்தியாயத்திற்கும் ஒரு சொற்பொழிவு வீதம் செய்த மொத்தம் பதினெட்டு மராத்தி சொற்பொழிவுகள் சேர்ந்து 'கீதா பிரவசனே' என்ற பெயருடன் சுமார் இருபது வருஷங்களுக்கு முன்பு வெளிவந்து பல்லாயிரக்கணக்கான மக்களால் படித்துப் போற்றப்பட்ட நூலின் தமிழ் மொழி பெயர்ப்பாகும் இது. இது ஏற்கெனவே கன்னடம், தெலுங்கு, மலையாளம், ஹிந்தி, குஜராத்தி, முதலிய பாஷைகளில் வெளிவந்துள்ளது. ஹிந்தியிலோ ஆறு பதிப்புகள் வெளிவந்து ஒரு லக்ஷத்திற்கு அதிகம் பிரதிகள் செலவாகி இருக்கின்றன. தமிழிலும் சென்ற மூன்று வருஷமாக இதை வெளியிட முயற்சி செய்தும் இப்பொழுதுதான் சர்வ சேவா சங்கத்தின் ஆதரவில் எங்களால் வெளியிட முடிந்தது. விநோபாஜி அவர்கள் தமிழ் மொழிபெயர்ப்பு ஏன் இன்னும் வெளிவரவில்லை என்று அடிக்கடி கேட்பதுண்டு; எத்தனையோ அன்பர்கள் இதன் வரவை ஆவலுடன் எதிர்பார்த்துக்கொண்டு இருந்திருக்கிறார்கள். இப்பொழுதேனும் இந்த அரிய புத்தகத்தை வெளியிட முடிந்ததை எங்கள் பாக்யம் என்றே கருதுகிறோம்.

இந்நூலின் ஹிந்தி பதிப்பின் முன்னுரையில் விநோபாஜி கூறுவதாவது: "* * இந்தச் சொற்பொழிவுகள் நாட்டின் பொது மக்களைக் கருத்தில்கொண்டு தொண்டர்களின் முன்னிலையில் செய்யப்பட்டவை. இவைகளில் தத்துவக் கருத்துக்களின் அடிப்படையிலிருந்து வழுவாது, எத்தகைய வாதப் பிரதி வாதத்திலும் புகாமல் அன்றாடக் காரியங்களுக்குதவும் விஷயங்களே குறிப்பிடப் பட்டிருக்கின்றன. இதில் ஒவ்வொரு சுலோகத்தையும், சுலோகத்தின் ஒவ்வொரு சொல்லையும் அலசி ஆராயும் முயற்சியில் இறங்காது ஒவ்வொரு அத்தியாயத்தின் சாரமான கருத்து என்னவென்றே கவனிக்கப்பட்டிருக்கிறது. சாஸ்திரீய நோக்கு இருந்து வந்த போதிலும் அதற்குரிய பரிபாஷையை கூடியவரையில் தவிர்க்கவே முயற்சி செய்யப்பட்டிருக்கிறது. சாதாரணப் படிப்புள்ள கிராம மக்களுக்கும் பயன் படவேண்டுமென்பதே என் நோக்கம்.

"என் வாழ்க்கையில் கீதை பெற்றுள்ள இடத்தை என்னால் சொற்களின் மூலம் விவரிக்க முடியாது. கீதையினிடம் நான் பெற்றுள்ள உதவிகள் அனந்தம். நான் அதனிடம் உதவி கோரிப் பெறாத நாளே இல்லை. நான் புரிந்துகொண்டுள்ள வகையில் கீதையின் முக்கியக் கருத்துகளை இந்தப் பேச்சுகளில் விளக்க முயன்றிருக்கிறேன். * *"

ஸ்ரீ விநோபாஜி 16-3-51 தேதியிட்ட ஒரு கடிதத்தில் பின்வருமாறு எழுதுகிறார். "* * ஆனால் முக்கியமாய்ப் பயன்

முதற் பதிப்பு—ஆகஸ்டு 1953

விலை ரூ. 2-4-0

# GEETHAI PERURAIGAL

BY

ACHARYA VINOBA BHAVE

(Tamil version of the Mahrati book 'Gita Pravachane' or 'Lectures on the Bhagavad Gita')

Kabeer Printing Works, Madras (2298)

பெற்றவன் நானே. உலக நாடகத்தைப் பார்த்துக்கொண்டே இருக்கிறேன். முன்பு ஒரே இடத்தில் இருந்து பார்த்துக்கொண் டிருந்தவன் இப்பொழுது பல இடங்களில் சுற்றிப் பார்த்துக் கொண்டிருக்கிறேன். எண்ணிலடங்காத ஜன சமூகமும் அதன் தலைவர்களும் ஒரே வெள்ளத்தில் மிதந்து போய்க்கொண்டிருப்ப தைப் பார்க்கையில், ஆண்டவனின் லீலா விநோதங்களைப் பற்றி மட்டுமே சிந்திப்போம், வேறு ஜோலி எதுவுமே வேண்டாம் என்று

"**'கீதைப் பேருரைகள்' முழுமையும் படித்து அதைத் தமதாக்கிக் கொள்ளவேண்டும். அதன் நடை சாதாரண நடை; சாஸ்திரீய நடை அல்ல. அதில் 'கூறியது கூறல்' என்ற வழுவும் ஆங்காங்கு காணப்படும். ஆனால் அது கீர்த்தனங்களில் வரும் பல்லவியைப் போன்றது; ஒவ்வொரு சரணம் பாடி ஆனதும் பல்லவி திரும்ப பாடப்படுவதைப் போல. என் இந்தப் பேச்சுகள் புத்தக உருவில் வெளிவருமென்று நான் எண்ணிய வனே அல்ல. ஸானே குருஜி போன்ற இளகிய உள்ளம் படைத்த நண்பர் ஒருவர் சுருக்கு எழுத்து வேகத்தில் நான் பேசி யதை அவ்வப்பொழுது எழுதி வந்திராவிட்டால், பேசிய நான், கேட்டுக்கொண்டிருந்த அந்த இரண்டு, மூன்று நூறு பேர்களோடு இது முடிந்து போயிருக்கும். அப்பொழுதும் எனக்கு திருப்தி யாய்த்தான் இருந்திருக்கும். ஜம்னாலால்ஜிக்கு இவைகளினால் நன்மை ஏற்பட்டது என்று அறிந்தேன்; இது நான் எதிர்பார்த்த தற்கு அதிகமான இலாபம். என் பாவனைகளை உறுதியாக்கிக் கொள்ளும் கருத்துடன், நாம ஜபம் செய்வதைப் போல் நான் சொல்லிக் கொண்டே போனேன். அதிலிருந்து இவ்வளவு பெரும் பயன் கிடைத்திருக்கிறது என்றால், இதை ஆண்டவன் அரு ளென்றே சொல்லவேண்டும்."

இந்நூலின் ஹிந்தி பதிப்பை "தினம் படித்து மனனம் செய்யுங்கள்" என்ற குறிப்போடு விநோபாஜி கையெழுத்திட்டு தம் பூமிதான யாத்திரையில் நூற்றுக்கணக்கான பிரதிகள் விலைக்கு வினியோகித்து வருகிறார் என்று பத்திரிகைச் செய்தி களிலிருந்து தெரியவருகிறது. பூமிதானத் தொண்டு தமிழ் நாட்டிலும் தொடங்கப்பட்டிருக்கும் இத்தருணத்தில் இதை வெளி யிட முடிந்ததைக் குறித்து நாங்கள் பெருமகிழ்ச்சி கொள்ளு கிறோம். தமிழ் மக்கள் இதை வாங்கிப் படித்து கீதையின் தத்து வங்களையும் விநோபாஜியின் சீரிய நடத்தை, பேரறிவு, அரிய தவம் ஆகியவற்றையும் உணர்ந்து அவர் காட்டும் பாதையில் சென்று பயன் பெறுவார்களென்று நம்புகிறோம்.

திருப்பூர்
15-8-'53

ஸர்வோதயப் பிரசுராலயம்
(சர்வ சேவா சங்கம்)

# பொருளடக்கம்

பெற்றவன் நானே. உலக நாடகத்தைப் பார்த்துக்கொண்டே இருக்கிறேன். முன்பு ஒரே இடத்தில் இருந்து பார்த்துக்கொண் டிருந்தவன் இப்பொழுது பல இடங்களில் சுற்றிப் பார்த்துக் கொண்டிருக்கிறேன். எண்ணிலடங்காத ஜன சமூகமும் அதன் தலைவர்களும் ஒரே வெள்ளத்தில் மிதந்து போய்க்கொண்டிருப்ப தைப் பார்க்கையில், ஆண்டவனின் லீலா விநோதங்களைப் பற்றி மட்டுமே சிந்திப்போம், வேறு ஜோலி எதுவுமே வேண்டாம் என்று தோன்றுகிறது.

"*** 'கீதைப் பேருரைகள்' முழுமையும் படித்து அதைத் தமதாக்கிக் கொள்ளவேண்டும். அதன் நடை சாதாரண நடை; சாஸ்திரீய நடை அல்ல. அதில் 'கூறியது கூறல்' என்ற வழுவும் ஆங்காங்கு காணப்படும். ஆனால் அது கீர்த்தனங்களில் வரும் பல்லவியைப் போன்றது; ஒவ்வொரு சரணம் பாடி ஆனதும் பல்லவி திரும்ப பாடப்படுவதைப் போல. என் இந்தப் பேச்சுகள் புத்தக உருவில் வெளிவருமென்று நான் எண்ணிய வனே அல்ல. ஸானே குருஜி போன்ற இளகிய உள்ளம் படைத்த நண்பர் ஒருவர் சுருக்கு எழுத்து வேகத்தில் நான் பேசி யதை அவ்வப்பொழுது எழுதி வந்திராவிட்டால், பேசிய நான், கேட்டுக்கொண்டிருந்த அந்த இரண்டு, மூன்று நூறு பேர்களோடு இது முடிந்து போயிருக்கும். அப்பொழுதும் எனக்கு திருப்தி யாய்த்தான் இருந்திருக்கும். ஜம்னாலால்ஜிக்கு இவைகளினால் நன்மை ஏற்பட்டது என்று அறிந்தேன்; இது நான் எதிர்பார்த்த தற்கு அதிகமான இலாபம். என் பாவனைகளை உறுதியாக்கிக் கொள்ளும் கருத்துடன், நாம ஜபம் செய்வதைப் போல் நான் சொல்லிக் கொண்டே போனேன். அதிலிருந்து இவ்வளவு பெரும் பயன் கிடைத்திருக்கிறது என்றால், இதை ஆண்டவன் அரு ளென்றே சொல்லவேண்டும்."

இந்நூலின் ஹிந்தி பதிப்பை "தினம் படித்து மனனம் செய்யுங்கள்" என்ற குறிப்போடு விநோபாஜி கையெழுத்திட்டு தம் பூமிதான யாத்திரையில் நூற்றுக்கணக்கான பிரதிகள் விலைக்கு வினியோகித்து வருகிறார் என்று பத்திரிகைச் செய்தி களிலிருந்து தெரியவருகிறது. பூமிதானத் தொண்டு தமிழ் நாட்டிலும் தொடங்கப்பட்டிருக்கும் இத்தருணத்தில் இதை வெளி யிட முடிந்ததைக் குறித்து நாங்கள் பெருமகிழ்ச்சி கொள்ளு கிறோம். தமிழ் மக்கள் இதை வாங்கிப் படித்து கீதையின் தத்து வங்களையும் விநோபாஜியின் சீரிய நடத்தை, பேரறிவு, அரிய தவம் ஆகியவற்றையும் உணர்ந்து அவர் காட்டும் பாதையில் சென்று பயன் பெறுவார்களென்று நம்புகிறோம்.

திருப்பூர்
15-8-'53

ஸர்வோதயப் பிரசுராலயம்
(சர்வ சேவா சங்கம்)

# பொருளடக்கம்

# கீதைப் பேருரைகள்

## முதல் அத்தியாயம்

## தோற்றுவாய்—விஷாத யோகம்

### (1) மகாபாரத மத்தியிலே

அன்பார்ந்த சகோதரர்களே,

இன்றுமுதல் நான் ஸ்ரீமத் பகவத்கீதையைப் பற்றிச் சொல்லப் போகிறேன். கீதைக்கும் எனக்குமுள்ள தொடர்பு தர்க்கத்தை மீறியது. என் உடல் தாயின் பாலினால் எவ்வளவு வளர்ந்திருக்கிறதோ அதைவிட அதிகமாய் என் உள்ளமும் அறிவும் கீதையாம் பாலினால் வளம் பெற்றிருக்கின்றன. உள்ளத் தொடர்பு உள்ள இடத்தில் தர்க்கத்திற்கு இடம் இருப்பதில்லை. தர்க்கத்தைத் தகர்த்து சிரத்தை, சோதனை என்னும் இரு சிறகுகளினால் நான் கீதைவானில் என் சக்திக்கு உகந்தவகையில் எழும்பி வட்டமிட்டவண்ண மிருக்கிறேன். நான் பெரும்பாலும் இருப்பது கீதைச் சூழ்நிலையிலேதான். கீதையை என் உயிர்த் தத்துவமென்றே கூறலாம். நான் எவருடனேனும் கீதையைக் குறித்து உரையாடுகையில் கீதைக் கடலில் நீந்திக்கொண்டிருக்க, தனித்திருக்கையிலோ அந்த அமுத சாகரத்தினடியில் ஆழ்ந்து அமர்ந்துவிடுகிறேன். இந்த கீதைத் தாயின் வரலாற்றை நான் ஞாயிறுதோறும் உங்களுக்குக் கூறுவதென முடிவாயிருக்கிறது.

கீதை உருவாக்கப் பட்டிருப்பது மகாபாரதத்திலாகும். கீதை மகாபாரதத்தின் மத்தியில் ஒரு குத்து விளக்கைப் போல் அமைந்திருக்க அதன் ஒளி மகாபாரதம் முழுதும் வீசிக்கொண்டிருக்கிறது. ஒரு பக்கம் ஆறு பர்வங்களும் மறு பக்கம் பன்னிரண்டு பர்வங்களும் இருக்க, அவற்றினிடையில் இது அமைந்திருப்பதைப் போலவே ஒருபுறம் ஏழு அக்ஷௌஹிணியும் மறுபுறம் பதினொரு அக்ஷௌஹிணியுமாய் சேனை அணிவகுத்து நிற்க அவைகளின் இடையே கீதை போதிக்கப்படுகிறது.

மகாபாரதமும், இராமாயணமும் நம் தேசீய நூல்களாகும். அவற்றில் வர்ணிக்கப்படும் பாத்திரங்கள் நம் வாழ்க்கையில் ஒன்றிக் கலந்துபோய் விட்டவர்கள். இராமர், சீதை, தருமர், திரௌபதி, பீஷ்மர், அனுமார் முதலிய இராமாயண, மகாபாரத பாத்திரங்களினால் பல்லாயிர வருஷங்களாக இந்திய வாழ்க்கை உயிரூட்டப் பெற்று வந்திருக்கிறது. உலகின் பிற மகா காவியங்களின் பாத்திரங்கள் மக்கள் வாழ்க்கையில் இவ்வாறு இரண்டறக் கலந்திருக்கக் காணோம். இவ்வகையில் மகாபாரதமும், இராமாயணமும் அற்புதமான நூல்கள் என்பதில் ஐயமில்லை. இராமாயணம் ஒரு இனிய நீதி நூலாயின், மகாபாரதமோ ஒரு பரந்த சமூக சாஸ்திரமாகும். வியாச முனிவர் ஒரு இலட்சம் சுலோகங்கள் எழுதி எண்ணில் அடங்காச் சித்திரங்களையும் வரலாறுகளையும் நடவடிக்கைகளையும் உள்ளது உள்ளவாறே பேராற்றலுடன் வர்ணித்திருக்கிறார். ஆண்டவன் ஒருவனைத் தவிர குற்றங் குறைகளே அற்றவரென்று வேறு எவரையும் சொல்லுவதற்கில்லை; அதேவகையில் இவ்வுலகில் குற்றமே உருவானவனெனத்தக்கவனும் எவனுமில்லை என்பதை மகாபாரதம் வெகு தெளிவாய் எடுத்துக் கூறுகிறது. இதில் பீஷ்மர், யுதிஷ்டிரர் ஆகியோருடைய குறைகளைக் காட்டியிருப்பது போலவே, கர்ணன், துரியோதனன் ஆகியோரின் நற்குணங்களும் விளக்கப் பெற்றிருக்கின்றன. மானிட வாழ்க்கையை வெள்ளை, கறுப்பு ஆகிய இருவகை நூல்களினால் நெய்த ஆடை என்று மகாபாரதம் கூறுகிறது. தாம் சார்பற்றுத் தனித்து நின்றுகொண்டு வியாசபகவான் உலகத்தின்—பரந்த சம்சாரத்தின்—இருளும் ஒளியும் கலந்து அமைந்த சித்திரத்தைத் திரையிலிட்டுக் காட்டுகிறார். வியாசதேவரின் சிறிதும் சார்பற்றதும் மிகச் சீரியதுமான சிருஷ்டித்திறனால் மகாபாரதம் ஒரு மிகப் பெரிய தங்கச் சுரங்கமாகவே அமைந்துவிட்டது. அதைத் தோண்டித் தேவையான தங்கத்தை எடுத்துச் செல்லுவோமாக!

வியாசதேவர் இவ்வளவு பெரிய மகாபாரதத்தை எழுதினாரே, அவர் தம் அபிப்பிராயமென்று எதையேனும் சொல்ல விரும்பினாரா, இல்லையா? தம் முக்கியமான உபதேசமென்று ஒன்றை எங்கேனும் தந்திருக்கிறாரா? எந்த கட்டத்தில் வியாசதேவர் சமாதி நிலையில் காட்சி

அளிக்கிருர்? மகாபாரதத்தில் ஆங்காங்கு தத்துவ ஞான மும், உபதேசங்களும் காடுபோல் மலிந்து காணப்படு கின்றன. ஆனல் இந்தத் தத்துவஞானம், உபதேசம் ஆகியவற்றிற்கும் நூல் முழுமைக்குமே சாரமான ரகசி யத்தை அவர் எங்கேனும் குறித்திருக்கிருரா? ஆம், குறித் திருக்கிருர். மகாபாரதம் அனைத்திலிருந்தும் கடைந் தெடுத்த வெண்ணெயை வியாசர் பகவத் கீதையில் திரட்டி வைத்திருக்கிருர். கீதை வியாசதேவரின் முக்கிய போதனையும் அவரது சிந்தனையின் சாரச் சேமிப்புமாகும். இதன் அடிப்படையிலேயே "நான் முனிவருள் வியாசன்" என்ற திருவாக்கு அர்த்த புஷ்டியுள்ளதாய் அமையவிருக் கிறது. பண்டைக்காலம் தொட்டே கீதைக்கு உபநிடதங் களுக்குரிய பதவி கிட்டிவந்திருக்கிறது. கீதை உபநிடதங் களுக்கெல்லாம் உபநிடதமாகும். ஏனெனில், உபநிடதங் கள் அனைத்தையும் கறந்து கீதையாம் பாலை பகவான் அர் ஜுனனை வியாஜமாய்க்கொண்டு உலகிற்கு வழங்கியிருக் கிருர். வாழ்க்கையின் மலர்ச்சிக்குத் தேவையான ஒவ்வொரு கருத்தும் கீதையில் இடம் பெற்றுள்ளது. இதனலேயே கீதையை தர்ம ஞானத்தின் பொக்கிஷமென்று உண்மை யாகவே அனுபவ முள்ளவர்கள் சொல்லியிருக்கிருர்கள். கீதை இந்து மதத்தின் (சிறியதாயினும்) முக்கியமான தொரு நூலாகும்.

கீதையை ஸ்ரீ கிருஷ்ணர் உபதேசித்தருளினர் என் பதை யாவரும் அறிவர். இந்தப் பெரும் போதனையைக் கேட்ட பக்த அர்ஜுனன் இந்தப் போதனையினல் தானும் கிருஷ்ணன் என்று குறிப்பிடப்படும் அளவுக்கு கிருஷ்ண ருடைய தன்மையை எய்திவிட்டான். பகவான், பக்தன் ஆகிய இருவரின் உள்ளக் கிடக்கையையும் வெளியிடும் வியாசதேவரையும் கிருஷ்ணன் என்றே மக்கள் கருதத் தொடங்குமளவுக்கு அவரும் அவர்களுடன் ஒன்றிவிட்டார். போதிப்பவனும் கிருஷ்ணன், கேட்பவனும் கிருஷ்ணன், அதைப் புனைவோனும் கிருஷ்ணன்—இவ்வாறு இம் மூவ ரிடையிலும் ஒருமை தோன்றியது போலாய்விட்டது; மூவரும் சமாதி நிலையை எய்தியவர் போலாய்விட்டனர். கீதைப் பயிற்சிக்கு இத்தகைய மனஒருமை இன்றியமை யாதது.

## (2) அர்ஜுனன் நிற்கும் அரங்கு

சிலர் இரண்டாம் அத்தியாயத்திலிருந்தே கீதை ஆரம்பமாவதாய்க் கொள்ளவேண்டு மென்கிறார்கள். இரண்டாம் அத்தியாயத்தின் பதினொன்றாம் சுலோகத்திலிருந்து நேரிடையான உபதேசம் தொடங்குகிறதெனில், அங்கிருந்தே ஆரம்பமென்று ஏன் கருதக்கூடாது? ஒருவரோ என்னிடம், "பகவான் எழுத்துக்களில் 'அ'காரத்தை கடவுள் அம்சமென்று கூறியிருக்கிறார். இங்கே, 'अशोच्यानन्वशोचस्त्वम्' (அசோச்யானன்வசோசஸ்த்வம்) என்பதின் ஆரம்பத்தில் தானாகவே 'அ'காரம் வந்திருக்கிறது. ஆகையால் அங்கிருந்துதான் ஆரம்பமென்று கொள்ளவேண்டும்," என்றார். இந்த யுக்திவாதத்தை நாம் புறக்கணித்தாலும், இங்கிருந்து ஆரம்பமென்று கொள்ளுதல் பலவகைகளில் உசிதமே. ஆயினும், அதற்கு முன்னுள்ள முன்னுரைப் பகுதிக்குள்ள சிறப்பு இருக்கவே இருக்கிறது. அர்ஜுனன் எந்த அரங்கில் நிற்கிறான், எந்த விஷயத்தை விளக்குவதற்காக கீதை உதித்தது என்பவை இந்த முன்னுரைக் கதைப் பகுதி இல்லையேல் நன்கு விளங்கா.

அர்ஜுனனுடைய கலக்கத்தை அகற்றி அவனைப் போரில் இறங்கச் செய்வதற்கென்றே கீதை போதிக்கப்பட்டிருக்கிறதென்று சிலர் கூறுகிறார்கள். அவர்களின் அபிப்பிராயப்படி கீதை கர்மயோகத்தை மட்டும் போதியாது யுத்த யோகத்தையும் விளக்குவதாகிறது. ஆனால் சிறிது சிந்தித்துப் பார்ப்போமாயின் இந்தக் கூற்றிலுள்ள பிழை புலனாகும். பதினெட்டு அக்ஷௌஹிணி கொண்ட படை போரிடச் சித்தமாயிருந்தது. அப்படியானால் கீதை முழுவதையும் போதித்து பகவான் அர்ஜுனனை அப்படைக்குத் தகுந்தவனாக்கினார் என்று சொல்லுவதா? கலங்கியிருந்தது அர்ஜுனனே யன்றி அந்தப் படையல்ல. அப்படியானால் படைக்கிருந்த தகுதி அர்ஜுனனுடையதை விட அதிகமா? இதை நாம் கற்பனையில் கூடக் கருத முடியாது. அர்ஜுனன் போரிலிருந்து புறம் போக விரும்பியதற்குக் காரணம் பயமல்ல. நூற்றுக் கணக்கான போர்களில் தன் கைவரிசையைக் காட்டிய மகாவீரனுக்கும் அவன். 'உத்தரன் மாடுபிடி' சமயத்தில்

அவன் தனியனுகவே பீஷ்மர், துரோணர், கர்ணன் ஆகி யோரை மண்ணைக் கௌவச் செய்தான். எங்கும் வெற்றி, எதிலும் வெற்றி என்பதையே அவன் இதுவரை அறிவான். மானிடர் அனைவரிலும் ஒப்பற்ற உண்மை மகன் என்று புகழ்பெற்றவன் அவன். அவனுடைய ஒவ்வொரு மயிர்க் காம்பிலிருந்தும் வீரம் வழிந்துகொண்டிருந்தது. அர்ஜு னனைத் தூண்டுவதற்காக, அவனுக்கு ரோஷம் ஊட்டுவதற் காக கிருஷ்ணரும் அவன்மீது கோழைத்தனத்தைச் சாட்டிப் பார்த்தார். ஆனால் அவருடைய அந்த முயற்சி குறிதவறிவிட்டது. பிறகு அவர் வேறு ஆதாரங்களைக் கொண்டே ஞான, விஞ்ஞானங்களை விளக்கிக் கூற வேண்டியதாயிற்று. ஆகவே, கோழைத்தனத்தை அகற்று தல் என்ற சுளுவான நோக்கம் கீதையினுடையதல்ல என்பது உறுதி.

வேறு சிலர் அர்ஜுனனுடைய அஹிம்சைப் போக்கை மாற்றி அவனைப் போரில் ஈடுபடச் செய்யும்பொருட்டு கீதை போதிக்கப்பட்டதென்று சொல்லுகிறார்கள். என் அபிப் பிராயத்தில் இக்கூற்றும் சரியல்ல. இதை அலசிப் பார்ப்ப தற்கு நாம் முதலில் அர்ஜுனன் நிற்கும் அரங்கை அறிந்துகொள்ள வேண்டும். இவ்விஷயத்தில் முதல் அத்தி யாயம், அதிலிருந்து இரண்டாம் அத்தியாயத்தில் புகுந் துள்ள பகுதி ஆகியவற்றிலிருந்து நமக்கு மிகுந்த உதவி கிடைக்கும்.

போர்க்களத்தில் நின்றுகொண்டிருக்கும் அர்ஜுனன் உறுதியும் கடமையிற் கருத்தும் கொண்டிருந்தான். க்ஷத்திரியப் பண்பு அவனிடம் இயற்கையிலேயே அமைந் திருந்தது. போரைத் தவிர்க்கும்பொருட்டு ஆனவரை முயன்று பார்த்தும் அதைத் தவிர்க்க இயலவில்லை. மிக மிகக்குறைந்த கோரிக்கையைச் செய்தும் ஸ்ரீ கிருஷ்ணரைப் போன்றவர் மத்தியஸ்தம் செய்தும் இரண்டுமே பயனற் றுப் போயின. இந்நிலையில் பல்வேறு நாடுகளின் அரசர் களை ஒருங்குதிரட்டி, ஸ்ரீ கிருஷ்ணரைத் தன் தேர்ப் பாகனுய்க் கொண்டு அவன் போர்க்களத்தில் நிற்கிறுன். அப்பொழுது வீரனுக்குரிய உற்சாகத்துடன் அவன் கிருஷ்ணரை விளித்து, "இரு படைகளுக்குமிடையே என் தேரை ஓட்டி நிறுத்துங்கள். என்னுடன் போரிடச் சித்தமாய் வந்திருப்பவர்களுடைய முகத்தை நான் பார்க்

கட்டும்'', என்று சொல்லுகிறான். கிருஷ்ணர் அவ்வாறே செய்தார். அர்ஜுனன் நாற்புறமும் பார்வையைச் செலுத்தியபொழுது அவன் கண்களில் பட்டதென்ன? இரு புறங்களிலும் தன் உற்றார் உறவினர் பந்துமித்திரர்கள் ஆகியோரின் மாபெருங் குழு; பாட்டன், தந்தை, பிள்ளை, பேரன்மார், அன்பார்ந்த நட்பினர்-சுற்றத்தார் ஆகியோர்; நான்கு தலைமுறையினர் தம்முயிரைத் துறக்கவும் பிறர் உயிரை வாங்கவும் முடிவு செய்துகொண்டு ஒருங்கு கூடியிருக்கிறார்கள். இதற்கு முன்பே இவ்வாறெல்லாம் இருக்குமென்று அவன் ஊகியாதவன் அல்ல. ஆனால் நிதர்சனமாய் ஒன்றைப் பார்ப்பதனால் மனதில் எழும் உணர்ச்சியே வேறு தன்மையதாகும். அந்த உறவினரின் பெருங்கூட்டத்தைக் கண்ட அவனது உள்ளத்தில் ஒரு கொந்தளிப்புத் தோன்றுகிறது. அவன் மனம் நோகிறான். இன்று வரையில் அவன் எத்தனையோ போர்களில் எண்ணத் தொலையாத வீரர்களை ஸம்ஹாரம் செய்திருக்கிறான். அப்பொழுதெல்லாம் அவனுக்கு வருத்தம் தோன்றியதில்லை; அவனது காண்டீவம் கையிலிருந்து நழுவியதில்லை; அவன் உடல் நடுங்கியதோ கண்களில் நீர் பெருகியதோ இல்லை. ஆனால் இப்பொழுது மட்டும் இப்படி ஏன் ஆயிற்று? அசோகனைப்போல, 'அவனுடைய மனதில் அஹிம்சை உணர்ச்சி தலையெடுத்து விட்டதா? இல்லை. இது தம்மைச் சேர்ந்தவர்களிடம் ஒருவனுக்குள்ள பாசமேயல்லாது வேறல்ல. இப்பொழுதும் குருமாரும், பந்துக்களும், நண்பர்களும் எதிரில் இருந்திராவிட்டால் அவன் சத்துருக்களின் சிரங்களை வெட்டி பந்துகளைப்போல் வீசியிருப்பான். ஆனால் இந்தப் பாசத்திலிருந்து விளைந்த மோகமானது அவனுடைய கடமைப் பற்றைக் கவிந்துகொள்ளவே அவனுக்குத் தத்துவ அறிவு தோன்றலாயிற்று. கடமையில் உறுதியுள்ள மனிதனை மோகம் கவர்ந்து கொள்ளும்பொழுதும் அனைவரும் அறியக் கடமையிலிருந்து வழுவுவதை அவனால் பொறுக்க இயலுவதில்லை. அவன் அதற்கு உயரிய கருத்தென்ற ஆடையொன்றை அணிவிக்கிறான். அர்ஜுனனுக்கும் இதே நிலைமைதான் ஏற்பட்டது. இப்பொழுது அவன் போர்புரிவதே பாவமாகுமென்று பொய்யும் புளுகுமாய்ப் புனைந்து கூறத் தொடங்கினான். போரினால் குலம் அழியும், தர்மம் தகரும், மக்கள் மனம்போனபடி நடக்கத் தொடங்கு

வர், விபசார வாதம் பரவும், பஞ்சம் வரும், சமூகத்தில் பலவகைச் சங்கடங்கள் தோன்றும் என்றெல்லாம் பல வாதங்களை எடுத்துக் கூறி அவன் கிருஷ்ணருக்கே புத்தி புகட்டலானான்.

இங்கே எனக்கு ஒரு நீதிபதியின் கதை நினைவுக்கு வருகிறது. ஒரு நீதிபதி. அவன் நூற்றுக்கணக்கான குற்றவாளிகளுக்கு மரண தண்டனை விதித்தவன். ஆனால் ஒரு நாள் அவனுடைய மகனே கொலைக் குற்றத்திற்காக அவன் எதிரிற் கொணர்ந்து நிறுத்தப்பட்டான். அவன் கொலை செய்தது ருஜுவாய் விடவே தன் மகனுக்குத் தூக்கு தண்டனை விதிக்கவேண்டிய சந்தர்ப்பம் ஏற்பட்டு விட்டது. அப்பொழுது அவன் முன்னும் பின்னும் பார்க்க லானான். "தூக்கு தண்டனை என்பது மனிதத் தன்மை யில்லாதது. இத்தகைய தண்டனை யளித்தல் மனிதனுக்கு அழகல்ல. இதனால் குற்றவாளியைத் திருத்தலாம் என்ற எண்ணத்திற்கே இடமில்லாமற் போகிறது. கொலை செய்த வன் உணர்ச்சி வேகத்தில் ஆத்திரத்திலோ, ஆவேசத் திலோ கொலை செய்துவிட்டான். ஆனால் அவனுடைய தலையிலிருந்து கொலை செய்யத் தூண்டிய பூதம் இறங்கி விட்ட பிறகு அவனைக் கடின சித்தத்துடன் தூக்குமேடையி லேற்றிக் கொல்லுதல் சமூகத்தின் மனிதத் தன்மையையே அவமானத்திற்குள்ளாக்குவதாகும், களங்கப் படுத்துவ தாகும்" என்று அவன் தன் அறிவின் வளத்தை வாதங் களில் விளம்பலானான். தன் மகன் எதிரில் வந்து நின்றிரா விட்டால் நீதிபதி தன் ஆயுள் முழுதும் சிறிதும் அஞ்சாது தூக்கு தண்டனை விதித்தவண்ண மிருந்திருப்பான். ஆனால் தன் பிள்ளையிடம்கொண்ட பாசத்தினால் இம்மாதிரி யெல்லாம் பேசலானான். அவன் பேசியது உள்ளத்தி லிருந்து வந்த பேச்சல்ல; பிள்ளைப் பாசத்திலிருந்து பிறந்த பேச்சே. 'இவன் என் பிள்ளை' என்ற உடைமை உணர்ச்சியிலிருந்து இந்த வாதங்களெல்லாம் பிறந்தன.

அர்ஜுனனுடைய போக்கும் இந்த நீதிபதியினது போன்றே இருந்தது. அவன் கூறிய வாதங்கள் தவறானவையல்ல. சென்ற மகாயுத்தத்தில் உலகமனைத்தும் இதே விளைவுகளை நிதர்சனமாகக் கண்டிருக்கிறது. ஆனால் இதில் சிந்திக்கவேண்டிய விஷயம், அது அர்ஜுன னுடைய உண்மை அறிவல்ல, வெறும் உலக அறிவே

யாகும் என்பதே. கிருஷ்ணருக்கு இது தெரியும். ஆகை யால் அவர் அவைகளைச் சிறிதும் பொருட்படுத்தாது அவனுடைய மோகத்தை அகற்றுவதற்கு நேரிடையான முயற்சியில் இறங்கிவிட்டார். அர்ஜுனன் உண்மை யாகவே அஹிம்சாவாதியாக மாறியிருந்தால் ஒருவர் எவ்வளவுதான் ஞான, விஞ்ஞானங்களைப்பற்றிக் கூறி யிருப்பினும் அடிப்படைக் கேள்விக்கு விடை கிட்டாத வரையில் அவனுக்குச் சமாதானம் ஏற்பட்டிராது. ஆனால் கீதை முழுவதிலும் இந்தக் கேள்விக்கு எங்குமே விடை யளிக்கப்படாதிருந்த போதிலும் அர்ஜுனனுக்குச் சமா தானம் ஏற்பட்டிருக்கிறது. இவை அனைத்தின் தெளிந்த கருத்து: அர்ஜுனன் அஹிம்சைப் போக்குள்ளவனல்ல, போரில் இஷ்டமுள்ளவன் என்பதே. அவனுடைய அபிப்பிராயத்தில் போர் அவனுக்கு இயற்கையாகவே அமைந்த தவிர்க்க முடியாத உறுதியான கடமையாகும். அதை அவன் மோகத்தில் சிக்குண்டு தட்டிக்கழிக்க விரும்பினான். கீதை இந்த மோகத்தின் தலையில் குண்டாந் தடிகொண்டு தாக்கிற்று.

## (3) கீதையின் குறிக்கோள்: மோகத்தைக் கொல்லல்

அர்ஜுனன் அஹிம்சையைப் பற்றி மட்டுமா, சந்நி யாசம் பற்றிய பாஷையும் பேசத் தொடங்கி விட்டான். 'இரத்தம் தோய்ந்த இந்த க்ஷத்திரிய தர்மத்தைவிட சந்நி யாசமே சிறந்தது' என்று அவன் சொல்லுகிறான். ஆனால் அது அர்ஜுனனுடைய சுதர்மமா? அவனது தொழிலா அது? அர்ஜுனன் வெகு ஆனந்தமாய்ச் சந்நியாசி வேஷம் போட முடிந்த போதிலும் அதன்படி எப்படி நடக்க முடியும்? சந்நியாசம் என்று சொல்லிக்கொண்டு அவன் காட்டிற்குப் போனாலும் அங்கே மான் வேட்டையாடத் தொடங்கி விடுவான். ஆகையால் பகவான், "அர்ஜுனா, நீ 'நான் போர் புரிய மாட்டேன்' என்று சொல்லுகிறாயே, இது ஒரு மயக்கம். இன்று வரையில் உனக்கு இயற்கையாய் இருந்து வந்திருப்பது உன்னைச் சண்டை செய்வியாது விடாது" என்று அப்பட்டமாகச் சொல்லியே விட்டார்.

அர்ஜுனனுக்கு சுதர்மம் விகுணமாகத் தோன்றலா

யிற்று. ஆனால் சுதர்மம் எவ்வளவு தான் விகுணமாயிருந்த போதிலும் அதிலிருந்தபடியேதான் மனிதன் தன்னை வளரச் செய்ய வேண்டும்; அதிலிருந்தால் மட்டுமே வளர்ச்சி பெற முடியும். இதில் பெருமையைப் பற்றிய பிரச்னைக்கே இடமில்லை. வளர்ச்சியின் சூத்திரமாகும் இது. பெரியதென்று கருதி ஏற்பதும் சிறிய தென்பதனால் விட்டுவிடுவதும் சுதர்மத்தின் விஷயத்தில் தகாது. உண்மையில் அது பெரிதுமல்ல, சிறிதுமல்ல. அது நமது சக்திக்கு ஒத்து அமைகிறது. 'श्रेयान् स्वधर्मो विगुण:' (ஶ்ரேயான் ஸ்வதர்மோ விகுண:) என்ற கீதை வசனத்திலுள்ள 'தர்மம்' என்பதற்கு இந்து தர்மம் (மதம்), இஸ்லாம், கிறிஸ்தவ மதம் என்பவையல்ல பொருள். ஒவ்வொரு மனிதனுக்கும் சொந்தமான வெவ்வேறு தர்மம் உண்டு. என் எதிரில் இங்கேயுள்ள இருநூறு பேர்களுக்கும் இருநூறு விதமான தர்மங்கள் உண்டு. எனக்கும் பத்து வருஷங்களுக்கு முன் இருந்த தர்மம் இப்பொழுது இல்லை; இப்பொழுதுள்ளது பத்து வருஷங்களுக்குப் பிறகு இராது. சிந்தனை, அனுபவம் ஆகியவைகளின் பயனாக மனிதனுடைய போக்கு மாறுவதை யொட்டி ஏற்கெனவே இருந்த தர்மம் அகல, புதிய தர்மம் வந்து சேர்ந்து கொண்டேயிருக்கிறது. முரட்டுப் பிடிவாதமாய் எதையும் செய்யலாகாது.

பிறருடைய தர்மம் சிறந்ததாகத் தோன்றியபோதிலும் அதை ஏற்பதனால் எனக்கு நன்மையுண்டாகாது. சூரியனுடைய ஒளி எனக்குப் பிடித்தமானது. அந்த ஒளியினால் நான் வளர்ந்து கொண்டே இருக்கிறேன். சூரியன் என் வணக்கத்திற்கும் உரியது. ஆனால் இதற்காக நான் பூமியிலிருப்பதை விட்டு அதனிடம் போக விரும்புவேனாயின் பொசுங்கிச் சாம்பலாகி விடுவேன். இதற்கு மாறாக பூமியிலிருப்பது குறைவாயினும், சூரியனுடன் ஒப்பிடும் பொழுது பூமி முற்றிலும் இழிந்ததாயினும், அது இயற்கையில் ஒளியற்றதாயிருப்பினும், சூரியனது உஷ்ணத்தை சகிக்கும் சக்தி என்னிடம் இல்லாதிருக்கும் வரையில் நான் அதனிடமிருந்து விலகி பூமியில் இருந்தவாறே தான் என்னை வளர்த்துக் கொள்ள வேண்டும். மீன்களிடம், 'நீரைவிட பால் அதிக விலையுள்ளது. நீங்கள் பாலில் வந்து இருங்கள்' என்று எவரேனும் சொல்லுவாரானால் மீன்கள் அதை

ஏற்றுக் கொள்ளுமா ? மீன்கள் நீரில் தான் வாழமுடியும், பாலில் அவை இறந்துபோம்.

பிறருடைய தர்மம் சுலுவாய்த் தோன்றிய போதிலும் அதை ஏற்கக்கூடாது. பெரும்பாலும் சுலபமென்று தோன்றுவது வெறும் தோற்றமாகவே தானிருக்கும். குடும்ப வாழ்க்கையில் குழந்தை குட்டிகளைச் சரிவரப் பராமரிக்க முடியவில்லை என்று அலுத்துக் கொண்டு கிருகஸ்தன் ஒருவன் சந்நியாசத்தை ஏற்ருல் அது வெறும் வேஷமாக முடியும், நிர்வகிப்பதும் சிரமமாயிருக்கும். சந்தர்ப்பம் வந்ததும் அவனுடைய வாசனைகள் தலை தூக்கத் தொடங்கும். உலக வாழ்க்கையின் சுமை தாங்க முடியவில்லை என்பதற்காகக் காட்டிற்குப் போகும் ஒருவன் முதலில் அங்கே ஒரு சிறிய குடி அமைப்பான்; பிறகு அதைக் காக்கும் பொருட்டு வேலி கட்டுவான். இவ்வாறு செய்து கொண்டேபோய் அங்கும் சிறிய சம்சாரம் போய் பெரிய சம்சாரம் நடத்த வேண்டிய சந்தர்ப்பம் ஏற்பட்டு விடும். உண்மையில் மனதில் வைராக்கியம் இருக்கு மாருல் சந்நியாசம் அவ்வளவு கடினமா ? சந்நியாசத்தை சுலபமாக்க உதவும் ஸ்மிருதி வசனங்கள் இருக்கவே இருக்கின்றன. ஆனுல் முக்கியமான விஷயம் ஒருவனுடைய உண்மையான மனப் போக்கைப் பற்றியது. ஒருவனுடைய மனப் போக்கை அனுசரித்தே அவனது தர்மம் அமையும் ; உயர்ந்தது, தாழ்ந்தது, சுலு, கடினம் என்ற பேச்சுக்கே இடமில்லை. வளர்ச்சி உண்மையானதா யிருக்க வேண்டும் ; மாற்றம் உண்மையானதா யிருக்க வேண்டும்.

ஆனுல் உணர்ச்சி வசப்பட்ட சிலர், " யுத்த தர்மத்தை விட சந்நியாசம் உண்மையில் எப்பொழுமே சிறந்ததாயின் பகவான் அர்ஜுனனை ஏன் உண்மையான சந்நியாசியாக்க வில்லை. இது அவருக்கு முடியாததா ?" என்று கேட்கிருர் கள். அவரால் ஆகாதது எதுவுமில்லைதான். ஆனுல் அர்ஜுனன் சாதித்தது என்று அப்பொழுது நாம் எதைச் சொல்ல முடியும் ? ஆண்டவன் சுதந்திரத்தை அளித்திருக் கிருர். ஆகையால் ஒவ்வொரு மனிதனும் தானே முயன்று கொண்டிருப்பதில் தான் ஆனந்தமிருக்கிறது. சிறு குழந்தைகள் தாமே சித்திரங்கள் வரைவதில் தான் மகிழ்ச்சி யுறுகிருர்கள். அவர்கள் கையைப் பிடித்துப் பிறர் சித்திரம்

வரைவிப்பது அவர்களுக்குப் பிடிப்பதில்லை. ஆசிரியர்கள் குழந்தைகளுக்குள்ள கேள்விகளுக்குத் தாமே பதில் சொல்லிக் கொடுத்து விட்டால் குழந்தைகளின் அறிவு வளர்வது தான் எப்படி? ஆகையால் தாய், தந்தை, குரு ஆகியோருடைய வேலை வழி காட்டுவதோடு நின்று விடுகிறது. கடவுள் நம் உள்ளிருந்து நமக்கு வழி துலக்கிக் கொண்டே யிருக்கிருர். இதற்கதிகமாக அவர் எதுவும் செய்வதில்லை. குயவனைப் போல ஒவ்வொருவனையும் ஆண்டவன் தட்டிக் கொட்டிச் சரிப்படுத்திக் கொண்டே யிருப்பானுஞல் அதில் விசேஷம் என்ன இருக்கிறது? நாம் மண்பாண்டங்கள் அல்லவே, சின்மயராயிற்றே!

இந்த விளக்கத்திலிருந்து கீதை தோன்றியது சுதர்மத்திற்குத் தடையாயுள்ள மோகத்தை அகற்றுவதற்காக வென்று உங்களுக்குப் புரிந்திருக்கும். அர்ஜுனன் தர்மத்தை மறந்து போயிருந்தான். சுதர்மம் எது என்னும் விஷயத்தில் அவனது மனதில் மோகம் தோன்றியிருந்தது. ஸ்ரீகிருஷ்ணர் முதலில் கண்டித்ததுமே அர்ஜுனன் இதைத் தானே ஒப்புக் கொள்கிருன். அந்த மோகத்தை அந்த மமத்துவம் அல்லது தற்பற்றை, அந்த வாஞ்சையை அகற்றுவதே கீதையின் முக்கியக் காரியம். இதனுலேயே கீதை முழுமையும் சொல்லியான பிறகு பகவான், "அர்ஜுனு, உன் மோகம் தொலைந்ததா?" என்று கேட்க அர்ஜுனன், "ஆம். பகவானே, மோகம் அழிந்தது. சுதர்மம் விளங்கிற்று," என்று விடையளிக்கிருன். இவ்வாறு கீதையின் தொடக்கத்தையும் முடிவையும் இணைத்துப் பார்ப்போமாஞல் மோகத்தை அகற்றுதலே அதன் குறிக்கோளென்பது விளங்குகிறது. கீதை மட்டுமல்ல, மகாபாரதம் முழுமையின் குறிக்கோளும் இதுவே. வியாசர் மகாபாரதத்தின் தொடக்கத்திலேயே, "மக்களின் உள்ளங்களிலுள்ள மோகப் படலத்தை அகற்றுவதற்காகவே நான் இந்த இதிகாச விளக்கைக் கொளுத்துகிறேன்" என்கிருர்.

## (4) வெள்ளை மனத்தின் தகுதி

மேலே வரும் கீதை முழுவதையும் புரிந்து கொள்வதற்கு அர்ஜுனனைப் பற்றிய இந்த முன்னுரை நமக்கு மிகவும் பயன்படும். இதற்காக நாம் இதற்கு நன்றி செலுத்துவோமாக! ஆனுல் இதிலிருந்து நமக்கு வேருெரு

நன்மையும் விளைகிறது. அர்ஜுனனைக் குறித்த இந்த முன்னுரையில் அவனுடைய மனதின் வெள்ளைத் தனம் புலனாகிறது. அர்ஜுனன் என்ற சொல்லுக்கே, கபடமற்ற சுபாவமுள்ளவன் என்பது பொருள். அவனுடைய மனதில் தோன்றிய நல்லவை, தீயவை என்ற எல்லா எண்ணங்களையும் அவன் ஒளிவு மறைவின்றி பகவானெதிரில் வெளியிட்டுவிட்டான்; எதையும் மறைத்து வைத்துக் கொள்ளவில்லை. இறுதியில் ஸ்ரீகிருஷ்ணரிடம் சரண் புகுந்து விட்டான். உண்மையில் அவன் ஆரம்பத்திலிருந்தே கிருஷ்ணரிடம் அடைக்கலமானவனே. கிருஷ்ணரைத் தேர்ப்பாகனுக்கித் தன் குதிரைகளின் கடிவாளங்களை அவர் கையில் கொடுத்ததிலிருந்தே தன் மனதின் கடிவாளத்தையும் அவர் கையில் ஒப்புவிக்கச் சித்தம் செய்து கொண்டுவிட்டான். வாரீர், நாமும் அவ்வாறே செய்வோம்! 'அர்ஜுனனிடமோ கிருஷ்ணர் இருந்தார். நமக்கு கிருஷ்ணர் எங்கே கிடைப்பார்?' என்று நாம் சொல்ல வேண்டியதில்லை. கிருஷ்ணர் என்ற பெயருடன் ஒருவர் இருந்தாரென்ற சரித்திரம் பற்றிய பிழைபட்ட கருத்தில் நாம் சிக்க வேண்டாம். நம் ஒவ்வொருவர் உள்ளத்திலும் அந்தர்யாமியாய் கிருஷ்ணர் வீற்றிருக்கிறார். நமக்கு வெகு வெகு அண்மையில் இருப்பவர் அவரே. ஆகவே நாம் நம் உள்ளத்தின் எல்லாக் கறை, கல்மஷங்களையும் அவர் எதிரில் இட்டு அவரிடம், "ஆண்டவனே, நான் உனக்கு அடைக்கலம். நீ ஒருவனே எனக்கு ஆசான். எனக்குத் தகுந்த வழியைக் காட்டு. நீ காட்டும் வழியிலேயே நான் செல்லுவேன்," என்று தெரிவித்துக் கொள்வோமாக! நாம் இவ்வாறு செய்வோமானால் அந்தப் பார்த்தசாரதி நம் தேரையும் ஓட்டுவார். தம் திருவாக்கினால் அவர் நமக்கு கீதையை ஓதித் தந்து வெற்றி கிட்டுமாறு அருள் புரிவார்.

ஞாயிறு, 28–2–'32.

## இரண்டாம் அத்தியாயம்

# போதனையின் சுருக்கம்: ஆன்ம ஞானமும் சமத்துவ புத்தியும்

*

## (5) கீதையின் பரிபாஷை

சகோதரர்களே, சென்ற அத்தியாயத்தில் நாம் அர்ஜுனனுடைய விஷாத (கலக்கம்) யோகத்தைப் பார்த்தோம். அர்ஜுனனுடையது போன்ற வெள்ளைமனமும் அடைக்கல மனப்பான்மையும் இருக்குமிடத்தில் கலக்கமும் யோகமாய்விடுகிறது. இதைத்தான் 'இதயமந்தனம்' என்று சொல்வது. கீதையின் இந்த முன்னுரைப்பகுதிக்கு நான் அதைத் தோற்றுவித்தவரின் அபிப்பிராயப்படி 'அர்ஜுன விஷாதயோகம்' என்ற சிறப்புப் பெயர் அளியாது 'விஷாத யோக'மென்ற அனைவருக்கும் பொதுவான பெயரை அளித்திருக்கிறேன். ஏனெனில் கீதைக்கு அர்ஜுனன் ஒரு வியாஜமே. மகாராஷ்டிரத்திலுள்ள பண்டரிபுரத்தில் பாண்டுரங்கனுடைய அவதாரம் புண்டலீகனுக்காக மட்டுமே ஏற்பட்டதென்று கருதலாகாது. ஏனெனில், புண்டலீகனை வியாஜமாய்க் கொண்டு ஜடஜீவர்களாகிய நம் அனைவரையும் கடைத்தேற்றும் பொருட்டு அவர் ஆயிரமாயிர வருஷங்களாய் நின்று கொண்டிருப்பதைப் பார்க்கிறோம். இவ்வாறே கீதையின் கருணை அர்ஜுனனுக்காகத் தோன்றிய போதிலும் நம் அனைவருக்காகவும் தோன்றியதே. ஆகையால் கீதையின் முதல் அத்தியாயத்திற்கு 'விஷாத யோகம்' என்ற பொதுப்பெயரே நன்றாயிருப்பதாய்த் தோன்றுகிறது. இந்த கீதை என்ற மரம் இங்கிருந்து வளர்ந்து கொண்டே சென்று கடைசி அத்தியாயத்தில் 'பிரசாத யோகம்' என்ற கனியைத் தாங்கப் போகிறது. ஆண்டவனருள் இருக்குமாயின் நாமும் இந்தச் சிறைவாசம் முடிவதற்குள் அதுவரை போய்ச் சேர்ந்துவிடுவோம்.

இரண்டாம் அத்தியாயத்திலிருந்து கீதையின் போதனை ஆரம்பமாகிறது; தொடக்கத்திலேயே பகவான் வாழ்க்கையின் மாபெரும் தத்துவத்தை வெளியிடுகிறார். இதில் அவருடைய கருத்து, தொடக்கத்திலேயே எவற்றினடிப்படையில் வாழ்க்கையின் கட்டடத்தை எழுப்பவேண்

டுமோ அந்த முக்கிய தத்துவம் புரிந்து விடுமானால் மேலே போக வேண்டிய வழி சுலுவாகிவிடும் என்பதே. இரண்டாம் அத்தியாயத்தில் வரும் सांख्य-बुद्धि (சாங்கிய புத்தி என்ற சொல்லுக்கு வாழ்க்கையின் அடிப்படைத் தத்துவங்களென்று நான் பொருள் கொள்கிறேன். இந்த அடிப்படைத் தத்துவங்களை இப்பொழுது நாம் கவனிக்க வேண்டும். ஆனால் இதற்குமுன் இந்த 'சாங்கிய'மென்ற சொல்லை வியாஜமாய்க் கொண்டு கீதையில் வரும் பரிபாஷைச் சொற்களுக்கு ஓரளவு விளக்கம் பெறுதல் நலமாகும்.

பண்டைய சாஸ்திரீயச் சொற்களைப் புதிய பொருளில் கையாளுவது கீதைக்குள்ள ஒரு பழக்கம். பண்டைச் சொற்களின் மீது புதிய பொருளென்ற ஒட்டைச் சேர்ப்பது கருத்துப் புரட்சியின் அஹிம்சா முறையாகும். வியாச முனிவர் இதில் கைதேர்ந்தவர். இதனால் கீதையின் சொற்களுக்குப் பரந்த பொருள் ஏற்பட, அது என்றும் புதியதாய் இருந்து வந்ததோடு அநேகம் சிந்தனையாளர் தம் தம் தேவையையும் அனுபவத்தையும் ஒட்டிப் பல வகைப் பொருள் கொள்ள முடிந்தது. அவரவர் நிற்கும் அரங்கிலிருந்து பார்க்கையில் இந்தப் பொருள்களெல்லாம் சரியாகவே இருக்கலாம்; நாமும் அவர்களைக்கண்டிக்கும் அவசியத்திற்கு இடம் கொடாமலே தனியானதொரு பொருளைக் கொள்ளலாமென்று நினைக்கிறேன்.

இதுபற்றி உபநிடதத்தில் ஒரு அழகிய கதை வருகிறது. ஒரு சமயம் தேவரும் இராட்சசரும், மானிடரும் பிரஜாபதியிடம் உபதேசம் பெறப்போனார்கள். பிரஜாபதி எல்லோருக்கும் 'द' (த) என்ற ஒரே எழுத்தை அளித்தார். தேவர்கள், "தேவர்களாகிய நாம் காமம் அதிகமுள்ளவர்கள். நமக்கு சுகபோகங்களில் ஆசை அதிகமாயிருக்கிறது. ஆகையால் பிரமன் द என்ற எழுத்தின் மூலமாக दमनम् (தமனம்) அல்லது புலனடக்கத்தைப் போதித்திருக்கிறார்" என்று சொன்னார்கள். இராட்சசர்களோ, "இராட்சசர்களாகிய நாம் மிகவும் கோபிஷ்டர்கள்; தயை இல்லாதவர்களாகவும் ஆய்விட்டோம். நமக்கு द என்ற எழுத்தின் மூலமாய் दया (தயை) கருணை காட்டு என்று பிரஜாபதி போதித்திருக்கிறார்" என்று பேசிக்கொண்

டார்கள். மானிடரோ, "மனிதர்களாகிய நாம் உலோபி களாயும் பணப் பித்தர்களாகவும் ஆய்விட்டோம். द வின் மூலமாய் (दानम्) தானம் புரியும்படி பிரஜாபதி நமக்கு போதித்திருக்கிறார்" என்று சொன்னார்கள். பிரஜாபதி எல் லோருடைய பொருளையும் சரியென்று ஒப்பினார்; ஏனெ னில் எல்லோருமே அவரவர் அனுபவத்திலிருந்து அவை களைப் பெற்றார்கள். கீதையின் கலைச்சொற்களுக்குப் பொருள் காணும் பொழுது இந்த உபநிடதக் கதையை நாம் கவனத்தில் கொள்ள வேண்டும்.

## (6) வாழ்க்கைத் தத்துவம்–1

## உடலால் சுதர்மம் புரிதல்

இரண்டாம் அத்தியாயத்தில் வாழ்க்கையின் மூன்று பெருந் தத்துவங்கள் கூறப்பட்டிருக்கின்றன:—(1) ஆன் மாவின் அழியாமை அல்லது சிதைவின்மை (2) உடலின் இழிவு (3) சுதர்மத்தின் தவிர்க்க இயலாமை. இவற்றுள் சுதர்ம தத்துவம் கடமையாய் அமைய, எஞ்சிய இரண்டும் நாம் அறிந்து கொள்ள வேண்டியவை. பிந்திய அத்தி யாயத்தில் நான் சுதர்மத்தைப் பற்றிச் சிறிது சொல்லி யிருக்கிறேன். இந்த சுதர்மம் நமக்கு இயற்கையிலேயே கிட்டுவதொன்று. சுதர்மத்தைத் தேடிக்கொண்டு நாம் எங் கும் போகத் தேவையில்லை. நாம் ஏதோ ஆகாயத்தி லிருந்து குதித்துப் பூமியில் நடக்கத்தொடங்கினோம் என்ப தல்ல. நாம் பிறப்பதற்கு முன் இந்த சமூகம் இருந்தது, நம் தாய் தந்தையர் இருந்தனர், அக்கம் பக்கத்தவர்களிருந் தனர். இத்தகைய இந்த வெள்ளத்தில் நாம் பிறக்கிறோம். ஆகையால் எந்தப் பெற்றோருடைய வயிற்றில் நான் பிறந்திருக்கிறேனோ அவர்களுக்குப் பணிவிடை செய்தல், எந்த சமூகத்தில் நான் பிறந்தேனோ அதற்குச் சேவை செய்தல் என்ற கடமைகள் எனக்குத் தானே ஏற்பட்டு விட்டன. உண்மையில் நாம் பிறக்கும் போதே நமது சுதர்மமும் பிறந்து விடுகிறது என்று சொல்வதோடு நில் லாது நாம் பிறப்பதற்கு முன்பே அது நமக்காகக் காத்துக் கொண்டிருக்கிறது எனலாம். ஏனெனில் அது நமது பிற விக்கே காரணமாயிருக்கிறது; நாம் ஜன்மம் எடுப்பது அது நிறைவேறும் பொருட்டே. சிலர் சுதர்மத்தை

மனைவியுடன் ஒப்பிட்டு மனைவிக்கும் கணவனுக்குமுள்ள தொடர்பு பிரிக்க முடியாததென்று கருதப்பட்டிருப்பதைப் போல இந்த சுதர்மத்தின் தொடர்பும் பிரிக்க முடியாதது என்று சொல்லுகிறார்கள். ஆனால் எனக்கு இந்த உவமை சிறந்ததாக அல்ல, இரண்டாம் தரத்ததாகவே தோன்று கிறது. நான் சுதர்மத்தைத் தாயுடனேயே ஒப்பிடுவேன். நான் என் தாயை இங்கே ஜன்மம் எடுத்த பிறகு தீர் மானித்துக் கொள்ள வேண்டியிருக்கவில்லை. அவர் முன் னரே தீர்மானமாய் விட்டார். அவர் எத்தகையவராயிருந்த போதிலும் இப்பொழுது அவரைத் தவிர்க்க முடியாது. சுதர்மத்தின் நிலையும் இத்தகையதே. இவ்வுலகில் நமக்கு சுதர்மத்தைத்தவிர வேறு ஆதரவு எதுவுமில்லை. சுதர்மத் தைத் தட்டிக் கழித்துக் கொண்டே போதல் தன்னையே புறக்கணித்தல் அல்லது தற்கொலை புரிந்து கொள்ளுத லாகும். சுதர்மத்தின் உதவி கொண்டே நாம் முன்னேற முடியும். ஆகையால் இந்த சுதர்மத்தின் ஆதரவை எவ ரும் என்றும் விடக்கூடாது. இது வாழ்க்கையின் அடிப் படையான தத்துவமாய் உறுதி பெற்றதொன்று.

சுதர்மம் நமக்கு வெகு சுலபமாய் இயற்கையாய்க் கிடைப்பதாகையால் நாம் தாமாகவே அதைச் செய்து வர வேண்டும். ஆனால் பலவகை மோகங்கள் காரணமாக நாம் இவ்வாறு செய்வதில்லை; செய்தாலும் மிக்க சிரமத் துடன் செய்வதாயும் பலவகையான விஷம் போன்ற குறைபாடுகளுடன் கலந்தும் செய்வதாயிருக்கிறது. சுதர் மத்தின் பாதையில் முட்களைப் பரப்பும் இந்த மோகங் களின் வெளி உருவங்களுக்கு ஒரு அளவேயில்லை. ஆயி னும் நாம் அவைகளை ஆராய்ந்து பார்க்கையில் அவைக ளனைத்தின் அடியிலும் குறுகிய இழிந்த உடற்பற்று என்ற ஒரே விஷயம் காணப்படுகிறது. என்னுடனும் என் உடலுடனும் சம்பந்தமுள்ள மனைவி மக்களோடு என்னு டைய எல்லை முடிந்துவிடுகிறது. இந்த எல்லைக்கு வெளி யில் உள்ள அனைவரும் எனக்கு அந்நியர் அல்லது விரோ திகள் என்ற இத்தகைய சுவர்களை இந்த உடலறிவு எழுப்பிவிடுகிறது. இதில் விசேஷம் என்னவென்றால், நான் எவர்களை 'நான்' என்றும் 'எனது' என்றும் எண்ணிக் கொண்டு விட்டேனோ அவர்களின் உடலை மட் டுமேதான் அது கணக்கில் எடுத்துக் கொள்ளுகிறது. உட லறிவின் இந்த இருமுனை ஆட்டத்தில் சிக்கிய நாம் வித

விதமான சிறிய குட்டைகள் தோண்டத் தொடங்குகிறோம். அநேகமாக எல்லோருமே இதே வேலைத் திட்டத்தில் தான் ஈடுபட்டிருக்கிறோம். இவைகளில் ஒருவருடைய குட்டை பெரியதாயிருக்க மற்றொருவருடையது சிறியதாயிருந்த போதிலும் அனைவருடையதும் குட்டைகளே. இந்த உடலின் தோல் எவ்வளவு கனமோ அவ்வளவுதான் அவைகளின் ஆழமும். ஒருவன் குடும்பப்பற்றென்ற குட்டையை அமைத்துக்கொண்டிருந்தால் இன்னொருவன் தேசப்பற்றென்ற குட்டையில் இருந்து வருகிறான். பிராமணர், பிராமணரல்லாதார் என்று ஒரு குட்டை, இந்து, முஸ்லிம் என்று மற்றொன்று. இவ்வாறு ஒன்றிரண்டல்ல, எத்தனையோ குட்டைகள் தோண்டப்பட்டிருக்கின்றன. எந்தப் பக்கம் திரும்பினாலும் இந்தக் குட்டைகளே காணப்படுகின்றன. நமது இந்தச் சிறையிலும் அரசியல் கைதிகள், சாதாரணக் கைதிகள் என்ற குட்டைகள் அமைந்துள்ளன. இது இல்லாதவிடத்து நாம் உயிர்வாழவே முடியாது போலும்! ஆனால் இதன் விளைவென்ன? விளைவொன்றே: இழிந்த விகாரங்கள் என்ற நோய்க்கிருமிகளின் கூட்டம் மலிய, சுதர்மமென்ற ஆரோக்கியம் அழிகிறது.

## (7) வாழ்க்கைத் தத்துவம்–2

### ஆன்மாவை உணர்தல்

இந்நிலையில் சுதர்மத்தில் உறுதி மட்டும் இருந்தால் போதுவதில்லை; அதற்கு இன்னும் இரு தத்துவங்களையும் விழிப்புடன் இருக்கச் செய்துகொள்ள வேண்டியிருக்கிறது. ஒன்று, நான் இந்த அழியக்கூடிய உடலல்லேன்; உடல் வெறும் வெளியிலுள்ள இழிவான கூடே என்பது. இரண்டாவதோ, நான் என்றும் இறவாத சிதைவற்ற பரந்த ஆன்மா ஆவேன் என்பது. இவை இரண்டையும் இணைக்கும் பொழுது ஒரு பூரண தத்துவ ஞானம் கிட்டுகிறது.

இந்தத் தத்துவ ஞானம் கீதைக்கு மிகவும் இன்றியமையாததாய்த் தோன்றுவதால் கீதை முதலில் இதைத் தோற்றுவித்து, பின்னரே சுதர்மத்தை நமக்கு அறிமுகப்படுத்துகிறது. தத்துவ ஞானம் பற்றிய இந்த சுலோகங்கள் ஆரம்பத்திலேயே எதற்கென்று சிலர் கேட்கிறார்கள். ஆனால்

கீதையின் எந்த சுலோகங்களையாவது அவை இப் பொழுது இருக்குமிடத்திலிருந்து வேறு இடத்திற்கு மாற்று வது அறவே முடியாதென்று சொல்லக்கூடுமானால் இந்த சுலோகங்களையே சொல்லவேண்டும்.

இந்தத் தத்துவ ஞானம் மனதில் பதிந்து போய்விடு மானால் சுதர்மம் நமக்குச் சிறிதும் பாரமாகவே தோன்ருது. இது மட்டுமல்ல; சுதர்ம மல்லாத வேறு எதைச் செய்வதும் பாரமாகத் தோன்றும். ஆன்ம தத்துவத்தின் சிதை வின் மையையும் உடலின் இழிவையும் புரிந்துகொள்ளுதல் அவ் வளவு சடினமல்ல. ஏனெனில், இவை யிரண்டும் உண்மையான விஷயங்கள். ஆனல் நாம் அவைகளைப் பற்றிச் சிந்திக்கவேண்டும்; அடிக்கடி அவைகளை மனதில் புரட்டிப் புரட்டிப் பார்க்கவேண்டும். இந்தத் தோலுறையின் பெருமையைக் குறைத்து ஆன்மாவுக்குப் பெருமை யளிக் கப் பயிலவேண்டும்.

பாருங்கள்! இவ்வுடல் ஒவ்வொரு கணமும் மாறிக் கொண்டே இருக்கிறது. பிள்ளைப் பிராயம், வாலிபம், முதுமை என்ற இந்தச் சக்கரத்தில் சுழலாதோர் யார்? நவீன விஞ்ஞானிகளோ ஏழு வருஷத்தில் உடல் முற்றிலும் மாறி விடுகிறது என்றும் பழைய இரத்தத்தில் ஒரு துளிகூட எஞ்சியிருப்பதில்லை என்றும் சொல்லுகிருர்கள். நம் முன் ஞேர் பன்னிரண்டு வருஷத்தில் பழைய உடல் மரித் துப் போகிறதென்று நம்பிஞர்கள். இதனலேயே பிராயச் சித்தம், தவம், சாஸ்திரம் ஓதல் ஆகியவற்றிற்கு பன்னி ரண்டு வருஷங்களை எல்லையாக வகுத்திருந்தார்கள். பல வருஷங்கள் பிரிந்திருந்த பிறகு மகனெருவன் தன் தாயைப் போய்ப் பார்த்தபொழுது தாய்க்குத் தன் மகனை அடையாளமே புரியவில்லை என்பது போன்ற கதைகள் சொல்லக்கேட்டிருக்கிறோம். அப்படியானல் கணந்தோறும் மாறுவதும் கணந்தோறும் அழிந்துகொண்டிருப்பதுமான உடல்தான் உன் உருவமா? அல்லும் பகலும் மல மூத்திரக் குழாய்கள் எதில் ஓடிக்கொண்டே யிருக்கின்ற னவோ, உன்னைப்போல் எப்பொழுதும் விடாது தேய்த்துத் தேய்த்துக் குளியாட்டுகிறவன் இருந்தும் எதன் அழுக்கும் ஆபாசமும் அகலுவதே யில்லையோ அந்த உடல்தான நீ? அது அசுத்தமானது, நீ அதைக் கழுவுவோன்; அது நோய் மலிந்தது, நீ அதற்குச் சிகிச்சை செய்வோன்; அது எண்

சாண் இடத்தை ஆக்கிரமித்துள்ளது, நீ மூன்று உலகங்களிலும் சஞ்சரிப்பவன்; அது தினமும் மாறுவது, நீ அதன் மாறுபாட்டைப் பார்த்துக்கொண்டிருப்பவன்; அது சாகப்போவது, நீ அதன் சாவுக்கு ஏற்பாடு செய்பவன். உனக்கும் அதற்கும் உள்ள வேற்றுமை இவ்வளவு தெளிவாய் இருந்தும் நீ ஏன் இவ்வளவு ஒண்டி ஒடுங்கிக்கொண்டு வாழ்கிறாய்? இவன் சொல்லுவதென்ன? இந்த உடலுடன் எனக்கு எவ்வளவு சம்பந்தமுண்டோ அதுவே என்னுடையதென்று? இந்த உடலின் சாவுக்காக இவ்வளவு வருத்தப்படுவது தான் ஏன்? பகவான், "அடே, உடலின் அழிவு வருத்தத்திற்குரிய விஷயமா?" என்று கேட்கிறார்.

உடல் ஆடையைப் போன்றது. பழைய ஆடைகள் கிழிந்து போய்விடுகின்றன; அதனால் தானே புதிய ஆடைகள் அணிய முடிகிறது? ஒரே ஒரு உடல் ஆன்மாவுடன் எப்பொழுதும் ஒட்டிக்கொண்டிருப்பது என்று ஆய்விட்டால் ஆன்மாவுக்கு அது ஆபத்தாய்விடும்; அப்பொழுது வளர்ச்சியே நின்றுவிடும்; ஆனந்தமே அழிந்து போகும்; ஞான ஒளி மங்கிப்போகும். ஆகையால் உடலின் அழிவு வருத்தத்திற்குரிய விஷயமாக முடியாது. ஆனால் ஆன்மா அழிவுறக் கூடுமானால் அது நிச்சயமாய் வருத்தத்திற்குரியதாகவே இருக்கும். ஆனால் அதுவோ அழிவற்றது; அது என்றும் எப்பொழுதும் தங்கு தடையின்றிப் பெருகிக்கொண்டிருக்கும் அருவியை ஒத்தது. அதன் மீது எத்தனையோ உடல்கள் வந்து மூடுகின்றன; பிறகு அகலுகின்றன. ஆகையால் உடலின் உறவுச் சுழலில் சிக்கி வருந்துவதும், 'இவை என்னுடையவை; இவை பிறருடையவை' என்ற வேற்றுமை உணர்ச்சியும் பாகுபாடுகளும் முற்றிலும் தவறாகும். பாருங்கள்! இந்த பிரமாண்டம் முழுமையும் ஒரு அழகிய போர்வை போன்றது. ஒரு அறியாத பையன் கத்தரியைக்கொண்டு ஒரு அழகிய போர்வையைத் துண்டு துண்டாய் வெட்டுவதைப் போல, இந்த உடலென்ற கத்தரியினால் அந்த விச்வாத்மாவைத் துண்டாடுதல் எத்தகைய சிறு பிள்ளைத்தனமும் ஹிம்சையுமாகிறது!

உண்மையில் எந்தப் பாரதநாட்டில் பிரம்மவித்தை பிறந்ததோ அதிலேயே இந்தச் சிறிய பெரிய கட்சிகளும் கோஷ்டிகளும் ஜாதிகளும் நாற்புறமும் மலிந்திருத்தல்

மிகவும் துக்கந்தரும் விஷயமாகும். மேலும் சாவைக் குறித்த பயம் நம் மனதில் புகுந்திருக்கு மளவுக்கு வேறு எங்குமே இருக்குமென்று தோன்றவில்லை. நீண்டகால அடிமை வாழ்வின் விளைவே இது என்பதில் சந்தேகமில்லை யாயினும் இதுவே நாம் அடிமைப்பட்டதற்கும் ஒரு காரணம் என்பதையும் மறப்பதற்கில்லை.

சாவு என்ற சொல்லே நமக்குப் பிடிப்பதில்லை. சாவு என்ற பேச்சே நமக்கு அசுபமாய்த் தோன்றுகிறது. ஞான தேவர் மிகுந்த துக்கத்துடன்,

> * "மரணமென்ற சொல்லை சகிக்க மாட்டார்,
>
> இறந்தாலோ அழுவர்"

என்று எழுத நேர்ந்திருக்கிறது. மேலும் ஒருவர் இறந்து விட்டால் எவ்வளவு அழுகை, எவ்வளவு கூப்பாடு! இதை நாம் ஒரு கடமை யென்றே கருதுகிறோம் போலும். கூலிக்கு ஆட்களை அமர்த்தி அழச் செய்யும் அளவுக்கு நாம் போய்விட்டோம். மரணம் நெருங்கி வந்த பிறகும் நாம் அதை நோயாளியிடம் சொல்லமாட்டோம். டாக்டர் ஆள் பிழைக்கமாட்டானென்று சொல்லிப் போன பிறகும் நாம் நோயாளியிடல் அதை மறைத்தே வைப்போம். டாக்டரும் ஒளிவு மறைவின்றி சொல்லாமல் இறுதி மூச்சு வரையில் வயிற்றில் மருந்துப் புட்டிகளைக் கவிழ்த்துக்கொண்டே யிருப்பான். இவ்வாறன்றி உண்மை நிலையைத் தெரிவித்து, தைரியம் கூறி, கடவுளை நினைக்கும்படி செய்யப்படுமானல் எவ்வளவு உபகாரமாயிருக்கும்! ஆனல் இந்தத் தாக்கு தலினல் சட்டி சிறிது முன்னமேயே உடைந்து போய் விடுமோ என்ற பயம் நமக்கு! ஆனல் உரிய சமயத் திற்கு முன் இந்தச் சட்டி உடையுமா? மேலும் இரண்டு மணி நேரம் தாழ்த்தி உடையும் பாண்டம் இரண்டு மணி முந்தியே உடைந்து போனல் என்ன கெட்டுப் போய் விடுமோ? இதன் பொருள், நாம் கடின சித்தர்களாகவோ அன்பு இல்லாதவர்களாகவோ ஆய்விடவேண்டும் என்ப தல்ல. ஆனல் உடற்பற்று அன்பு ஆகாது. ஏன், உடற் பற்றை அகற்றுத வரையில் உண்மை அன்பே தோன்றுது.

---

* "अगा मर हा बोल न साहती।
आणि मेलिया तरी रडती॥"

உடற்பற்று அகன்றவுடன் உடல் சேவைக்குரிய கருவியே என்பது புலனாக, உடலுக்கு அதற்குரிய மதிப்பும் கிட்டும். ஆனால் இன்றோ நாம் உடலுக்குப் பூசையிடு வதையே நம் இலட்சியமாய்க் கொண்டிருக்கிறோம். நாம் சாதிக்க வேண்டியது சுதர்மத்தை அனுஷ்டித்தல் என் பதையே மறந்து விட்டோம். உடலைப் பாதுகாப் பதற்கும் அதற்கு உண்டி யளித்துப் போஷிப்பதற்கும் அவசியம் இருப்பது சுதர்மத்தை அனுஷ்டிப்பதற்கே; நாக்கின் சபலத்தைப் பூர்த்தி செய்வதற்கு அது தேவை யில்லை. தேக்கரண்டியினால் அல்வா எடுத்துப் பரிமாறினா லும், சோறோ, பருப்போ பரிமாறினாலும் அதனால் அதற்கு இன்பமோ துன்பமோ ஏற்படுவதில்லை. இதே நிலையில் தான் நாவும் இருக்கவேண்டும். அதற்கு ருசி தெரிய வேண்டுவது அவசியமாயினும் அதனால் அதற்கு இன்பமோ துன்பமோ ஏற்படக்கூடாது. உடலுக்குள்ள குடிக்கூலியை அதற்குச் செலுத்திவிட வேண்டும், அவ்வளவுதான். ராட்டையைக் கொண்டு நூல் நூற்கவேண்டியிருக்கிறது; இதனால் அதற்கு எண்ணெய் போடுவது அவசியமாகிறது. இதே மாதிரி உடலிடம் வேலை வாங்கவேண்டியிருக்கிற தாகையால் அதில், எஞ்சினில் கரி போடுவதுபோல, உணவுபோடவேண்டியிருக்கிறது. இவ்வாறு நாம் உடலை உபயோகித்து வருவோமானால் அது இயற்கையில் இழிந்த தாயினும் அதன் மதிப்பு பெருகவும் அதற்குப் பெருமை கிட்டவும் கூடும்.

ஆனால் நாம் உடலை ஒரு கருவியாய்க் கையாளாது அதிலேயே ஆழ்ந்துபோய் ஆன்மாவைக் குன்றச் செய்து விடுகிறோம். இதனால் ஏற்கெனவே ஒரு பொருளாகவே இல்லாதிருந்த இவ்வுடல் மேலும் இழிந்ததாய்விடுகிறது. இதனாலேயே மகான்கள், 'உடலும் உடலின் தொடர்பும் வெறுக்கத்தக்கவை; நாய், பன்றி முதலிய பிராணிகள் வணக்கத்திற்குரியவை' யென்று உறுதியுடன் கூறு கிறார்கள். "அடே! நீ இவ்வுடலையும் இந்த உடலுடன் எவர்களுக்குத் தொடர்புண்டோ அவர்களையும் அல்லும் பகலும் வழிபடாதே. பிறரையும் புரிந்து கொள்ளக் கற்றுக்கொள்" என்று மகான்கள் பரந்தநோக்கைப் பெறும் படி உபதேசிக்கிறார்கள். நாம் நமது நெருங்கிய இஷ்ட மித்திரர்களைத் தவிர மற்றவர்களிடமும் நம் ஆன்மாவை ஒரு சிறிதேனும் கொண்டு செல்லுகிறோமா? ஜீவனுடன்

ஜீவனையும் ஆன்மாவில் ஆன்மாவையும் கலப்பதற்கு ஏதேனும் செய்வதுண்டா? நம் ஆன்மா என்ற அன்ன பட்சியை இந்தக் கூட்டிற்கு வெளியேயுள்ள காற்றை வாங்க விடுகிறோமா? நம்மவர் என்று நாம் கருதிக்கொண் டிருக்கும் எல்லைக்கு வெளியே சென்று நாளை புதிதாய்ப் பத்துப்பேரை நண்பர்களாகச் செய்து கொள்வோமென்று உன் மனதில் எப்பொழுதேனும் எண்ணம் எழுந்ததுண்டா? இன்று பதினைந்துபேர், நாளை ஐம்பது பேர் என்று இவ் வாறு நட்புக்கொண்டே போனால் ஒரு நாள் உலகம் முழுமையும் என்னுடையது, நான் உலகத்தைச் சேர்ந்தவன் என்று உணரத் தொடங்குவேன். நாம் சிறையிலிருந்து நம் பந்து மித்திரர்களுக்குக் கடிதங்கள் எழுதுகிறோமே, இதில் விசேஷம் என்ன இருக்கிறது? ஆனால் சிறையி லிருந்து விடுபட்டு வெளியேறும் புதிய நண்பனொருவ னுக்கு—அரசியல் கைதிக்கல்ல, திருடன் ஒருவனுக்கு —நாம் கடிதம் எழுதுவோமா?

நம் ஆன்மா வியாபிக்கத் துடித்துக்கொண்டிருக் கிறது. அது உலகமனைத்தையும் அணைந்துகொள்ள விரும்புகிறது. ஆனால் நாம் அதை அறையிலிட்டு அடைத்துவிடுகிறோம்; ஆன்மாவை நாம் கைதியாக்கி விடுகிறோம். நமக்கு அதுவொன்று இருக்கிறதென்ற நினை வும் இருப்பதில்லை. காலையிலிருந்து மாலைவரை நாம் உட லுக்குப் பணிவிடை செய்வதிலேயே ஈடுபட்டிருக்கிறோம். நமக்கு அல்லும் பகலும் என் இவ்வுடல் எவ்வளவு பருத் தது, அல்லது எவ்வளவு மெலிந்தது என்ற எண்ண மொன்றேதான். உலகில் வேறு இன்பமெதுவுமே நமக் கில்லை போலும்! உடலின் இன்பத்தையும் உணவின் ருசியையும் மிருகங்களும் நுகர்கின்றன. இப்பொழுது தியாகத்தின் இன்பத்தையும் ருசிகெடுவதின் மகிழ்ச்சியை யும் எப்படி இருக்கிறதென்று பார்ப்பாயா, மாட்டாயா? உன்னைப் பசி வாட்டிக் கொண்டிருக்கும்போதே பசியால் வாடும் ஒருவனுக்கு உன்கட்டுச் சோற்றை எடுத்துக் கொடுத்து விடுவதில் உள்ள ஆனந்தம் எப்படியிருக்கிற தென்று பார்! இதன் ருசியை உணரு. தாய் குழந்தைக் காகக் கஷ்டம் அனுபவிக்கும்போது அவளுக்கு இந்த இன்ப நுகர்ச்சி ஓரளவு ஏற்படுகிறது. மனிதன் தனது என்று சொல்லிக்கொண்டு தன்னைச் சுற்றிக் கோடுகிழித்துக் கொண்டிருக்கிறனே, அதிலும் அவனும் அறியாமலே

அவனுக்குள்ள நோக்கம், தன் ஆன்மாவை வளர்ப்பதின் இன்பத்தை நுகர்வதேயாகும். ஏனெனில் அதனால் உடலில் கட்டுண்ட ஆன்மா சிறிது நேரத்திற்கு வெளியே கிளம்புகிறது. ஆனால் இந்த வெளியேற்றம் எத்தகையது? சிறையிலடைபட்டுள்ள கைதி சிறையினறையிலிருந்து அதன் திறந்த வெளியுள் வருவதுபோன்றதே. ஆனால் ஆன்மாவிற்கு இதுமட்டுமே போதாது; அதற்குத் தங்கு தடையற்ற ஆனந்தம் தேவை.

மொத்தத்தில் (1) சாதகன் அதர்மம், பரதர்மம் ஆகிய கோணல் வழிகளை விட்டு சுதர்மம் என்ற இயற்கையான, சுலபமான வழியில் செல்லவேண்டும்; சுதர்மப் பாதையை அவன் ஒரு பொழுதும் விடக்கூடாது. (2) உடல் நீரில் குமிழிபோன்றது; எந்த நிமிஷமும் அழியக்கூடியது என்பதை உணர்ந்து அதை சுதர்மத்திற்காகப் பயன்படுத்த வேண்டும்; தேவையெழும்பொழுது அதை சுதர்மத்தின் பொருட்டே அழித்துவிடவும் வேண்டும். (3) ஆன்மாவின் சிதைவின்மை, பரந்ததன்மை ஆகியவற்றை எப்பொழுதும் நினைவிலிருத்திக்கொண்டு சித்தத்திலிருந்து தனது, பிறரது என்ற வேற்றுமையை அகற்றிவிட வேண்டும். வாழ்க்கையின் இந்த முக்கிய தத்துவங்களை பகவான் கூறுகிறார். இவைகளின்படி நடந்துவரும் மனிதன் சந்தேகமின்றி ஒரு நாள் மானிட உடலின் மூலமாகவே சச்சிதானந்த பதத்தைப் பற்றும் பேறு பெறுவான்.

## (8) இரண்டையும் இணைப்பது பயனைத்துறத்தல்

பகவான் வாழ்க்கையின் தத்துவங்களை என்னவோ சொல்லிவிட்டார். ஆனால் தத்துவங்களைச் சொல்லுவதினாலேயே காரியம் நிறைவேறாது. கீதையில் வர்ணிக்கப்பட்டுள்ள இத்தத்துவங்கள் உபநிடதங்களிலும் ஸ்மிருதிகளிலும் ஏற்கெனவே இருப்பவையே. கீதை அவைகளையே மீண்டும் எடுத்துக்கூறிற்று எனில் இதில் கீதையின் விசேஷம் எதுவுமில்லை. அதற்குள்ள தனிச்சிறப்பு இத்தத்துவங்களை அனுஷ்டானத்தில் கொண்டு வருவது எப்படி என்பதைத் தெரிவிப்பதிலேயே அடங்கி இருக்கிறது.

இந்தப் பெரிய பிரச்னையைத் தீர்த்துவைப்பதிலேயே கீதையின் திறமை அமைந்திருக்கிறது.

வாழ்க்கையின் தத்துவங்களை அனுஷ்டானத்திற்குக் கொண்டு வருவதற்கு உள்ள கலை அல்லது யுக்திக்கே யோகமென்று பெயர். சாங்கியம் என்பதற்குத் தத்துவம் அல்லது சாஸ்திரம் என்பது பொருள்; யோகம் என்பதற்குக் கலை என்று அர்த்தம். ஞானதேவர், "யோகிகளுக்கு வாழ்க்கைக் கலை கைவந்துள்ளது"* என்று சாட்சி கூறுகிறார். கீதையில் சாங்கியம், யோகம்—சாஸ்திரம், கலை—ஆகிய இரண்டும் நிரம்பியுள்ளன. சாஸ்திரம், கலை ஆகிய இரண்டின் கூட்டினால் வாழ்க்கையின் அழகு மலர்கிறது. சாஸ்திரம் மட்டுமிருந்தால் அது வெறும் மனக்கோட்டையாகவேதான் இருக்கும். சங்கீத சாஸ்திரத்தைப் புரிந்து கொண்டு விட்டபோதிலும் வாயைத்திறந்து பாடும் திறமை இல்லாவிட்டால் நாத பிரம்மத்தை நம்மால் ஜோடிக்க முடியாது. இதனாலேயே பகவான் தத்துவங்களோடு கூடவே அவைகளின் பயனை அறிய உதவும் கலையையும் கூறியிருக்கிறார். ஆனால் அந்தக் கலைதான் என்ன? உடலை இழிந்ததாய்க் கருதி ஆன்மாவின் அழிவின்மையையும் சிதைவின்மையையும் கருத்தில் கொண்டு சுதர்மத்தை அனுஷ்டிக்க உதவும் அந்தக் கலைதான் எது?

கர்மத்தைச் செய்கிறவர்களுக்கு இருவகை பாவனைகள் இருக்கும்; ஒன்று, தாம் செய்யும் காரியத்தின் பயனை தாம் நிச்சயம் நுகர்வோம் என்பது. இதற்கு நமக்கு உரிமையுண்டு. இதற்கு மாறான மற்றொன்று, நமக்கு அனுபவிக்கப் பயன் கிட்டாதெனில் நாம் காரியமே செய்ய மாட்டோம் என்பது. கீதை இவ்விரண்டிலிருந்தும் வேறான மூன்றாவதொரு பாவனை அல்லது போக்கைக் கூறுகிறது. அதாவது, "காரியத்தைக் கட்டாயம் செய்; ஆனால் பயனிடத்தில் உனக்கு உரிமையிருப்பதாய்க் கொள்ளாதே" என்பது. காரியம் செய்பவனுக்கு அதன் பயனிடத்தில் நிச்சயம் உரிமை உண்டு. ஆனால் அந்த உரிமையை நீயே விட்டுவிடு. ரஜோகுணம், "பயனுடன் சேர்த்தேதான் பெறுவேன்" என்கிறது. தமோகுணமோ, "விட்டால் காரியத்தையும் சேர்த்தேவிடுவேன்" என்கிறது. இவையிரண்டும் உடன்பிறந்தவைகள். ஆகையால் நீ இவை

* "योगियां साधली जीवन-कला"

யிரண்டையும் கடந்து மேலே சென்று சுத்தமான ஸத்வ குணி ஆகு. அதாவது, காரியத்தைச் செய்; ஆனால் பயனைத் துறந்துவிடு; பயனைத் துறந்து காரியத்தைச் செய். முதலிலோ, பிறகோ எங்குமே பயனை விரும்பாதே.

கீதை பயனிடத்தில் ஆசை வையாதே என்று சொல்லும் பொழுதே காரியத்தைச் சிறப்பாகவும் திறமையுடனும் செய் என்று வற்புறுத்துகிறது. பயனைக்கருதும் ஒருவனைவிட பயனைவிரும்பாத ஒருவன் செய்யும் காரியம் சிறந்ததா யிருக்கவேண்டும். இவ்வாறு எதிர்பார்ப்பது உசிதமே. ஏனெனில், பயனைவிரும்பும் மனிதன் அதில் ஆவல் கொண் டிருப்பதால் பயனைப்பற்றிய கனவுகளில் அவனுடைய நேரமும் சக்தியும் ஓரளவாவது செலவாகும். ஆனால் பயனைவிரும்பாத மனிதனுடைய ஒவ்வொரு கணமும் முழுச் சக்தியும் காரியத்திலேயே ஈடுபட்டிருக்கும். ஆற் றுக்கு ஓய்வு கிடையாது; காற்றுக்கு இளைப்பாறுதல் இல்லை; சூரியனுக்கோ எப்பொழுதும் எரித்துக்கொண்டிருக் கத்தான் தெரியும். இதே வகையில் பயனைக்கருதாது பணி புரிபவன் இடையறாது பணிபுரிவதொன்றையே அறிவான். இத்தகைய காரியத்திலேயே தொடர்ந்து ஈடுபட்டிருக்கும் மனிதனுடைய காரியம் சிறந்ததாய் இல்லாது வேறு யாருடையது இருக்கும்? மேலும், சித்தத்தின் சமத்தன்மை மிகவும் திறமைவாய்ந்த குணமாகும். அது பயனைக் கரு தாத மனிதனுடைய பரம்பரை சொத்து. வெறும் வெளிப் பகட்டுடன் அமைந்துள்ள வேலைப்பாட்டைப் பாருங்கள்; அதில்கூட கைத்திறமையோடு சித்தத்தின் சமத்துவமும் சேர்ந்திருக்குமானால் அந்த வேலைப்பாடு மேலும் நேர்த்தி யாய் அமைந்துவிடுவது வெளிப்படை. இதுவும் அன்றி பற்றுள்ளவன், பற்றற்றவன்—பயனைக்கருதுவோன், கரு தாதவன் ஆகியோரின் நோக்கங்களில் உள்ள வேற்றுமை யும் பயனைக் கருதாதவனுடைய காரியத்திற்கு அதிக உதவி அளிப்பதாய் அமைகிறது. பயனைக் கருதுவோன் காரியத் தைச் சுயநலநோக்குடன் பார்க்கிறான். 'எனதே காரியம், எனக்கே அதன் பயன்' என்ற இந்த நோக்கம் காரணமாக காரியத்திலிருந்து அவனுடைய கவனம் சிறிதும் விலகி யிருந்தால் அதில் அவனுக்குத் தான் நீதியினின்று வழுவிய தாய்த் தோன்றுவதில்லை; அதிகமானால், செயல்முறையில் பிழை நேர்ந்துவிட்டதாகவே தோன்றும். ஆனால் பயனைக் கருதாத மனிதனுக்கோ தான் செய்யும்

காரியத்தினிடத்தில் நியாயம் கலந்த கடமையுணர்ச்சி இருந்துவரும். ஆகையால் அவன் மிக்க கவனத்துடன் தான் செய்யும் காரியத்தில் சிறிதும் குறைபாடு நேராது பார்த்துக் கொள்வான். இதனாலும் அவனுடைய காரியம் அதிகக் குறைபாடு இல்லாததாய் இருக்கும். எவ்வகையில் பார்த்தாலும் பயனைத் துறத்தல் என்பது மிக்க திறமையுள்ளதும் கீர்த்தியைத் தரவல்லதுமான தத்துவம் என்பது தெளிவு. ஆகையால் பயனைத் துறத்தலை யோகம் அல்லது வாழ்க்கைக் கலை என்று சொல்லவேண்டும். பயனைக் கருதாதபணி அல்லது காரியத்தை நாம் விட்டுவிட்டாலும், காரியத்தில் எந்த ஆனந்தம் உண்டோ அது அதனால் விளையும் பயனில் இல்லை. தன் காரியத்தைச் செய்து கொண்டே போகும் பொழுது அதிலேயே ஒன்றிவிடுகிறோமே, அதை ஆனந்தத்தின் அருவியென்றே சொல்லவேண்டும். சைத்திரிகனிடம், "சித்திரம் வரையாதே; வரையாதிருப்பதற்காக நீ கேட்கும் பணத்தை வாங்கிக்கொள்"ளென்று சொல்லுவீர்களானால் அவன் அதற்கு உடன்படான். விவசாயியிடம், "வயலுக்குப் போகாதே; மாடு மேய்க்க வேண்டாம்; ஏற்றம் இறைப்பதை நிறுத்திவிடு. உனக்கு வேண்டுமளவு தானியம் கொடுக்கிறோ"மென்று சொல்லுங்கள்; உண்மையான விவசாயியாயிருந்தால் அவன் இந்த பேரத்திற்கு ஒத்துக் கொள்ளமாட்டான். விவசாயி பொழுது புலர்ந்ததும் வயற் காட்டிற்குப் போகிறான்; சூரியன் அவனை வரவேற்கிறது; பறவைகள் அவனுக்காகப் பாடுகின்றன; ஆடு மாடுகள் அவனைச் சூழ்ந்து கொண்டு நிற்கின்றன. அவன் அவைகளை அன்புடன் தடவிக் கொடுக்கிறான். தான் நட்டு வளர்த்திருக்கும் மரம் செடிகளைக் கண்குளிரப்பார்க்கிறான். இவை யனைத்திலும் ஒரு ஸாத்விக ஆனந்தம் இருக்கிறது. இந்த ஆனந்தமே அந்தக் காரியத்தின் முக்கியமான, உண்மையான பயனாகும். இதனுடன் ஒப்பிடும்பொழுது அதிலிருந்து விளையும் புறப்பயனுக்கு மதிப்பு மிகவும் குறைவே.

கீதை மனிதனுடைய கவனத்தை காரியத்தின்பயனிலிருந்து அகற்றும்பொழுது இந்த யுக்தியின் மூலமாய் அவனை நூறு மடங்கு அதிக கவனம் செலுத்தும்படிச் செய்து விடுகிறது. பயனைக் கருதாத மனிதன் காரியத்தில் ஆழ்ந்து போவதை சமாதி போன்றதென்றே சொல்ல வேண்டும். ஆகையால் அவனுக்கு ஏற்படும் ஆனந்தம்

பிறருடையதைவிட நூறு மடங்கு அதிகமாகும். இவ்வாறு கருதுவோமானால் பயனைக் கருதாது செய்யப்படும் காரியமே பெரிய பயனுமாகும் என்று நமக்கு உடனே புரிந்து விடுகிறது. ஞானதேவர், "மரத்தில் பழந்தான் பழுக்கிறதே, இனி பழத்தில் வேறு பழம் தோன்றுமா ?"* என்று சரியாய்த்தான் கேட்கிறார். இந்த உடல் என்ற மரத்தில் பயனைக் கருதாது செய்த சுதர்மம் என்ற நேர்த்தியான பழம் உண்டானபிறகு வேறு பயனை எதற்காக விரும்ப வேண்டும்? விவசாயி வயலில் கோதுமை விதைக்கிறான். பிறகு விளைந்த கோதுமையை விற்றுவிட்டு சோள ரொட்டியை வாங்கித் தின்பதா? இனிய வாழையைப் பயிர் செய்து அதை விற்றுவிட்டு மிளகாயை எதற்குத் தின்ன வேண்டும்? தம்பி! வாழைப்பழத்தையே தின்றால் என்ன ? ஆனால் மக்களுக்கு இது சம்மதமில்லை. வாழைப்பழம் அருந்துவதற்கு அதிர்ஷ்டமிருந்தும் அவர்கள் மிளகாயில் தான், அடித்துப் பிடித்துக்கொண்டு போய்விழுகிறார்கள். கீதை, "அப்படிச் செய்யாதே. காரியத்தையே சாப்பிடு, காரியத்தையே அருந்து, காரியத்தையே ஜீரணி" என்று சொல்லுகிறது, அவ்வளவுதான். காரியம் செய்வதிலேயே எல்லாம் வந்துவிடுகிறது. குழந்தை விளையாடுவதிலுள்ள ஆனந்தத்திற்காகவே விளையாடுகிறது. இதனால் அதற்கு வியாயாமத்தின் பயன்தானே கிடைத்துவிடுகிறது. ஆனால் அந்தப் பயனிடத்தில் அதற்கு கவனம் இருப்பதில்லை; அதற்கு உள்ள இன்பம் அனைத்தும் அந்த விளையாட்டிலே தான்.

## 9. பயனைத் துறத்தல்: இரண்டு உதாரணங்கள்

பக்தர்கள் தம் வாழ்க்கையின் மூலமாய் இந்த விஷயத்தை நிரூபித்திருக்கிறார்கள். துகாராமுடைய பக்தியைப் பார்த்து சிவாஜி மகாராஜர் மனதில் அவரிடம் மிக்க மரியாதை ஏற்பட்டுவந்தது. ஒரு சமயம் அவர் துகாராமின் வீட்டிற்கு பல்லக்கை அனுப்பி அவரை அழைத்து வந்து கௌரவிக்க ஏற்பாடு செய்திருந்தார். ஆனால் துகா

---

* "झाडाला फळें लागतात। परंतु फळाला आणखी कोणतें फळ लागणार ?"

ராமுக்கோ தம் வரவேற்புக்காகச் செய்யப்பட்டிருந்த ஏற்பாடுகளைப் பார்த்து பெருத்த வருத்தம் உண்டாயிற்று. அவர் தம் மனதில், "என் பக்திக்கா இந்தப் பயன்? நான் இதற்காகவா பக்தி செய்கிறேன்?" என்று சொல்லிக்கொண்டார். பகவான் மதிப்பு, பெருமை என்ற இந்தப்பயனை அவர் கையில் கொடுத்து அவரைத் தம்மிடமிருந்து அகற்றிக்கொண்டிருப்பதாய் அவருக்குத் தோன்றிற்று.

> "என் உள்ளம் உனக்குத் தெரிந்திருந்தும் என் தொந்தரவு வேண்டாமென்று என்னைத் தள்ளுகிறுயோ? பாண்டுரங்கா, உன்னுடைய இந்தச் சூழ்ச்சி படுமோசமானது!"

என்கிறுர்.

"ஆண்டவனே, உமது இந்த வழக்கம் நல்லதல்ல. நீர் எனக்கு இந்தக் குன்றுமணியைக் கொடுத்து ஏமாற்றப் பார்க்கிறீர். இவனுடைய தொந்தரவையே ஒழித்துக் கட்டி விடுவோமே என்று நினைக்கிறீர் போலும்! ஆனல் நானும் அற்ப சொற்பமான குருவினிடம் பாடங்கற்றவனல்ல. நான் உம் காலைக் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டு இருந்து விடுவேன். பக்தியே பக்தனுடைய சுதர்மம். பக்தியில் பயனென்ற விரும்பப்படாத முட்கள் தோன்ருமல் பார்த்துக் கொள்வதே அவனுடைய வாழ்க்கைக் கலையாகும்."

புண்டலீகனுடைய சரித்திரம் பயனைத்துறத்தல் என்ற விஷயத்தில் இதைவிட ஆழ்ந்த ஆதரிசத்தைக் காட்டுகிறது. புண்டலீகன் தன் பெற்ரோருக்கு சேவை செய்து கொண்டிருந்தான். அவனுடைய சேவையைக் கண்டு மகிழ்ந்த பாண்டுரங்கன் அவனுக்குக் காட்சியளிப்பதற்காக ஓடோடியும் வந்தார். ஆனல் புண்டலீகன் பாண்டுரங்கனுடைய வலையில் சிக்கித் தான் செய்துவந்த சேவையைவிட மறுத்துவிட்டான். தன் பெற்ரோருக்குச் செய்யும் சேவை அவனுக்கு உள்ளத்தோடு செய்யும் கடவுள் பக்தியாகவே இருந்தது. மகனொருவன் பிறரை அடித்துப் பிடுங்கித் தன் பெற்ரோருக்கு இன்பமளித்தாலும், ஒரு தேச ஊழியன் பிறநாட்டை வஞ்சித்துத் தன் நாட்டை மேன்மை

---

* जाणूनि अंतर। टाळिशील करकर।
तुज लागली हे खोडी। पांडुरंगा बहु कुडी॥

யுறச் செய்ய விரும்பினாலும் இந்த இருவருடைய மனப் போக்கும் பக்தியென்று சொல்லப்படமாட்டாது. அது பாசமேயாகும். புண்டலீகன் இந்தப் பாசத்தில் சிக்கவில்லை. அவன், "பரமான்மா எந்த உருவில் என் எதிரில் நிற்கிறானோ அதிலேயே அவனுடைய உருவம் அடங்கிவிட்டதா? அவனுடைய இந்த உருவம் தோன்றுவதற்கு முன் சிருஷ்டியே உயிரற்றிருந்தது?" என்றான். அவன் பகவானிடம்—"நீங்கள் தாமே எனக்குக் காட்சியளிப்பதற்காக எழுந்தருளி யிருக்கிறீர்கள். ஆனால் நான் 'உம்' தத்துவத்தை ஒப்புகிறவன். நீங்கள் ஒருவர்தான் பகவானென்று நான் நம்பவில்லை. எனக்கு நீங்களும் பகவான்தான்; இந்த என் தாய் தந்தையரும் பகவானே. இவர்களுடைய பணியில் ஈடுபட்டிருப்பதினால் நான் உங்களை கவனிக்க முடியாமலிருப்பதற்காக என்னை மன்னிக்கவேண்டும்" என்று சொல்லிவிட்டு பகவான் நிற்பதற்கு ஒரு செங்கல்லை அவர் பக்கம் தள்ளிவிட்டுத்தான் அதே பணிவிடையில் ஆழ்ந்து விட்டான். துகாராம் இந்த சந்தர்ப்பத்தைக் குறித்து மிகவும் உற்சாகத்தோடும் விநோதமாகவும்,

"என்ன பைத்தியக்கார அன்பு இது,
விட்டலனை நிறுத்தி வைத்ததே!
என்ன முரட்டுத் துணிவிது
விட்டலன் நிற்க கல்லை காட்டியது!"

என்கிறார்.

புண்டலீகன் உபயோகித்த இந்த 'உம்' தத்துவம் பயனைத் துறப்பதற்குதவும் யுக்தியின் ஒரு அங்கமாகும். பயனைத் துறக்கும் மனிதன் எவ்வாறு தன் காரியத்திலேயே ஆழ்ந்து ஒன்றிவிடுகிறானோ அவ்வாறே அவனுடைய போக்கும் பரந்தும் தாராளமாயும் சமமாயும் அமைகிறது. இதனால் அவன் பல்வேறு தத்துவ ஞானங்களின் வலையில் சிக்குவதுமில்லை, தன் தத்துவத்தை விடுவதுமில்லை. 'नान्यदस्तीति वादिन:' (நான்யதஸ்தீதி வாதின:) 'இது ஒன்றே உண்டு, வேறெதுவும் இல்லை,' என்ற வாதத்தையே

---

* कां रे प्रेम मातलासी। उभे केलें विठ्ठलासो॥
ऐसा कैसा रे तूं धीट। मागें भिरकाविली वीट॥

அவன் கிளப்புவது இல்லை. 'இதுவும் சரி, அதுவுஞ் சரிதான்; ஆனால் எனக்கு இதுதான் சரி' என்ற வகையிம் அவனுடைய பணிவும் உறுதியும் பொருந்திய போக்கு இருந்துவரும். ஒரு சமயம் ஒரு குடும்பி ஒரு துறவியிடம் போய், "மோட்சமடைவதற்கு வீடு, வாசலைத் துறத்தல் அவசியமா?" என்று கேட்டான். அதற்குத் துறவி, "இல்லையே, ஜனகரைப் போன்றவர்கள் அரண்மனையில் வாசம் செய்துகொண்டே மோட்சமடைந்திருக்கையில் நீ வீட்டை விடுவதற்கு அவசியமேது?" என்றார். பிறகு வேறொருவன் வந்து துறவியிடம், "சுவாமி, வீடுவாசலை விடாமலே மோட்சம் கிடைக்கக்கூடுமா?" என்று கேட்டான். அதற்கு துறவி, "யார் அப்படிச் சொல்லுகிறது? வீட்டிலிருந்தபடியே சுளுவாய் மோட்சம் கிட்டுவதானால் சுகர் முதலியோர் வீடு வாயில்களைத் துறந்தார்களே, அவர்கள் என்ன மூடர்களா?" என்று கேட்டார். பிறகு அவ்விரு மனிதரும் சந்தித்தபொழுது அவர்களுக்குள் பெரிய சண்டை உண்டாய்விட்டது. ஒருவன் சாமியார் வீடு வாசல்களை விட்டு வெளியேறச்சொன்னார் என, மற்றவன் வீடுவாசலை விடத் தேவையில்லை என்றே சொன்னார் என்றான். அப்பொழுது இருவரும் துறவியிடம் வந்தார்கள். துறவி, "இருவர் சொல்லுவதும் சரியே. ஒருவருடைய மனப்போக்கு எப்படி யிருக்கிறதோ அப்படியேதான் அவருக்குரிய வழியும் இருக்கும். ஒருவர் கேட்கும் கேள்வி எப்படிப்பட்டதோ அப்படியே தான் அதன் விடையும் அமையும். வீடு வாசலைத் துறக்கவேண்டும் என்பதும் உண்மை; துறக்கவேண்டியதில்லை என்பதும் உண்மையே" என்றார். இதைத் தான் 'உம்' தத்துவம் என்பது. புண்டலீகனுடைய உதாரணத்திலிருந்து பயனைத்துறத்தல் எவ்வளவு தூரத்திற்குக் கொண்டு போய்விடக்கூடியதென்று தெரிந்துவிடுகிறது. துகாராமுக்கு பகவான் எந்த ஆசையைக் காட்ட விரும்பினாரோ அதை விடப் புண்டலீகனுக்குக் காட்டியது அதிக மயக்கத்தை விளைவிக்கக் கூடியது. ஆனால் அவன் அதற்கும் மயங்கவில்லை. மயங்கியிருந்தால் அவன் அதிலேயே சிக்கியிருப்பான். ஆகையால் கருவி இன்னதென்று முடிவு செய்து கொண்டான பிறகு இடையில் பகவானுடைய தரிசனம் போன்ற தடை குறுக்கிட்டபோதிலும் அதற்காக ஏற்ற கருவியைக் கைவிடாது இறுதி வரையில் காரியம் செய்து கொண்டே போக வேண்டும்.

உடல் எஞ்சியிருப்பது சாதனையின் பொருட்டே. பகவானுடைய தரிசனம் எங்கே போய் விடுகிறது? அதுதான் கையிலேயே இருக்கிறதே!

"உன் பக்தியிலேயே என் மனம் தோய்ந்திருக்கையில் என் எங்கும் பரந்த தன்மையை யார் பறித்துப் போகமுடியும்?" *

இந்த பக்தியைப் பெறுவதற்கே நமக்கு இந்த ஜன்மம் கிடைத்திருக்கிறது. 'मा ते संगोऽस्त्वकर्मणि' (மாதே ஸங்கோஸ்த்வகர்மணி) என்ற இந்த கீதையின் வாக்குக்கு பற்றற்று காரியத்தைச் செய்கையில் அகர்மம் அல்லது இறுதியான கர்ம முக்தி அல்லது மோட்சத்தின் வாஞ்சையையும் வைத்துக் கொள்ளாதே என்னும் அளவுக்குப் பொருள் ஏற்படுகிறது. வாசனை அல்லது வாஞ்சையிலிருந்து விடுதலையே மோட்சம். மோட்சத்திற்கு வாசனையினால் ஆகவேண்டியது என்ன இருக்கிறது? பயனைத் துறத்தல் இவ்வளவு தூரம் போய்விடும் பொழுது வாழ்க்கைக்கலை அதன் பூரண ஒளியைப் பெற்று விட்டதென்று எண்ணிக் கொள்ளலாம்.

## (10) ஆதரிச குருமூர்த்தி

சாஸ்திரம் சொல்லியாய் விட்டது. கலையையும் விளக்கியாய் விட்டது. ஆனால் இவைகளிலேயே முழுச் சித்திரமும் காணக்கிடைத்து விட்டதென்று சொல்ல முடியாது. சாஸ்திரம் நிர்குணமானது, கலையோ ஸகுணம். ஆனால் ஸகுணமான ஒன்றும் ஆகாரம் அல்லது உருவைப் பெற்றாலன்றி கண்ணுக்குப் புலனாவதில்லை. நிர்குணமானது காற்றோடு காற்றாய் இருப்பது போலவே உருவற்ற ஸகுணத்தின் நிலையும் இருக்கக்கூடும். இதற்கு உபாயம், எந்த குணியினிடத்தில் குணம் உருப் பெற்றிருக்கிறதோ அவனைக் காணுதல். இதனாலேயே அர்ஜுனன், "ஆண்டவனே, நீங்கள் வாழ்க்கையின் முக்கிய தத்துவங்

* 'सर्वात्मकपण माझें हिरोनि नेतो कोण? मनीं भक्तीची आवडी'

களைச் சொல்லி விட்டீர்கள். அத் தத்துவங்களை அனுஷ்டானத்தில் கொண்டுவர உதவும் கலையையும் கூறி விட்டீர்கள். ஆயினும் இதன் தெளிவான சித்திரம் என்முன் தோன்றவில்லை. ஆகையால் எனக்கு இப்பொழுது இதன் உதாரணத்தைக் கொடுங்கள். இதன் வரலாற்றைச் சொல்லுங்கள். எவர்களுடைய அறிவில் சாங்கிய நிஷ்டை உறுதி பெற்று விட்டதோ, பயனைத்துறத்தல் என்ற யோகம் எவர்களுடைய ஒவ்வொரு நரம்பிலும் பரவி விட்டதோ அவர்களுடைய இலட்சணங்களைச் சொல்லுங்கள். எவர்களை நாம் ஸ்திதப் ரக்ஞர் (நிலைத்த மதியுடையோர்) என்கிறோமோ எவர்கள் பயனின் தியாகம் எவ்வளவு ஆழம் போக முடியும் என்பதைக் காட்டுகிறார்களா, எவர்கள் கர்ம சமாதியில் ஆழ்ந்து போயிருக்கிறார்களோ, எவர்கள் உறுதியின் மகா மேருவோ அவர்கள் எப்படிப் பேசுகிறார்கள், எப்படி அமர்கிறார்கள், அவர்கள் நடப்பதெப்படி என்பவைகளையெல்லாம் எனக்குத் தெரிவிக்க வேண்டும். அவர்கள் எப்படியிருப்பார்கள், அவர்களைப் புரிந்து கொள்வது எப்படி என்பதையெல்லாம் சொல்லுங்கள்,'' என்கிறான்.

இதற்காக பகவான் இரண்டாம் அத்தியாயத்தின் இறுதி சுலோகங்கள் பதினெட்டில் ஸ்திதப் பிரக்ஞன் அல்லது நிலைத்த மதியுடையோனுடைய ஆழ்ந்த, உயர்ந்த வரலாற்றை விவரித்திருக்கிறார். இந்தப் பதினெட்டு சுலோகங்களில் கீதையின் பதினெட்டு அத்தியாயங்களின் சாரத்தையே பிழிந்து வைத்து விட்டாரெனலாம். ஸ்திதப் ரக்ஞன் கீதையின் ஆதரிச உருவமாகும். இந்தச் சொல்லே கீதையின் தனிச் சிறப்பு வாய்ந்த சிருஷ்டி. மேலே ஐந்தாம் அத்தியாயத்தில் ஜீவன் முக்தன், பன்னிரண்டில் பக்தன், பதினான்கில் குணாதீதன், பதினெட்டில் ஞானநிஷ்டன் ஆகியோரின் வர்ணனை இதே வகையில் வந்திருக்கிறது. ஆனால் ஸ்திதப் ரக்ஞனுடைய வர்ணனை இவை அனைத்தையும் விட அதிக விஸ்தாரமாயும் அதிக விபரங்களோடும் அமைந்துள்ளது. அவைகளில் சித்தனுடைய இலட்சணங்களோடு சாதகனுடைய இலட்சணங்களையும் சொல்லியிருக்கிறார். ஆயிரக்கணக்கான சத்தியாக்ரஹிகள், ஆண்களும் பெண்களும் மாலைப் பிரார்த்தனையில் இந்த இலட்சணங்களை ஓதுகிறார்கள். ஒவ்வொரு கிராமத்திலும் ஒவ்வொரு வீட்டிலும் இவை இடம் பெறச் செய்ய

முடியுமானால் எவ்வளவு ஆனந்தமாய் இருக்கும்! ஆனால் முதலில் அவை நம் உள்ளங்களில் பதிந்து விட்டால் பிறகு வெளியிலும் தாமே பரவி விடும். தினமும் பாராயணம் செய்யும் ஒன்று கிளிப்பாடமாகி விடுமானால் அது சித்தத்தில் பொறிக்கப் படுவதற்கு மாறாக மறைந்து போய்விடும். ஆனால் இந்தக் குற்றம் தினமும் பாராயணம் செய்வதால் விளைவதன்று, பாராயணம் செய்வதைச் சிந்தியாமையினால் விளைவதே. தினந்தோறும் பாராயணம் செய்வதோடு சிந்திக்கவும் ஆன்ம சோதனை செய்யவும் வேண்டும்.

ஸ்திதப் பிரக்ஞன் என்றால் நிலைத்த மதியுடையோன் என்பது பொருள். இது அவனுடைய பெயரிலிருந்தே வெளியாகிறது. ஆனால் புலனடக்கம் இல்லாத பொழுது மதி எப்படி ஒரு நிலையிலிருக்கும்? ஆகையால் ஸ்தித ப்ரக்ஞனை புலனடக்கமே உருவானவன் என்று சொல்லப் பட்டிருக்கிறது. மதி ஆன்மாவில் ஆழ்ந்தும் அகப்புலன் களும் புறப்புலன்களும் மதிக்கு அடங்கியும் இருத்தல் என்பதே புலனடக்கம் என்பதின் பொருள். ஸ்தித ப்ரக்ஞன் எல்லாப் புலன்களுக்கும் கடிவாளம் பூட்டி அவை களைக் கர்மயோகத்தில் ஈடுபடச் செய்கிறான். புலன்க ளென்ற எருதுகளைக் கொண்டு அவன் பயனைக் கருதாத சுதர்மம் இயற்றல் என்ற விவசாயத்தைச் சிறப்பாய்ச் செய்வித்துக்கொண்டு இழுத்து விடும் ஒவ்வொரு மூச்சை யும் பரமார்த்தத்தில் பயன்படுத்துகிறான்.

இந்தப் புலனடக்கம் என்பது சுளுவானதல்ல. இந்திரி யங்களிடம் வேலையே வாங்காதிருத்தல் ஒருக்கால் சுலபமா யிருக்கக்கூடும். மௌனம், உபவாசம் ஆகியவை அவ் வளவு சிரமமானவையல்ல. இதற்கு மாறாக, புலன்களை அவைகளின் இஷ்டம் போல் விட்டு விடுதல் என்பதோ எல்லோருக்கும் பழக்கமானதொன்று. ஆனால் ஆமை ஆபத்துள்ள இடங்களில் தன் அவயவங்களையெல்லாம் உள்ளே யிழுத்துக் கொண்டு, அச்சமில்லாதிருக்கக் கூடிய இடத்தில் அவைகளைப் பயன்படுத்துவதைப் போல விஷய போகங்களிலிருந்து புலன்களை இழுத்துக்கொள்வதும் பாரமார்த்திகப் பணியில் அவைகளைத் தகுந்த முறையில் உபயோகித்தலும் என்ற இந்தப் புலனடக்கம் சிரமமானது. இதற்கு மிகுந்த முயற்சி தேவை, ஞானமும் வேண்டும்.

ஆனால் இதெல்லாம் செய்தும் அது எப்பொழுதும் நன்கு கைகூடி விடும் என்று சொல்லுவதற்கில்லை. அப்படியானால் நாம் நம்பிக்கையை இழந்து விடுவதா? வேண்டாம், சாதகன் ஒரு பொழுதும் நம்பிக்கையைத் துறக்கக் கூடாது. அவன் சாதனைக்குரிய எல்லா யுக்திகளையும் கையாண்டு பார்க்கவேண்டும். பிறகும் குறைபாடிருக்குமானால் அதில் பக்தியைச் சேர்த்துக் கொள்ள வேண்டும். இந்த மிகவும் மதிப்பிற்குரிய யோசனையை பகவான் ஸ்திதப்ரக்ஞனுக்குரிய இலட்சணங்களில் தந்திருக்கிறார். ஆம், அவர் தந்திருப்பது பொறுக்கி யெடுத்த சில சொற்களிலேயே ஆகும். ஆனால் வண்டி வண்டியாய்ச் செய்யப்படும் சொற்பொழிவுகளைவிட அதற்குள்ள மதிப்பு அதிகம். ஏனெனில், பக்திக்கு எந்த இடத்தில் இன்றியமையாத தேவை யிருக்கிறதோ அங்கேயே அது குறிப்பிடப் பட்டிருக்கிறது. ஸ்திதப்ரக்ஞனுடைய இலட்சணங்களை நாம் இன்று இங்கே விஸ்தாரமாய் விவரிக்கப் போவதில்லை. ஆனால் நாம் நமது சாதனைகள் அனைத்திலும் பக்திக்குள்ள நிச்சயமான இடத்தை மறந்து விடாமல் இருக்கவேண்டும் என்பதற்காகவே அதில் கவனம் செலுத்தச் செய்தேன். பூரண ஸ்திதப்ரக்ஞன் இவ்வுலகில் யார் இருந்திருக்கிறார்கள் என்பது கடவுளுக்குத்தான் தெரியும். ஆனால் சேவையில் ஈடுபட்டு நிற்கும் ஸ்திதப்ரக்ஞனுக்கு உதாரணம் என்ற வகையில் புண்டலீகனுடைய உருவம் எப்பொழுதும் என் கண்களின்முன் தோன்றிக் கொண்டே யிருப்பதை நான் உங்களுக்கும் தெரிவித்து விட்டேன்.

சரி, இப்பொழுது ஸ்திதப்ரக்ஞனுடைய இலட்சணங்கள் பூர்த்தியாய் விட்டன. இரண்டாம் அத்தியாயமும் முடிந்தது.




சேர்ந்தது
பூரண வாழ்க்கை சாஸ்திரம்

இதிலிருந்து பிரம்ம நிர்வாணம் அல்லது மோக்ஷத்தைத் தவிர வேறு என்ன பயன் கிட்டக் கூடும்?

ஞாயிறு, 28–2–'32.

## மூன்றும் அத்தியாயம்

# கர்ம யோகம்

*

### (11) பயனைத்துற – அளவிலடங்காப் பயன்கிட்டும்

சகோதரர்களே, நாம் இரண்டாம் அத்தியாயத்தில் வாழ்க்கை சாஸ்திரம் முழுவதிலும் நோக்கைச் செலுத்தினேம். இப்பொழுது இந்த மூன்றும் அத்தியாயத்தில் இதே வாழ்க்கை சாஸ்திரத்தை விளக்க வேண்டும். முதலில் நாம் தத்துவங்களைக் குறித்துச் சிந்தித்தோம். இப்பொழுது அவைகளை விவரமாய் ஆராயப் போகிறேம். பிந்திய அத்தியாயத்தில் கர்மயோகத்தை விவரித்தோம். கர்மயோகத்தில் உள்ள முக்கியமான விஷயம் பயனைத் துறத்தலாகும். கர்மயோகத்தில் பயனைத் துறத்தல் என்பது என்னவோ இருக்கிறது; ஆனல் துறப்பதற்குப் பயனே கிட்டுமோ, கிட்டாதோ என்ற கேள்வி எழுகிறது. ஆகையால் மூன்றும் அத்தியாயத்தில் கர்மத்தின் பயன்களைத் துறப்பதனுல் அவற்றை இழப்பதற்கு மாருக கர்மயோகி அளவிலடங்காப் பயன் பெறுகிருனென்று சொல்லுகிருர்.

இங்கே எனக்கு இலட்சுமி தேவியின் கதை நினைவுக்கு வருகிறது. அவருக்கு சுயம்வரம் நடந்தது. தேவர், அசுரர் அனைவரும் பேராவலுடன் வந்திருந்தார்கள். இலட்சுமிதேவி தாம் கொண்டிருந்த விரதத்தை முதலில் வெளியிடவில்லை. அவர் சுயம்வர மண்டபத்தில் வந்து, "என்னிடம் விருப்பமில்லாதவருக்கே நான் மாலை சூட்டுவேன்" என்ருர். அவர்கள் அனைவரும்தான் ஆசை பிடித்தவர்களாயிற்றே! ஆகவே இலட்சுமிதேவி ஆசையற்ற வரனைத் தேடத் தொடங்கினர். இதற்குள் சேஷ நாகத்தின்மீது அமைதியாய்ப் பள்ளி கொண்டிருக்கும் விஷ்ணு பகவான் உருவம் அவர் கண்முன் தோன்றியது. அவர் கழுத்தில் மாலையை அணிவித்துவிட்டு இன்றுவரையில் அவருக்குப் பாத சேவை புரிந்தபடியே அவர் வீற்றிருக்கிருர். "தன்னை விரும்பாதவருக்கு இலட்சுமிதேவி அடிமை ஆகிருர்"* இதுவல்லவா விசேஷம்!

---

* "न मागे तयाची रमा होय दासी"

சாதாரண மனிதன் தன் பயனைச் சூழ முள்வேலி அமைக்கிறான்; இதனால் அவன் கிடைக்க இருக்கும் அளவிலடங்காப் பயனை இழந்துவிடுகிறான். உலக வாழ்வில் உழலும் மனிதன் அளவில்லாத காரியம் செய்து அற்பப் பயனை அடைகிறான். ஆனால் கர்மயோகியோ ஒரு சிறிது காரியமே செய்தும் அளவில் அடங்காப் பயனைப் பெறுகிறான். இந்த வேற்றுமை ஒரு மனோபாவனை காரணமாக ஏற்படுவது. டால்ஸ்டாய் ஒரு இடத்தில், "மக்கள் ஏசுநாதருடைய தியாகத்தை வெகுவாய்ப் புகழ்கிறார்களே, ஆனால் உலகவாழ்விலுள்ள இந்த மக்கள் பிரதி தினமும் தம் இரத்தம் சுண்ட எவ்வளவு ஓடியாடி உழைக்கிறார்கள்! இரண்டு கழுதைச் சுமையை முதுகில் தாங்கிக்கொண்டு வளையவரும் இந்த உலக வாழ்விலுள்ள மக்களுக்கு ஏசுநாதரைவிட எவ்வளவு கஷ்டமும், அவமானமும் ஏற்படுகிறது! இதில் பாதிப் பாடாவது பகவானுக்காகப் படுவார்களாயின் உண்மையில் இவர்கள் ஏசுவையும் விஞ்சி விடுவார்கள்" என்று சொல்லியிருக்கிறார்.

உலக வாழ்க்கையிலுள்ள மனிதனது தவம் உண்மையில் பெரிது. ஆனால் அது இழிந்த பயன்களைக் கருதிச் செய்யப்படுவது. வாசனைக்கு ஒத்தே பயனும் கிடைக்கும். நம் பொருளுக்கு நாம் அளிக்கும் மதிப்பைவிட அதிக மதிப்பு உலகத்தில் ஏற்படாது. சுதாமா (குசேலர்) அவல் எடுத்துக் கொண்டு பகவானிடம் போனார். அந்த அவலின் மதிப்பு ஒரு சல்லி கூட இராது. ஆனால் சுதாமாவுக்கு அது விலை மதிக்க வொண்ணாததாய்த் தோன்றிற்று. ஏனெனில் அதில் அவருடைய பக்தி கலந்திருந்தது. அது மந்திரம் ஏறியது. அதன் ஒவ்வொரு துணுக்கிலும் பக்தி, பாவனை தோய்ந்திருந்தது. பொருள் இழிந்ததாயிருந்த போதிலும் மந்திரத்தினால் அதன் மதிப்பு, அதன் சக்தி அதிகமாய்விடுகிறது. நோட்டின் எடை எவ்வளவு இருக்கும்? அதை அடுப்பில் கொளுத்திப் போட்டால் ஒரு துளி நீரைக் காய்ச்சவும் அது உதவாது. ஆனால் அதன்மீது ஒரு முத்திரை போட்டிருக்கிறதே, அதனாலேயே அதற்கு மதிப்பு ஏற்படுகிறது.

கர்மயோகத்திலுள்ள விசேஷம் அனைத்தும் இதுவே. கர்மத்தை நோட்டென்றே எண்ணிக்கொள்ளுங்கள். பாவனை என்ற முத்திரைக்கு மதிப்புண்டேயன்றி கர்ம

மென்ற காகிதத் துண்டுக்கு மதிப்பில்லை. ஒரு வகையில் நான் இவ்வாறு விக்கிரக வழிபாட்டின் ரகசியத்தையே சொல்லிக்கொண்டிருக்கிறேன் எனலாம். விக்கிரக வழி பாடு பற்றிய கருத்தில் மிக்க அழகு பொதிந்திருக்கிறது. இந்த விக்கிரகத்தை யார் தகர்க்க முடியும்? இந்த விக்கிர கம் தொடக்கத்தில் ஒரு வெறும் கல் துண்டுதான். நான் அதில் உயிரைப் புகுத்தினேன், என் பாவனையைச் சேர்த் தேன். இந்த பாவனையை எவரேனும் துண்டாட முடி யுமா? கல்லை உடைத்துத் தகர்க்க முடியுமேயன்றி பாவ னையை ஒன்றும் செய்ய முடியாது. நான் என் பாவனையை விக்கிரகத்திலிருந்து அகற்றும் பொழுதுதான் கல் எஞ்சி நிற்கும். அப்பொழுதுதான் அதை உடைத்துத் தகர்க்க இயலும்.

கர்மம் என்பதற்கு கல் அல்லது காகிதத்துண்டு என் பது பொருள். என் தாய் ஒரு காகிதத் துண்டில் கோணல் மாணலாக இரண்டு மூன்று வரிகள் எழுதி அனுப்பி யிருக்க, வேறொருவர் ஐம்பது பக்கங்களில் அவருக்குத் தோன்றியதை யெல்லாம் வியாசமென்று எழுதி அனுப் பினர். இப்பொழுது இவை இரண்டினுள் எதற்கு மதிப்பு அதிகம்? தாயின் அந்தச் சில வரிகளிலுள்ள பாவத்திற்கு உள்ள மதிப்பு அளவிட முடியாதது; அது புனிதமானது. இதற்கும் அந்தக் காகிதக் கத்தைக்கும் ஒப்புவமையே இல்லை. காரியத்தில் நைப்பு இருக்க வேண்டும், பாவனை யிருக்க வேண்டும். நாம் வேலையாளின் வேலைக்கு ஒரு மதிப்பை இட்டு அவனுக்குக் கூலி கொடுத்துவிடுகிறோம். ஆனால் தக்ஷிணை கொடுப்பது இப்படியல்ல. தக்ஷிணையை நீரில் நனைத்துக் கொடுப்பது வழக்கம். தக்ஷிணையின் விஷயத்தில் எவ்வளவு கொடுத்தோமென்ற கேள்வியே எழுவதில்லை. ஆனால் அதில் நைப்பு இருக்கிறதா, இல்லையா என்பதே முக்கியமாய் கவனிக்கப்படுவது வழக்கம். மனுஸ்மிருதியில் ஒரு விநோதமான விஷயம் சொல்லப்பட்டிருக்கிறது. ஒரு சீடன் பன்னிரண்டு வரு ஷம் குருகுல வாசம் செய்து மிருகத்திலிருந்து மனித னானான். இப்பொழுது அவன் குருதக்ஷிணையாக எதைக் கொடுப்பது? பண்டைக் காலத்தில் முன்கூட்டியே சம் பளம் வாங்கிக்கொள்ளும் வழக்கம் இல்லை; பன்னிரண்டு வருஷம் படித்தான பிறகு குருவுக்குக் கொடுக்க வேண்டி யதைக் கொடுப்பதுண்டு. மனு, "குருவுக்கு கொஞ்சம்

இலையோ, பூவோ, ஒன்றிரண்டு விசிறிகளோ மிதி யடியோ, நீருள்ள செம்போ கொடு'' என்று சொல்லு கிறார். இதை நீங்கள் வேடிக்கையாகச் சொன்னதென்று எண்ண வேண்டாம். ஏனெனில், கொடுக்க வேண்டியதை சிரத்தையின் அறிகுறியாய்க் கருதிக் கொடுக்க வேண்டும். ஒரு பூவின் எடை என்ன இருக்கப்போகிறது? ஆனால் அந்த பக்தி பாவனை பிரம்மாண்டத்திற்கு நிகரான பளு உள்ளது.

"ருக்மிணி ஒரு துளசி இலையைக் கொண்டு கிரிதாரி யாம் பிரபுவை எடை போட்டாள்.''* சத்தியபாமையின் மணுக் கணக்கான நகைகளினால் பயன் இல்லை. ஆனால் பக்தி நிறைந்த ஒரு துளசி இலையை ருக்மிணித்தாய் தராசின் தட்டில் இட்டவுடன் எல்லாம் சரியாய் விட்டது. அந்தத் துளசி இலை மந்திரம் ஏறிய இலை; சாதாரண இலை அல்ல. கர்மயோகியின் காரியமும் இத்தகையதே.

இரண்டு மனிதர்கள் கங்கையில் ஸ்நானம் செய்வதற் காகப் போகிறார்கள் என்று வைத்துக்கொள்வோம். அவர் களுள் ஒருவன்: "ஜனங்கள் கங்கை, கங்கையென்று கதறுகிறார்களே; அதில் அப்படி என்ன இருக்கிறது? இரண்டு பங்கு ஹைடிரஜன் (நீரகம்) ஒருபங்கு ஆக்ஸிஜன் (பிராணவாயு); இந்த இரண்டு வாயுக்களையும் சேர்த்து விட்டால் கங்கை கிடைத்துவிடுகிறது! இதற்கு அதிகமாய் அதில் என்ன இருக்கிறது?'' என்று சொல்லுகிறான். மற்ற வனோ, "விஷ்ணு பகவானுடைய பாதகமலங்களிலிருந்து இவள் தோன்றி சங்கரனுடைய ஜடா மகுடத்தில் வாசம் செய்கிறாள். ஆயிரக் கணக்கான பிரம்ம ரிஷிகளும் ராஜரிஷிகளும் இவள் கரையில் தவம் புரிந்திருக்கிறார் கள். இவள் கரையில் நிகழ்ந்துள்ள புண்ணிய காரியங் களுக்கு அளவில்லை. ஆஹா, எவ்வளவு புனிதமானவள் என் கங்கைத் தாய்!'' என்கிறான். இந்த பாவனையினால் ஆட்கொள்ளப்பட்ட அவன் கங்கையில் போய் நீராடு கிறான். அந்த நீரக- பிராணவாயுப் பேர்வழியும் அதில் முழுக்குப் போடுகிறான். உடல் துப்புரவு என்ற பயன் இருவருக்குமே கிட்டிவிட்டது. கங்கையில் ஒரு எருது போய் விழுந்தால் அதன் உடலும் துப்புரவாய்விடும்; உடல் அழுக்கு அகன்றுவிடும். ஆனால் மனதின் மாசைக்

* " रुक्मिणीनें एका तुळसिदळानें गिरिधर प्रभु तुळिला

கழுவுவது எப்படி? ஒருவனுக்கு உடல் துப்புரவென்ற இழிந்த பயன் கிட்ட, மற்றவனுக்கோ அதோடு சித்த சுத்தி யென்ற மதிப்பிட முடியாத பயனும் கைகூடிற்று.

ஸ்நானம் செய்துவிட்டு சூரிய நமஸ்காரம் செய்பவனுக்கு வியாயாமம் செய்தலின் பயன் கிடைக்கவே செய்கிறது. ஆனால் அவன் நமஸ்காரம் செய்வது ஆரோக்கியத்தின் பொருட்டல்ல, வழிபாடு என்று கருதியேயாகும். இதனால் அவனுடைய உடலுக்கு ஆரோக்கியம் கிட்டுவதோடு அறிவின் ஒளியும் ஓங்குகிறது. ஆரோக்கியத்தோடு கற்பனைத் திறனும் மேதையும் அவனுக்கு சூரிய நாராயணரிடமிருந்து கிடைக்கின்றன.

காரியம் என்னவோ அதுவேதான்; ஆனால் பாவனை வேறுபாட்டினால் அதில் வேற்றுமை தோன்றிவிடுகிறது. பாரமார்த்திகனுடைய காரியம் ஆன்மீக வளர்ச்சிக்கு உதவ, சம்சாரியின் காரியம் ஆன்மாவுக்குத் தளையிட்டு விடுகிறது. கர்மயோகி ஒரு விவசாயியா யிருந்தால் அவன் விவசாயத்தை சுதர்மமாய்க் கருதிச் செய்வான். இதனால் அவனுடைய வயிறு என்னவோ நிச்சயமாய் நிரம்பும். ஆனால் அவன் தன் வயிற்றுக்காகவென்றே காரியம் செய்வதில்லை. அவன் உணவை விவசாயம் செய்வதற்குத் தகுந்ததாய் உடல் இருந்துவர உதவும் ஒரு சாதனமாகவே கருதுவான். சுதர்மம் அவனுடைய இலட்சியமும் உணவு அதற்குரிய கருவியும் ஆயின. ஆனால் வேறொரு விவசாயிக்கோ தன் வயிற்றை நிரப்புவதே குறிக்கோளாயிருக்க விவசாயமென்ற சுதர்மம் அதற்குரிய கருவியாய் இருக்கும். இவ்வாறு இவை ஒன்றுக்கொன்று மாறுபட்ட நிலைகளாம்.

இரண்டாம் அத்தியாயத்தில் ஸ்தித ப்ரக்ஞனுடைய, நிலைத்த மதியுடையோனுடைய இலட்சணங்களை விவரிக்கையில் இவ்விஷயம் விநோதமான முறையில் கூறப்பட்டிருக்கிறது. பிறர் விழித்துக்கொண்டிருக்கையில் கர்மயோகி தூங்கிக்கொண்டிருக்கிறான்; மற்றவர் தூங்குகையிலோ கர்மயோகி விழித்துக் கொண்டிருக்கிறான். நாம் வயிற்றுப் பாட்டுக்காக விழித்துக்கொண்டிருப்போமானால் கர்மயோகி தன் பொழுதில் ஒரு கணமும் வீணாகக்கூடாது என்று விழிப்புடனிருப்பான். அவன் சாப்பிடுவதும் நிர்ப்பந்தத்தினாலேயே. இந்த வயிற்றுச்

சாலில் ஏதாவது போட்டாக வேண்டுமே என்பதற்காகவே அவன் எதையும் போடுவான். சம்சாரிக்கு, உலக வாழ்வில் உழலுபவனுக்கு உணவு கொள்வதில் ஆனந்தம் உண்டாக, யோகிக்கோ அதில் கஷ்டமேற்படுகிறது. இதனால் அவன் சுவைத்துச் சுவைத்து எதையும் உண்ணமாட்டான். அடக்கமாக எதையும் உட்கொள்வான். ஒருவனுக்கு எது இரவோ அதுவே மற்றவனுக்கு பகல்; ஒருவனுக்கு எது பகலோ அதுவே மற்றவனுக்கு இரவு. அதாவது எதில் ஒருவனுக்கு ஆனந்தமோ அதில் மற்றவனுக்கு துக்கமும், எதில் ஒருவனுக்கு துக்கமோ அதில் மற்றவனுக்கு ஆனந்தமும் ஆகிறது. உலக ஜீவி, கர்மயோகி ஆகிய இருவரின் காரியங்களும் ஒரேமாதிரி இருந்தபோதிலும் கர்மயோகியினிடமுள்ள சிறப்பு அவன் பயனில் பற்றில்லாது காரியத்தில் ஈடுபடுவதாகும். உலக ஜீவியைப்போல யோகி உண்பான், அருந்துவான், உறங்குவான். ஆனால் அவைகளைப்பற்றிய அவனுடைய பாவனை வேறு யிருக்கும். இதனாலேயே கீதையில் இன்னும் பதினறு அத்தியாயங்கள் எஞ்சி யிருக்கையில், ஆரம்பத்திலேயே ஸ்திதப்ரக்ஞனுடைய அடக்கமான உருவம் நம்முன் காட்டப்பட்டிருக்கிறது.

உலக ஜீவி, கர்மயோகி ஆகிய இருவரின் காரியங்களின் ஒற்றுமை வேற்றுமைகள் உடனே நமக்குத் தெளிவாய் விடுகின்றன. கர்மயோகி கோ ரக்ஷை அல்லது பசுப் பாதுகாப்பு வேலை செய்து கொண்டிருப்பதாக வைத்துக்கொள்ளுங்கள். அதை அவன் எந்த நோக்குடன் செய்வான்? கோ சேவையினால் சமூகத்திற்கு ஏதேஷ்டமாய்ப் பால் கிடைக்கும். பசுவின் சாக்கில் மனிதனிலும் இழிந்த ஜீவ ஜந்துக்களுடன் அன்புத் தொடர்பு கொள்ளலாம் என்பது அவனுடைய பாவனையா யிருக்குமேயல்லாது தனக்கு ஊதியம் கிடைக்கும் என்பது அவனுடைய எண்ணமா யிராது. ஊதியம் எங்கும் போய் விடப் போவதில்லை; ஆனால் உண்மையான ஆனந்தம், உண்மையான சுகம் இந்த தெய்வீக பாவனையிலேயே அடங்கி யிருக்கிறது.

கர்மயோகியின் காரியம் அவனை இந்த சிருஷ்டி அனைத்துடனும் ஒருமைப்பாடு கொள்ளும்படி செய்து விடுகிறது. துளசிச் செடிக்குத் தண்ணீர் ஊற்றுது

உணவு கொள்ளாமை தாவர சிருஷ்டியுடன் நமக்கு அன்புப் பிணிப்பை உண்டாக்கி விடுகிறது. 'துளசியைப் பட்டினி போட்டுவிட்டு நான் எப்படி முதலில் சாப்பிடுவேன்?' என்ற இவ்வகையில் பசுவுடனும் தாவரங்களுடனும் ஒருமைப்பாடு ஏற்படுத்திக்கொண்டு சகல சிருஷ்டியுடனும் நாம் ஒன்றிப் போய்விட வேண்டும். மகாபாரத யுத்தத்தில் பொழுது சாய்ந்ததும் எல்லோரும் சந்தியா வந்தனம் செய்யப் போய்விட கிருஷ்ணபகவான் ரதத்தின் குதிரைகளை அவிழ்த்துவிட்டு அவைகளுக்குத் தண்ணீர் காட்டி, கொள் வைத்து, உடலைத் தேய்த்து உடலிலுள்ள உண்ணிகளை அகற்றுகிறார். இந்த சேவையில் பகவானுக்கு எவ்வளவு ஆனந்தம் உண்டாயிற்று தெரியுமா? கவிக்கு அதை வர்ணிப்பதில் அலுப்பு சலிப்பே தோன்றவில்லை. தம் பீதாம்பரத்தின் முந்தாணியில் கொள்ளும் பொட்டும் எடுத்துக்கொண்டு குதிரைகளுக்குக் கொடுக்கும் அந்தப் பார்த்தசாரதியின் உருவத்தைத் தம் கண் முன் நிறுத்திக்கொண்டு கர்ம யோகத்தினால் விளையும் ஆனந்தத்தைக் கற்பனையிலேயே அனுபவியுங்கள்! ஒவ்வொரு காரியமும் உயர்ந்த பாரமார்த்திகக் காரியமே. கதர் வேலையையே எடுத்துக் கொள்ளுங்கள். தோள்மீது கதர் மூட்டையைத் தாங்கிக்கொண்டு தெருத்தெருவாய்ச் சுற்றுகிறவன் அலுத்துப் போகமாட்டானா? மாட்டான். ஏனெனில், 'நாட்டில் கோடிக்கணக்கான என் சகோதர சகோதரிகள் உணவும் உடையும் இன்றி வாடுகிறார்களே; அவர்களுக்குக் கால்வயிற்றுக் கஞ்சியாவது ஊற்ற வேண்டுமே!' என்ற எண்ணத்தில் அவன் வேறு எதையும் நினைப்பதில்லை. அவன் ஒரு கஜம் கதர் விற்பதின் மூலமாய் தன்னை தரித்திர நாராயணர்கள் அனைவருடனும் இணைத்துக்கொண்டு விடுகிறான்.

## (12) கர்மயோகத்தின் பல்வேறு பயன்கள்

பயனைக் கருதாத கர்மயோகத்திற்கு அற்புதமான சக்தி யுண்டு. இத்தகைய காரியத்தினால் தனி மனிதனுக்கும் சரி, சமூகத்திற்கும் சரி பெருத்த நன்மை விளையும். சுதர்மத்தை அனுஷ்டிக்கும் கர்ம யோகியின் உலக வாழ்க்கை நடந்து வருவதோடு அவன் எப்பொழுதும் செயலிலேயே ஈடுபட்டிருப்பதால் அவனுடையஉடல் நோய்

நொடியின்றிச் செம்மையாயிருக்க, அவனது இந்தக் காரியத்தின் பலனை அவன் எந்த சமூகத்தின் அங்கமா யிருந்து வருகிறானோ அதன் அன்றாட நிர்வாகமும் சிறப் பாய் நடந்து வரும். கர்மயோகியான விவசாயி பணம் அதிகமாய்க் கிடைக்கும் என்பதற்காகக் கஞ்சாவோ புகை யிலையோ பயிரிடமாட்டான். ஏனெனில் அவன் தான் செய்யும் காரியத்தை சமூகத்தின் நன்மையோடு பொருத்திப் பார்ப்பான். சுதர்மமென்ற காரியம் சமூகத்திற்கு நன்மை பயப்பதாய்த்தான் இருக்கும். தன் தொழிலென்ற காரி யம் சமூகத்திற்கு நன்மை செய்வதாகவே இருக்க வேண்டு மென்று நினைக்கும் வியாபாரி விதேசித் துணியை ஒரு பொழுதும் வாங்கி விற்கமாட்டான்; அவன் செய்யும் வியாபாரம் சமூகத்திற்கு நன்மைபயப்பதா யிருக்கும். தன்னை மறந்து தன் அக்கம் பக்கத்திலுள்ள சமூகத்துடன் ஒன்றிவாழும் கர்மயோகிகள் எந்த சமூகத்தில் தோன்று கிறார்களோ அதில் ஒழுங்கும் செல்வமும் சமாதானமும் நிலவும்.

கர்மயோகியினுடைய காரியத்தின் விளைவாய் அவ னது வாழ்க்கை நடப்பதோடு, அவனுடைய உடலும் அறிவும் ஒளிபெற்று விளங்க, சமூகத்திற்கும் நன்மை விளையும். இந்த இரண்டு பயன்களைத் தவிர சித்த சுத்தி யென்ற பெரும் பயனும் அவனுக்குக் கிட்டும். 'கர்மணா ஶுத்தி:' (கர்மணா சுத்தி :) என்று சொல்லப்பட்டிருக்கிறது. காரியம் சித்த சுத்திக்கு ஒரு சாதனமாகும். ஆனால் அது எல்லோரும் செய்யும் சாதாரணமான காரியமல்ல; கர்மயோகி செய்யும் மந்திரம் ஏறிய காரியத்தினா லேயே சித்தசுத்தி ஏற்படும். மகாபாரதத்தில் துலா தாரன் என்ற வைசியனுடைய கதை வருகிறது. ஜாஜலி என்ற பிராமணன் ஒருவன் துலாதாரனிடம் ஞானம் பெறுவதற்காகப் போகிறான். துலாதாரன் அவனிடம், "தம்பி, இந்தத் தராசின் கோலை எப் பொழுதும் நேராய்ப் பிடிக்கவேண்டி யிருக்கிறது" என்கிறான். இந்தப் புறக் காரியத்தைச் செய்து செய்து துலாதாரனுடைய மனமும் நேரியதாய், கபடமற்றதாய் ஆகிவிட்டது. ஒரு சிறிய குழந்தை கடைக்கு வந்தாலும் சரி, விவரம் தெரிந்த வாலிபன் வந்தாலும் சரியே, அவ னுடைய துலாக்கோல் ஒரே மாதிரிதான் நிற்கும். மேலே

எழவும் செய்யாது, கீழே இறங்கவும் செய்யாது. செய்யும் தொழிலினால் மனம் மாறுபடவே செய்கிறது. கர்மயோகி யின் காரியத்தை ஒருவகை ஜபம் என்றே கருதலாம். அதனால் அவனுக்கு சித்தசுத்தி ஏற்பட, தூய சித்தத்தில் ஞானத்தின் விம்பம் பிரதிபலிக்கிறது. தம் பல்வேறு காரியங்களினால் கர்மயோகிகள் இறுதியில் ஞானம் அடை கிறார்கள். தராசின் கோலினால் துலாதாரனுக்கு சமநோக் குக் கிட்டிற்று. சேனா என்ற நாவிதன் க்ஷவரத்தொழில் செய்துவந்தான். பிறருடைய தலை அழுக்கை நீக்கிக் கொண்டே யிருந்த அவனுக்கு ஞானம் கிட்டியது. "பார், நான் பிறருடைய மண்டை அழுக்கை அகற்றிக்கொண்டே யிருக்கிறேனே, எப்பொழுதாவது என் தலையில், என் அறிவிலுள்ள அழுக்கைப் போக்கிக் கொண்டேனா?" என்பதுபோன்ற தத்துவப் பேச்சு அவனுக்கு அந்தக் காரியத்திலிருந்தே தோன்றலாயிற்று. வயலின் களையை அகற்றிக்கொண்டே யிருக்கும் கர்மயோகிக்கு தன் உள்ளத் தின் வாசனைகள், விகாரங்கள் என்ற களைகளை அகற்றும் அறிவு உண்டாகிறது. பச்சை மண்ணைப் பிசைந்து பிசைந்து சமூகத்திற்குக் கெட்டியான சட்டிபானைகள் செய்துதரும் கோரா என்ற குயவன் தன் வாழ்க்கைச் சட்டியையும் உறுதிப்படுத்திக்கொள்ள வேண்டும் என்ற படிப்பினையைப் பெறுகிறான்; இவ்வாறு அவன் கையினால் தட்டித் தட்டி சட்டி வெந்ததா வேகாததா என்று மகான் களை யெல்லாம் சோதித்துத் தெரிந்துகொள்ளும் திறமை பெறுகிறான். இதிலிருந்து கர்மயோகிகள் எந்தக் காரியங் கள் அல்லது தொழில்களைச் செய்கிறார்களோ அவைகளைப் பற்றிய பரிபாஷையிலிருந்தே அவர்களுக்குச் சிறந்த ஞானம் கிடைத்திருக்கிறது. அந்தக் காரியங்கள் அவர் களுடைய ஆன்மீக வளர்ச்சிக்குதவும் பள்ளியாகவே இருந்தன. அவர்களுடைய அந்தக் காரியங்கள் உபா சனை மயமாய், சேவை மயமாய் இருந்தன. மேற்பார் வைக்கு உலக நடவடிக்கைகளாய்த் தோன்றியபோதிலும் உண்மையில் அவை பாரமார்த்திக மானவையே.

கர்மயோகியின் காரியத்தினால் இன்னும் ஒரு சிறந்த பயனும் கிடைக்கிறது. அதாவது, சமூகத்திற்கு அது ஒரு ஆதரிசமாய் அமைகிறது. சமூகத்தில் ஒருவன் முன்னால் பிறப்பதும் இன்னொருவன் பின்னால் பிறப்பதும் தான் உள்ளதாயிற்றே. முன்னால் பிறக்கிறவர்களுக்கு

தமக்குப் பின் பிறப்பவர்களுக்கு உதாரணமாய் இருக்க வேண்டிய பொறுப்பு ஏற்படுகிறது. அண்ணனுக்குத் தம்பியின் விஷயத்திலும் பெற்றோருக்குப் பிள்ளைகள் விஷயத்திலும் தலைவனுக்கு தொண்டர்கள் விஷயத்திலும், குருவுக்கு சிடர்கள் விஷயத்திலும் தம் செயல்களினால் முன்மாதிரியாய் இருக்க வேண்டிய பொறுப்பு இருக்கிறது. இவ்வாறு முன்மாதிரியாய் அமைவதை கர்மயோகிகளைத் தவிர வேறு யாரால் சாதிக்க முடியும்?

கர்மயோகி எப்பொழுதும் காரியத்திலேயே ஈடுபட்டிருப்பான். ஏனெனில் காரியத்தில்தான் அவனுக்கு ஆனந்தம் ஏற்படும். இதனால் சமூகத்தில் டம்பமும் மோசடியும் வளர்வதில்லை. கர்மயோகி போதுமென்ற மனப்பான்மையுள்ளவனாய் தன்னில் தான் திருப்தியுடன் இருந்த போதிலும் காரியம் செய்யாமல் அவனால் வாழவே முடிவதில்லை. துகாராம், "பஜனையினால் பகவான் கிட்டி விட்டார் என்பதற்காக நான் பஜனை செய்வதையே விட்டு விடுவதா? பஜனை தான் இப்பொழுது என் இயற்கை தர்மமாய் விட்டதே!"* என்கிறார்.

கர்மத்தின் படிகள் வழியே ஏறி உச்சியை அடைந்தாய் விட்டது. ஆனால் அப்பொழுதும் கர்மயோகி தான்ஏறிய ஏணியை விடுவதில்லை; அது அவனைவிட்டுப் பிரியவே முடியாது. அவனுடைய பொறிகளுக்கு அந்தக் காரியங்களைச் செய்வதில் ஒரு இயற்கையான பழக்கம் ஏற்பட்டு விடுகிறது. இவ்வாறு சுதர்மமான காரியமென்ற சேவை-ஏணியின் பெருமையை அவன் சமூகத்திற்கு உணர்த்திக் கொண்டேயிருக்கிறான்.

சமூகத்திலிருந்து வேஷமும், மோசடியும் அகலுதல் மிகவும் முக்கியமாகும். வேஷம்-மோசடியினால் சமூகமே ஆழ்ந்து அழிந்து போகிறது. ஞானி எதுவும் செய்யாமல் உட்கார்ந்து விடுவானானால் அவனைப் பார்த்துப் பிறரும் கையைக் கட்டிக்கொண்டு இருக்கத் தொடங்கிவிடுவார்கள். ஞானியோ என்றும் திருப்தியுள்ளவனாயிருப்பதால் அவன் உள்ளத்தின் சுகத்திலாழ்ந்தவனாய் வெளியே வாளாயிருப்பான். ஆனால் பிற மனிதர்களோ உள்ளுக்குள் அழுது

---

* आधी होता सत्संग । तुका झाला पांडुरंग ।
त्याचें भजन राहीना । मूल स्वभाव जाईना ।

கொண்டே வெளியில் வேலையின்றி இருப்பர். ஒருவன் அகத் திருப்தியுடன் வாளாயிருக்க மற்றவனோ மனம் நொந்து கொண்டே எதுவும் செய்யாதிருக்கிறான். இத்தகைய நிலை பயங்கரமானது. இதனால் வேஷமும் ஆடம்பரமும் வளரும். ஆகையால் மகான்களெல்லாம் சிகரத்தை எட்டிப் பிடித்த பிறகும் சாதனையை விடாது செய்துகொண்டே இருந்திருக்கிறார்கள்; இறுதிவரையில் தமக்குரிய காரியத்தைச் செய்து வந்திருக்கிறார்கள். தாய் குழந்தைகளின் பொம்மை விளையாட்டை ரசிக்கிறாள். அவளுக்கு இதெல்லாம் உண்மையல்ல, வெறும் விளையாட்டேயென்று தெரிந்திருந்தும், அவர்களின் விளையாட்டில் தானும் கலந்து கொண்டு அவர்களுக்கு அதில் ருசி உண்டாகச் செய்கிறாள். தாய் அந்த விளையாட்டுகளில் கலந்து கொள்ளாவிட்டால் குழந்தைகளுக்கு அதில் இன்பம் தோன்றாது. கர்மயோகி திருப்தி ஏற்பட்டு விட்டதனால் காரியத்தை விட்டுவிடுவாராயின் மற்றவர்கள் திருப்தியற்றவராயிருந்தும், மனதில் ஆசையும் அதிருப்தியும் கொண்டிருந்தும் காரியம் செய்வதை நிறுத்தி விடுவார்கள்.

ஆகையால் கர்மயோகி சாதாரண மனிதனைப்போலவே காரியம் செய்து கொண்டிருப்பான். அவனுக்கு தான் ஏதோ பெரிய மனிதன், மற்றவர்களைப் போன்றவனல்லவென்றே தோன்றாது. மற்றவர்களைவிட அவன் எவ்வளவோ அதிகம் உழைப்பான். குறிப்பிட்ட ஒரு காரியம் பாரமார்த்திகமானது என்று அதற்குத்தனி முத்திரை இடவே தேவையில்லை; காரியத்தை விளம்பரப்படுத்தவேண்டிய அவசியமுமில்லை. நீ சிறந்த பிரம்மசாரியானால் உன் காரியத்தில் பிறரைவிட நூறு மடங்கு உற்சாகம் புலனாகும்படி செய். உணவு குறைவாகக் கிடைத்த போதிலும் மும்மடங்கு வேலை செய். சமூகத்திற்கு நீ செய்யும் பணி அதிகமாகவே இருக்கட்டும். உன் பிரம்மசரியம் உன் நடத்தையின் மூலம் வெளியாகட்டும். சந்தனத்தின் மணம் தானே வீசட்டும்!

கருத்து என்னவெனில், கர்மயோகி பயனைக் கருதாதிருந்து விடுவதனால் அளவிலடங்காத பயனைப்பெறுவான். அவனுடைய உலக வாழ்வு நடந்துவரும்; அவன் உடலும் அறிவும் ஒளிபெற்றுத் திகழும்; அவன் வளைய வரும் சமூகம் சுகம் பெறும். அவனுக்கு சித்த சுத்தி ஏற்பட்டு

ஞானம் கிடைப்பதோடு சமூகத்தில் வேஷமும் மோசடியும் அழிய, வாழ்க்கையின் புனித ஆதரிசமும் கிட்டும். இது அனுபவத்தில் அறிந்த கர்ம யோகச் சிறப்பாகும்.

## (13) கர்ம யோக விரதங்களின் உட்கருத்து

பிறரைவிட கர்மயோகி தன் காரியத்தைச் சிறப்பாகச் செய்வான். ஏனெனில் காரியமே அவனுக்கு கடவுள் வழிபாடும் பூஜை நியமங்களுமாகும். நான் பகவானை பூஜை செய்தேன். பூஜையின் நிவேதனம் எனக்கு பிரசாதமாகக் கிடைத்தது. இந்த நிவேதனம் அந்தப் பூஜையின் பயனு? நிவேதனத்திற்காகப் பூஜை செய்பவனுக்கு பிரசாதத்தின் பகுதி உடனே கிடைக்கவே செய்யும். ஆனல் கர்ம யோகியோ தன் காரியமென்ற பூஜையினுல் கடவுள் தரிசனமென்ற பயனை விரும்புகிருன். அவன் பிரசாதம் கிடைத்தால் போதுமென்று நினைக்குமளவுக்குத் தன் காரியத்தைக் குறைத்து மதிப்பிடுவதில்லை; அவன் தன் காரியத்தைக் குறைத்து மதிப்பிடச் சம்மதிக்கமாட்டான். ஸ்தூலமான கோலைக் கொண்டு அவன் தன் காரியங்களை அளப்பதில்லை. ஸ்தூல நோக்கமுள்ளவனுக்குக் கிடைக்கும் பயனும் ஸ்தூலமாகவேதானிருக்கும். விவசாயத்தில் 'ஆழ உழு ஆனல் ஈரமாய் விதை'* யென்று ஒரு பழமொழியுண்டு. ஆழ உழுதால் மட்டும் போதாது; கீழே நைப்பும் இருக்க வேண்டும். ஆழமும் ஈரமும் இருக்கும்பொழுது தானியம் பெரிது பெரிதாய் விளையும். ஆகையால் காரியம் ஆழ்ந்ததாய் அல்லது சிறந்ததாய் இருக்க வேண்டும். மேலும் அதில் கடவுள் பக்தி அல்லது ஆண்டவனுக்கே உரிமையாக்கும் நைப்பும் இருத்தல் வேண்டும். கர்மயோகி ஆழ்ந்த காரியத்தைச் செய்து அதை ஆண்டவனிடம் சமர்ப்பித்து விடுவான்.

பரமார்த்தத்தின் விஷயத்தில் சில அர்த்தமில்லாத, சம்பந்தமற்றக் கருத்துக்கள், கற்பனைகள் நம்மிடையே பரவியுள்ளன. பரமார்த்தியானவன் தன் கைகால்களை அசைக்கத் தேவையில்லை; வேலை எதுவும் செய்யவேண்டியதில்லை என்று நினைக்கிருர்கள். 'விவசாயம் செய்வோனும் கதர் நெய்வோனும் பரமார்த்தியாவது?' என்று கேட்கிருர்கள். ஆனல் உணவு அருந்துகிறவன் எத்தகைய பரமார்த்தி

* "खोली पेर, पण ओली पेर।"

என்று எவரும் விசாரிப்பதில்லை. கர்மயோகிகளின் கடவுள் குதிரைகளுக்கு உடம்பைத் தேய்த்துவிட்டுத் தீனி வைக்கிறார்; ராஜசூய யாககாலத்தில் எச்சில் இலைகளை அள்ளுகிறார்; காட்டில் மாடு மேய்க்கப் போகிறார்! அந்த துவாரகாநாதன் மீண்டும் கோகுலத்திற்குப் போவாரானால் சிற்றடி எடுத்து வைத்துக் குழலூதிக் கொண்டே மாடு மேய்ப்பார்! ஆகையினால் மகான்கள் குதிரைகளின் உடலைத் தேய்ப்பவனும், மாடு மேய்ப்பவனும், தேர் ஓட்டுவோனும், எச்சில் இலை அள்ளுவோனும், தரையை மெழுகுவோனும் ஆன கர்மயோகியாம் கடவுளின் உருவாகித் தாமும் ஒருவர் தையற்காரராகவும், ஒருவர் குயவராகவும், ஒருவர் கைக்கோளராகவும், ஒருவர் தோட்டவேலை செய்பவராகவும், ஒருவர் நெல் குத்துவோராகவும், ஒருவர் வியாபாரியாகவும், ஒருவர் நாவிதராகவும், இன்னொருவர் சக்கிலியாகவும் காரியம் ஒன்றைச் செய்துகொண்டே முக்தி பெற்றிருக்கிறார்கள்.

இத்தகைய இந்த தெய்வீகமான கர்மயோக விரதத்திலிருந்து மனிதன் இரு காரணங்களினால் வழுவுகிறான். இந்த சந்தர்ப்பத்தில் நாம் புலன்களின் சிறப்பான தன்மையை கவனத்தில் இருத்தவேண்டும். நம் புலன்கள் எப்பொழுதும் 'இது வேண்டும், அது வேண்டாமெ'ன்று கூறும் இரட்டை அல்லது துவந்தத்தினால் சூழப்பட்டிருக்கின்றன. எது வேண்டுமோ அதில் விருப்பு அல்லது ஆசையும், எது வேண்டாமோ அதில் வெறுப்பு அல்லது துவேஷமும் உண்டாகின்றன. இத்தகைய இந்த ராக–துவேஷம் அல்லது விருப்பு– வெறுப்புக்களும், காம–குரோதம் அல்லது காம– வெகுளிகளும் மனிதனை நோண்டி நோண்டித் தின்கின்றன. கர்மயோகம் எவ்வளவு சிறந்தது, எவ்வளவு இன்பமானது, எவ்வளவு அளவிலடங்காப் பயன் அளிப்பது! ஆனால் இந்தக் காமம் வெகுளி என்பவை 'இதை ஏற்றுக்கொள், இதை விடு' என்ற தொல்லையை அல்லும் பகலும் கொடுத்துக் கொண்டே நம் கழுத்தைக் கெட்டியாய்ப் பற்றி நிற்கின்றன. ஆகையினால் பகவான் இந்த அத்தியாயத்தினிறுதியில் இவைகளின் தொடர்பை விடு, இவைகளிடமிருந்து தப்பு என்று சொல்லி எச்சரிக்கை மணி அடிக்கிறார். ஸ்திதப்ரக்ஞன் அடக்கமே உருவாய் அமைந்திருப்பது போலவே கர்மயோகியும் ஆகவேண்டும்.

ஞாயிறு, 6–3–'32

## நான்காம் அத்தியாயம்

# கர்மயோகத்திற்குதவும் சாதனை : விகர்மம்

### (14) கர்மத்திற்கு விகர்மம் தேவை

சகோதரர்களே, பிந்திய அத்தியாயத்தில் நாம் பயன் கருதாக் கர்ம யோகத்தை ஆராய்ந்தோம். சுதர்மத்தைத் தட்டிக் கழித்துவிட்டு நாம் பிறர் தர்மத்தை ஏற்போமானால் பயன் கருதாமை என்ற பயன் சாத்தியமில்லை என்றே கருதுங்கள். சுதேசிப் பண்டங்களை விற்றல் வியாபாரியின் சுதர்மமாகும். ஆனால் இந்த சுதர்மத்தைவிட்டு அவன் ஏழு சமுத்திரங்களுக்கு அப்பாலிருந்து வரும் விதேசிச் சரக்கை விற்கத் தொடங்கும் பொழுது அவன் கொள்ளும் காரணம் பெருத்த லாபம் கிடைக்கவேண்டும் என்பதே. ஆகவே அந்தக் காரியத்தில் பயன் கருதாமைக்கு இடமேது? ஆகையால் காரியம் பயன் கருதாததாய் அமையச் செய்வதற்கு சுதர்மத்தை அனுஷ்டித்தல் இன்றியமையாததாகிறது. ஆனால் இந்த சுதர்ம அனுஷ்டானமும் பயனைக் கருதியதாய் இருக்கக்கூடும். அஹிம்சையின் விஷயத்தையே எடுத்துக் கொள்வோம்: அஹிம்சையின் பக்தனுக்கு ஹிம்சை தவிர்க்க வேண்டிய தொன்றுகிறது. ஆனால் வெளிப்பார்வைக்கு அஹிம்சாவாதியாகத் தோன்றியபோதிலும் உண்மையில் ஒருவன் ஹிம்சைமயமாய் இருத்தல் கூடும். ஏனெனில், ஹிம்சை என்பது மனதைப்பற்றிய ஒரு தர்மம். வெளிப்பார்வைக்கு ஹிம்சைச் செயல் புரியாதிருப்பதினாலேயே மனமும் அஹிம்சைமயமாய் இருக்கும் என்பதில்லை. கையில் வாளைத்தாங்குவதால் ஒருவனுடைய ஹிம்சைப்போக்கு நிச்சயமாய் வெளியாகிறது. ஆனால் வாளைத் துறந்து விடுவதனால் மனிதன் அஹிம்சைமயமாகி விடுகிறான் என்பதில்லை. இதே விஷயம் சுதர்ம அனுஷ்டானத்திற்கும் பொருந்தும். பயனைக் கருதாதிருப்பதற்குப் பிறர் தர்மத்திலிருந்து விலகியே தீரவேண்டும். ஆனால் இது பயன் கருதாமையின் ஆரம்பமேயாம்; இதனாலேயே நாம் நம் இலட்சியத்தைப் பிடித்தவர்களாகமாட்டோம்.

பயன் கருதாமை மனதின் தர்மமாகும். இது தோன்று

வதற்கு சுதர்மத்தை அனுஷ்டித்தல் என்ற சாதனம் ஒன்றுமட்டும் இருந்தால் போதாது; பிற சாதனங்களின் உதவியும் தேவையாகும். வெறும் எண்ணெயும் திரியும் மட்டும் இருந்தால் விளக்கு எரியாது; அதைக் கொளுத்தத் தீ தேவைப்படுகிறது. தீயினால் ஒளிதோன்றும் பொழுது இருள் அகலும். இந்த ஒளியை மூட்டுவதெப்படி? இதற்கு மனதைச் சோதித்தல் அவசியமாகும். தன்னையே பரீக்ஷித்து, சோதித்துப் பார்த்துக் கொள்வதன் மூலம் சித்தத்தின் அழுக்கை, குப்பைகூளங்களை அகற்றிக்கழுவி விடவேண்டும். மூன்றும் அத்தியாயத் தினிறுதியில் இந்த முக்கியமான விஷயத்தையே பகவான் சொன்னார். அதிலிருந்தே நான்காம் அத்தியாயம் தோன்றியிருக்கிறது.

கீதையில் கர்மம் என்ற சொல் சுதர்மம் என்ற பொருளில் வழங்கப்பட்டிருக்கிறது. நாம் உண்பதும் அருந்துவதும் உறங்குவதும் கர்மங்களே. ஆனால் கீதையில் கர்மமென்ற சொல்லினால் இந்தக் காரியங்கள் குறிப்பிடப்படவில்லை. கர்மமென்பதற்கு அங்கே சுதர்மம் என்றே பொருள். ஆனால் சுதர்மத்தைச் செய்தல் என்ற கர்மத்தைப் புரிந்து பயன் கருதாமையை எய்துவதற்கு இன்னும் ஒன்றின் உதவி தேவையாகிறது. அதுவே காமம், வெகுளி என்பவைகளை வெல்லுதல். சித்தம் கங்கை நீரைப் போன்ற தெளிவும் அமைதியும் அடையாதிருக்கும் வரையில் பயன் கருதாமை நமக்குக் கைவரமுடியாது. இவ்வாறு சித்தத்தைச் சோதிப்பதற்கு என்னென்ன காரியங்கள் செய்ய வேண்டுமோ அவைகளை கீதை 'விகர்ம'மென்று குறிப்பிடுகிறது. 'கர்மம்', 'விகர்மம்', 'அகர்மம்' என்ற இம்மூன்று சொற்களும் நான்காம் அத்தியாயத்தில் மிகவும் முக்கியமானவை. கர்மம் என்பதற்கு சுதர்மம் புரிதல் என்ற ஸ்தூலமான புறச்செயல் பொருளாகிறது. இந்தப் புறச்செயலில் சித்தத்தைப் புகுத்தலே விகர்மம் என்பது. நாம் வெளிப்பார்வைக்கு ஒருவருக்கு நமஸ்காரம் செய்கிறோம். ஆனால் வெளியே தலைவணங்கினோமே, அச்செயலோடு கூடவே உள்ளே மனமும் வணங்காத பொழுது அந்தப் புறச்செயல் பயனற்றதாகிறது. அகமும் புறமும், உள்ளும் வெளியும் இரண்டும் ஒன்ற வேண்டும். நான் வெளியே சிவலிங்கத்தின்மீது நீரை ஊற்றி அபிஷேகம் செய்தேன். ஆனால் இந்த நீர் ஒழுக்குடன் மனதின் சிந்தனை யென்ற ஒழுக்கும் இடையறாது வீழ்ந்து கொண்

டிராவிட்டால் இந்த அபிஷேகத்திற்கு என்ன மதிப்பு ஏற்படும்? அந்நிலையில் அந்தச் சிவலிங்கம் ஒரு கல்லாக நானும் வேறொரு கல்லாகவே இருப்பேன். ஒரு கல்லின் எதிரில் பிறிதொரு கல் இருப்பதென்பதே அதன் பொருளாகும். நம் புறச்செயலோடு அகத்தில் சித்தசுத்தி என்ற கர்மமும் இணையும் பொழுதே பயன் கருதாக் கர்மயோகம் கைகூடும்.

பயனைக் கருதாத காரியம் என்ற இந்தச் சொல்லாட்சியில் காரியமென்ற சொல்லைவிட பயன் கருதாமை என்ற சொல்லுக்கே அஹிம்சைமயமான ஒத்துழையாமை என்ற சொற்றொடரில்—'ஒத்துழையாமை' என்ற சொல்லைவிட 'அஹிம்சைமயமான' என்ற அடை மொழிக்கே அதிகச் சிறப்பிருப்பதைப்போல,—அதிக முக்கியத்துவம் உண்டு. அஹிம்சையை அகற்றிவிட்டு வெறும் ஒத்துழையாமை மட்டும் செய்து வருவோமானுல் அது பயங்கரமான பொருளாய் அமையக்கூடும். அதே வகையில் சுதர்மத்தை அனுஷ்டித்தல் என்ற காரியத்தைச் செய்கையில் மனதின் விகர்மமும் அதில் இணைந்திராவிட்டால் அதை மோசடி என்றே கொள்ளவேண்டும்.

இன்று பொது ஜனசேவை செய்கிறவர்கள் சுதர்மத்தையே அனுஷ்டிக்கிருர்கள். ஏழை, எளியோர், துன்பமுற்றவர், ஆபத்தில் சிக்கியவர் ஆகியோருக்குப் பணிபுரிந்து அவர்களை சுகமுறச்செய்தல் வழக்கமான தர்மமாயிருக்கிறது. ஆனுல் பொதுஜன சேவை செய்யும் அனைவரும் கர்மயோகிகளாய்விட்டன ரென்று எண்ணிக் கொண்டு விடக்கூடாது. பொதுஜன சேவை செய்கையில் மனதில் தூய பாவனை இல்லாதிருக்குமானுல் அந்த ஜனசேவையே பயங்கரமானதாய் மாறக்கூடும். நம் குடும்பத்திற்குச் சேவை செய்கையில் நமக்கு எவ்வளவு அகங்காரம், துவேஷம், பொருமை, சுயநலம் என்ற விகாரங்கள் தோன்றுகின்றனவோ அவை அத்தனையும் ஜனசேவையிலும் நமக்குத் தோன்றுகின்றன என்பதை நாம் தற்காலத்தில் பொதுஜன சேவை செய்யும் சங்கங்களின் கும்பல்களில் நிதரிசனமாய்க் காண்கிருேம்.

## (15) கர்ம—விகர்மக்கூட்டின் விளைவு அகர்மம்

கர்மத்துடன் மனம் இணைந்து நிற்கவேண்டும். இந்த மனதின் இணக்கத்தையே கீதை 'விகர்மம்' என்று சொல்லுகிறது. புறத்தே சுதர்மம் என்ற பொதுக்கர்மமும் இந்த அகம்பற்றிய சிறப்புக் கர்மமும். இந்தச் சிறப்புக் கர்மம் அவரவர் மனதின் தேவையை ஒட்டி வெவ்வேறு கிறது. விகர்மத்தின் அநேக வகைகள் உதாரண ரூபமாய் நான்காம் அத்தியாயத்தில் கூறப்பட்டிருக்கின்றன. அதுவே மேலே ஆறும் அத்தியாயத்தில் விஸ்தரிக்கப்படு கிறது. இந்தச் சிறப்பான கர்மத்தை இந்த மானசிக லயத்தை நாம் எப்பொழுது பெறுவோமோ அப் பொழுதே அதில் பயன் கருதாமை என்ற ஒளி தோன்றும். கர்மத்துடன் விகர்மம் இணையும் பொழுது பயன் கருதாமை சிறிது சிறிதாக நம்முள் வந்து கொண்டே இருக்கும். உடலும் மனமும் வெவ்வேறு வஸ்துக்களானுல் அவற்றிற்குரிய சாதனைகளும் வெவ்வே ருகவே இருக்கும். இவையிரண்டையும் இணைத்துவிடும் பொழுது இலட்சியம் கைகூடிவிடுகிறது. மனம் ஒரு பக்கமும் உடல் வேருெரு பக்கமும் போகாமலிருப்பதற்காக சாஸ்திரங்களை வகுத்தவர்கள் இரண்டுவகை வழிகளைச் சொல்லி யிருக்கிருர்கள். பக்தி யோகத்தில் புறத்தில் தவமும் அகத்தில் ஜபமும் விதித்திருக்கிருர்கள். உபவாசம் முதலிய தவங்கள் புறத்தில் நடக்கும் பொழுது அகத்தில் மானசிகமான ஜபமும் நடந்து வராவிட்டால் அந்தத்தவம் முழுமையும் வீணுகும். தவம்பற்றிய என் பாவனை இடையருமல் எரிந்துகொண்டே, ஜொலித்துக் கொண்டே யிருக்க வேண்டும் என்பது. உபவாசம் என்ற சொல் லுக்குப் பொருளே பகவானுக்கு அருகாமையில் அமர்தல் என்பதாகும். பரமாத்மாவினிடம் நம் சித்தம் இலயிக்கும் பொருட்டு புற போகங்களின் வாயில்களை அடைத்து விடுதல் அவசியமாகும். ஆனுல் புறத்தே விஷய போகங் களை விட்டுவிட்டு மனதில் பகவானை நினையாதிருந்தால் புறத்தே நடக்கும் இந்த உபவாசத்திற்கு என்ன மதிப்பு ஏற்படும்? கடவுளை நினையாது உணவைப்பற்றி நினைத்துக் கொண்டிருப்போமானுல் அந்த உணவு மிகவும் பயங்கர மானதாகிவிடும். மனதினுல் கொள்ளப்படும் இந்த உணவைவிட, மனதில் உள்ள இந்த போகசிந்தனையைவிட

பயங்கரமான விஷயம் வேறில்லை. தந்திரத்துடன் (கர்மம்) கூடவே மந்திரமும் நடைபெறவேண்டும். வெறும் புறத் தந்திரத்திற்கு மதிப்பெதுவுமில்லை; கர்மத்துடன் இணையாத மந்திரத்திற்கும் மதிப்புக் கிடையாது. கையினாலும் சேவை நடைபெற வேண்டும்; இதயத்தினாலும் சேவை நடைபெற வேண்டும். அப்பொழுது தான் உண்மையான சேவை சாத்தியமாகும்.

புறக் கர்மத்தில் இதயத்தின் நைப்பு இல்லையானால் அந்த சுதர்ம அனுஷ்டானம் வறண்டதாய் இருந்துவிடும்; அதில் பயன் கருதாமை யென்ற பூக்கள் பூத்துக் காய்க்கா. நாம் நோயாளி ஒருவனுக்கு பணி செய்யத் தொடங்குவதாக வைத்துக்கொள்ளுங்கள். நாம் செய்யும் அந்தப் பணிவிடையோடு கூடவே மனதில் தயை உணர்ச்சி இல்லையேல் அந்தப் பணிவிடையில் நமக்கு ருசி யில்லாமற் போக, மனதிலும் அலுப்புத் தோன்றிவிடும். அது நமக்கு ஒரு சுமையாகவே இருக்கும். நோயாளிக்கும் நாம் செய்யும் பணிவிடை பாரமாகத் தோன்றும். மனதின் கூட்டுறவு இல்லாவிடில் அதில் அகங்காரம் தோன்றும். 'நான் இன்று அவனுக்காக வேலை செய்தேன். தேவை யானபொழுது அவன் எனக்கு உதவ வேண்டும்; என்னைப் புகழ வேண்டும்; எனக்கு மதிப்பளிக்க வேண்டும்' என் பவை போன்ற ஆவல்கள் மனதில் எழும். அல்லது நாம் சலிப்புடன், 'நாம் இவனுக்கு இவ்வளவு பணிவிடை செய்தும் முணுமுணுத்துக்கொண்டே இருக்கிறானே' என்று சொல்லுவோம். நோயாளி சாதாரணமாகவே சிடு சிடு வென்றிருப்பான். அவனுடைய இந்தச் சிடுசிடுப்பினால் உண்மையான சேவை பாவனை இல்லாத ஊழியனுக்கு அலுப்புத் தோன்றிவிடும்.

கர்மத்துடன் அகத்தின் பாவமும் சேர்ந்துவிடும் பொழுது அந்தக் கர்மத்தின் தன்மையே மாறிவிடுகிறது. எண்ணெய், திரி ஆகியவற்றுடன் தீயும் சேரும்பொழுது ஒளி உண்டாகிறது. கர்மத்துடன் விகர்மம் சேரும்பொழுது பயன் கருதாமை உண்டாகிறது. வெடி மருந்தில் திரியைக் கொளுத்தி வைப்பதனால் அது 'படார்' என்று வெடிக் கிறது; அந்த வெடி மருந்தில் ஒரு சக்தி பிறக்கிறது. கர்மத்தை துப்பாக்கியின் வெடி மருந்தைப்போல் மதி யுங்கள். அதில் விகர்மமென்ற திரி அல்லது தீ இடப்பட்

டதும் அது செயல்படுகிறது. விகர்மம் வந்து சேரா திருக்கும் வரையில் அந்தக் கர்மம் உயிரற்றே கிடக்கும்; அதில் உயிரொளி இராது. விகர்மத்தின் தீப்பொறி பட்ட வுடனே அந்தக் கர்மத்தில் தோன்றக்கூடிய சக்தி வர்ண னையில் அடங்காதது. ஒரு சிட்டிகை அளவு வெடிமருந்து பையில் கிடக்கிறது; அல்லது நாம் கையில் வைத்துக் கொண்டிருக்கிறோம். ஆனால் அதில் தீ பட்டவுடனே அது உடலை சுக்கு நூறாக்கி விடுகிறது. சுதர்ம அனுஷ்டானத் தில் அடங்கியுள்ள அளவிட முடியாத சக்தி இதே வகையில் உள்ளே அமுங்கிக் கிடக்கிறது. அதில் விகர்மத்தை இணைத்துவிட்டுப் பாருங்கள், அது என்னென்ன வேலை களை யெல்லாம் சாதிக்கிற தென்பதை! அது வெடிப்பு; அகங்காரம், காமம், குரோதம் ஆகியவை மடிய, லிருந்து பரம ஞானம் உதயமாகும்.

கர்மம் ஞானத்தின் திரியாகும். ஒரு பெரிய மரத் துண்டு ஒரு இடத்தில் கிடக்கிறது. நீங்கள் அதை எரித் தீர்களானால் அது தக தக வென்று ஜொலிக்கும் தணலா கிறது. ஏற்கெனவே யிருந்த மரத்திற்கும் இந்தத் தீக்கும் எவ்வளவு வித்தியாசம்? ஆனால் அந்த மரந்தானே இந்தத் தீயாக மாறிற்று? கர்மத்தில் விகர்மத்தைச் சேர்ப்பதனால் கர்மம் தெய்வீக ஒளி பெறத் தொடங்குகிறது. தாய் குழந் தையின் முதுகைத் தடவிக்கொடுக்கிறாள். ஒரு முதுகின் மேல் ஒரு கை இங்கு மங்குமாய்ப் போய் வந்தது; அவ் வளவுதான். ஆனால் இந்தச் சாதாரணச் செயலினால் அந்தத் தாய், குழந்தை ஆகியோரின் மனதில் தோன்றிய பாவனை களை யாரால் வர்ணிக்கமுடியும்? எவரேனும் இவ்வளவு நீளம் அகலமுள்ள முதுகின்மீது இவ்வளவு எடையுள்ள மெல்லிய கையால் தடவினால் இவ்வளவு இன்பமுண்டாகு மென்று விகிதசமக் கணக்கிடத் தொடங்கு வாரானால் அது வெறும் கேலிக் கூத்தாகவே இருக்கும். கையால் தடவுதல் என்ற இந்தக் காரியம் மிகவும் சாதாரணமானதொன்று. ஆனால் அதில் தாயின் உள்ளமே கலக்கப்பட்டிருக்கிறது; அவ் விகர்மம் அதில் இணைக்கப்பட்டிருக்கிறது. இதனாலேயே அந்த அபூர்வமான ஆனந்தம் ஏற்படுகிறது. 'துளசீராமா யண'த்தில் ஒரு சந்தர்ப்பம் வந்திருக்கிறது; இராட்சசர் களுடன் போரிட்டபின் குரங்குகள் திரும்புகின்றன. அவை களின் உடல்களிலெல்லாம் காயம்; ரத்தம் வழிந்து கொண்டி ருக்கிறது. ஆனால் இராமபிரானுடைய கருணைக் கடாக்ஷம்

அவர்கள் மீது ஒரு முறை பட்டவுடனே அவைகளுக்கு இருந்த வேதனைகளெல்லாம் மறைந்து போயின. இப்பொழுது வேறொருவன் அந்த சமயத்தில் இராமருடைய கண்களும் பார்வையும் எப்படியிருந்தன என்பதைப் புகைப் படம் எடுத்துக் கணக்கிட்டுக்கொண்டு அதே வகையில் பார்ப்பானுல் அதே பயன் விளையுமா ? அவ்வாறு செய்ய முயலுவது கேலிக் கூத்தாகத்தான் முடியும்.

கர்மத்துடன் விகர்மம் சேரும்பொழுது அதிலிருந்து சக்தி வெடித்தெழ, அகர்மம் உருவாகிறது. விறகு எரிந்தால் அது சாம்பலாகி விடுகிறது. முதலில் இவ்வளவு பெரியதாயிருந்த மரத்துண்டு இறுதியில் ஒரு சிட்டிகைச் சாம்பலாய் மாறிவிடுகிறது. ஆனந்தமாக அதைக் கையில் எடுத்து உடலெங்கும் பூசிக் கொள்ளலாம். இவ்வாறு கர்மத்தில் விகர்மம் என்ற தீயை இட்டோமானுல் இறுதியில் அதுவே அகர்மமாய்விடும். மரம் எங்கே ? சாம்பலெங்கே ? कः केन संबन्धः ? (க: கேன ஸம்பந்த: ?) அதற்கும் இதற்கும் என்ன சம்பந்தம் ? அவைகளின் குண தர்மங்களில் ஒன்றுக்கொன்று ஒற்றுமையே இல்லாமற் போய்விட்டது. ஆனுல் அந்தச் சாம்பல் அந்த மரத்துண்டினுடையதே என்பதில் சந்தேகமில்லை.

கர்மத்தில் விகர்மத்தைச் சேர்ப்பதனுல் அகர்மம் தோன்றுகிறது. இதன் பொருள் என்ன ? இதன் பொருள், கர்மம் எதுவுமே செய்வதாய்த் தோன்றுமையே ; அந்தக் கர்மத்தின் பளுவே தோன்றுவதில்லை. நாம் செய்தும் செய்யாதவர்களைப் போல் ஆய்விடுகிறோம். கீதை, 'கொன்றும் நீ கொலைஞனுவதில்லை' என்கிறது. தாய் குழந்தையை அடிக்கிருள் என்பதனுல், நீ வேண்டுமானுல் அவனை அடித்துப்பாரேன். உன் அடியை குழந்தை பொறுக்கமாட்டான். தாய் அடித்தாலும் அவன் அவள் மடியிலேயே தன் முகத்தை மறைத்துக்கொள்வான். ஏனெனில், தாய் புறத்தே செய்யும் கர்மத்தில் சித்த சுத்தி இணைந்திருக்கிறது. அவள் அடிப்பதும் கண்டிப்பதும் பயன் கருதாது செய்யப்படுகின்றன. அந்தக் காரியத்தில் அவளுக்கு சுயநலமெதுவுமில்லை. விகர்மத்தினுல், மனத்தூய்மையினுல் கர்மத்தின் கர்மத்தன்மை அகன்றுவிடுகிறது. இராமருடைய அந்த நோக்கு அகத்தின் விகர்மம் காரணமாக அன்பின் அமுத வாரியாய் அமைந்துவிட்டது. ஆனுல் இராமருக்கு அந்தக்

கர்மத்திலுல் சிரமம் எதுவும் தோன்றவில்லை. சித்த சுத்தியுடன் செய்யப்படும் காரியம் நம்மீது ஒட்டிக்கொள்வதில்லை. அதில் பாவம் புண்ணியம் என்ற எதுவும் எஞ்சியிருப்பதில்லை. இல்லையேல் கர்மத்தின் எவ்வளவு பளு நம் அறிவின்மீது, உள்ளத்தின் மீது இருந்துகொண்டேயிருக்கும்! இன்று இரண்டு மணிக்கு நாளை காலையில் அரசியல் கைதிகளெல்லாம் விடப்படுவார்களென்ற செய்தி எழுமாலுல் நாற்புறமும் எவ்வளவு கூட்டம், எவ்வளவு குழப்பம், தடபுடல் ஆகிறதென்று பாருங்கள். நாம் கர்மம் நல்லதா கெட்டதா என்ற எண்ணத்திலுல் எப்பொழுதும் கவலையிலேயே ஆழ்ந்திருக்கிறோம். கர்மம் நம்மை நாற்புறமும் சூழ்ந்தது போலும், நம் கழுத்தைப் பிடித்து அமுக்கிக்கொண்டிருப்பது போலும் நமக்குத் தோன்றுகிறது. கடலின் நீர் வேகமாய்த் தரையில் வந்து மோதித் தரையைக் குடைந்து விடுவதைப் போல கர்மத்தின் இந்தப் பூசல் சித்தத்தில் நுழைந்து குழப்பம் விளைவிக்கிறது. இன்ப துன்பமென்ற இரட்டைப் பிறவி தோன்றுகின்றது; அமைதியே அழிந்து போகிறது. கர்மம் நடந்து முடிந்து போய்விடுகிறது; ஆனால் அதன் வேகம் இருந்துகொண்டே இருக்கிறது. கர்மம் சித்தத்தில் இடம் பெற்றதும் அதன் தாக்கமே கெட்டுப்போகிறது.

ஆனால் இத்தகைய கர்மத்தில் விகர்மத்தைச் சேர்த்து விடுவோமாலுல் எவ்வளவு கர்மம் செய்தாலும் அதன் பளுவோ, சிரமமோ தோன்றவே செய்யாது. மனம் துருவ நக்ஷத்திரத்தைப் போல அமைதியாயும், உறுதியாயும் ஒளிமயமாயும் இருந்துவரும். கர்மத்தில் விகர்மத்தைச் சேர்ப்பதலுல் அது அகர்மமாகி விடுகிறது. கர்மத்தைச் செய்து, பிறகு அதை அழித்துத் துடைத்ததுபோல் ஆய்விடுகிறது.

## (16) அகர்மக்கலையை மகான்களிடம் கேட்டறி

கர்மம் அகர்மமாய் எப்படி மாறுகிறது? இந்தக் கலை எவரிடம் கிடைக்கும்? மகான்களிடத்தில். இந்த அத்தியாயத்தின் இறுதியில் பகவான், "மகான்களிடம் போய் அமர்ந்து அவர்களிடம் பயிற்சி பெறு" என்று சொல்லுகிருர். கர்மம் அகர்மமாவது எப்படி என்பதை வர்ணிப்பதில் பாஷையின் சக்தியெல்லாம் செலவாய் விடுகிறது. அதை உள்ளவாறே உணர வேண்டுமாலுல்

மகான்களிடம் செல்லவேண்டும். கடவுளுடைய शान्ताकारं भुजगशयनं—(சாந்தாகாரம் புஜகசயனம்) என்ற வர்ணனை தான் இருக்கிறதே.

கடவுள் ஆயிரம் படங்களுள்ள சேஷ நாகத்தின்மீது துயின்றுகொண்டே அமைதியாயிருக்கிறார். இதே வகையில் மகான்கள் ஆயிரமாயிரம் கர்மங்களைச் செய்து கொண்டேயிருந்தபோதிலும் தம் உள்ளத்தடாகத்தில் சிந்தையின் அலை ஒரு சிறிதும் எழுவிடுவதில்லை. இந்த விசித்திரம் மகான்களிடம் சென்று பார்த்தால் அல்லது விளங்காது. தற்காலத்தில் புத்தகங்கள் மிகவும் மலிவாய்விட்டன. ஒரு அணா இரண்டணாவுக்கு கீதை* முதலியவை கிடைத்துவிடுகின்றன. குருமார்களுக்கும் குறைவில்லை. படிப்பு தாராளமாயும் மலிவாயும் கிடைக்கிறது. சர்வகலாசாலைகளோ ஞானத்தைப் பொட்டலங்களாய்க் கட்டி வழங்குகின்றன. ஆனால் இந்த ஞானமுத உணவை உண்டும் எவருக்கும் திருப்தி ஏற்பட்டதாய்த் தெரியவில்லை. புத்தகங்களின் இந்த மலையைப் பார்க்கப் பார்க்க மகான்களின் சேவை எவ்வளவு அவசியம் என்பது வரவர அதிகம் புலனாகிவருகிறது. புத்தகங்களின் கெட்டியான அட்டைகளுக்கு வெளியே ஞானம் வருவதாய்க் காணவில்லை! இத்தகைய சந்தர்ப்பத்தில் எனக்கு எப்பொழுதும் ஒரு அபங்கம் † நினைவுக்கு வருவதுண்டு.

"காமம், வெகுளி என்ற மலைகள் எதிரே நிற்கின்றன
அனந்தன் அதற்கு அப்பாலுக்கப்பால் உள்ளான்"‡

காமம், வெகுளி என்ற மலைகளுக்கப்பால் வெகு தொலைவில் நாராயணன் உள்ளான். அவ்வாறே இந்தப் புத்தகக் குவியலின் பின்னால் ஞானராஜன் மறைந்து வீற்றிருக்கிறான். புத்தகசாலைகளும், வாசகசாலைகளும் எங்கும் பரவியிருந்தும் மனிதன் எல்லா இடங்களிலும் நற்பழக்கமும் நல்லறிவுமற்ற வானரமாகவே காணப்படுகிறான். படௌதாவில் (பரோடா) ஒரு பெரிய புத்தகாலயம்

---

* 'मनाचे श्लोक'—சமர்த்த ராமதாச சுவாமிகள் இயற்றிய மராத்தி புத்தகம்.

† ஒரு மராத்தி செய்யுள் வகை.

‡ काम क्रोध आड पहिले पर्वत राहिला अनंत पाली कडे ॥

இருக்கிறது. ஒரு சமயம் ஒரு கனவான் ஒரு பெரிய புத்தகத்தை எடுத்துப் போய்க்கொண்டிருந்தார். அதில் சித்திரங்களிருந்தன. அவர் அதை ஆங்கிலப் புத்தகம் என்றெண்ணிக்கொண்டிருந்தார். "என்ன புத்தகம்?" என்று நான் கேட்டேன். அவர் புத்தகத்தை என்னிடம் நீட்டினர். "இது பிரெஞ்சுப் புத்தகமாயிற்றே!" என்றேன் நான். அவர் "உங்களுக்கு பிரெஞ்சும் தெரியுமா?" என்ருர். புனிதமான ரோமன் எழுத்து, நேர்த்தியான சித்திரங்கள், அழகிய கட்டடம்—இவ்வளவும் இருக்கும் பொழுது ஞானத்திற்குக் குறைவேது!

ஆங்கிலத்தில் பிரதிவருஷமும் சுமார் பத்தாயிரம் புதிய புத்தகங்கள் தயாராகின்றன. பிற பாஷைகளின் நிலைமையும் இப்படியேதானென்று எண்ணிக் கொள்ளுங்கள். ஞானம் இவ்வளவு விஸ்தாரமாய்ப் பரவியும் மனிதனுடைய அறிவு இதுவரையில் எப்படிச் சோடையாகவே இருந்துவருகிறது? ஞாபக சக்தி குறைந்துவிட்டதென்று ஒருவர் சொல்லுகிருர். கவனித்துப் படிக்கும் திறமை மழுங்கிவிட்டதென்கிருர் இன்னொருவர். வேருெருவரோ படிப்பதெல்லாம் உண்மையென்று தோன்றுகிறதென்கிருர். இன்னுமொருவர், "ஐயா, எனக்குச் சிந்திக்கவே பொழுதிருப்பதில்லை" என்கிருர். ஸ்ரீகிருஷ்ணர், "அர்ஜுன, எவ்வளவோ விஷயங்களைக் கேட்டுக்கேட்டு உன் அறிவு குழம்பிவிட்டது. அது உறுதிபெற்றுத் தெளியும் வரையில் உனக்கு யோகம் கைகூடாது. கேள்வியையும் படிப்பையும் இப்பொழுது நிறுத்திவிட்டு மகான்களை அணுகு; அங்கே வாழ்க்கை நூலைப் படிக்க இயலும். அவ்விடத்திய மௌன போதனையினுல் உன் சந்தேகங்கள் அகலும். அங்கே போவதனுல் இடையருது சேவைக்கர்மம் புரிந்துகொண்டிருக்கும்பொழுதே மனம் எப்படி அமைதியாய் இருக்க முடிகிறதென்பது விளங்கும். புறத்தே கர்மங்கள் வெகுவாய் நடந்து கொண்டிருக்கும்பொழுதே உள்ளத்தில் யாழ் இடையருது எவ்வாறு இசைத்துக் கொண்டிருக்கும் என்பதை உணர்வாய்" என்கிருர்.

ஞாயிறு, 13–3–'32.

## ஐந்தாம் அத்தியாயம்

# இருமுக அகர்மநிலை : யோகமும் சந்நியாசமும்

### (17) புறக்கர்மம்–மனத்தின் கண்ணாடி

சம்சாரம் மிகவும் பயங்கரமானது. சம்சார சாகரம் என்று அதைக் கடலுக்கு ஒப்பிடுவதுண்டு. கடலில் எங்கும் நீரே காணப்படுகிறது. சம்சாரத்தின் நிலையும் அதுவே. எங்கு கண்டாலும் பசுமையாய்த் தோன்றுகிறது. ஒருவன் வீடு வாயில்களைத் துறந்து பொது ஜன சேவையில் இறங்குவானாயின் அங்கும் அவனுக்கு தன்அங்கங்கள் அனைத்துடன் சம்சாரமே எதிர்ப்படுகிறது. ஒருவன் ஒரு குகையில் போய் அமர்வானானால் அவனுடைய ஒட்டை அளவுள்ள கோவணத்திலேயே உலகம் நிரம்பி நிற்கிறது. அந்தக் கோவணம் அவனுடைய உடைமையின் தொகுப்பாகி விடுகிறது. ஒரு சிறிய காகித நோட்டில் 1000 ரூபாய் அடங்கி விடுவதைப்போல் அந்தச் சிறிய கோவணத்தில் அளவிடமுடியாத பாசம், பற்று நிரம்பி விடுகிறது. வீடு, வாயிலைத் தகர்த்து அதன்பரப்பைக் குறைத்துக் கொண்டு விட்டதனாலேயே உலகம் குறுகிவிடுவதில்லை. $\frac{10}{25}$ என்று சொன்னாலும் $\frac{2}{5}$ என்று சொன்னாலும் மதிப்பு ஒன்றே. வீட்டிலிருந்தாலும் சரி, காட்டில் போய் இருந்தாலும் சரி பற்று அல்லது பாசம் பக்கத்தில் இருந்து கொண்டே வருகிறது; சம்சாரம் ஒரு சிறிதும் குறைவதில்லை. இரண்டு யோகிகள் இமாலயத்தின் குகையில் போய் அமர்ந்தாலும் ஒருவர் மற்றவருடைய புகழைக் கேட்கச் சகிப்பதில்லை. பொதுஜன சேவையிலும் இதே காட்சியைத்தான் காண்கிறோம்.

இவ்வாறு இந்த சம்சாரப் பிரபஞ்சம் விடாமல் பற்றிக் கொண்டே வருவதால் சுதர்மம் புரிதல் என்ற வரம்பினுள் இருந்துவந்தபோதிலும் சம்சாரத்திலிருந்து நாம் விடுபடுவதில்லை. பல அகடவிகடங்கள் செய்வதை விட்டுவிட்டோம், சிக்கல்களைக் குறைத்துக் கொண்டு விட்டோம், சம்சாரப்பிரபஞ்சத்தைப் பெயரளவுக்கே வைத்துக்கொண்டிருக்கிறோம் என்று சொன்னபோதிலும் மமத்துவம் அல்லது உடைமை உணர்ச்சி நம்மை விடுவதில்லை. இராட்

சசர்கள் சில சமயம் பேருருவும் சில சமயம் சிற்றுருவும் தாங்குவதைப்போல இச்சம்சாரமும் தன் உருவை மாற்றிக் கொள்கிறது. சிறியவர்களாய்த் தோன்றினும் பெரியவர்களாய்க் காணப்படினும் அவர்கள் இராட்சசர்கள்தானே! இவ்வாறே தவிர்க்கமுடியாத ஒன்று அரண்மனையிலிருந்தாலும் குடிசையிலிருந்தாலும் ஒன்றே. சுதர்மமென்ற தளையைப் பூட்டி சம்சாரத்தைச் சம எடையில் வைத்துக் கொண்ட போதிலும் அங்கும் பல தொந்தரவுகள் தோன்ற உன் மனம் அதிலும் அலுப்புற்றுவிடும். அங்கும் பல ஸ்தாபனங்களுடனும் நபர்களுடனும் உனக்குத் தொடர்பு ஏற்பட, நீ சலிப்படைவாய். 'இதென்னடா ஆபத்தில் வந்து சிக்கிக்கொண்டோமே!' என்று நீ சொல்லத்தொடங்குவாய். ஆனால் உன்மனம் அப்பொழுது தான் உரை கல்லில் சரியாய் உரைக்கப்படும். சுதர்மத்தை அனுஷ்டிப்பதனாலேயே பற்றற்ற நிலைமை கைகூடிவிடாது. கர்மத்தின் பரப்பைக் குறைத்துக் கொள்ளுதல் என்பது பற்றற்ற நிலை ஆகாது.

அப்படியானால் பற்றற்ற நிலை எப்படிக் கைகூடும்? அதற்கு மனம் முழுமையும் ஒன்றி முயலவேண்டும். மனதின் உதவியில்லாத வரையில் எந்த விஷயமும் கைகூடாது. பெற்றோர் தம் பிள்ளையை ஏதோ ஒரு ஸ்தாபனத்தில் சேர்க்கிறார்கள். அவன் அங்கே காலையில் எழுந்து சூரிய நமஸ்காரம் செய்கிறான்; தேனீர் அருந்துவதில்லை. ஆனால் வீட்டிற்கு வந்ததும் சில நாட்களில் அவன் அனைத்தையும் விட்டுவிடுகிறான். நமக்கு இத்தகைய அனுபவங்கள் ஏற்படுகின்றன. மனிதன் ஒரு மண் கட்டியல்ல. நாம் அவனுடைய மனதை எவ்வாறு உருவாக்க விரும்புகிறோமென்பது அவன் மனதில் இறங்கவேண்டுமல்லவா? மனம் தேவையான உருப்பெறாதிருக்கையில் புறத்தே அளிக்கப்படும் இந்த போதனையெல்லாம் வீண். ஆகையால் சாதனை புரியும்பொழுது மனதின் கூட்டுறவு மிகவும் தேவையாகிறது.

சாதனை என்ற வகையில் புறத்தே சுதர்ம அனுஷ்டானம், அகத்தில் மனதின் விகர்மம் என்ற இரண்டும் இருக்கவேண்டும். புறத்தே புரியும் கர்மமும் அவசியமாகும். கர்மம் புரியாத வரையில் மனதின் பரீக்ஷைக்கு இடமில்லை. பொழுது புலரும் அமைதியான நேரத்தில்

நமக்கு நம் மனம் மிகவும் சாந்தமாய்த் தோன்றுகிறது. ஆனால் குழந்தை சிறிது அழுதால் போதும், நமக்கு மனதின் அந்த அமைதிக்குள்ள உண்மை மதிப்புத் தெரிந்து விடுகிறது. ஆகையால் கர்மத்தைத் தட்டிக் கழித்தால் கட்டி வராது. புறக் கர்மங்களினால் நம் மனதின் தன்மை வெளியாகும். தண்ணீர் மேலே பார்ப்பதற்குச் சுத்தமாய் இருக்கிறது. ஆனால் ஒரு கல்லைப் போடுங்கள் ; உடனே அதன் அடியிலுள்ள சகதி மேலே எழும்பிவரும். நம் மனதின் நிலைமையும் அத்தகையதே. மனதின் அடித் தளத்தில் முழுங்காலளவு சகதி சேர்ந்திருக்கிறது. புறத்தி லுள்ள பொருளொன்று அதைப்போய்த் தொட்டவுடன் அது புலனாகத் தொடங்குகிறது. நாம் ஒருவனுக்குக் கோபம் வந்துவிட்டது என்கிறோம். அந்தக் கோபம் வெளியிலிருந்தா வந்தது? அது உள்ளே இருந்ததே; மனதில் இல்லாவிட்டால் வெளியில் தென்படவே செய்யாது.

" வெள்ளைக் கதராடை வேண்டாம் ; அது அழுக்காகி விடுகிறது சாயம் தோய்த்த கதரில் அழுக்கேறுவதில்லை," என்கிறார்கள். ஆனால் அதுவும்தான் அழுக்காகிறது. ஆனால் அதன் அழுக்கு கண்ணுக்குத் தெரியாதிருக்க, வெள்ளைக் கதரின் அழுக்கு நன்றாய்த் தெரிகிறது. அது, " நான் அழுக்காயிருக்கிறேன் ; என்னைத் துவைத்துப் போடுங்கள்" என்று சொல்லுகிறது. இவ்வாறு வாய்விட்டுச் சொல்லும் கதர் மக்களுக்குப் பிடிப்பதில்லை. இவ்வாறே நமது கர்மமும் விட்டுப் பேசுகிறது. கர்மம், "நீங்கள் கோபிஷ்டர், சுயநலமி அல்லது வேறு ஏதோ ஒரு வகையினர்" என்று சொல்லிவிடுகிறது. கர்மம் நமது சொரூபத்தை நமக்குக் காட்டும் கண்ணாடியாகும். ஆகையால் கர்மத்தினிடம் நாம் நன்றியுள்ளவர்களாய் இருக்கவேண்டும். கண்ணாடியில் நம் முகம் அழுக்குப் படிந்து ஆபாசமாய்த் தோன்றினால் கண்ணாடியை உடைத்தெறிவோமா? மாட்டோம். அதற்கு மாறாக அதனிடம் நன்றியுள்ளவர்களாகவே இருப்போம். முகத்தைக் கழுவித் துடைத்துக்கொண்டு அதில் மீண்டும் பார்ப்போம். இவ்வாறே கர்மம் காரணமாக நம் மனதி லுள்ள குற்றங்குறைகள் வெளியே வருமானால் அதற்காக நாம் கர்மத்திலிருந்து தப்ப விரும்பலாமா? கர்மத்திலிருந்து நாம் தப்பிக்கொண்டிருந்தால் அதனால் நம் மனம் தூய்மையாகிவிடுமா ? ஆகையால் கர்மத்தைச் செய்து

கொண்டே தூய்மை பெறுவதற்கு மேன்மேலும் முயற்சி செய்து வரவேண்டும்.

ஒரு மனிதன் குகையில் போய் உட்கார்ந்து கொண்டான். அங்கே எவருடனும் அவனுக்குத் தொடர்பில்லை. இப்பொழுது தான் பூர்ண மனச்சாந்தி அடைந்து விட்டதாய் அவன் எண்ணத் தொடங்குகிறான். ஆனால் அவன் குகையிலிருந்து வெளியேறி பிக்ஷை வாங்கப் போகட்டும்; அங்கே விளையாட்டு புத்தியுள்ள குழந்தையொன்று வீட்டுக் கதவின் நாதாங்கியை ஆட்டிச் சத்தப் படுத்துகிறது; அந்தக் குழந்தை தான் எழுப்பும் அந்த நாதபிரம்மத்தில் ஆழ்ந்து போய்விடுகிறது. ஆனால் அந்த சூதுவாது அறியாத குழந்தையின் அந்தச் செயலை யோகியினால் பொறுக்க முடியவில்லை. அவன், "இந்தக் குழந்தை என்ன இப்படிச் சத்தப்படுத்துகிறதே!" என்கிறான். குகையில் வாழ்ந்து அவன் தன் மனதை மிகவும் பலவீனப் படுத்திக்கொண்டு விட்டமையால் சிறு தாக்குதலையும் அவனால் பொறுக்க முடியவில்லை. ஒரு சிறு கடகட சப்தம் வந்ததுதான் தாமதம், அவன் மன அமைதியெல்லாம் இருந்த இடம் தெரியாமல் மறைந்து போய்விட்டது. மனதின் இத்தகைய பலவீனம் நல்லதல்ல.

கருத்தென்னவென்றால், நம் மனதின் தன்மையைப் புரிந்து கொள்வதற்கு கர்மம் பேருதவி செய்கிறது. குறைகள் தெரிய வருமானால் அவைகளைப் போக்க இயலும்; குறைகள் தெரியாமலே இருந்தால் முன்னேற்றம் தடைப் படும், வளர்ச்சிக்கு முற்றுப்புள்ளி வைத்தாய்விடும். கர்மம் செய்வோமானால் குறைபாடுகள் தெரியவரும்; அவற்றை அகற்றுவதற்கு விகர்மம் என்ற உபாயத்தைச் செய்யவேண்டி வருகிறது. அகத்தே இத்தகைய விகர்மத்திற்கான முயற்சி அல்லும் பகலும் நடந்து வருமானால் சுதர்மத்தைச் செய்துகொண்டே பற்றில்லாமல் இருப்பதெப்படி, காம-குரோதங்களையும் லோப-மோகங்களையும் கடப்பதெப்படி என்பது உரிய சமயத்தில் நமக்குத் தெளிவாகும். கர்மத்தை நிர்மலமாகக் குற்றங் குறையில்லாமற் செய்யும் முயற்சி நடந்து வருமாயின் பிற்பாடு குற்றங் குறையற்ற கர்மம், தூய கர்மம் தானே நடைபெறத் தொடங்கும். விகாரமற்ற கர்மம் ஒன்றையடுத்து ஒன்றாய் இயற்கையாகவே நடக்கத் தொடங்கும்பொழுது நமக்கு

கர்மம் எப்பொழுது நடந்தது என்றே தெரியாமல் இருந்து விடுகிறது. கர்மம் இயற்கையானதாய் உடம்பொடு பிறந்தது போன்று ஆய்விடும்பொழுது அது அகர்மமாய்விடும். சிரமமின்றி உடன்பிறந்தது போன்று நிகழும் கர்மத்தையே அகர்மமென்கிறோம். இதை நாம் நான்காம் அத்தியாயத்தில் பார்த்துவிட்டோம். கர்மம் அகர்மமாக எப்படி ஆகிறது என்பது மகான்களின் சரணங்களில் போய் அமர்ந்தால் தெரியவரும் என்பதையும் பகவான் நான்காம் அத்தியாயத்தின் இறுதியில் சொல்லிவிட்டார். இந்த அகர்ம நிலையை வர்ணிக்க நம் வாக்குக்குள்ள சக்தி போதாது.

## (18) அகர்ம நிலையின் தன்மை

கர்மத்தின் இயற்கைத் தன்மையைப் புரிந்துகொள்வதற்கு நாம் நமக்குப் பழக்கமான ஒரு உதாரணத்தையே எடுத்துக் கொள்வோம். சிறிய குழந்தை முதலில் நடக்கக் கற்கிறான். அப்பொழுது அவனுக்கு எவ்வளவு சிரமமாயிருக்கிறது! ஆனால் அவனுடைய இந்த லீலையினால் நமக்கு இன்பமுண்டாகிறது. "பார், பாப்பா நடக்க ஆரம்பித்து விட்டது!" என்கிறோம் நாம். ஆனால் பின்னர் அந்த நடையே சாதாரணமாகி விடுகிறது. அவன் நடந்து கொண்டிருக்கிறான்; பேசிக்கொண்டுமிருக்கிறான். தன் நடையில் அவனுக்கு கவனமே இருப்பதில்லை. இதுவே தான் சாப்பாட்டின் விஷயத்திலும். நாம் சிறு குழந்தைக்கு உணவருந்துதல் என்பது ஏதோ பெரியதொரு காரியம்போல் மதித்து 'அன்னப் பிராசனம்' (உணவருத்து சடங்கு) செய்விக்கிறோம். ஆனால் பிறகு அந்த உணவருந்தும் செயலே சகஜமான காரியமாய் விடுகிறது. மனிதன் நீந்தக் கற்கும்பொழுது எவ்வளவு கஷ்டம் ஏற்படுகிறது! முதலில் மூச்சு வாங்குகிறது. ஆனால் பிறகோ பிறவேலைகள் செய்து களைத்துப் போகும் பொழுது, "வாருங்கள், போகலாம்; ஒரு நீச்சடித்து விட்டு வந்தால் களைப்புத் தீரும்" என்கிறான். இப்பொழுது அந்த நீச்சு கஷ்டமாகவே தோன்றுவதில்லை. உடல் சிரமமின்றி சுபாவமாக நீரில் நீந்திக்கொண்டேயிருக்கிறது. களைப்புறுதல் மனதின் தன்மையாகும். மனம் கர்மங்களில் ஈடுபட்டிருக்கும்பொழுது சிரமம் தோன்றுகிறது; ஆனால் கர்மம் சகஜமாகி விடும்பொழுது

அவைகளின் பளு உறைப்பதில்லை. கர்மம் அகர்மமாய் மாறிவிடுகிறது. கர்மம் ஆனந்தமயமாய் விடுகிறது.

கர்மத்தை அகர்மமாக்குதல் நமது நோக்கமாகும். இதன் பொருட்டு சுதர்மம் என்ற கர்மத்தைப் புரிய வேண்டும். அதைச் செய்கையில் குறைபாடுகள் புலனாகும்; அவற்றைப் போக்க விகர்மத்தைப் பற்றிக்கொள்ள வேண்டும். இவ்வாறு பயின்று கொண்டே வந்தால் கர்மத்தில் அலுப்போ கஷ்டமோ சிறிதும் தோன்றாத ஒரு நிலையை மனம் எய்திவிடும். ஆயிரக்கணக்கான காரியங்களைச் செய்துகொண்டேயிருந்த போதிலும் மனம் நிர்மலமாயும், சாந்தமாயும் இருந்துவரும். நீங்கள் வானத்தை நோக்கி, "வானமே, நீ வெயிலில் வாடுவதில்லையா? மழையில் நனைந்து போவதில்லையா? குளிரால் விறைப்பதில்லையா?" என்று கேட்டால் அது என்ன பதில் அளிக்கும்? அது, "எனக்கென்ன நேருகிறதென்பதை நீயே முடிவு செய்துகொள். எனக்கு ஒன்றும் தெரியாது" என்றே பதில் சொல்லும்.

> "பித்தன் ஆடையின்றித் திரிவது பார்ப்போருக்குத்தான் தெரிகிறது" *

பித்தன் அம்மணமாயிருக்கிறானா ஆடையணிந்திருக்கிறானா என்பதை பிறர்தான் முடிவு செய்ய வேண்டும். பித்தனுக்கு இது ஒன்றுமே தெரிவதில்லை.

இதன் பொருள் சுதர்மம் புரிதல், கர்மத்தை விகர்மத்தின் உதவியினால் விகாரமற்றதாக்கும் பழக்கம் ஏற்பட ஏற்பட அது இயற்கையானதாகிவிடுகிறது. பெரிய பெரிய சங்கடமான சந்தர்ப்பங்களும் பிறகு சிரமமாய்த் தோன்றுவதில்லை. கர்மயோகத்தின் ரகசியமாகும், சாவியாகும் இது. சாவி இல்லாதபொழுது பூட்டை உடைத்து உடைத்துக் கைதான் கொப்புளமாகும்; சாவி கிடைத்தவுடனே ஒரு நொடியில் எல்லாம் திறக்கப்பட்டுவிடும். கர்மயோகத்தின் இந்தச் சாவியினால் எல்லாமே சிரமமில்லாததாய், தொந்தரவற்றதாய்த் தோன்றுகின்றன. இந்தத் திறவுகோல் மனதை ஜயிப்பதனால் கிட்டுகிறது. ஆகையால் மனதை வெல்லுவதற்கு இடையறா முயற்சி நடைபெறவேண்டும். கர்மம் புரியும்

---

* पिसें नेतले कीं नागवें लोकीं येऊन जाणावें ।

பொழுது மனதில் தோன்றும் அழுக்கைக் கழுவிக்கொள்ள முயல வேண்டும். அப்பொழுது புறக் கர்மங்களினால் தொந்தரவு தோன்றுவதில்லை; கர்மத்தின் அகங்காரமும் அழிந்துபோகிறது; காமக் குரோதங்களின் வேகமும் அழிகிறது; சிரமங்களின் உணர்ச்சியே தோன்றுவதில்லை; கர்மம் செய்கிறோமென்ற நினைவும் இருப்பதில்லை.

ஒரு சமயம் நல்ல மனிதர் ஒருவர் எனக்கு, "ஏதோ ஒரு அளவு ராமநாம ஜபம் செய்ய வேண்டும். நீங்களும் இதில் கலந்துகொள்ளுங்கள். பிரதி தினமும் எவ்வளவு ஜபம் செய்ய முடியும் என்பதைத் தெரிவியுங்கள்" என்று எழுதிக் கேட்டார். அந்த மனிதர் தம் அறிவுக்குகந்த முறையில் முயன்று வந்தார். நான் அவரைக் கண்டிக்கும் நோக்குடன் இப்பொழுது இதைச் சொல்லவில்லை. ஆனால் ராம நாமம் எண்ணவோ அளக்கவோ வேண்டிய ஒரு பண்டமல்ல. தாய் குழந்தைக்கு வேண்டிய போஷணையைச் செய்கிறாளே, அவள் தான் செய்தவைகளை பத்திரிகையில் பிரசுரிக்க விரும்புகிறாளா? அவள் பிரசுரிக்கத் தொடங்குவாளானால் "Thank you" (வந்தனம்) என்று சொல்லி அவளுடைய கடனிலிருந்து விடுதலை பெற இயலும். அவளோ, "நான் என்ன செய்துவிட்டேன்? ஒன்றுமே செய்யவில்லையே! எனக்கு இது ஒரு பாரமா?" என்றே கேட்கிறாள். விகர்மத்தின் உதவியினால் இதயபூர்வமாய் மனிதன் கர்மத்தைச் செய்யும்பொழுது அது கர்மமாய் இருந்ததுபோய் அகர்மமாய்விடுகிறது. அங்கே வேதனை, கஷ்டம், ஆயாசம் போன்ற எதுவுமே இருப்பதில்லை.

நிலையை வர்ணிக்க இயலாது. இதை பனிப் படலம் போர்த்த மங்கிய சித்திரம் போன்றே கற்பனை செய்துகொள்ள இயலும். சூரியன் உதிக்கிறது. ஆனால் அது மனதில், 'நான் இருளை அகற்றுவேன்; பட்சிகளைப் பறக்கத் தூண்டுவேன்; மக்களை கர்ம யோகத்தில் ஈடுபடுத்துவேன்' என்றெல்லாம் எண்ணுமா? அது எழுகிற இடத்திலேயே நின்று கொண்டிருக்கிறது. அது அப்படியிருந்து வருவதே உலகத்தை இயக்குகிறது. ஆனால் சூரியனுக்கு அது தெரியாது. நீங்கள் சூரியனிடம், "ஏ சூரிய தேவரே, உங்கள் பேருபகாரத்தை என்னென்போம்! நீங்கள் எவ்வளவு இருளை அகற்றி விட்டீர்கள்!"

என்று சொல்லுவோமானால் அதற்கு ஒன்றுமே புரியாது. அது, "சிறிது இருளைக் கொணர்ந்து என்னிடம் காட்டு. என்றால் அதைப் போக்க முடியுமானால் நான் இதைச் செய்தேன் என்று கொள்ளுவேன்" என்று பதில் கூறும். சூரியனிடம் இருளைக்கொண்டு போக முடியுமா? சூரியன் இருப்பதனால் இருள் அகலுகிறது. அதன் ஒளியில் ஒருவன் ஒரு நல்ல நூலையும் வேறொருவன் ஆபாசமான புத்தக மொன்றையும் படிக்கலாம். ஒருவன் பிறர் வீட்டுக்குத் தீயிட இன்னொருவன் பிறருக்கு உதவி செய்யலாகும். ஆனால் இந்தப் பாவ புண்ணியங்களுக்கு சூரியன் பொறுப்பல்ல. சூரியன், "ஒளி என் இயற்கை தர்மம். என்னிடம் ஒளி இல்லாவிடில் வேறு என்ன இருக்கும்? நான் ஒளி அளிக்கிறேன் என்பதே எனக்குத் தெரியவில்லையே! நான் இருப்பதே ஒளி அளிப்பதாய் அமைந்துவிடுகிறது. ஒளி அளித்தலென்ற காரியத்தைச் செய்யும் சிரமமே எனக்குத் தெரியாது. நான் எதையும் செய்வதாகவே எனக்கு தோன்றவில்லை" என்று சொல்லுகிறது.

ஒளி அளித்தல் சூரியனுக்கு இயற்கையாயிருப்பது போன்றே மகான்களின் நிலைமையும் இருக்கிறது. அவர்கள் வாழ்ந்து வருதலே ஒளி அளிப்பதாகும். நீங்கள் ஞானி ஒருவரிடம், "நீங்கள் சத்தியமே பேசும் மகாத்மா" என்று சொல்லுவீர்களானால், அவர், "நான் சத்தியத்தை ஒட்டி நடவாமல் வேறு என்ன செய்வேன்? நான் விசேஷமாய் என்ன செய்துவிடுகிறேன்? ஒன்றுமில்லையே!" என்றே கேட்பார். ஞானவானிடம் அசத்தியத்திற்கு இடமே இருக்கமுடியாது.

அகர்மத்தின் அடிவாரம் இவ்வாறு அமைந்ததாகும். சாதனை மிகவும் இயற்கையானதாயும் உடன் பிறந்தது போன்றும் ஆய்விடுவதனால் அவைகள் வருவதும் போவதும் தெரிவதேயில்லை. புலன்கள் அவைகளிடம் மிகவும் பழகிப் போகின்றன. சாதாரணப் பேச்சே நன்மை தரும் உபதேசம் என்ற நிலை ஏற்பட்டுவிடுகிறது. இத்தகைய நிலை ஏற்படும்பொழுது கர்மம் அகர்மமாய்விடுகிறது. ஞானவானுக்கு நல்ல காரியங்கள் இயற்கையாய் விடுகின்றன. கலகலவென்று ஒலித்துக்கொண்டிருத்தல் பறவைகளின் இயற்கை தர்மம்; தாயின் நினைவு வருதல் குழந்தையின் இயற்கை தர்மம். இவ்வாறே கடவுளை

நினைத்தல் மகான்களின் இயற்கை தர்மமாகிறது. பொழுது புலர்ந்ததும் 'கொக்-கொக்-கோ' வென்று கூவுதல் கோழிகளின் இயற்கை தர்மமாகும். சூரங்களை போதிக்கத் தொடங்கும்பொழுது பாணினி பகவான் கோழி கூவுதலை உதாரணமாகக் கூறியிருக்கிறார். பாணினியின் காலத்திலிருந்து இன்றுவரை கோழி காலையில் கூவுகிறது. இதற்காக அதற்கு எவரேனும் அத்தாட்சிப் பத்திரம் எழுதிக் கொடுத்ததுண்டா? அது கோழியின் இயற்கை தர்மம். அவ்வாறே உண்மை பேசுதல், எல்லா உயிர்களிடத்தும் அன்பு, பிறருடைய குறைகளைப் பாராதிருத்தல், அனைவருக்கும் பணி புரிதல் ஆகிய மகான்களின் கர்மங்கள் இயற்கையாகவே நடந்துகொண்டிருக்கின்றன. அவைகளைச் செய்யாது அவர்களால் உயிர் வாழவே முடியாது. ஒருவன் உணவு அருந்தினான் என்பதற்காக நாம் அவனைக் கௌரவிக்கிறோமா? உணவு கொள்ளுதல், நீர் அருந்துதல், உறக்கம் ஆகியவை சாதாரண மக்களுக்கு இயற்கை கர்மங்களாய் இருப்பதுபோலவே சேவை ஞானிகளுக்கு இயற்கையான கர்மமாகிறது. உபகாரம் செய்தல் அவர்களுக்கு இயற்கையாய்விடுகிறது. 'நான் உபகாரம் செய்ய மாட்டேன்' என்று சொல்லுதல் அவர்களுக்கு அசாத்தியமாகும். இத்தகைய ஞானவானுடைய கர்மம், அகர்ம நிலையை எய்திவிட்டதெனக் கொள்ள வேண்டும். இதே நிலைக்கு சந்நியாசம் என்ற புனிதமான பதவியளிக்கப்பட்டிருக்கிறது. சந்நியாசம் என்பது இந்தப் பெறற்கரிய அகர்ம நிலையே. இதே நிலையைத்தான் கர்மயோகமென்றும் சொல்லவேண்டும். கர்மம் செய்துகொண்டேயிருப்பதால் அது யோகமாகிறது. ஆனால் செய்துகொண்டேயிருந்தும் தான் செய்வதாகத் தோன்றுவதில்லையாகையால் அதுவே சந்நியாசமாகிறது. அவர் கர்மம் தன்மீது ஒட்டிக் கொள்ளாதிருக்குமாறு ஒருவகை யுக்தியைக் கையாண்டு செய்வதால் அது யோகமாக, செய்தும் ஒன்றும் செய்யாத நிலையிலிருப்பதால் அது சந்நியாசமாகிறது.

## (19) அகர்மத்தின் ஒரு பக்கம்—சந்நியாசம்

சந்நியாசம் என்பது எதைக் குறிக்கிறது? சிறிது கர்மம் செய்வதையும் சிறிது விட்டு விடுவதையுமே இந்தக் கற்பனை குறிக்கிறதா? இல்லை. சந்நியாசம் என்பதற்கு 'எல்லாக் கர்மங்களையும் விட்டு விடுதல்' என்பதே விளக்கமாகும். எல்லாக் கர்மங்களிலிருந்தும் விடுபடுதல், சிறிதும் கர்மம் செய்யாதிருத்தல் என்பதே சந்நியாசம். ஆனால் கர்மம் செய்யாதிருத்தல் என்றால் என்ன? கர்மம் என்பது மிகவும் விசித்திரமானதொன்று. சர்வ கர்ம சந்நியாசம் செய்வ தெப்படி? கர்மம் நம் முன்னும் பின்னும் வலப்புறமும் இடப்புறமும் எல்லாத் திசைகளிலும் வியாபித்துக் கொண்டிருக்கிறது. ஐயா, நாம் உட்காருகிறோம் என்றால் அதுவும் நாம் செய்த ஒரு காரியம் தானே? 'உட்காரு' என்பது ஒரு வினைச்சொல்லாகும். இலக்கணப்படி அது ஒரு வினைச்சொல் என்பதோடு, சிருஷ்டி சாஸ்திரத்திலும் 'உட்காருதல்' ஒரு காரியமே. எப்பொழுதும் உட்கார்ந்து கொண்டே யிருந்தாலும் கால் நோகத் தொடங்குகிறது. உட்கார்ந்திருப்பதிலும் சிரமம் இருக்கத்தான் செய்கிறது. வாளா யிருப்பதே கர்மமாகும் பொழுது கர்ம சந்நியாசம் கை கூடுவது தான் எப்படி? பகவான் அர்ஜுனனுக்கு விசுவ ரூபத்தைக் காட்டினார். அந்த எங்கும் வியாபித்துள்ள விசுவ ரூபத்தைக் கண்டு அர்ஜுனன் அஞ்சி விட்டான்; அஞ்சிக் கண்களை மூடிக்கொண்டான். ஆனால் கண்களை மூடிக் கொண்டு பார்த்த பொழுது அவர் அகத்திலும் காணப்பட்டார். கண்ணை மூடிக்கொண்டாலும் ஒன்று நமக்குத் தென்படுமானால் அதிலிருந்து தப்புவது தான் எப்படி? செய்யாதிருக்கும் பொழுதே நடைபெறும் ஒன்றைத் தவிர்ப்பது தான் எவ்வாறு?

ஒரு மனிதர் இருந்தார்; அவரிடம் விலை மதிப்புள்ள தங்க நகைகள் மிகுதியாய் இருந்தன. அவர் அவைகளை ஒரு பெரிய பெட்டியில் மூடிவைக்க விரும்பினார். வேலைக்காரன் ஒரு பெரிய நல்ல இரும்புப் பெட்டி செய்வித்துக் கொணர்ந்தான். அதைப் பார்த்ததும் அவர், "நீ எவ்வளவு முட்டாளடா, பட்டிக்காட்டுப் பேர்வழி! உனக்கு அழகென்றால் என்னவென்று தெரியுமா? இத்தகைய விலை மதிக்க வொண்ணாத ஆபரணங்களைக் கொண்டு போய்

இந்தப் பார்க்கச் சகியாத இரும்புப் பெட்டியிலா வைப்பார் கள்? போய் நல்ல தங்கப் பெட்டியாய்ச் செய்து கொண்டு வா'' என்றார். வேலைக்காரன் தங்கப் பெட்டி ஒன்று செய் வித்துக் கொணர்ந்தான். அப்பொழுது, ''இதன் பூட்டும் தங்கத்திலேயே இருக்க வேண்டும். தங்கப் பெட்டிக்குத் தங் கப் பூட்டு-சாவி தான் பொருத்தமாயிருக்கும்'' என்றார். தங்கத்தை மறைத்து வைக்க, பிறர் கண்ணில் படாமல் பந்தோபஸ்து செய்யத் தொடங்கினாரே, இறுதியில் அந்தத் தங்கம் மூடிவைக்கப் பட்டதா, திறந்து வைக்கப் பட்டதா? அவர் செய்த ஏற்பாட்டில் திருடர்கள் தங்கத்தைத் தேடும் அவசியமே இல்லாமற் போய் விட்டது. பெட்டியை அடித்துக் கொண்டு போனாலே அவர்களுக்குக் காரியம் கைகூடுவதாய் விட்டது. அதாவது கர்மம் செய்யாதிருப் பதும் ஒருவகையில் கர்மம் செய்வதாகி விடுகிறது. இவ் வாறு எங்கும் வியாபித்துள்ள கர்மத்தைத் துறப்பது எப்படி?

இத்தகைய கர்மங்களைத் துறப்பதற்குள்ள முறை, உலகத்திலுள்ள கர்மங்களனைத்தையும் செய்து கொண் டிருந்த போதிலும் அவை அனைத்தும் உருகி ஓடிப்போகும் படியான யுக்தி ஒன்றை அனுசரிப்பதே. இவ்வாறு செய்ய முடியும்போதுதான் சந்நியாசம் கை கூடிற்றென்று சொல்லலாம். கர்மம் செய்தும் அவைகளையெல்லாம் உருகி ஓடச் செய்வது எப்படி? இது சூரியனைப் போன்றது. சூரியன் அல்லும் பகலும் கர்மம் புரிந்து கொண்டிருக்கிறது. இரவிலும் அது கர்மம் செய்கிறது; அதன் ஒளி குண கோளார்த்தத்தில் பரவிக் கொண்டிருக்கிறது. ஆனால் இவ்வளவு கர்மம் செய்து கொண்டிருந்தும் அது ஒன்றுமே செய்வதில்லை என்று சொல்லப்படுகிறது. இதனாலேயே நான்காம் அத்தியாயத்தில் பகவான்—நான் இந்த யோகத்தை முதலில் சூரியனுக்கு போதித்தேன். பிறகு சூரியனிடமிருந்து சிந்தனையாளனை, ஆராயுமறிவுடைய மனு இதைக் கற்றான், என்கிறார். இருபத்துநான்கு மணி நேரம் கர்மம் செய்து கொண்டே யிருந்தும் சூரியன் சிறிதும் கர்மம் செய்வதில்லை. இந்த நிலை உண்மையில் அற்புதமானது என்பதில் ஐயமேயில்லை.

## (20) அகர்மத்தின் மறுபக்கம்—யோகம்

ஆனால் இது சந்நியாசத்தின் ஒரு வகையே. அவன் கர்மம் செய்தும் செய்யாதவனாய் இருக்கிறான் என்பது அவன் நிலையின் ஒரு அம்சமே. அவன் சிறிதும் கர்மம் செய்வதில்லை; ஆயினும் அகில உலகத்தையும் கர்மத்தில் ஈடுபடுத்துகிறானே, அது அவனது வேறொரு அம்சமாகும். அவனிடம் அளவிட முடியாத, உய்த்துணர முடியாத தூண்டும் சக்தி பொதிந்து கிடக்கிறது. அகர்மத்திலுள்ள விசேஷமும் இதுவே. அகர்மத்தில் அளவிலடங்காத காரிய சக்தி நிரம்பி யிருக்கிறது. நீராவியின் சக்தி இப்படிப் பட்டதேயல்லவா ? நீராவியை அடைத்து வைத்தால் அது எவ்வளவு பெரிய காரியங்களைச் செய்கிறது ! அடைபட்டுள்ள நீராவிக்கு எல்லையற்ற சக்தி வந்து விடுகிறது. அது பெரிய பெரிய கப்பல்களையும் ரயில் வண்டிகளையும் இமைப்பொழுதில் இழுத்துக் கொண்டு போகிறது. சூரியனுடைய விஷயமும் இத்தகையதே. அது சிறிதும் கர்மம் செய்வதில்லை; ஆனால் இருபத்து நான்கு மணி நேரமும் இடையறாது காரியம் செய்த வண்ணமிருக்கிறது. அதனிடம் கேட்டால், " நான் எதுவும் செய்யவில்லையே!" என்று தான் அது சொல்லும். அல்லும் பகலும் கர்மம் செய்து கொண்டிருந்தும் எதையும் செய்யாமை சூரியனுடைய ஒரு அம்சமாயிருப்பது போலவே எதையும் செய்யாமலே அல்லும் பகலும் அனவரதமும் அளவிலடங்காத கர்மம் செய்தல் என்பது அதன் மற்றொரு அம்சமாகும். சந்நியாசம் இவ்விரு அம்சங்களையும் பெற்றுப் பொலிவது.

இரண்டுமே அசாதாரணமானவை. ஒருவகையில் கர்மம் வெளிப்படையாயிருக்க அகர்ம நிலை மறைந்து நிற்கிறது. வேறொரு வகையில் அகர்ம நிலை தெளிவாய்ப் புலனானபோதிலும் அது காரணமாக அளவிலடங்காத கர்மங்கள் நடந்து கொண்டே யிருக்கின்றன; இந்நிலையில் அகர்மத்தில் கர்மம் பூரணமாய் நிரம்பித் ததும்பிக் கொண்டிருக்கிறது. ஆகையினால் அதனால் பெரிய பெரிய காரியங்கள் நடைபெறுகின்றன. இந்த நிலையை எய்திய மனிதனுக்கும் சோம்பேறிக்கும் பெருத்த வேற்றுமையுண்டு. சோம்பேறி களைப்புறுவான், அலுத்துப் போவான். ஆனால் இந்த அகர்மியான சந்நியாசியோ கர்மசக்தியை அடக்கி

வைத்துக் கொண்டிருப்பான் ; கர்மம் சிறிதும் செய்யான். அவன் கைகளினாலோ பொறிகளினாலோ கர்மம் எதுவும் புரிவதில்லை. ஆனால் எதையும் செய்யாதிருந்தும் அவன் அளவிலடங்காக் கர்மம் செய்து கொண்டிருப்பான்.

ஒருவனுக்குக் கோபம் வந்து விட்டது. நாம் செய்த ஏதோ பிழையினால் அவனுக்குக் கோபம் உண்டா யிருந்தால் நாம் அவனிடம் போகிறோம். அவன் மௌன மாயிருக்கிறான் ; பேசவில்லை. இப்பொழுது அவனுடைய மௌனத்திற்கும் கர்மம் புரியாதிருப்பதற்கும் எத்தகைய பெருத்த விளைவு ஏற்படுகிறது ? இன்னொருவனோ படபட வென்று பேசித் தீர்த்து விடுகிறான். இருவருமே கோபமா யிருந்த போதிலும் ஒருவன் வாய் திறவாதிருக்க, மற்றவன் மனதிலுள்ளதைக் கொட்டித் தீர்த்து விடுகிறான். இவ் விரண்டும் கோபத்திற்கு உதாரணங்களே. பேசாமையும் கோபத்தின் ஒரு உருவமே ; அதனாலும் காரியம் நடந்து விடுகிறது. தாயோ தந்தையோ குழந்தையினிடம் பேசு வதை நிறுத்தி விட்டால் அதன் விளைவு எவ்வளவு உக்கிர மாகிறது ! பேசுதலென்ற கர்மத்தை விடுவதனால், அந்தக் கர்மத்தைச் செய்யாதிருப்பதனால், கர்மத்தைச் செய்திருந்தாலும் அதற்கு எந்த விளைவு ஏற்பட்டிருக்க முடியாதோ அதைவிட அதிகமான விளைவு தோன்றி விடுகிறது. அந்தப் பேசாமையினால் கிடைத்த பயன், தோன்றிய விளைவு அந்தப் பேச்சினால் தோன்றாது. ஞானி களுடைய நிலை இப்படித்தானிருக்கும். அவர்களுடைய அகர்மமே, அவர்கள் வாய்திறவாமல் ஒரு இடத்தில் அமர்ந்திருப்பதே பெரிய கர்மத்தைச் செய்து விடுகிறது ; பேராற்றலை உண்டாக்கி விடுகிறது. காரியத்தின் மூலமாய் வெளியிடவே முடியாத எத்தனையோ காரியங்களை அவர்கள் அகர்மிகளாயிருந்தபடியே சாதிக்கிறார்கள். இது சந்நியா சத்தின் இரண்டாவது தன்மையாயிற்று.

இத்தகைய சந்நியாசத்தின் எல்லா முயற்சிகளும் எல்லா உழைப்பும் ஒரே இடத்தில் வந்து அமர்ந்து விடுகின்றன.

**“ உழைப்பும் ஓட்டமும் ஒடுங்கி பிரபுவின் சிறகு களில் மூட்டைபோல் நின்றுவிட்டேன்.**
**கவலையெல்லாம் போய் நம்பிக்கை தோன்ற, பிறவிப்பிணியே தீர்ந்தது.**

என் சக்தியினுல் உயிர் வாழவில்லை;
பிரபு என் அபிமானத்தை அகற்றிவிட்டார்.
அவர் சக்தியினுல் வாழ்கிறேன்.
நான் வெறும் சோடை, சக்தி யற்றவன்.”*

துகாராம், “நான் இப்பொழுது உள்ளே எதுவும் அற்றவனுகிவிட்டேன், வெற்றுக்கோணி போன்று கிடக்கிறேன். உழைப்பெல்லாம் முடிந்து விட்டது” என்கிருர். துகாராம் காலியாகி விட்டார், ஆனுல் அந்தக் காலிக்கோணியில் பெருத்த தூண்டும் சக்தியிருக்கிறது. சூரியன் கூவி எவரையும் எழுப்புவதில்லை. ஆனுல் அது உதயமானதும் பறவைகள் பறக்கத் தொடங்குகின்றன; ஆட்டுக்குட்டிகள் துள்ளிக்குதிக்கின்றன; பசுக்கள் காட்டில் மேயப் போகின்றன; வணிகர் கடைகளைத் திறக்கிருர்கள்; விவசாயிகள் வயலுக்குப் போகிருர்கள்; உலகத்தின் பல காரியங்களும் ஆரம்பமாய்விடுகின்றன. சூரியன் இருந்து வந்தாலேபோதும்; அதிலிருந்தே அளவிலடங்காத காரியங்கள் ஆரம்பமாய்விடுகின்றன. இந்த அகர்மநிலையில் அளவிலடங்காத கர்மங்களைத் தூண்டும் ஆற்றல் பொதிந்து கிடக்கிறது. சந்நியாசத்தின் மற்ருெரு அற்புதமான தன்மை இத்தகையதாகும்.

## (21) இரண்டையும் ஒப்பிடும் வல்லமை வாக்குக்கு இல்லை

ஐந்தாம் அத்தியாயத்தில் சந்நியாசத்தின் இரண்டு வகைகள் ஒப்பிடப்பட்டிருக்கின்றன; ஒன்று இருபத்து நான்கு மணி நேரமும் கர்மம் செய்துகொண்டேயிருந்தும் எதையும் செய்யாதிருத்தல்; மற்றது ஒரு கணமும் எதையும் செய்யாத போதிலும் எல்லாவற்றையும் செய்து விடுதல். ஒன்று பேசிக்கொண்டிருந்தும் பேசாதிருக்கும் தன்மை

---

* उद्योगाची धांव बैसली आसनी, पडिले नारायणीं मोटलें हें
सकळ निश्चिन्ती झाली हा भरंवसा, नाहीं गर्भवासा
येणें ऐसा ॥
आपुलिया नांवें नाहीं आम्हां जिणें, अभिमान तेणें नेला
देवें ।
तुका म्हणे चळे एकाचिये सत्ते, आपुले मी रितेपणें असें ।।

யாக, மற்றது பேசாமலே பேசுவதாகிறது. இந்த இரு வகைகளும் இங்கே ஒப்பிடப்பட்டிருக்கின்றன. இந்த இரு தெய்வீகத்தன்மைகளையும் பார்ப்போம், இவைகளைப் பற்றிச் சிந்திப்போம், இவற்றின் தன்மைகளை உணர்வோம். இதில் ஏற்படும் ஆனந்தம் அபூர்வமானது.

இந்த விஷயமே அபூர்வமானது, மிகவும் உயர்ந்தது. உண்மையில் சந்நியாசம் பற்றிய இந்தக் கற்பனையிருக்கிறதே, இது வெகு புனிதமானது, மிக்க நேர்த்தியானது. எவர் இந்தக் கருத்தை, இந்தக்கற்பனையை முதன் முதலில் தேடிக் கண்டுபிடித்தாரோ அவருக்கு நாம் எப்படி நன்றி செலுத்துவோம்? இது மிகவும் ஒளி மிக்க கற்பனையாகும். மனித அறிவு, மனிதனுடைய சிந்தனாசக்தி இது வரையில் எவ்வளவோ மேலே எழுந்து பறந்திருந்தபோதிலும் அது எட்டிய மிக உயர்ந்த எல்லை சந்நியாசமென்ற கற்பனை யென்றே சொல்ல வேண்டும். அதற்கு மேலானதொன்றை இதுவரை எவராலும் எண்ணிப்பார்க்க இயன்றதில்லை. மேலே பறக்கும் முயற்சிகள் இன்னும் நடந்து கொண்டு தானிருக்கின்றன. ஆனால் கருத்திலும் சரி, அனுபவத்திலும் சரி இவ்வளவு உயரம் வரை இது வரையில் எவரும் எட்டிப் பறந்திருக்கிறாரென்று சொல்ல இயலாது. இந்த இருவகைகளும் அடங்கிய சந்நியாசத்தை கண்களின்முன் கற்பனை செய்து பார்ப்பதிலேயே அபூர்வ ஆனந்தம் ஏற்படுகிறது. ஆனால் பேச்சு நடத்தை என்றவையால் அமைந்த இந்த உலகத்திற்கு வந்ததும் அந்த ஆனந்தம் குறைந்து போகிறது; மேலேயிருந்து கீழே இழிவது போன்று உணர்கிறோம். நான் என் நண்பர்களிடம் இவ் விஷயத்தைக் குறித்து எப்பொழுதும் உரையாடுவது வழக்கம். இன்று எத்தனையோ ஆண்டுகளாக நான் இந்த தெய்வீகக் கருத்துக்களைச் சிந்தித்து வருகிறேன். இதில் பாஷையின் பற்றாக்குறை புலனாகிறது. சொற்களில் இது அடங்குவதேயில்லை.

எதையும் செய்யாமலே எல்லாவற்றையும் செய்தல், எல்லாம் செய்தும் ஒன்றும் செய்யாதிருத்தல் என்ற இது எவ்வளவு உயர்ந்த, ரசமான, காவிய மயமான கற்பனை! இதற்கு மேலான காவியம் என்ன வேண்டியிருக்கிறது? காவியம் என்ற பெயரால் பிரசித்தமானவை யெல்லாம் இந்தக் காவியத்தின் முன் 'சப்'பென்று ஆய்விடுகின்றன. இந்தக் கற்பனையில் உள்ள ஆனந்தமும் உற்சாகமும்

உயிர்ச்சக்தியும் தெய்வீகத்தன்மையும் வேறு எந்தக் காவியத்திலும் இல்லை. இவ்வாறு இந்த ஐந்தாம் அத்தியாயம் உயர்ந்த, வானளாவ உயர்ந்த பீடத்தின்மீது அமர்த்தப்பட்டிருக்கிறது. நான்காம் அத்தியாயம் வரையில் கர்ம விகர்மங்களை விவரித்த பின், இங்கே ஆகாயத்தையே எட்டிப் பிடிக்கப்பட்டிருக்கிறது. இங்கே அகர்ம நிலையின் இரு தன்மைகள் நிதரிசனமாய் ஒப்பிடப்பட்டிருக்கின்றன. இங்கே பாஷையே தடுமாறுகிறது! கர்மயோகி சிறந்தவனா, கர்ம சந்நியாசி சிறந்தவனா, யார் அதிக கர்மம் செய்கிறான் என்று சொல்லவே முடியாமலிருக்கிறது. எல்லாவற்றையும் செய்தும் எதையும் செய்யாதிருத்தல், எதையும் செய்யாமலே எல்லாவற்றையும் செய்தல் என்ற இரண்டும் யோகமே. ஆனால் ஒப்பிட்டுப் பேசுவதற்காக ஒன்றை யோகமென்றும் மற்றதை சந்நியாசமென்றும் சொல்லியிருக்கிறார்.

## (22) ஜியோமிதி, மீமாம்சகரின் உதாரணம்

அப்படியானால் இப்பொழுது இவைகளை ஒப்பிட்டுப் பார்ப்பதெப்படி? இதை உதாரணங்களைக் கொண்டே செய்ய வேண்டியிருக்கும். உதாரணங்கள் தரத் தொடங்குகையில் நாம் ஏதோ மேற்படியிலிருந்து கீழே விழுவது போன்று தோன்றுகிறது. ஆனால் கீழே விழுந்துதானாக வேண்டும். உண்மையில் பூரண கர்ம சந்நியாசம் அல்லது பூரண கர்ம யோகமென்ற இந்தக் கற்பனைகள் இந்த உடலில் அடங்கக்கூடியவையல்ல; அவை இவ்வுடலை உடைத்தெறிந்துவிடும். ஆனால் எந்த மகான்கள் இந்தக் கற்பனைகளின் வெகு சமீபம் வரையில் போயிருக்கிறார்களோ அவர்களுடைய உதாரணங்களைக் கொண்டு நாம் காரியத்தை நடத்தவேண்டியிருக்கும். உதாரணங்கள் என்பவை எப்பொழுதும் அரைகுறையானவையே. ஆனால் அவற்றைப் பூரணமானவைபோல் எண்ணிக் கொள்ள வேண்டியது.

ஜியோமிதியில் "ABC என்று ஒரு முக்கோணம் இருப்பதாய்க் கற்பனை செய்து கொள்" என்று சொல்லுகிறார்கள். கற்பனை செய்து கொள்வது எதற்கு? எதற்கெனில், இந்த முக்கோணத்தின் ரேகைகள் உண்மையானவை அல்ல. ரேகை என்பதற்கு நீளம் மட்டும் இருந்து அகலம் இல்லாதிருப்பது என்பது விளக்கமாகும்.

பலகையில் அகலமில்லாத இந்த நீளம் எப்படிக் கண்ணுக்குத் தெரியும்? நீளம் குறிக்கப்படும்பொழுதே அதில் அகலமும் ஏற்பட்டு விடுகிறது. நாம் எந்த ரேகையை வரைந்தாலும் அதில் ஒரு சிறிது அகலம் இருக்கத்தான் செய்யும். ஆகையால் ஜியோமிதி சாஸ்திரத்தில் ரேகையைக் கற்பனை செய்து கொள்ளாமல் எதையும் செய்ய முடியாது. பக்தி சாஸ்திரத்திலும் இதே நிலைமைதான். அங்கும் பக்தன்—இந்தச் சிறிய சாலக்கிராமம் என்ற உருண்டையில் அகில பிரம்மாண்ட நாயகன் இருப்பதாய் எண்ணிக் கொள்ளென்று சொல்லுகிறன். "இது என்ன பைத்தியக்காரத்தனம்?" என்று எவரேனும் கேட்டால் அவரிடம், "இந்த ஜியோமிதி பைத்தியக்காரத்தனமா? மிகவும் தெளிவான தடித்த ரேகை கண்ணுக்குத் தெரியும் பொழுது இதை அகலமில்லாதது என்று கொள்ளச் சொல்லுகிறயே, இது பைத்தியக்காரத்தனமா?" என்று கேள். உருப்பெருக்கி கொண்டு பார்ப்பாயானுல் இது அரை அங்குலம் அகலமிருப்பதாகத் தோன்றும். நீ ஜியோமிதியில் எண்ணிக்கொள்வதைப் போல பக்தி சாஸ்திரமும் "இந்த சாலக்கிராமத்தில் கடவுளை எண்ணிக்கொள்"ளென்று சொல்லுகிறது. "கடவுள் உடையமாட்டார், நொறுங்க மாட்டாரே; உன்னுடைய இந்த சாலக் கிராமம் உடைந்து போகுமே; இதை ஒரு தட்டு தட்டட்டுமா?" என்று எவரேனும் கேட்பாரானுல் அது புத்தி சாலித்தனமென்று சொல்லப்படமாட்டாது. ஏனெனில் ஜியோமிதியில் இல்லாததை எண்ணிக் கொள்ள முடியும் பொழுது பக்தி சாஸ்திரத்தில் மட்டும் ஏன் முடியாது? புள்ளி இருப்பதாய் எண்ணிக் கொள்—என்று சொல்லி விட்டுப்பலகையின் மீது கண்ணுக்கு நன்ருய்த்தெரியுமாறு அதை வைக்கிருர்கள்; புள்ளியாவது, ஒரு வட்டமே வரைந்து விடுகிருர்கள். புள்ளியை விளக்கப் புகுவோமானுல் அது பிரம்மத்தின் விளக்கம் போன்றே இருக்கும். புள்ளிக்கு நீளமோ, அகலமோ, கனமோ—எதுவுமே கிடையாது. அதை இவ்வாறு விளக்கியபோதிலும் பலகைமீது அதை வரைந்து காட்டுகிறேம். ஆனுல் புள்ளி என்பது உண்டென்ருலும் அது முப்பரிமாணம் அற்றது. கருத்தென்னவென்ருல், உண்மை முக்கோணம், உண்மைப் புள்ளி ஆகியவற்றை விளக்கங்களோடு நிறுத்திக்கொண்டு, அப்படியே யிருப்பதாய்க் கொண்டு மேலே செல்ல வேண்டியிருக்கிறது. பக்தி சாஸ்திரத்திலும் சாலக்கிராமத்தில் சிதை

வற்று சர்வவியாபியாய் கடவுள் இருப்பதாய் எண்ணிக் கொள்ள வேண்டியிருக்கிறது. நாமும் இத்தகைய கற்பனை யான உதாரணங்களை ஏற்றுக்கொண்டு இவைகளை ஒப் பிடுவோம்.

மீமாம்சைக்காரர்கள் ஒரு பெரிய வேடிக்கை செய் திருக்கிறார்கள். கடவுள் என்று சொல்லிவிட்டு அதை விளக்கும்பொழுது அவர்கள் மிகவும் அழகிய விவரம் தந் திருக்கிறார்கள். வேதங்களில் இந்திரன், அக்னி, வருணன் முதலிய தேவதைகள் இருக்கிறார்கள் இந்த தேவதைகளைப் பற்றி மீமாம்சையில் ஆராயும்பொழுது, "இந்த இந்திரன் எப்படிப்பட்டவன்? இவன் உருவம் எத்தகையது? இவ னிருப்பது எங்கே?" என்றெல்லாம் கேள்விகள் கேட்கப் படுகின்றன. அதற்கு மீமாம்சகன் 'இந்திரன்' என்ற சொல்லே இந்திரனுடைய உருவமாகும்; இந்திரன் என்ற சொல்லிலேயே அவனிருக்கிறான். 'இ' என்ற எழுத்தும் அதன் பிறகு நகர மெய்யும் பிறகு 'தி-ர-ன்' என்ற எழுத்துக் களுமே அவன் உருவம்; அதுவே அவன் சொரூபம். வருணன் என்ற தேவதை எப்படி யென்றால், அதுவும் அப்படியே. முதலில் 'வ' பிறகு 'ரு' பிறகு 'ண' பிறகு 'ன்'. இதுவே வருணனின் உருவம். இதேவகையில் அக்னி முத லான தேவதைகளுக்கும் என்று வைத்துக்கொள்ளுங்கள். இந்த எல்லா தேவதைகளும் எழுத்துக்களையே உருவாய்க் கொண்டவர்கள். தேவதைகளனைவரும் எழுத்துருவினர் என்ற இந்தக் கற்பனையில், இந்தக் கருத்தில் மிகுந்த இன்ப மிருக்கிறது. தேவனைப் பற்றிய கற்பனை, தேவன் என்ற பொருள் எந்த உருவிலும் அடங்காததொன்று. அந்தக் கற்பனையைக் காட்டுவதற்கு அதன் பெயரைக் குறிக்கும் எழுத்துச் சின்னமே போதும். கடவுள் எப்படியிருக்கிறார் என்றால் அதற்கு முதலில் 'க', பிறகு 'ட', பிறகு 'வு', பிறகு, 'ள்' என்பது பதில். இறுதியில் 'ஓம்' என்ற எழுத்திருக்கிறதே அது அற்புதமானது. 'ஓம்' என்ற எழுத்தே கடவுளாய்விட்டது; கடவுளைக் குறிக்கும் ஒரு இடுகுறியாகவே அது அமைந்துவிட்டது. இத்தகைய இடுகுறிகள் அமைத்துக் கொள்ளவேண்டி வருகிறது. ஏனெனில் உருவில், சிலையில் இந்தப் பரந்த கற்பனைகள் அடங்கமாட்டா. ஆனால் மனிதனுடைய விருப்பமோ மிக வும் சக்தி வாய்ந்தது. அவன் இந்தக் கற்பனைகளை உருவத் துள் புகுத்த முயலாது இருப்பதில்லை.

## (23) சந்நியாசியும் யோகியும் ஒருவரே— சுக-ஜனகர் போல

சந்நியாசம், யோகம் என்ற இவை ஆகாயத்தைப் போய் எட்டக்கூடிய கருத்துக்களாகும். பூரண சந்நியாசம், பூரண யோகம் ஆகியவற்றின் கற்பனைகள் இந்த உடலில் அடங்கக் கூடியவையல்ல. உடலில் இந்த இலட்சியங்கள் அடங்காது போயினும் கருத்தில் நிச்சயமாக அடங்கி விடுகின்றன. பூரண யோகி, பூரண சந்நியாசி ஆகியவர்கள் இப்படிப்பட்டவர்களென்று பேச்சளவில் விளக்குவதோடு நிறுத்திக்கொள்ள வேண்டியதே. இவர்கள் இலட்சியங் களாகவும் எய்த முடியாதவர்களாகவுமே இருந்து வருவார் கள். ஆனால் உதாரணத்திற்காக, இந்தக் கற்பனைகளுக்கு வெகு அண்மையில் போயுள்ளவர்களை எடுத்துக்கொள்ள வேண்டி வரும். பிறகு ஜியோமிதியில் சொல்லுவதுபோல் இவரையே பூரண யோகி என்றும், பூரண சந்நியாசி என்றும் கொள்ளுங்களென்று கூறவேண்டி யிருக்கும். சந்நியாசத்திற்கு உதாரணங்கள் கூறும்பொழுது சுகர், யாக்ஞவல்க்கியர் முதலியவர்களுடைய பெயர்கள் குறிப் பிடப்படுகின்றன. கர்மயோகி என்ற வகையிலோ ஜனகர், ஸ்ரீ கிருஷ்ணர் ஆகியோரின் பெயர்கள் பகவத் கீதையி லேயே சொல்லப்பட்டிருக்கின்றன. லோகமான்யரோ 'கீதா ரஹஸ்யத்'தில் ஒரு நாமாவளியே கொடுத்து விட் டார். "ஜனகர், ஸ்ரீ கிருஷ்ணர் முதலியோர் இந்த வழியில் சென்றார்கள். சுகர், யாக்ஞவல்க்கியர் முதலியோர் அந்த வழியில் சென்றார்கள்." ஆனால் சிறிது சிந்தித்தோமானால் இந்த நாமாவளியும் ஈரக் கையோடு எழுதியவை உடனுக் குடன் அழிபடுவதைப்போல தானே அழிபட்டுவிடும். யாக்ஞவல்க்கியர் ஒரு சந்நியாசி, ஜனகர் ஒரு கர்மயோகி. அதாவது சந்நியாசியான யாக்ஞவல்க்கியருக்கு கர்ம யோகியான ஜனகர் சீடர். ஆனால் அதே ஜனகருக்கு சந்நியாசியான சுகதேவர் சீடரானார். யாக்ஞவல்க்கிய ருடைய சீடர் ஜனகர், பிறகு ஜனகருக்கு சீடர் சுகர். முதலில் சந்நியாசி, பிறகு கர்மயோகி, அதன் பிறகு மீண்டும் சந்நியாசி என்று இந்த முத்துமாலை கோர்க்கப் படுகிறது. இவ்வாறு யோகமும் சந்நியாசமும் ஒரே வாரிசுக் கிரமத்தில் ஒன்றின்பின் ஒன்றாய் அமைகின்றன.

சுகதேவரிடம் வியாசர், "குழந்தாய் சுகா, நீ

என்னவோ ஞானிதான். ஆனால் உன்மீது குருவின் முத்திரை இன்னும் பதியவில்லையே '' என்று சொன்னார். சுகதேவர் போனார். ஜனகர் தம் விசாலமான மாளிகையின் மூன்றும் மெத்தையில் அமர்ந்திருந்தார். சுகர்தான் வன வாசி யாயிற்றே! நகரத்தைப் பார்த்துக்கொண்டே போனார். ஜனகர் சுகதேவரிடம் "எதற்கு வந்தாய்?" என்று கேட்டார். சுகர், "ஞானம் பெற" என்று பதில் சொன்னார். "யார் அனுப்பியது?" "வியாச தேவர்". "எங்கிருந்து வந்தாய்?" "ஆசிரமத்திலிருந்து." "வரும் பொழுது இங்கே கடைத்தெருவில் என்னென்ன பார்த்தாய்?" "எங்கும் ஒரே சர்க்கரை மிட்டாய் அடுக்கி வைத்திருந்ததைப் பார்த்தேன்" "வேறு என்ன பார்த்தாயோ?" "பேசிக்கொண்டே வளையவரும் சர்க்கரை பொம்மைகளைப் பார்த்தேன்" "இன்னும் என்ன பார்த்தாய்?" "இங்கே வருகையில் உறுதியான சர்க்கரை மாடிப் படிகளிருந்தன." "இன்னும் என்ன கண்டாய்?" "சர்க்கரை உருவங்கள் இங்கும் எங்கும் இருக்கக் கண்டேன்." "இப்பொழுது என்ன காணப்படுகிறது?" "ஒரு சர்க்கரைச் சிலை மற்றொரு சிலையுடன் பேசிக் கொண்டிருக்கிறது". அப்பொழுது ஜனகர், "நீ போகலாம். உனக்கு எல்லா ஞானமும் வந்துவிட்டது" என்று சொன்னார். சுகதேவருக்கு ஜனகரிடமிருந்து தேவையாயிருந்த அவர் கையெழுத்திட்ட அத்தாட்சிப் பத்திரம் கிடைத்துவிட்டது. கருத்தென்னவென்றால், கர்ம யோகியான ஜனகர் சந்நியாசியான சுகதேவரைத் தம் சீடனாயிருப்பதற்குத் தகுதி பெற்றுவிட்டதாய்த் தீர்ப்புக் கூறிவிட்டார். சுகர் என்னவோ சந்நியாசிதான்; ஆனால் இந்த விவரம் எவ்வளவு விநோதமாயிருக்கிறது!

பரீக்ஷித்துக்கு ஏழு நாளில் மரணம் என்ற சாபம் ஏற்பட்டது. பரீக்ஷித்து இறக்கச் சித்தமாக வேண்டியிருந்தது. இறப்பதெப்படியென்று போதிக்கக்கூடிய குரு ஒருவர் அவனுக்கு தேவை. அவன் சுகாசாரியாரை அழைத்தான். சுகாசாரியார் வந்து அமர்ந்தவர் (24×7) 168 மணிநேரம் பாகவதம் சொல்லிக்கொண்டே யிருந்தார். அவர் மடித்த காலை மாற்றாது ஒரே வகையில் கதை சொல்லிக்கொண்டே போனார். 'இதில் என்ன அப்படி விசேஷமிருக்கிறது?' இதிலுள்ள விசேஷம், ஏழு நாட்களும் தொடர்ந்து அவர் பெரிதும் உழைக்கவேண்டி

யிருந்தும் அவருக்கு அது தோன்றவேயில்லை என்பதே. இடையருமல் கர்மம் புரிந்துகொண்டிருந்தும் அவர் ஒன்றுமே செய்யாதது போலிருந்தார். உழைப்பின் களைப்புணர்ச்சியே அங்கில்லை. சந்நியாசம், கர்ம யோகம் ஆகிய இரண்டும் வெவ்வேறல்ல என்பது கருத்து.

ஆகையால் பகவான்,

"एकं सांख्यं च योगं च यः पश्यति स पश्यति ।"

(ஏகம் ஸாங்கியம் ச யோகம் ச ய: பஶ்யதி ஸபஶ்யதி)

என்று சொல்லுகிருர்.

சந்நியாசமும் யோகமும் ஒன்றேயென்பதை எவன் உணருகிருனே அவனே உண்மை இரகசியத்தை உணர்ந்தானென்று சொல்லவேண்டும். ஒருவன் செய்யாமலே செய்கிருன், மற்றவன் செய்தும் செய்யாதிருக்கிருன். உண்மையான சிறந்த சந்நியாசியை, எவருக்கு எப்பொழுதும் சமாதிநிலை இருந்து வருகிறதோ, எவர் சிறிதும் விகாரமற்றிருக்கிருரோ அத்தகைய உண்மையான சந்நியாசி ஒருவரைப் பத்து நாள் நம்மிடையே வந்து இருக்கச் செய்யுங்கள். எவ்வளவு ஒளியும் எவ்வளவு உற்சாகமும் அவரால் ஏற்படும் தெரியுமா? எத்தனையோ வருஷங்களாய்ச் செய்து குவித்த காரியங்களினுல் கைகூடாதது அவருடைய தரிசனத்தினுல், அவர் வந்திருப்பதனுலேயே கூடிவிடும். புகைப்படத்தைப் பார்த்தே மனம் புனிதமாகும்பொழுது, இறந்து போனவர்களின் சித்திரங்களிலிருந்து பக்தியும் அன்பும் புனிதபாவமும் உள்ளத்தில் எழும்பொழுது உயிருடனிருக்கும் சந்நியாசியை தரிசிப்பதனுல் எவ்வளவு புத்துணர்ச்சி ஏற்படும்! சந்நியாசி, யோகி ஆகிய இருவருமே உலகிற்கு நன்மை செய்கிருர்கள். ஒரு இடத்தில் வெளிப் பார்வைக்குக் கர்மத்தைத் துறந்து விட்டதாகத் தோன்றியபோதிலும் அந்தத் துறவிலேயே கர்மம் நிரம்பித் ததும்பிக்கொண்டிருக்கிறது. அதில் அளவிலடங்காத உயிருணர்ச்சி நிரம்பி யிருக்கிறது. ஞானியான சந்நியாசி, ஞானியான கர்மயோகி ஆகிய இருவருமே ஒரே சிங்காதனத்தில் அமர்ந்தவர்களே; சொல் வெவ்வேருயிருந்த போதிலும் பொருள் ஒன்றே. இவை ஒரே தத்துவத்தின் இரண்டு வகைகளேயாகும். எந்திரம் வேகமாய்ச் சுழலும்பொழுது அது சுற்ற வில்லைபோல்

தோன்றுகிறது. சந்நியாசியின் நிலை இத்தகையதே. அவருடைய சாந்தியிலிருந்து, அசையாத நிலையிலிருந்து அளவிலடங்காத சக்தி, எல்லையற்ற தூண்டுதல் தோன்றுகிறது. மகாவீரர், புத்தர், நிவிருத்திநாதர் ஆகியோர் இத்தகைய பெரியோர்களே. சந்நியாசியின் எல்லா உழைப்புகளும், முயற்சிகளும் ஒரு ஆசனத்தில் வந்து நிலைத்துவிட்டபோதிலும் அது மிக மிகப் பெரிய கர்மத்தைச் செய்கிறது. அதாவது யோகியே சந்நியாசியும், சந்நியாசியே யோகியும் ஆகிருர்; இருவரிடையிலும் சிறிதும் வேற்றுமையில்லை. சொற்கள் வெவ்வேருயிருந்த போதிலும் பொருள் ஒன்றே. கல் என்பதற்கு பாஷாணம் என்பதும் பாஷாணம் என்பதற்கு கல் என்பதும் எப்படிப் பொருளோ அப்படியே கர்மயோகி என்பதற்கு சந்நியாசி என்பதும் சந்நியாசி என்பதற்கு கர்மயோகி என்பதும் பொருளாகும்.

## (24) ஆயினும் சந்நியாசத்தினும் யோகம் சிறந்ததெனப்பட்டது

விஷயம் என்னவோ இவ்வாறு இருந்த போதிலும் பகவான் அதில், ஒரு 'ஷரா' சேர்த்திருக்கிருர். பகவான் சந்நியாசத்தைவிட கர்மயோகம் சிறந்ததென்று சொல்லுகிருர். இரண்டுமே ஒரு தன்மையது என்னும்பொழுது பகவான் இப்படிச் சொல்லுவானேன்? இது என்ன கேலியா? பகவான் கர்மயோகம் சிறந்தது என்று சொல்லும்பொழுது அவர் சாதகனுடைய நிலையிலிருந்து சொல்லுகிருர். கர்மம் எதுவுமே செய்யாமல் எல்லாக் கர்மங்களையும் செய்தல் என்பது ஒரு சித்தனுக்கு முடிந்ததேயன்றி சாதகனுக்கு அல்ல; ஆனல் எல்லாக் கருமங்களையும் செய்தும் எதையும் செய்யாதிருத்தலென்னும் முறையை ஓரளவு அனுசரிக்க இயலும். ஒரு முறையோ சாதகனுக்கு முடியாதது, சித்தனுக்கு மட்டுமே உகந்தது; மற்றதோ சாதகனும் ஓரளவு செய்யக் கூடியது. கர்மம் ஒரு சிறிதும் செய்யாமலே கர்மத்தைச் செய்தல் என்பது சாதகனுக்கு ஒரு புதிரைப் போலவே இருக்கும்; இது அவனுக்குப் புரியாது. கர்மயோகம் சாதகனுக்கு ஒரு வழியாயிருப்பதோடு தங்கக்கூடிய முகா

மாயும் கூடாரமாயும் இருக்க சந்நியாசமோ யாத்திரா மார்க்கத்தில் அமையாது இறுதியில் அமைந்திருக்கிறது. இதனாலேயே சந்நியாசத்தைவிட கர்மயோகம் சாதகனுடைய கண்கொண்டு பார்க்கும்பொழுது சிறந்ததாகிறது.

இதே நியாயத்தினால் பகவான் மேலே பன்னிரண்டாம் அத்தியாயத்தில் நிர்குணத்தைவிட ஸகுணத்தைச் சிறந்ததாகக் கொண்டிருக்கிறார். ஸகுணத்தில் எல்லாப் பொறிகளுக்கும் வேலையிருக்க நிர்குணத்தில் அவ்வாறில்லை. நிர்குணத்தில் கைகள் வீண்—கால்கள் வீண்—கண்கள் வீண்—பொறிகளனைத்தும் வேலையற்றுப் போகின்றன. சாதகனால் இவைகளைக் கைவரச் செய்ய முடியாது. ஆனால் ஸகுணத்திலோ இவ்வாறில்லை. கண்களினால் உருவத்தைக் காணலாம், காதுகளினால் பிரார்த்தனையைக் கேட்கலாம், கையினால் பூஜை செய்யலாம், மக்களுக்குப் பணி புரியலாம், கால்களினால் புண்ணிய ஸ்தல யாத்திரை செய்யலாம் —இவ்வாறு எல்லாப் பொறிகளுக்கும் வேலை தந்து அவைகளுக்கு உகந்த வேலையை அவற்றினிடம் வாங்கி அவைகளைக் கடவுள் மயமாய்ச் செய்துவிடுதல் ஸகுணத்தில் சாத்தியமாகிறது. ஆனால் நிர்குணத்திலோ இவையெல்லாம் நிறுத்தம். வாய் அடங்கிவிடுகிறது, காதடைத்து விடுகிறது, கைகாலெல்லாம் முடங்கிப் போகின்றன. எல்லாம் அடங்கிப்போகும் இந்த நிலையைப் பார்த்து, பாவம், சாதகன் பயந்து போகிறான்! அவனுடைய சித்தத்தில் நிர்குணம் எப்படி இடம் பெறும்? அவன் மௌனமாய் அமர்ந்திருப்பானானால் அவனுடைய சித்தத்தில் ஒன்றுக்கொன்று சம்பந்தமற்ற எத்தனையோ எண்ணங்கள் தோன்றத் தொடங்கும். பொறிகளுக்குள்ள இயற்கை குணம், நாம் அவற்றினிடம் ஒன்றைச் செய்யாதே என்று சொன்னால் அதைக் கட்டாயம் செய்வதாகும். விளம்பரங்களில் இவ்வாறு பார்ப்பதில்லையா? 'மேலே படிக்காதே' என்று எழுதிவிட்டால், படிப்பவன் 'படிக்காதே' என்று எதன் தலைப்பில் எழுதியிருக்கிறதோ அதைத்தான் 'முதலில் படிப்போமே' என்று சொல்லிக் கொள்வான். 'படிக்காதே' என்று சொல்லுவதன் நோக்கம், படிப்பவன் அதைக் கட்டாயம் படிக்கவேண்டும் என்பதே. மனிதன் அதை சாவதானமாய்ப் படிக்கிறான்.

நிர்குணத்தில் மனம் அலைப்புற்றுக்கொண்டே யிருக்கும். ஸகுணபக்தியின் விஷயம் இவ்வாறல்ல. அங்கே தீப ஆரத்தி உண்டு, பூஜை உண்டு, சேவை உண்டு, உயிர் தயை உண்டு. ஆகையால் பொறிகளுக்கு அங்கே வேலை இருக்கும். பொறிகளைச் சரியாய் வேலையில் ஈடுபடுத்தி விட்டு, பிறகு மனதினிடம், "இனி நீ எங்கு வேண்டு மானாலும் போகலாம்" என்று சொல். அப்பொழுது மனம் எங்கும் போகாது, அங்கேயே இருந்துவிடும்; தான் அறியாமலே ஒன்றிவிடும். ஆனால் அதை வேண்டுமென்றே ஒரு இடத்தில் நிலைக்கச் செய்ய விரும் பினையானால் அது தப்பி ஓடிவிடும். பல்வேறு பொறிகளை யும் சிறந்த, அழகிய வேலைகளில் முனையச் செய்தான பிறகு மனதை இஷ்டம்போல் சுற்றச் சொல்லு. அது சுற்றப் போகாது: "இனி நீ சுற்றலாம்" என்று சொல்வாயானால் அது, "இல்லை, நான் இங்கேயே அமர்ந்து விட்டே" னென்று சொல்லும். "பேசாமல் உட் காரு" என்று உத்தரவிடுவாயானால் "நான் இதோ கிளம்பிவிட்டேன்" என்னும்.

உடலைத் தாங்கியுள்ள மனிதனுக்கு எது சுளுவானது என்று பார்க்கும்பொழுது நிர்குணத்தைவிட ஸகுணம் சிறந்ததாகிறது. கர்மத்தைச் செய்யாமலே அதைச் செய் வதைக் காட்டிலும் கர்மத்தைச் செய்துகொண்டே அதை அகற்ற உதவும் யுக்தி சிறந்ததாகிறது; ஏனெனில் அது சுளுவானது. கர்மயோகியின் விஷயத்தில் முயற்சிக்கு, பயிற்சிக்கு இடமிருக்கிறது. எல்லாப் பொறிகளையும் தன் வசமாக்கிக் கொண்டு மெல்ல மெல்ல எல் லாத் தொழில்களிலிருந்தும் மனதை அகற்றுவதற் கான பயிற்சியை கர்ம யோகத்தில் பெறலாம். இந்த உபாயம் இன்று கை கூடாவிட்டாலும் ஒரு நாள் கை கூடு வதே. கர்ம யோகத்தை அனுசரித்தல் சுளுவாயிருத்தலே சந்நியாசத்தைக் காட்டிலும் அதிலுள்ள சிறப்பாகும். ஆனால் பூரண நிலையில் கர்மயோகமும் சந்நியாசமும் ஒன்றே. பூரண சந்நியாசம், பூரண கர்மயோகம் ஆகிய இரண்டும் ஒன்றே யாகும். பெயர்கள் கேட்க வெவ் வேறாய்த் தோன்றுகின்றன; ஆனால் இரண்டும் ஒன்றே. ஒரு வகையில், கர்மம் என்ற பூதம் வெளியில் ஆடிக்கொண் டிருந்த போதிலும் உள்ளே அமைதி நிலவுகிறது. வேறு வகையிலோ, எதையுமே செய்யாதிருந்தும் மூன்று உலகங்

களையும் ஆட்டிவைக்கும் சக்தி இருக்கிறது. கண்ணில் படுவதுபோல் இல்லாமை இரண்டிற்கும் பொதுவான தன்மை யாகும். பூரண கர்மயோகம் சந்நியாசமானால் பூரண சந்நியாசம் கர்மயோகமுமாகும்; வேற்றுமை எதுவுமில்லை. ஆனால் சாதகனுக்கோ கர்மயோகமே சுளு. பூரண நிலையில் இரண்டும் ஒன்றே.

ஞானதேவருக்கு சாங்கதேவர் ஒரு கடிதம் அனுப்பினார். அது வெறும் காலிக்காகிதம். சாங்கதேவரைவிட ஞானதேவர் வயதில் இளையவர். 'சிரஞ்சீவி...' என்று எழுதினாலோ ஞானதேவர் ஞானத்தில் பெரியவர். 'ஸ்ரீமான்...' என்று எழுதினாலோ அவர் வயதில் இளையவர். ஆகையால் கடிதத்தைத் தொடங்குவது தான் எப்படி? எதையும் தீர்மானிக்க முடியவில்லை. ஆகவே சாங்கதேவர் வெறும் காகிதத்தையே அனுப்பிவிட்டார். அது முதலில் நிவர்த்திநாதருடைய கைக்குப் போயிற்று. அவர் அதைப் படித்து ஞானதேவரிடம் கொடுத்தார். ஞானதேவர் அதைப் படித்தார். பிறகு முக்தாபாயிடம் கொடுத்தார். முக்தாபாய் அதைப் படித்து, "சாங்க தேவன் இவ்வளவு பெரியவனாகியும் வெற்று ஆளாகவே இருக்கிறான்" என்றார். நிவர்த்தி நாதரோ வேறு பொருள் கொண்டார். அவர், "சாங்க தேவர் வெற்று மனிதர், தூயவர், கல்மஷ மற்றவர், உபதேசமளிக்கத்தக்கவர்" என்றார். பிறகு ஞானதேவரிடம் கடிதத்திற்கு பதில் எழுதச் சொன்னார். ஞானதேவர் அறுபத்தைந்து *'ஓவிகள்' கொண்ட கடிதம் அனுப்பினார். அதை 'ஞானதேவ் பாஸஷ்டீ' ('ज्ञानदेव पासष्टी') என்று சொல்லுகிறார்கள். இக் கடிதத்தைப்பற்றி இத்தகைய விநோதக் கதை வழங்குகிறது. எழுதியுள்ளதைப் படித்தல் சுலபம்; ஆனால் எழுதாததைப் படித்தல் சிரமமாகும். அதைப் படித்து முடிக்கவே முடியாது. இதே வகையில் சந்நியாசி காலிப் பாண்டமாய், வெற்றுக் காகிதம்போல் தோன்றிய போதிலும் அவனிடம் அளவிலடங்காத கர்மம் நிரம்பி இருக்கும்.

கர்ம யோகம், சந்நியாசம் ஆகிய இரண்டின் மதிப்பும் பூரண நிலையில் ஒன்று போலவே தானிருக்கும். ஆனால் கர்ம யோகத்திற்கு நடைமுறையிலுள்ள மதிப்பு அதிகம்.

---

* மராத்தி பாஷையில் சாதாரணமாய் வழங்கும் ஒரு விருத்தம்.

ஒரு நோட்டின் மதிப்பு ஐந்து ரூபாய்; ஒரு தங்கநாணயமும் ஐந்து ரூபாய் மதிப்புள்ளதாயிருக்கிறது. அரசாங்கம் நிலைத்திருக்கும் வரையில் இரண்டின் மதிப்பும் ஒன்று போலிருந்து வருகிறது. அரசாங்கம் மாறிவிட்டாலோ நடைமுறையில் அந்த நோட்டு ஒரு சல்லிக் காசு பெறாது. தங்க நாணயத்திற்கோ ஏதேனும் மாற்றாகக் கிடைத்து விடும். ஏனெனில் அதிலுள்ளது தங்கம். பூரண நிலையில் கர்மத் தியாகம், கர்மயோகம் ஆகிய இரண்டின் மதிப்பும் ஒன்று போன்றதே. ஏனெனில் இரண்டிலும் உள்ள ஞானம் சமம். ஞானத்தின் மதிப்பு அளவிலடங்காதது (அனந்தம் ∞ infinity) அனந்தத்துடன் எதைக் கூட்டினாலும் விளைவு அல்லது விடை அனந்தமே என்பது கணித சாஸ்திரத்தின் ஒரு தத்துவமாகும். கர்மத் தியாகமும் கர்மயோகமும் பரிபூரண ஞானத்தில் கலந்து விடும்பொழுது இரண்டின் மதிப்பும் ஒன்றாகிவிடுகிறது. ஆனால் ஞானத்தை இரண்டிலிருந்தும் அகற்றிவிடும்பொழுது கர்மத் தியாகத்தைவிட கர்மயோகமே சாதகனுக்குச் சிறந்தது. உறுதியான சுத்த ஞானத்தை இரண்டிலும் கலந்தோமானால் மதிப்பு ஒன்றுபோலிருக்கிறது. எல்லையை அல்லது இலட்சியத்தை எட்டிப் பிடித்த பிறகு ஞானம் + கர்மம் = ஞானம் + கர்ம மின்மை. ஆனால் ஞானத்தை இரண்டு இடங்களிலிருந்தும் அகற்றி விட்டோமானால் கர்ம மின்மையைவிடக் கர்மமே சாதகனுக்குச் சிறந்ததாகும். செய்யாமலே செய்தல் என்பதை சாதகன் புரிந்துகொள்வதே சிரமம்; செய்தும் செய்யாதிருத்தல் என்பதையோ அவன் புரிந்து கொள்ளக்கூடும். கர்மயோகம் வழியிலும், போய்ச் சேர வேண்டிய இடத்திலும் இருப்பது; ஆனால் சந்நியாசமோ இறுதி எல்லையில் இருக்கிறதே அன்றி வழியில் இல்லை. இதையே சாஸ்திர பரிபாஷையில் சொல்லுவோமானால் கர்ம யோகம் சாதனையும் நிஷ்டையுமாயிருக்க சந்நியாசமோ வெறும் நிஷ்டையாகும். நிஷ்டை என்பதற்கு இறுதிநிலை என்பது பொருள்.

ஞாயிறு, 20–3–'32.

## ஆறும் அத்தியாயம்

# சித்தவிருத்தி—அதை அடக்குதல்

✱

### (25) கடைத் தேற்றத்தில் ஆவல்

ஐந்தாம் அத்தியாயத்தில் நாம் கற்பனையையும் கருத் தோட்டத்தையும் கொண்டு மனிதன் எவ்வளவு தூரம் உயரப் பறக்க முடியும் என்பதைப் பார்க்க முடிந்தது. கர்மமும், விகர்மமும், அகர்மமும் சேர்ந்து சாதனை அனைத்தும் பூர்த்தியாகிறது. கர்மம் ஸ்தூலமானது. நாம் எந்தெந்த சுதர்ம கர்மம் செய்கிறோமோ அவைகளி லெல்லாம் நம் மனதின் கூட்டுறவு இருக்க வேண்டும். மனப்பயிற்சியின் பொருட்டு செய்யப்படுவது விகர்மம், விசேஷ கர்மம் அல்லது சூக்கும கர்மமாகும். கர்மம், விகர்மம் ஆகிய இரண்டும் தேவையே. இவை இரண்டை யும் செய்து கொண்டே போகும்பொழுது அகர்மத்தின் அடிப்படை அமைக்கப்பெறுகிறது. நாம் பிந்திய அத்தி யாயத்தில் இந்த அடிப்படையின் மீது கர்மம் சந்நியாசம் ஆகிய இரண்டும் ஒருருவைப்பெறக் கண்டோம். இப் பொழுது ஆறும் அத்தியாயத்தின் ஆரம்பத்தில் கர்ம யோகத்தின் அடிப்படை சந்நியாசத்தின் அடிப்படையி லிருந்து வேறாய்த் தோன்றியபோதிலும் இரண்டும் முற்றி லும் ஒன்றே என்று மீண்டும் சொல்லுகிறார். உள்ள வேற்றுமை நோக்கத்தில் தான், பார்க்கும் முறையில்தா னிருக்கிறது. ஐந்தாம் அத்தியாயத்தில் எந்த நிலை வர்ணிக்கப்பெற்றிருக்கிறதோ அதற்கான சாதனத்தைத் தேடுதல் பிந்திய அத்தியாயங்களின் கருத்தாகும்.

பரமார்த்தமும், கீதை முதலான நூல்களும் துறவி களுக்கென ஏற்பட்டவையென்று பலர் தவறாக எண்ணிக் கொண்டிருக்கிறார்கள். ஒரு கனவான் "நான் துறவி யல்லவே!" என்றார். இதன் பொருள் துறவி என்ற பெய ருள்ள உயிர் வர்க்கத்தில் அந்த கனவான் சேர்ந்தவரல்ல என்பது; குதிரைகள், சிங்கங்கள், கரடிகள், பசுக்கள் என்ற பிராணிகளைப் போல துறவிகள் என்னும் பிராணி கள் உண்டு என்பதே; பரமார்த்தம் என்பது அவர்களுக் காகவே ஏற்பட்டது போலும்! எஞ்சிய நடைமுறை உலகத்தில் இருப்பவர்களெல்லோரும் வேறு இனத்தை

சேர்ந்தவர்கள் போலும்! அவர்களுடைய எண்ணங்கள் வேறு, நடைமுறைகள் வேறு! இக்கருத்து துறவிகள், சாதாரண மனிதர்கள் என்ற இரண்டு வெவ்வேறு ஜாதிகளை அமைத்துவிட்டது. 'கீதா ரஹஸ்ய'த்தில் லோகமான்ய திலகர் இவ்விஷயத்தில் நம் கவனத்தை ஈர்த்திருக்கிறார். கீதை என்ற நூல் சாதாரணமான உலகத்தில் உழன்று வரும் மக்கள் அனைவருக்குமே அமைந்தது என்று அவர் சொல்வதை முற்றிலும் உண்மையென்று நான் கருது கிறேன். பகவத் கீதை அகில உலகத்திற்கும் அமைந்தது. பரமார்த்தம் பற்றிய சாதனைகள் அனைத்தும் உலகில் வாழும் ஒவ்வொரு மனிதனுக்கும் ஏற்பட்டவை. பரமார்த் தம், தம் காரியங்களை தூயதாய் வைத்துக்கொண்டு மனதை சமாதானமும் அமைதியும் பெறச் செய்வ தெப்படி என்பதைப் போதிக்கிறது. விவகாரத்தைத் தூயதாக்குவ தெப்படி என்பதைச் சொல்லவே கீதை இருக்கிறது. உன் விவகாரங்கள் நடைபெறும் இடங்களிளெல்லாம் கீதை வருகிறது. ஆனால் அது உன்னை அங்கேயே இருக்கச் செய்ய விரும்பவில்லை. அது உன் கையைப் பற்றி இறுதி இலட்சியம் வரை அழைத்தேகும். 'மலை முகம்மதிய னிடம் வராவிடில் முகம்மது மலையினிடம் போவார்' என்ற பிரசித்தமான பழமொழி உண்டல்லவா? தம் செய்தி உயி ரற்ற மலைகளுக்கும் போய் எட்ட வேண்டுமென்ற ஆவல் முகம்மதுக்கு. மலை உயிரற்றதாகையால் அது தம்மிடம் நடந்து வருமென்று முகம்மது எதிர்பார்த்துக்கொண் டிருக்கமாட்டார். கீதை நூலின் விஷயமும் இப்படியே. எத்தகைய எளியவனாய், திறனற்றவனாய், நாகரிகம் அறி யாதவனாயிருந்த போதிலும் அவனிடமும் கீதை போகும். ஆனால் அது போவது அவனை அவன் இருந்த இடத்தி லேயே விட்டுவைப்பதற்கல்ல; அவன் கையைப் பற்றி முன்னே அழைத்தேக, மேலே தூக்கிவிட. கீதை மனிதன் தன் விவகாரங்களைத் தூயதாக்கிக்கொண்டு மிக்க உயர் நிலை எய்த வேண்டுமென்று விரும்புகிறது. இதற்காகவே கீதை பிறந்திருக்கிறது.

ஆகையால், "நான் ஒரு ஜடம், சாதாரண மனிதன், உலக வாழ்வில் உழலுபவன்" என்றெல்லாம் சொல்லிக் கொண்டு தன்னைச்சூழ வேலி அமைத்துக் கொள்ளாதே. "என்றால் என்ன ஆகும்? இந்த எண்சாண் உடம்பில் தானே என்னுடையதெல்லாம் அடங்கியிருக்கிற"தென்று

சொல்லாதே. இத்தகைய தடைகளை, சுவர்களை தன்னைச் சுற்றிலும் எழுப்பிக் கொண்டு மிருகங்களைப் போல் நடந்து கொள்ளாதே. முன்னேறுவதற்கு, மேலே எழும்புவதற்கு வேண்டிய தைரியம் கொள்.

"उद्धरेदात्मनात्मानं नात्मानमवसादयेत् ।"

(உத்தரேதாத்மனாத்மானம் நாத்மானமவஸாதயேத்)

'நான் என்னை நிச்சயமாய் மேலே ஏற்றிக்கொள்வேன்' என்ற துணிவு கொண்டிரு. 'நான் ஒரு இழிந்த உலகவாழ்வில் உழலும் பிராணி' என்ற கருத்தில் மனதின் சக்தியை அழித்துவிடாதே. கற்பனையின் சிறகுகளைத் துண்டாடாதே. தன் கற்பனையை விசாலமாக்கிக்கொள். சிட்டுக்குருவியை முன்மாதிரியாகக் கொள். காலையில் சூரியனைக் கண்டதும் அது சூரியனை எட்டிப்பிடிப்பேனென்று எண்ணிப் பறக்கிறது. நாமும் அப்படி ஆக வேண்டும். தன் சிறு சிறகுகளைக் கொண்டு சிட்டுக் குருவி எவ்வளவுதான் உயரப்பறந்தாலும் சூரியனை அதனால் எப்படி எட்டிப் பிடிக்கமுடியும்? ஆனால் தன் கற்பனையைக் கொண்டு சூரியனைக் கட்டாயம் அடையமுடியும். நம் நடத்தை இதற்கு நேர்மாறாய் இருக்கிறது. நாம் எவ்வளவு மேலே எழ முடியுமோ அவ்வளவு கூடப் போகாது நம் கற்பனையையும் பாவனைகளையும் தடைப்படுத்திக்கொண்டு நம்மைக் கீழே தள்ளிக்கொள்கிறோம். கிடைத்துள்ள சக்தியையும் நம் இழிந்த பாவனைகள் காரணமாகக் கெடுத்துக் கொள்கிறோம். கற்பனையின் கால்களே ஒடிந்து போய் விடும்பொழுது கீழே விழுவதைத்தவிர நமக்கு வேறு என்ன கதி ஏற்படும்? ஆகையால் கற்பனை எப்பொழுதும் மேல் நோக்குள்ளதாயிருக்கவேண்டும். கற்பனையின் உதவியினால் மனிதன் முன்னேறுவதால் அதன் கழுத்தை ஒரு பொழுதும் திருகாதே!

"தெளிவான வழியைவிடாதே, உலகத்தில் கிட,
வீணில் இங்குமங்கும் உழலாதே, தம்பி!'*

என்று ஒப்பாரிவையாதே. ஆன்மாவை அவமானத்திற்குள்ளாக்காதே. சாதகனிடம் பரந்த கற்பனையும் தன்

---

* "घोपट मार्गा सोडूं नको, संसारामधिं ऐसा आपुला उगा च भटकत फिरूं नको"

னம்பிக்கையும் இருக்கும்பொழுதுதான் அவன் நிலைக்க முடியும். இதனால்தான் கடைத்தேற்றம் ஏற்படும். ஆனால் 'தர்மம் என்பது சாது—சந்நியாசிகளுக்காகவே ஏற்பட்டது; சாது—சந்நியாசிகளை அணுகுவதும், "நீ எந்த நிலையிலிருக்கிறாயோ அதில் நீ செய்துவருவதுதான் சரி" என்ற அத்தாட்சிப்பத்திரம் பெறுவதற்காகவே' என்பது போன்ற எண்ணங்களை விட்டுவிடு. இத்தகைய முரண்பட்ட கற்பனைகளைச் செய்துகொண்டு தன்னைக் கட்டுப்படுத்திக்கொள்ளாதே. உயரிய நோக்கங்கள், ஆவல்கள் இல்லையேல் ஒரு அடிகூட உன்னால் முன்னேற முடியாது.

இந்த நோக்கம், இந்த ஆவல், இந்த உயர்ந்த பாவனை இருக்குமானால் சாதனைகளைத் தறித்தலும் பொருத்தலும் அவசியமாகும். இல்லையேல் எல்லாம் வீணாய் விடும். புறக் கர்மத்தின் உதவிக்கு மனச்சாதனை என்ற விகர்மம் சொல்லப்பட்டது. கர்மத்தின் உதவிக்கு விகர்மம் எப்பொழுதும் இருந்துவர வேண்டும். இவை இரண்டின் உதவியினால் அகர்மம் என்ற எந்த தெய்வீக நிலை கிட்டுகிறதோ அதையும் அதன் வகைகளையும் ஐந்தாம் அத்தியாயத்தில் பார்த்தோம். இந்த ஆறும் அத்தியாயத்தில் விகர்மத்தின் வகைகள் கூறப்பட்டிருக்கின்றன; மனச்சாதனை கூறப்பட்டிருக்கிறது. இந்த மனச்சாதனையை விளக்குவதற்கு முன் கீதை,

"தம்பி ஜீவனே, நீ தேவனாகலாம். நீ இந்த தெய்வீக ஆவல் கொள். மனதை விடுவித்துக் கொண்டு அதன் சிறகுகளை உறுதியாக்கிக் கொள்" என்று சொல்லுகிறது. சாதனையில்—விகர்மத்தில் பல்வேறு வகைகளுண்டு. பக்தி யோகம், தியானம், ஞான விஞ்ஞானம், குண விகாசம், ஆத்ம அனாத்ம விவேகம் என்று பலவகைகள்.

ஆறும் அத்தியாயத்தில் தியானயோக மென்ற சாதனையின் வகைகள் கூறப்பட்டிருக்கின்றன.

## (26) சித்தத்தின் ஏகாக்ரதை

தியான யோகத்தில் மூன்று விஷயங்கள் முக்கியமானவை. அவை—(1) சித்தத்தின் ஏகாக்ரதை (ஒருமுனைப் பாங்கு) (2) சித்தத்தின் ஏகாக்ரதைக்கு உதவ வாழ்க்கையை வரம்புள் அடக்கல் (3) சமநிலை அல்லது

சமநோக்கு. இந்த மூன்றும் இன்றி உண்மையான சாதனை செய்ய முடியாது. சித்தத்தின் ஏகாக்ரதை என்றால் சித்தத்தின் சஞ்சலத்தைக் கட்டுபடுத்தல் என்பது பொருள். வாழ்க்கையை வரம்புள் அடக்கல் என்பதற்கு எல்லாக் காரியங்களையும் அளந்து எடை போட்டுச் செய்தல் என்று அர்த்தம். சமநோக்குக்கு உலகத்தைப் பார்க்கும் பரந்த நோக்கு என்பது பொருள். இம் மூன்றும் சேர்ந்து தியான யோகம் அமைகிறது. இம்மூன்று சாதனங்களுக்கும் பிற சாதனங்கள் வேறு உள்ளன. அவை பயிற்சியும் வைராக்கியமும் ஆகும். இவ்வைந்து விஷயங்களையும் குறித்து நாம் இங்கே சிறிது ஆராய்வோம்.

முதலில் சித்தத்தின் ஏகாக்ரதையை எடுத்துக்கொள்வோம். ஒவ்வொரு காரியத்திலும் சித்தம் ஏகாக்ரமாய் இருத்தல் அவசியம். உலக நடவடிக்கைகளிலும் சித்தத்தின் ஏகாக்ரதை தேவைப்படுகிறது. உலக நடவடிக்கைகளுக்குத் தேவையான குணங்கள் வேறு, பரமார்த்தத்திற்குத் தேவையானவை வேறு என்பதல்ல. உலக நடவடிக்கைகளை சுத்தி செய்தல் என்பதற்கே பரமார்த்தம் என்று பெயர். எத்தகைய காரியமாயினும் அதனால் வரும் புகழும் அவமானமும், வெற்றி தோல்விகளும் உங்களுடைய ஏகாக்ரதையைப் பொருத்திருக்கிறது. வியாபாரம், விவகாரம், சாஸ்திர ஆராய்ச்சி, அரசியல், ராஜ தந்திரம் ஆகிய எதை எடுத்துக் கொண்டாலும் அதில் கிடைக்கக்கூடிய வெற்றி அவற்றில் ஈடுபடுவோருடைய சித்தத்தின் ஏகாக்ரதையைப் பொருத்தே அமையும். நெப்போலியனைப் பற்றிச் சொல்லுவதுண்டு: அவன் யுத்தத்திற்கு வேண்டிய ஆயத்தங்களை யெல்லாம் செய்து முடித்து விட்டானானால் போர்க்களத்திலேயே கணிதத்தின் தத்துவங்களை ஆராய்வதில் முனைந்து விடுவானாம். கூடாரங்களில் குண்டுமாரி பொழிந்து கொண்டிருக்கும்; வீரர்கள் மடிந்து கொண்டிருப்பார்கள்; ஆனால் நெப்போலியனுடைய சித்தம் தன் கணிதத்திலேயே ஆழ்ந்து போயிருக்கும். நெப்போலியனுடைய ஏகாக்ரதை மிகவும் உயர்ந்தது என்று நான் சொல்ல வரவில்லை. அவனுடையதைவிட உயர்ந்த ஏகாக்ரதைக்கு உதாரணங்கள் தரமுடியும். ஆனால் அவனுடைய ஏகரக்ரதை எத்தகையது பாருங்களென்று சொல்லவந்தேன். உமர் கலீபாவைப் பற்றியும் இவ்வாறு சொல்வதுண்டு. போரினிடையில் பிரார்த்தனை நேரம்வந்த

வுடன் அவர் அங்கேயே—போர்க்களத்திலேயே—சித்தத்தை ஒருமுகப் படுத்திக்கொண்டு மண்டியிட்டுப் பிரார்த்தனை புரியத் தொடங்குவாராம். அவருடைய சித்தத்தின் ஏகாக்ரதையில் யாருடைய ஆட்கள் வெட்டுண்டு சாகிறார்கள் என்பதே அவருக்குத் தெரியாதாம். ஆரம்ப காலத்திய முஸல்மான்களின் இந்தக் கடவுட்பற்று, ஏகாக்ரதை ஆகியவை காரணமாகவே இஸ்லாம் மதம் இவ்வளவு பரவிற்று.

ஒரு நாள் நான் ஒரு கதை கேள்விப்பட்டேன். ஒரு பக்கிரி இருந்தான். அவனுடைய உடலில் ஒரு அம்பு பாய்ந்து விட்டது. அதனால் அவனுக்கு மிக்க வேதனை உண்டாயிற்று. அம்பைப் பிடுங்கும் பொழுதோ வேதனை இன்னும் அதிகமாய்விடும்; இதனால் அம்பைப் பிடுங்கவும் முடியாமற் போய்விடும். 'குளோரோபாம்' போன்ற நினைவைப் போக்கக்கூடிய மருந்து அக் காலத்தில் இல்லை. மிகவும் சிக்கலான நிலைமை ஏற்பட்டு விட்டது. சிலருக்கு அந்தப் பக்கிரியைத் தெரியும். அவர்கள் முன்வந்து, "அம்பை இப்பொழுது இழுக்காதீர்கள். இவன் பிரார்த்தனையில் அமரும்பொழுது எடுத்துவிடலாம்" என்றார்கள். மாலைப் பிரார்த்தனை நேரம் வந்தது. பக்கிரி பிரார்த்தனையில் அமர்ந்தான். ஒரு கணத்தில் அவனுடைய சித்தம் ஏகாக்ரமாகி விட்டது. அப்பொழுது அம்பைப் பிடுங்கி எடுத்ததே அவனுக்குத் தெரியவில்லை. இந்த சித்தத்தின் ஏகாக்ரதை எவ்வளவு ஆற்றல் வாய்ந்தது, பாருங்கள்!

கருத்தென்னவென்றால், உலக நடவடிக்கையிலும் சரி, பரமார்த்தத்திலும் சரி சித்தத்தின் ஒரு முனைப் பாங்கு இல்லையேல் வெற்றி ஏற்படுவது கடினம். சித்தத்தின் ஒருமுனைப் பாங்கு இருக்குமானால் திறமைக்கு ஒரு பொழுதும் குறைவிராது. நீ அறுபது வருஷக் கிழவனாயிருந்தபோதிலும் வாலிபனைப்போல உன்னிடம் உற்சாகமும் திறமையும் காணப்படும். மனிதனுக்கு வயது ஆக ஆக, முதுமை ஏறஏற அவனுடைய மனம் அதிக உறுதி பெற்றுக் கொண்டே வரவேண்டும். பழத்தையே பாருங்கள். முதலில் அது பசுமையாய் இருக்கிறது; பிறகு பழுத்து அழுகி அழிந்து போகிறது. ஆனால் அதே சமயத்தில் உள்ளேயுள்ள விதை கெட்டியாகிக்கொண்டே வரு

கிறது. இந்த வெளியிலுள்ள உடல் அழுகி விழுந்துவிடும். ஆனால் வெளியிலுள்ளது பழத்தின் முக்கியமான பகுதி அல்ல. அதன் சாரமான பகுதி, அதன் ஆன்மா, அதன் விதையே. இதே விஷயம்தான் உடலைப்பற்றியும். உடல் முதுமை எய்திக் கொண்டிருந்தபோதிலும் ஞாபகசக்தி வளர்ந்துகொண்டும், அறிவு மேன்மேலும் ஒளிபெற்றுக் கொண்டும் இருக்கவேண்டும். ஆனால் இவ்வாறு நடப்ப தில்லை. மனிதன், "வரவர என் ஞாபக சக்தியே குறைந்து போய்விட்டது!" என்கிறான். "ஏன்?" "முதுமை வந்துவிட்டது." உன்னிடமுள்ள ஞானமும் கல்வி அல்லது ஞாபகத்திலுள்ளவையுமே உன் விதை. உடல் வயதாக வாகத் தளர்ந்துகொண்டே வரும். ஆனால் அதே அளவுக்கு ஆன்மா வலுப்பெற்று வரவேண்டும். இது ஏகாக்ரதை அல்லது ஒரு முனைப்பாங்கு இல்லையேல் கைகூடாது.

## (27) ஏகாக்ரதை பெறுவதெவ்வாறு?

ஏகாக்ரதை வேண்டியது தான். ஆனால் அது எப்படிக் கிட்டும்? அதற்கு நாம் என்ன செய்யவேண்டும்? பகவான் ஆன்மாவில் மனதை நிறுத்தி "न किंचिदपि चिंतयेत्" (ந கிஞ்சிதபி சிந்தயேத்) வேறு எதையும்பற்றி நினையா திருக்க வேண்டும் என்று சொல்லுகிறார்.

ஆனால் இது எப்படிக் கைவரும்? மனதை முற்றிலும் சாந்தமாயிருக்கச் செய்தல் மிகவும் பெரிய விஷயமாகும். எண்ணங்களின் சக்கரத்தை முழுபலத்துடன் தடுத்து நிறுத்தாத வரையில் ஏகாக்ரதை எப்படிக் கைகூடும்? புறச் சக்கரத்தை எப்படியோ நிறுத்திவிடுவோமென்றாலும் அகச் சக்கரம் சுழன்றுகொண்டுதானே இருக்கும்? சித்தத்தை ஏகாக்ரப் படுத்துவதற்காக இந்தப் புறச்சாதனங்களை நாம் உபயோகிக்க உபயோகிக்க அகச்சக்கரங்கள் அதிக வேகமாய்ச் சுழலத் தொடங்குகின்றன. நீங்கள் ஆசனம் அமைத்து நிமர்ந்து உட்கார்ந்து கண்களை ஒரே இடத்தில் நிறுத்திக் கொள்ளுங்கள். ஆனால் இதனாலேயே மனம் ஏகாக்ரமாகிவிடாது. முக்கிய விஷயம், மனச் சக்கரத்தை நிறுத்தும் வித்தை; அது வரவேண்டும்.

விஷயம் என்னவென்றால், வெளியிலுள்ள இந்த அப்பாலுக்கப்பாலும் பரவியுள்ள சம்சாரம் நம் மனதில்

நிரம்பி யிருக்கிறதே, அதை நிறுத்தாத வரையில் ஏகாக்ரதை கைகூடாது. நாம் நம் ஆன்மாவின் எல்லையற்ற ஞானசக்தியைப் புறத்தேயுள்ள இழிந்த பொருள்களில் செலவுசெய்து வருகிறோமே அதைச் செய்யக் கூடாது. பிறரிடமிருந்து பறிக்காது சுயமுற்சி யினாலேயே தனவானானவன் அனாவசியமாகச் செலவுசெய்ய மாட்டான். அதைப் போலவே நாம் நம் ஆன்மாவின் ஞானசக்தியை இழிந்த விஷயங்களைச் சிந்திப்பதில் செலவிடலாகாது. இந்த ஞானசக்தி நமது விலைமதிக்க வொண்ணாத பொக்கிஷமா யிருந்தபோதிலும் நாம் அதை ஸ்தூல விஷயங்களில் செலவழித்து விடுகிறோம். "இந்தக்கறி நன்றாயில்லை, இதில் உப்பு குறைவு" என்கிறோம். தம்பி, எவ்வளவு உப்புகுறைந்து போய்விட்டது? உப்பு ஒரு சிறிது குறைந்துவிட்டது என்ற இந்தப் பெரிய சிந்தனையில் நம் ஞானம் செலவழிந்து போகிறது! குழந்தைகளைப் பள்ளிக்கூட அறைகளுள் அமர்த்தியே அவர்களுக்கு போதிக்கிறோம். ஏனெனில் மரத்தடியில் உட்கார்த்திச் சொல்லிக் கொடுப்போமானால் காக்கை குருவிகளில் கவனம் போகுமாகையால் அவர்களுக்கு ஏகாக்ரதை இராது என்கிறோம். குழந்தைகள் தானே, காக்கைகளையும் பிற பக்ஷிகளையும் பாராதிருந்து விட்டால் அவர்கள் ஏகாக்ரமாகி விடுவார்கள். ஆனால் நாமோ மாடுகளைப்போல் வளர்ந்து விட்டோம்; நாம் கொம்பு முளைத்தவர்கள். ஆகையால் நம்மை ஏழு மதில்களுக்குள் அடைத்து வைத்தாலும் நம் மனம் ஏகாக்ரமாவதில்லை. ஏனெனில், உலகிலுள்ள எல்லாச் சிறிய பெரிய விஷயங்களைப் பற்றியும் பேசும் பழக்கம் நமக்கு ஏற்பட்டுவிட்டது. எந்த ஞானத்தினால் நாம் கடவுளை எய்த முடியுமோ அதை நாம் காய்கறிகளின் ருசியைப் பற்றிப் பேசுவதில் செலவழித்து அதிலேயே திருப்தியாய் இருந்து விடுகிறோம்.

இந்த பயங்கரமான சம்சாரம் நமக்கு நாற்புறமும் அகத்திலும் புறத்திலும் அல்லும் பகலும் தகித்துக் கொண்டே யிருக்கிறது. பிரார்த்தனை புரிவதிலும் நமக்குப் புறப் பயன்களே காரணமா யிருக்கின்றன; கடவுளோடு தன்மயமாகி ஒரு கணநேரமாவது சம்சாரத்தை மறந்திருப்போம் என்ற எண்ணம் இருப்பதில்லை. பிரார்த்தனையும் ஒரு வெளி வேஷமாகவே இருந்துவருகிறது. மனோநிலை இவ்வாறிருக்குமிடத்தில் ஆசனம் அமைத்து அமருவதும்

கண்களை மூடிக்கொள்வதும் ஆகிய எல்லாம் வீணே. மனம் இடையருது வெளியே ஓடிக் கொண்டிருப்பதால் மனிதனுடைய திறமையைத்தும் அழிந்துபோகிறது ; எந்த விதமான ஒழுங்கோ கட்டுப்பாடோ சக்தியோ இருப்ப தில்லை. நம் நாட்டில் அடிக்கடி நாம் இதை உணர்ந்து வரு கிறோம். உண்மையில் பாரத தேசம் பரமார்த்த பூமியாகும். இங்குள்ளவர்கள் ஏற்கெனவே ஆகாயத்தில் பறப்பவர்க ளென்று கருதப்படுகிறார்கள். ஆனால் இத்தகைய நாட்டில் என் நிலையும், உங்கள் நிலையும் என்ன ? சின்னஞ்சிறு விஷயங்களைக்குறித்து நாம் படும் கவலையையும் செய்யும் சர்ச்சைகளையும் காண வருத்தம் உண்டாகிறது ! இழிந்த விஷயங்களிலேயே நம் சித்தம் ஆழ்ந்து போயிருக்கிறது.

"கதை, புராணத்தில் தூக்கம் ;
படுக்கையிலோ கவலைகள் ;
கர்மத்தின் போக்கு சூக்குமம் ;
அழுதென்னபயன் ?" *

புராண சிரவணம் செய்வோமென்று போனால் அங்கே தூக்கம் காத்துக் கொண்டிருக்கிறது. தூங்கலாமென்று போய்ப் படுத்தாலோ கவலைகள் வந்து மூளையைக் குழப்பத் தொடங்கி விடுகின்றன. ஒரு புறம் சூன்ய அக்கிரதையும் (ஒரு முனைப்பாங்கு இல்லாமை) மறுபுறம் அநேக அக்கிர தையும் (பலவிஷயங்களில் புத்திசெல்லுதல்). ஏகாக்ரதை யைக் காணவே முடிவதில்லை. மனிதன் பொறிகளுக்கு எவ்வளவுதூரம் அடிமைப் பட்டிருக்கிறான் ! ஒரு சமயம் எவரோ, "கண்கள் பாதி மூடியும், பாதி திறந்தும் இருக்க வேண்டுமென்று சொல்லப்பட்டிருப்பது ஏன் ?" என்று கேட்டார். நான், "சுலபமான பதிலைச் சொல்லுகிறேன். கண்களை முழுதும் மூடிக்கொண்டால் உறக்கம் வந்து விடுகிறது. முழுதும் திறந்திருந்தாலோ பார்வை நாலா பக்கமும் செல்லுவதால் ஏகாக்ரதை ஏற்படுவதில்லை. கண்களை மூடுவதால் உறக்கம் ஏற்படுவது என்பது தமோ குணம். திறந்திருப்பதால் பார்வை எல்லா இடங்களுக்கும் செல்லுவதென்பது ரஜோகுணம். ஆகையால் இரண்டிற்கும் இடையிலுள்ள நிலை கூறப்பட்டிருக்கிறது" என்றேன்.

---

* खाटेवरी बैसवां । व्यापी चिंता तळमळ
ऐसी गहन कर्मगति । काय तयासी रडती

அதாவது மனதின் நிலை மாருதவரையில் ஏகாக்ரதை ஏற்படாது. மனதின் நிலை சுத்தமா யிருக்கவேண்டும். ஆசனம் அமைத்துக்கொண்டு அமர்வதாலேயே அது கை கூடாது. இதற்கு நம் விவகாரங்களெல்லாம் தூயதா யிருக்கவேண்டும். விவகாரத்தை சுத்தி செய்வதற்கு அதன் நோக்கத்தை மாற்ற வேண்டும். விவகாரங்களைச் சொந்த லாபத்திற்காகவோ வாசனைகளின் திருப்திக் காகவோ அல்லது புறவிஷயங்களுக்காகவோ செய்யக் கூடாது.

நாம் நாள் முழுவதும் விவகாரங்கள் செய்து கொண்டே இருக்கிருேம். நாள் முழுமையும் நாம் படும் இந்தப் பாடுகளுக்குக் காரணந்தான் என்ன?

> "படும் இந்தப் பாடுகளுக்கெல்லாம் காரணம் இறுதிக் கணங்கள் இனிமையாக வேண்டும் என்பதே"*

எல்லா ஓட்டமும் பாடும் அல்லலும் அவதியும் நம் இறுதி நாள் இனிமையாயிருக்க வேண்டும் என்பதற்காகத் தானே? ஆயுள் முழுமையும் பட்ட கஷ்டங்களெல்லாம் எதற்காக? கடைசிக் கணம், மரணம் புனிதமாயிருக்க வேண்டும் என்பதற்கே. பகலின் இறுதி மாலையில் வரு கிறது. இன்று பகற் பொழுதில் எல்லாக் காரியங்களையும் புனித பாவனையுடன் செய்திருந்தால் இரவில் பிரார்த் தனை இனிமையாய் இருக்கும். அந்தப் பகலின் கடைசிக் கணம் இனிமையாகுமாஞல் பகலில் செய்த காரியங்க ளனைத்தும் பயன் பெற்று விட்டதாய்க் கொள்ளலாம். அப்பொழுது என் மனம் ஏகாக்ரமாய்விடும்.

ஏகாக்ரதைக்கு இத்தகைய வாழ்க்கைத் தூய்மை தேவையாகிறது. புற விஷயங்களைப் பற்றிய சிந்தனை தவிர வேண்டும். மனிதனுடைய ஆயுட் காலம் அதிக மில்லை. ஆனல் இந்தக் குறைந்த ஆயுளிலும் கடவு ளின்பம் நுகரும் திறமையிருக்கிறது. இரண்டு மனிதர் கள் ஒரு அச்சில் வார்த்து எடுத்தது போலிருக் கிருர்கள். இரண்டு கண்கள், அவைகளினிடையில் ஒரு மூக்கு, அம்மூக்கில் இரு துவாரங்கள். இவ்வாறு

---

* याजसाठीं केला होता अट्टहास
शेंवटचा दीस गोड व्हावा ।

ஒருவனைப் போலவே மற்றவன் இருந்தபோதிலும் ஒருவன் தேவனைப் போலிருக்க, மற்றவன் மிருகம்போல் இருக்கிறன். ஏன் இப்படி? ஒரே கடவுளின் பிள்ளைகளாயிருந்தும் இந்த வேற்றுமைக்குக் காரணமென்ன? இந்த

*"ஒரே மண்ணிற் செய்த பாண்டங்கள்"

இவரது ஜாதி, இனம் ஒன்றே யென்ற நம்பிக்கையே ஏற்படுவதில்லை. ஒருவன் மனித உருவில் கடவுளாயிருக்க, மற்றவனே குரங்காயிருக்கிறனே!

மனிதன் எவ்வளவு உயரத்திற்கு ஏற முடியும் என்பதற்கு உதாரணமானவர்கள் இதற்கு முன்னும் இருந்திருக்கிறர்கள்; இன்றும் நம்மிடையே இருக்கிறர்கள். இது அனுபவம் பற்றிய விஷயம். இந்த மானிட உடலில் எவ்வளவு சக்தி பொதிந்திருக்கிறது என்பதைப் புலப்படுத்திய மகான்கள் முன்னும் இருந்திருக்கிறர்கள், இன்றும் இருந்து வருகிறர்கள். இந்த உடலிலிருந்து கொண்டே மனிதன் இத்தகைய அற்புதங்களைச் சாதிக்க முடியுமாஞல் என்ஞல் மட்டும் ஏன் முடியாது? நான் என் கற்பனைகளை ஒரு வரம்பிற்குள் ஏன் கட்டுப்படுத்திக்கொள்ளக் கூடாது? எந்த மானிட உலகில் இருந்துகொண்டே பிறர் மானிட வீரர்களாஞர்களோ அதே மானிட உடல் தானே எனக்கும் கிடைத்திருக்கிறது? ஆஞல் என் நிலை மட்டும் இப்படி இருப்பதேன்? எங்கேயோ நான் பிழை புரிந்து கொண்டிருக்கிறேன். இந்த என் சித்தம் எப்பொழுதும் வெளியே போய்க்கொண்டே இருக்கிறது. பிறருடைய குற்றங் குறைகளைக் கண்டு பிடித்து அது மிகவும் கெட்டுப் போயிற்று. ஆஞல் பிறர் குற்றங்களை நான் பார்க்க வேண்டிய அவசியம் என்ன?

"பிறர் குற்றங்களை நான் பார்ப்பானேன்?
என்னிடம் உள்ள குற்றங்கள் கொஞ்சமா?"†

என்னிடம் குற்றங்களுக்குக் குறைவா? நான் எப்பொழுதும் பிறருடைய சிறு சிறு விஷயங்களைப் பார்ப்பதிலேயே முனைந்து நிற்பேஞல் என் சித்தம் எப்படி ஏகாக்ர

---

* 'अवघी एकाची च वीण'

† कासया गुणदोष पाहूं आणिकांचे ।
मज काय त्यांचें उणें असे ॥

மாகும்? அந்நிலையில் நான் இரண்டில் ஒரு வகையாய்த் தானிருக்க முடியும்: ஒன்று சூன்ய நிலை அல்லது உறக்கம்; மற்றது அநேக அக்ரதை அல்லது பலமுனைப் பாங்கு. தமோ குணம் அல்லது ரஜோ குணத்திலேயே நான் சிக்கியிருப்பேன்.

பகவான் சித்தம் ஏகாக்ரமாவதற்கு இப்படி இரு, இவ்வாறு கண்களை வைத்துக் கொள், ஆசனம் இப்படி அமையட்டும், என்றெல்லாம் சொல்லியிருப்பது உண்மை. ஆனால் முதலில் நாம் சித்தத்தின் ஏகாக்ரதையைப் பெற்றால்தான் இவைகளினால் பயன் ஏற்படும். மனிதனுடைய மனதில் சித்தத்தின் ஏகாக்ரதையின் இன்றியமையாமை பதிந்துவிடுமானால் பிறகு அவனே அதற்கு வேண்டிய சாதனையையும் வழியையும் கண்டு பிடித்துக்கொள்வான்.

## (28) வரம்புள்ள வாழ்க்கை

சித்தத்தின் ஏகாக்ரதைக்கு உதவும் அடுத்த விஷயம், வாழ்க்கை வரம்புள் அடங்குவதாகும். நமது எல்லாக் காரியங்களும் அளவாய், கணக்காயிருக்க வேண்டும். கணித சாஸ்திரத்தின் இந்த இரகசியம் நம் காரியங்கள் அனைத்திலும் இடம்பெற வேண்டும். மருந்தை எப்படி அளந்து கணக்காய்ச் சாப்பிடுகிறோமோ அப்படியே உணவும் உறக்கமும் கூட கணக்காயிருக்க வேண்டும். வாழ்க்கையின் எல்லா இடங்களிலும் நாற்புறமும் அளவும் கணக்கும் அமைந்து விட வேண்டும். எல்லாப் பொறிகளையும் கண்டிப்புக்கு, கட்டுப்பாட்டுக்கு உட்படுத்த வேண்டும். நான் அதிகம் சாப்பிடுகிறேனா, அதிகமாய்த் தூங்குகிறேனா, தேவைக்கதிமாய்ப் பார்க்கிறேனா என்பது போன்று நுணுக்கமாய் இடையறாது கண்காணித்து வரவேண்டும்.

ஒரு கனவான் வேறொருவரைப் பற்றிச் சொல்லும்பொழுது, "அவர் ஒருவருடைய அறைக்குள் நுழைந்தாரானால் ஒரு கணத்தில் அதில் எங்கே என்ன வைத்திருக்கிறது என்று கண்டுகொள்வார்" என்றார். நான் மனதுள், "கடவுளே, எனக்கு இந்த சக்தியைக் கொடுக்காதே!" என்று வேண்டிக் கொண்டேன். அவருடைய பொருள்களின் ஜாபிதாவை என் மனதில் தொகுத்து

வைத்துக் கொள்வதற்கு நான் அவருடைய காரியதரிசியா, அல்லது நான் அவர் பொருள்களைத் திருடிப் போக வந்தவனு? சோப்பு இங்கே இருந்தது, கடிகாரம் அங்கேயிருந்தது என்ற இதெல்லாம் தெரிந்து கொண்டு எனக்கு என்ன ஆகவேண்டும்? இந்த அறிவு எனக்கு எதற்காக? கண்களை இவ்வாறு வீணே செலவழிப்பதை நாம் விட்டுவிட வேண்டும். அதே வகையில் காதையும் கட்டுப்படுத்து. சிலர், 'நாய்களுக்கு இருப்பதுபோல் நமக்கும் காதிருந்தால் எவ்வளவு நன்ருய் இருக்கும்!' என்று எண்ணுகிருர்கள். "எந்த திசையில் வேண்டுமானுலும் அதை ஒரு கணத்தில் திருப்பிக் கொள்ளலாமே; மனிதனுடைய காதை கடவுள் இவ்வாறு அமைத்திருப்பது ஒரு குறையே" என்கிருர்கள். ஆனல் காதின் இந்த வீண் சக்தி நமக்குத் தேவையில்லை. சாதாரணமாகவே இந்த மனம் மிகவும் சக்தி வாய்ந்தது. எங்கேனும் சிறு சத்தம் கேட்டால் போதும், சந்தடி ஏற்பட்டால் போதும் உடனே அங்கே கவனம் போய்விடுகிறது. ஆகையால் ஒழுங்கு, வரைமுறை ஏற்படுத்திக் கொள். கெட்ட பொருள்களைப் பார்க்க வேண்டா. மோசமான புத்தகங்களைப் படிக்க வேண்டா. அர்த்தமற்ற புகழைக் கேட்க வேண்டா. கெட்ட பொருள்களை மட்டுமல்ல, குற்றமில்லாதவைகளையும் அளவை மீறி ஏற்க வேண்டா. எத்தகைய பேராசையும் கூடாது. கள், சாராயம், காரமான பக்கவடாம் போன்ற பக்ஷணங்கள், ரஸகுல்லா போன்ற இனிப்புப் பண்டங்கள் உட்கொள்ளவே கூடாது. இவை மட்டுமல்ல. சர்க்கரை நாரத்தை, வாழைப்பழம், மாம்பழம் ஆகியவையும் அதிகமாய் அருந்தக் கூடாது. பழங்களின் உணவு பொதுவாக சுத்த உணவே; ஆனல் அதையும் தோன்றியபடி கொள்ளக் கூடாது. நாவை அதன் இஷ்டம்போல் விட்டுவைப்பதை உள்ளேயுள்ள எஜமானன் பொறுக்க மாட்டார். பொறிகளுக்கு, 'நாம் தோன்றியதைச் செய்வோமானல் உள்ளே யஜமானன் நம்மை நிச்சயம் தண்டிப்பாரெ'ன்ற அச்சு இருக்க வேண்டும். ஒழுங்கான நடவடிக்கைகளையே வாழ்க்கையின் வரையறை என்று சொல்லுவது.

## (29) நன்னோக்கு

மூன்றாவது விஷயம், சமநோக்கு. இதற்கே நன்னோக்கு என்பது பொருள். நல்ல, நன்மை பயக்கும் நோக்கைப் பெறாத வரையில் சித்தம் ஏகாக்ரமாக இயலாது. சிங்கம் இவ்வளவு பெரிய வனராஜனாயிருந்தும் நான்கடி எடுத்து வைத்ததும் பின்புறம் திரும்பிப் பார்த்துக் கொள்கிறது. ஹிம்சையே தொழிலாயுள்ள சிங்கத்திற்கு ஏகாக்ரதை எப்படி ஏற்படும்? சிங்கம், காகம், பூனை ஆகியவற்றின் கண்கள் எப்பொழுதும் சுழன்று கொண்டேயிருக்கும். அவைகளின் பார்வை திகிலினால் எச்சரிக்கையுள்ளவையாய் இருக்கும். ஹிம்சை புரியும் பிராணிகளின் நிலை இத்தகையதே. சம நோக்கு ஏற்பட வேண்டும். சிருஷ்டி அனைத்தும் மங்களமயமானதாய்த் தோன்ற வேண்டும். எனக்கு என்மீது நம்பிக்கை இருப்பது போலவே சிருஷ்டி அனைத்தின் மீதும் இருக்க வேண்டும். இங்கே அஞ்சுவதற்கு என்ன இருக்கிறது? எல்லாம் தூயது, புனிதமானது.

"विश्वं तद् भद्रं यदवन्ति देवा: ।"

(விச்வம் தத்பத்ரம் யதவந்தி தேவா:)

இந்த உலகம் மங்களமயமானது, நலம் நிரம்பியது. ஏனெனில் ஆண்டவன் இதைக் கவனித்து வருகிறான். ஆங்கிலக் கவி பிரௌனிங் என்பவரும் இப்படியேதான் சொல்லியிருக்கிறார்:

"God is in heaven
And all is right with the world."

(கடவுள் சுவர்க்கத்தில் வீற்றிருக்கிறார். உலகம் சரியாய் நடந்து கொண்டிருக்கிறது.)

உலகத்தில் கேடு ஒன்றும் இல்லை. கேடிருக்குமானால் அது என் கண்ணிலேயே இருக்கிறது. என் கண் எப்படியோ அப்படியே தான் இந்த சிருஷ்டியும். நான் சிவப்புக் கண்ணாடி போட்டுக் கொண்டு பார்த்தால் சிருஷ்டி அனைத்தும் சிவப்பாய், தீ பற்றியது போல்தான் தென்படும்.

இராமதாசர் இராமாயணம் எழுதிக்கொண்டே எழுதியதை சீடர்களுக்குப் படித்து விளக்கிக் கொண்டுமிருந்தார். அனுமாரும் ஒருவருக்குந் தெரியாமல் அதைக் கேட்க வந்து

அமருவார். சமர்த்த இராமதாசர், "அனுமார் அசோக வனத்தை அடைந்தார். அங்கே வெள்ளை மலர்களைக் கண்டார்" என்று எழுதியிருந்தார். இதைக் கேட்டதும் அங்கே திடீரென்று அனுமார் தோன்றி, "நான் வெள்ளை மலர்களைப் பார்க்கவில்லையே; சிவப்பல்லவா நான் பார்த்தது! நீ எழுதி இருப்பது தவறு. அதைத் திருத்தி விடு," என்றார். சமர்த்தர், "நான் எழுதியிருப்பது சரி தான். நீங்கள் வெள்ளை மலர்கள் தான் பார்த்தீர்கள்" என்றார். அனுமார், "போனவன் நான்! அப்படியானால் நான் சொல்லுவது பொய்யா?" என்று கேட்டார். இறுதியில் இந்த வழக்கு இராமசந்திரரிடம் போயிற்று. அவர், "பூக்கள் வெள்ளை தான். ஆனால் அனுமாருடைய கண்கள் கோபத்தில் சிவந்திருந்தமையால் அவருக்கு அவை சிவப்பாய்த் தோன்றின" என்றார். இந்த இனிய கதையின் கருத்து நாம் உலகை எந்த நோக்குடன் பார்க்கிறோமோ அப்படியே அது நமக்குத் தோன்றும் என்பது. இந்த சிருஷ்டி மங்களமானதே என்ற விஷயத்தில் நம் மனதிற்கு உறுதி ஏற்படாத பொழுது சித்தம் ஏகாக்ரமாக முடியாது. சிருஷ்டி கெட்டுப்போய் விட்டதென்று நான் எண்ணிக் கொண்டிருக்கும் வரையில் நான் சந்தேகத்துடனேயே எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருப்பேன். கவிகள் பட்சிகளின் சுதந்திரத்தைப் பற்றிப் பாடுகிறார்கள். அவர்களிடம் நீங்கள் கொஞ்சம் பட்சிகளாயிருந்து பாருங்கள் என்று சொல்ல வேண்டும். பிறகு அவைகளின் சுதந்திரத்தின் உண்மை மதிப்புத் தெரிந்து விடும். பட்சிகளின் கழுத்து எப்பொழுதும் முன்னும் பின்னும் ஒரே வகையில் ஆடியவண்ண மிருக்கிறது. அவைகளுக்கு எப்பொழுதும் பிறரிடம் அச்சம். பறவையை ஒரு இருக்கையில் கொணர்ந்து அமர்த்துங்கள். அது ஏகாக்ரமாகிவிடுமா? நான் அதைச் சிறிது அணுகியதும் அது 'விர்...ர்...ர்...' என்று பறந்து போய்விடும். 'இவன் என்னைக் கொல்ல வருகிறானோ?' என்று அதற்கு பயம். எவர்களுடைய அறிவில் இந்த உலகம் முழுதும் என்னைச்சாப்பிடவே இருக்கிறது என்பது போன்ற பயங்கரமான கற்பனை அமைந்திருக்கிறதோ அவர்களுக்கு அமைதி ஏது? என்னைக் காப்பவன் நான் ஒருவனே, மற்றவர்களெல்லாம் என்னைத் தின்பவர்களே என்ற எண்ணம் மூளையிலிருந்து அகலும் வரையில் ஏகாக்ரதை ஏற்பட முடியாது. சம நோக்குப்

பெறுவது தான் அதற்குரிய சிறந்த வழி. நீங்கள் எங்கும் மங்களம் பொங்குவதாகக் கொள்வீர்களானால் சித்தம் தானே அமைதி பெற்றுவிடும்.

துன்புற்ற மனிதன் ஒருவனை சல சலவென்று ஓடும் ஒரு ஆற்றின் கரைக்கு அழைத்துப்போங்கள். அதனுடைய தூய அமைதியான நீர்ப்பெருக்கைக் கண்டதும் அவனுடைய கலக்கம் குறையும். அவன் தன் துன்பத்தை மறந்து போவான். அந்த நீரோட்டத்தில் இவ்வளவு சக்தி எங்கிருந்து வந்தது? ஆண்டவனுடைய நன்மை பயக்கும் சக்தி அதிலிருந்து வெளியாகிறது. வேதங்களில் அருவிகளைப் பற்றி அழகிய வர்ணனைகள் வந்திருக்கின்றன :

" अतिष्ठन्तीनाम् अनिवेशनानाम् "

(அதிஷ்டந்தீனும் அநிவேசனனும்)

இத்தகையவை இந்த அருவிகள். அருவி சிதைவற்றது. அதற்குத் தன்னுடையதென்று வீடு, வாசல் எதுவுமில்லை. அஃதொரு துறவி. இத்தகைய புனிதமான அருவி ஒரு கணத்தில் என் மனதை ஏகாக்ரமாக்கி விடுகிறது. இத்தகைய அழகிய அருவியைக் கண்டதும் என் மனதுள் அன்பும் ஞானமும் ஏன் பெருகிப் பொங்காது?

இந்தப் புறத்திலுள்ள ஜடமான நீரே என் மனதிற்கு இவ்வளவு அமைதியை அளிக்க முடியுமானால், என் மனதில் பக்தி, ஞானம் ஆகியவற்றின் சின்மயமான அருவி பெருகும் பொழுது எவ்வளவு சாந்தி ஏற்படும்! என் நண்பர் ஒருவர் முன்பு இமாலயத்தில், காஷ்மீரத்தில் சுற்றிக் கொண்டிருந்தார். அங்குள்ள புனிதமான மலைகளையும் அழகிய நீரோட்டங்களையும் வர்ணித்து எனக்கு எழுதி கொண்டிருந்தார். நான் அவருக்கு, "எந்த நீரோட்டங்களும் மலைத் தொடர்களும், இனிய காற்றும் உங்களுக்கு ஒப்பற்ற இன்பமளிக்கின்றனவோ அவை அனைத்தையும் நான் என் உள்ளத்திலேயே நுகர முடியும். என் அக உலகில் நான் ஒவ்வொரு நாளும் அந்த மனோகரமான காட்சிகளைக் கண்டு கொண்டிருப்பதால், நீங்கள் அழைத்த போதிலும் என் இனிய தெய்வீகமான இந்த இமயத்தை விட்டு நான் வருவதற்கில்லை" என்று பதில் எழுதினேன்.

"स्थावराणां हिमालयः ।"

(ஸ்தாவராணும் ஹிமாலய:)

ஸ்திரத் தன்மையின் உருவென்ற வகையில் எந்த இமயத்தின் வழிபாட்டை அத் தன்மையைப் பெறுவதற்காக நாம் செய்துவர வேண்டுமோ அந்த இமயத்தின் வர்ணனையைக் கேட்டு நான் என் கடமையைத் துறந்தேனுயின் அது விபரீதமாகவல்லவா இருக்கும்!

கருத்து என்னவெனில், சித்தத்தைச் சிறிது சாந்தமாக்கவேண்டும். சித்தத்தை மங்கள நோக்குடன் பாருங்கள். அப்பொழுது உங்கள் உள்ளத்தில் எல்லையற்ற அருவி பெருகத் தொடங்கும். கற்பனைகளின் திவ்ய நட்சத்திரங்கள் இதய ஆகாயத்தில் மின்னத் தொடங்கும். கல்லிலும் மண்ணிலுமான நல்ல பொருள்களைப் பார்த்துச் சித்தம் அமைதி பெறும் பொழுது அகச் சிருஷ்டியின் காட்சிகளைக் கண்டு ஏன் அமைதியுருது? ஒரு சமயம் நான் திருவனந்தபுரம் போயிருந்த பொழுது ஒரு நாள் சமுத்திரக் கரையில் உட்கார்ந்திருந்தேன். அந்த எல்லையற்ற சமுத்திரமும் அதன் 'ஓம்' என்ற பேரொலியும் மாலை நேரமும் சேர்ந்து விடவே நான் அசைவற்று, செயலற்று அமர்ந்து விட்டேன். என் நண்பர்கள் அங்கேயே, சமுத்திரக் கரையில் கொஞ்சம் பழம் முதலியவை அருந்தக் கொணர்ந்து தந்தார்கள். அந்த சமயத்தில் அந்த ஸாத்விக உணவும் எனக்கு விஷம் போலிருந்தது. சமுத்திரத்தின் அந்த ஓங்கார கர்ஜனை எனக்கு "मामनुस्मर युद्धय च" (மாமனுஸ்மர யுத்ய ச) என்ற கீதையின் வாக்கை நினைவுறுத்திக் கொண்டிருந்தது. சமுத்திரம் சதா நாம ஸ்மரணையும் செய்து கொண்டிருந்தது, கர்மமும் புரிந்து கொண்டிருந்தது. ஒரு அலை வந்தது, பிறகு திரும்பிற்று. பின் மற்ருென்று வந்தது. அதற்கு ஒரு கணமும் ஓய்வில்லை. இந்தக் காட்சியைப் பார்த்து என் பசி, தாகம் எல்லாம் பறந்து போய்விட்டன. பார்க்கப் போனுல் அந்தக் கடலில் அப்படி என்ன இருந்தது? அந்த உப்பு நீரலைகள் துள்ளி எழுவதைக் கண்டு என்னுள்ளமும் துள்ளிக் குதிக்கத் தொடங்குவதென்ருல், ஞானம் அன்பு என்ற ஆழமறிய முடியாத கடல் உள்ளத்தில் அலை மோதும்போது நானெப்படியெல்லாம் துள்ளி குதிக்க மாட்டேன்! வேத

கால ரிஷியின் உள்ளத்தில் இத்தகைய கடல் அலை மோதிக் கொண்டிருந்தது :

"अंत: समुद्रे हृदि अंतरायुषि
घृतस्य धारा अभिचाकशीमि
समुद्रादूर्मिर्मधुमानुदारत्"

(அந்தஸ்ஸமுத்ரே ஹ்ருதி அந்தராயுஷி
க்ருதஸ்ய தாரா அபிசா கஶீமி
ஸமுத்ராதூர்மிர் மதுமானுதாரத்)

இந்த தெய்வீக வாக்குக்கு விளக்கம் எழுதப் புகுந்த உரையாசிரியர்களெல்லாம் பட்டிருக்கிற பாட்டைச் சொல்லவே முடியாது. அந்த நெய் ஒழுக்கு என்பது என்ன, அந்தத் தேனருவி என்பது யாது? என் உள்ளக் கடலில் உப்பு அலைகள் எழுமா? இல்லை, இல்லை. என் உள்ளத்தில் பால், தேன், நெய் ஆகிய கடல்கள் அலை மோதிக் கொண்டிருக்கின்றன.

## (30) பாலகுரு

இதயத்தின் இந்தக் கடலைப் பார்க்கக் கற்றுக் கொள். வெளியிலுள்ள சுத்த ஆகாயத்தைக் கண்டு சித்தத்தையும் தூயதாக்கிக் கொள். உண்மையில் சித்தத்தின் ஏகாக்ரதை என்பது ஒரு விளையாட்டு, சாதாரண விஷயம். சித்தத்தின் குழப்பமே இயற்கைக்கு மாறானது, நாமாகச் செய்து கொண்டது. சிறு குழந்தைகளின் கண்களைக் கூர்ந்து நோக்கு. குழந்தை இமை கொட்டாமல் பார்த்துக் கொண்டிருக்க, நீ பத்துத் தடவை இமை கொட்டி விடுகிறாய். குழந்தைகளின் மனம் உடனே ஏகாக்ரமாகி விடுகிறது. நான்கைந்து மாதக் குழந்தைக்குப் புறத்தேயுள்ள பச்சைப் பசேலென்ற இயற்கைக் காட்சியைக் காட்டு. அது கவனமாய்ப் பார்த்துக் கொண்டே யிருக்கும். வெளியிலுள்ள பசுமையான செடி கொடிகளைப் பார்ப்பதனால் குழந்தையின் மலமும் பசுமையாகி விடுகிறதென்று பெண்கள் நினைக்கிறார்கள். அது தன் பொறிகளனைத்தையும் கண்ணில் கொணர்ந்து சேர்த்துப் பார்ப்பது போன்று இருக்கிறது. சிறு குழந்தையின் மனதை எந்த சம்பவமும் பெரிதும் கவர்ந்து விடுகிறது. போதனா சாஸ்திர வல்லுநர்

தொடக்கத்திலுள்ள மூன்று நான்கு வருஷங்களில் குழந்தைகள் பெறும் போதனையே உண்மையான போதனை என்று சொல்லுகிறார்கள். நீங்கள் எவ்வளவு தான் சர்வ கலாசாலைகள், உயர்தரப் பள்ளிக்கூடங்கள், சங்கங்கள் அமைத்த போதிலும் தொடக்கத்தில் கிடைத்த போதனை பிறகு என்றுமே கிடைப்பதற்கில்லை. கல்விக்கும் எனக்கும் தொடர்புண்டு. இந்தப் புறக்கல்வி போதனையினால் விளையும் பயன் பூஜ்யமே என்ற என் முடிவு நாள் செல்லச் செல்ல அதிக உறுதி பெற்று வருகிறது. ஆரம்பத்தில் ஏற்பட்ட ஸம்ஸ்காரம் இரும்புப் பூச்சு போன்றது. பிறகு அளிக்கும் போதனையை வெளியில் அமைத்த சாயப்பூச்சு, சுண்ணும்புப் பூச்சென்றே கருத வேண்டும். சவுக்காரம் போடுவதனால் மேலேயுள்ள கறை, அழுக்கு அகன்றுவிடும். ஆனால் தோலின் கருமை நிறம் எப்படி நீங்கும்? அவ்வாறே ஆதியில் ஏற்படும் ஸம்ஸ்காரத்தைப் போக்குதல் அரிது.

ஆனால் இந்த ஆதி ஸம்ஸ்காரம் இவ்வளவு உறுதியாயிருப்பது ஏன்? பிந்திய ஸம்ஸ்காரம் உறுதியில்லாதிருப்பது ஏன்? ஏனென்றால், சிறு பிராயத்தில் சித்தத்தின் ஏகாக்ரதை இயற்கையாய் அமைகிறது. ஏகாக்ரதை இருப்பதனால் அப்பொழுது ஏற்படும் ஸம்ஸ்காரம் பிறகு அழிவதில்லை. சித்தத்தின் ஏகாக்ரதைக்கு இவ்வளவு மகிமையுண்டு. இந்த ஏகாக்ரதை உள்ளவருக்கு ஆகாதது என்ன?

நம் வாழ்க்கை முழுமையும் இன்று செயற்கை மயமாய் விட்டது. நமது பிள்ளை மனம் பாழாய் விட்டது. வாழ்க்கையில் உண்மையான ரசம், இனிப்பு இல்லை; அது வறண்டு போய் விட்டது. நாம் ஏதோ கோணல் மாணலாக, மனம் போனபடி நடந்து வருகிறோம். டார்வினல்ல, நாம்தான் நம் செயல்களின் மூலமாக மனிதனுடைய முன்னோர் ஆதியில் குரங்குகளே என்பதை நிரூபித்து வருகிறோம்.

சிறு குழந்தை எதையும் நம்பும் சுபாவமுள்ளது. தாய் என்ன சொல்லுகிறாளோ அதுவே அதற்கு வேத வாக்கு. அதற்குச் சொல்லப்படும் கதைகளெல்லாம் பொய் என்றே அதற்குத் தோன்றுவதில்லை. காக்கை பேசிற்று, குருவி சொல்லிற்று என்பதெல்லாம் அதற்கு உண்மை என்றே தோன்றுகின்றன. இந்த நல்ல மனப்போக்கு

காரணமாக குழந்தைகளுக்கு விரைவில் ஏகாக்ரதை உண்டாகிவிடுகிறது.

## (31) பயிற்சி, வைராக்யம், சிரத்தை

கருத்தென்னவென்றால், தியான யோகத்திற்கு சித்தத்தின் ஏகாக்ரதை, வரம்புள்ள வாழ்க்கை, நன்மை பயக்கும் சமநோக்கு ஆகியவை தேவை. இவை தவிர வைராக்கியம், பயிற்சி என்ற இரண்டு சாதனங்களும் சொல்லப்பட்டிருக்கின்றன. ஒன்று அழிக்கும் தன்மையது; மற்றது ஆக்கும் தன்மையது. வயலில் உள்ள புல், பூண்டுகளைக் களைந்தெறிதல் அழிக்கும் வேலையாகும். இதற்குத்தான் வைராக்கியம் என்று பெயர். அதில் விதை விதைத்தல் ஆக்க வேலையாகும். மனதில் நல்ல எண்ணங்களை மீண்டும் மீண்டும் சிந்தித்துக் கொண்டிருத்தல் பயிற்சி எனப்படும். வைராக்கியம் அழிப்புக் காரியமாக, பயிற்சி ஆக்கக் காரியமாகிறது. வைராக்கியத்தைப் பெறுவதெப்படி? நாம் மாம் பழம் தித்திக்கிறதென்று சொல்லுகிறோம். ஆனால் இந்தத் தித்திப்பு மாம்பழத்தில் மட்டும் இருக்கிறதா? இல்லை, மாம்பழத்தில் மட்டும் இல்லை. நாம் நம் ஆன்மாவின் இனிமையைப் பொருளில் புகுத்தும்பொழுது நமக்கு அது இனிப்பாய்த் தோன்றுகிறது. ஆகையால் அகத்தின் இனிப்பை நுகரக் கற்றுக்கொள். புறத்திலுள்ள பொருள்களில் இனிப்பில்லை. रसानां रसतम: (ரஸானாம் ரஸதம:) ஆன, இனிப்பின் கடலான ஆன்மா என்னிடம் இருக்கிறது. அதனாலேயே இனிய வஸ்துக்களுக்கு இனிப்புக்கிட்டியிருக்கிறது என்ற இவ்வகையில் எண்ணிக்கொண்டேயிருப்பதனால் மனதில் வைராக்கியம் வியாபிக்கும். அன்னை சீதை அனுமாருக்கு முத்துமாலை பரிசளித்தார். அனுமார் ஒவ்வொரு முத்தாய் எடுத்துக் கடிப்பதும் பார்ப்பதும் எறிவதுமாயிருந்தார். அவருக்கு அவைகள் எதிலுமே இராமர் காணப்படவில்லை. இராமர் இருந்தது அவருடைய உள்ளத்தில். அதே முத்துகளுக்கு அறிவிலிகள் இலட்சம் ரூபாய் கூட கொடுத்திருப்பார்கள்!

இந்த தியான யோகத்தை வர்ணிக்கையில் பகவான் ஒரு முக்கியமான விஷயத்தைத் தொடக்கத்திலேயே சொல்லி விட்டார். அதாவது மனிதன், 'நான் சொந்த முயற்சியினாலேயே என்னைக் கடைத் தேற்றிக் கொள்வேன்;

நான் முன்னேறுவேன் ; ஆகாயத்தை எட்டிப் பிடிப்பேன் ; மானிட உடலில் கிடந்து உழலமாட்டேன் ; வேண்டிய முயற்சி என்று உறுதிசெய்து கொள்ள வேண்டும் என்பது.

இதையெல்லாம் கேட்டு அர்ஜுனனுடைய மனதில் ஒரு சந்தேகம் எழுந்தது. அவன், “பகவானே, இப்பொழுது எனக்கு வயதோ ஆய்விட்டது. இன்னும் சிறிது காலத்தில் நான் இறந்து போவேனாயின் நான் செய்யும் இந்த சாதனைகளினால் பயன் என்ன ?” என்று கேட்டான். அதற்கு பகவான், “மரணம் என்பதற்கு நீண்ட உறக்கம் என்றே பொருள்” என்றார். ஒவ்வொரு நாளும் நாம் வேலை செய்து விட்டு ஏழெட்டு மணி நேரம் தூங்குகிறோம். இந்தத் தூக்கத்தினிடம் எவரேனும் பயப்படுகிறார்களா? தூக்கம் வராதிருக்கும்பொழுது தான் கவலையாகி விடுகிறது. தூக்கம் எப்படி அவசியமோ அப்படியேதான் மரணமும். தூங்கி எழுந்ததும் நாம் மீண்டும் நம் வேலையைச் செய்யத் தொடங்குவதைப் போல மரணத்திற்குப் பிறகும் நம் முந்திய எல்லா சாதனைகளும் நமக்கு உபயோகப்படும். ஞானதேவர், ‘ஞானேச்வரி’யில் இந்த சந்தர்ப்பத்தைக் குறித்து வரைந்துள்ள ‘ஓவி’ களில் தன் சுய சரிதையையே எழுதிவிட்டார் போன்று தோன்று

“பிள்ளைப் பருவத்திலேயே அறிவெல்லாம் வந்து

எல்லா சாஸ்திரங்களும் வாக்கிலிருந்து தாமே வருகின்றன.” *

என்ற அடிகளில் இதுவே புலனாகிறது. பூர்வஜன்மத்தின் பயிற்சி உன்னை இழுத்துக் கொள்கிறது. சிலருடைய சித்தம் விஷய போகங்களில் போவதேயில்லை ; அவர்களுக்கு மோகம் என்பது எப்படியிருக்கும் என்பதே தெரியாது. ஏனெனில் அவர்கள் முன் ஜன்மத்தில் அதற்கு வேண்டிய சாதனையைச் செய்து விட்டார்கள்.

---

* “बालपणीं च सर्वज्ञता। वरी तयातें”
“सकल शास्त्रें स्वयंभें। निघती मुखें”

नहि कल्याण कृत्कश्चित् दुर्गतिं तात गच्छति ।

(நஹி கல்யாண க்ருத்கஸ்சித் துர்கதிம் தாத கச்சதி)

" நற்செயல் புரிவோனுக்கு துர்க்கதி என்றும் வராது "

எவன் நல்வழியில் போகிறானோ அவன் பட்டபாடு சிறிதும் வீண் போகாது என்று இறுதியில் உறுதி கூறப்பட்டிருக்கிறது. அரைகுறையாயுள்ளது இறுதியில் பூர்த்தியாய் விடும். பகவானுடைய இந்த உபதேசத்தின் சாரத்தை மனதில் வாங்கிக் கொண்டு தம் வாழ்க்கையைப் பயன்பெறச் செய்யுங்கள்.

ஞாயிறு, 27-3-'32.

## ஏழாம் அத்தியாயம்

# பிரபத்தி அல்லது ஆண்டவனிடம் சரணுதல்

*

### (32) பக்தியின் புனிதக்காட்சி

சகோதரர்களே, அர்ஜுனன் முன் சுதர்மத்தைப் பாதுகாக்கும் பிரச்னை எழுந்தபோது அவன் மனதில் தனது, பிறருடையது என்ற மோகம் தோன்ற அவன் சுதர்மத்திலிருந்து தப்புவதற்குக் காரணங்கள் தேடலானுன். அவனது இந்த வீண் மோகம் முதல் அத்தியாயத்தில் காட்டப்பட்டது. இந்த மோகத்தைப் போக்குவதற்கு உதவும் உபாயங்கள் இரண்டாம் அத்தியாயத்தின் தொடக்சத்தில் கூறப்பட்டன. அதில் இந்த மூன்று தத்துவங்கள் கூறப்பட்டன: (1) ஆன்மா அழிவற்றது, எங்கும் வியாபித்திருப்பது (2) உடல் அழியும் தன்மையது (3) சுதர்மத்தை விடவே கூடாதென்பது. இத்துடன் கர்மத்தின் பயனைத் துறத்தலென்ற யுக்தியைக் கூறியதன் மூலமாக இந்தத் தத்துவங்களை அனுஷ்டிக்க உதவும் கருவியும் அளிக்கப்பட்டது. இந்தக் கர்மயோகத்தை விவரிக்கையில் அதிலிருந்து கர்மம், விகர்மம், அகர்மம் என்ற மூன்று பொருள்கள் தோன்றின. கர்ம, விகர்மத்தின் சேர்க்கையினுல் தோன்றும் இருவகை அகர்மத்தை நாம் ஐந்தாம் அத்தியாயத்தில் பார்த்தோம். ஆறும் அத்தியாயத்திலிருந்து வெவ்வேறு வகை விகர்மங்களின் விவரங்கள் ஆரம்பமாயின. ஆறும் அத்தியாயத்தில் சாதனைக்கு இன்றியமையாத ஏகாக்ரதையின் மகத்துவம் செல்லப்பட்டது.

இன்று ஏழாம் அத்தியாயம். இந்த அத்தியாயத்தில் விகர்மத்தின் ஒரு மிகவும் அழகிய புதிய மாளிகையே திறக்கப்பட்டிருக்கிறது எனலாம். சிருஷ்டிதேவியின் கோயிலில், ஒரு பெரிய வனத்தில் நாம் விதவிதமான இனிய காட்சிகளைக் கண்டுகொண்டே போவதுபோன்ற அனுபவமே கீதையைப் படிக்கும்பொழுதும் ஏற்படுகிறது. ஆறும் அத்தியாயத்தில் ஏகாக்ரதையென்ற மாளிகையைக் கண்டோம்; இப்பொழுது இன்னொரு மாளிகையில் சிறிது நுழைவோம்.

இந்த மாளிகையின் கதவைத் திறப்பதற்கு முன்னரே பகவான் மயக்கத்தை விளைவிக்கும், மோகத்தை உண்டாக்கும் இந்த உலக அமைப்பின் இரகசியத்தை விளக்கிவிட்டார். ஒரே வகைக் காகிதத்தில் ஒரே தூலிகையைக்கொண்டு சைத்திரிகன் பலவகைச் சித்திரங்களை வரைகிருன். சிதார் அல்லது யாழ் வாசிப்பவன் ஸப்த ஸ்வரங்களைக் கொண்டே அநேக ராகங்களை உருவாக்குகிருன். முப்பது மூல எழுத்துக்களின் உதவிகொண்டே நாம் பலவகைக் கருத்துக்களையும், உணர்ச்சிகளையும் வெளியிடுகிருேம். இந்த சிருஷ்டியையும் அவ்வாறே எண்ணிக் கொள்ளுங்கள். சிருஷ்டியில் அளவிலடங்காத பொருள்களும் எண்ணற்ற போக்குகளும் காணப்படுகின்றன. ஆனுல் இந்த அகம் புறம் என்ற இருவகை சிருஷ்டியும் ஒரே சிதையாத ஆன்மா, எண்வகை பிரகிருதி என்ற இந்த இரண்டினுலும் அமைந்திருக்கிறது. வெகுண்டவனது கோபம், அன்பனது அன்பு, துன்பமுற்றவன் கூப்பாடு, இன்பமுள்ளவன் மகிழ்ச்சி, சோம்பேறியின் தூக்கப் பற்று, முயற்சியுடையவனுடைய சுறுசுறுப்பு ஆகிய இவையெல்லாம் ஒரே சைதன்ய சக்தியின் விளையாட்டே. இந்த ஒன்றுக்கொன்று முரணுன பாவங்களின் அடிப்படையில் ஒரே சைதன்யம் பூரணமாய் நிரம்பியிருக்கிறது. அகத்திலுள்ள சைதன்யம் ஒன்ருகவே இருப்பதுபோல புறத்தே காணப்படும் போர்வையின் தன்மையும் ஒன்று போலவேதான் இருக்கிறது. சைதன்யமயமான ஆன்மா, ஜடமான பிரகிருதி என்ற இரு சரக்குகளினுல் சிருஷ்டியனைத்தும் அமைந்திருக்கிறது, உருவாகி யிருக்கிறது என்று பகவான் ஆரம்பத்திலேயே சொல்லுகிருர்.

ஆன்மாவும் உடலும், பரா பிரகிருதியும் அபரா பிரகிருதியும் எங்கும் ஒன்ருகவே இருக்கையில் மனிதன் மோகத்தில் சிக்குவதேன் ? வேற்றுமை ஏன் தோன்றுகிறது ? அன்புள்ள மனிதனுடைய முகம் பார்ப்பதற்கு இன்பமளிக்க, இன்னெருவனைப் பார்க்கையில் நமக்கு ஏன் வெறுப்புண்டாகிறது ? ஒருவனை அணுகவேண்டுமென்றும் மற்றவனைவிட்டு அகல வேண்டுமென்றும் ஏன் தோன்றுகிறது ? ஒரே பென்சில்தான், ஒரே காகிதம்தான், சைத்திரிகனும் ஒருவனே. ஆனுல் வெவ்வேறு சித்திரங்களினுல் வெவ்வேறு வகை பாவங்கள் வெளியாகின்றன. இதுதான் சைத்திரிகனுடைய திறமை என்பது. சைத்திரிகனுடைய தூலி

கையிலும், யாழ் வாசிப்பவனுடைய விரல்களிலும் உள்ள திறமையானது நம்மை அழவும், சிரிக்கவும் வைத்துவிடுகிறது. இந்தத் திறமை யனைத்தும் அவர்களுடைய அந்த விரல்களில் அமைந்துள்ளது.

இவன் என் அருகிலிருப்பவன், அவன் தொலைவிலிருப்பவன். இவன் என்னைச் சேர்ந்தவன், அவன் அன்னியன் என்ற எந்த எண்ணங்கள் மனதில் எழுந்து சில சந்தர்ப்பங்களில் நம்மைக் கடமையிலிருந்து வழுவத் தூண்டுகின்றனவோ, அவைகளுக்கெல்லாம் காரணம் மோகமே. இந்த மோகத்திலிருந்து தப்பவேண்டுமெனின் அந்த சிருஷ்டி கர்த்தாவின் விரல்களுடைய அற்புதத் திறமையின் ரகசியத்தை அறிந்து கொள்ள வேண்டும். 'பிருக தாரண்யக உபநிடத'த்தில் நகாடா அல்லது பேரிகையை உதாரணமாய்க் கூறப்பட்டிருக்கிறது. ஒரே பேரிகையிலிருந்து வெவ்வேறு நாதங்கள் எழுகின்றன. சிலவற்றைக் கேட்க எனக்கு நடுக்கமாகிறது ; சிலவற்றைக் கேட்டதும் துள்ளி எழுகிறேன். இந்த எல்லா பாவங்களையும் வெல்ல வேண்டுமானல் நாம் பேரிகை வாசிப்பவனை கையில் போட்டுக்கொள்ள வேண்டும். அவன் நம் வசமானதும் எல்லா நாதங்களும் நமக்குக் கட்டுப்பட்டுவிடும். பகவான் ஒரே வாக்கியத்தில், " மாயையைக் கடக்க விரும்புகிறவர்கள் என்னிடம் சரண் புகுவார்களாக " என்று சொல்லுகிறுர்.

" என்னிடம் சரண் புகுவோர் கடைத்தேறுவர் ;
அவர்க்கு இக்கரையிலேயே மாயாஜலம்
வறண்டு போகும் "*

அப்படியானல் இந்த மாயை என்பது என்ன ? கடவுளுடைய சக்தியை, கைத்திறமையை மாயை என்கிறுர்கள். ஆன்மாவும், பிரகிருதி அல்லது இயற்கையும்—ஜெயினர்களின் பரிபாஷையில் கூறிஞல் ஜீவனும், அஜீவனும் ஆன இப் பண்டத்தைக் கொண்டு எவன் பல வண்ணமுள்ள இந்த சிருஷ்டியை உருவாக்கியிருக்கிறுனே அவனுடைய சக்தி அல்லது கலையே மாயை என்பது. சிறையில் எவ்வாறு ஒரே தானியத்தைக்கொண்டு ரொட்டியும், அதைக்

---

* येथ एक चि लीला तरले । जे सर्वभावें मज भजले
तयां ऐली चि कडे सरलें । मायाजल

கொண்டே எல்லா ருசிகளுமுள்ள வியஞ்ஜனமும் ஆகிறதோ அவ்வாறே சிதைவற்ற ஆன்மா ஒன்றென்றும் எண் வகை உடல் ஒன்றென்றும் எண்ணிக் கொள்ளுங்கள். இதைக்கொண்டு ஆண்டவன் விதவிதமான பொருள்களை உண்டாக்கிக்கொண்டே இருக்கிறுன். நாம் இந்தப் பொருள்களைப் பார்த்து ஒன்றுக்கொன்று முரணுன நல்லதும் கெட்டதுமான வெவ்வேறு பாவங்களை உணருகிறேம். நாம் இவற்றைக் கடந்து உண்மையான சாந்திபெற விரும்புவோமாஞல் இவற்றை யெல்லாம் உண்டாக்கிய கலைஞனைப் போய்ப் பற்றிக்கொள்ளவேண்டும்; அவனிடம் பழக்கம் பண்ணிக்கொள்ளவேண்டும். அவன் பழக்கம் ஏற்பட்ட பிறகு வேற்றுமையைத் தோற்றுவிக்கும், ஆவலை உண்டாக்கும் மோகத்திலிருந்து தப்ப முடியும். அந்த ஆண்டவனைத் தெரிந்துகொள்வதற்கு ஒரு பெரிய சாதனத்தை—பெரிய விகர்மத்தை—க்கூறுவதற்கு ஏழாம் அத்தியாயத்தில் பக்தி என்ற நேர்த்தியான மாளிகையைத் திறந்துவைத்திருக்கிறுர். சித்த சுத்தி பெறுவதற்கு யக்ஞம்—தானம், ஜபம்—தவம், தியானம்—தாரணை முதலிய பல விகர்மங்கள் கூறப்படுகின்றன. இந்த சாதனைகளை யெல்லாம் நான் சோடா, சோப், சிகைக்காய் ஆகியவற்றுடன் ஒப்பிடுவேன். ஆனுல் பக்தியையோ தண்ணீருடன் ஒப்பிடுவேன். சோடா, சோப், சிகைக்காய் ஆகியவை பொருள்களை சுத்தமாக்கினுலும் நீரில்லாதபொழுது இவைகளினுல் பயனில்லை. தண்ணீர் இல்லாதபொழுது இவைகளினுல் என்ன பயன்? இதற்கு மாருக சோடா, சோப், சிகைக்காய் ஆகியவை இல்லையாயினும் தண்ணீர் மட்டுமிருந்தால் நிச்சயமாய் சுத்தம் செய்து கொள்ளலாம். அந்தத் தண்ணீருடன் இந்தப் பொருள்களும் இருக்குமாஞல் 'பொன் மலர் நாற்ற முடைத்து' என்பது போலாகும். பாலில் சர்க்கரை சேர்ந்தது போலென்று அதைச் சொல்லுவோம். யக்ஞம், யாகம், தியானம், தவம் ஆகிய இவை யெல்லாவற்றிலும் உள்ளம் கலவாவிடில் சித்த சுத்தி எப்படி ஏற்படும்? உள்ளக் கலவைக்கே பக்தி யென்பது பொருள். எல்லா வகை சாதனங்களுக்கும் பக்தி தேவையாகிறது. பக்தி என்பது எங்கும் பயன்படும் ஒரு உபாயமாகும். பணிக்கலை கைவரப்பெற்ற ஒருவன் ஒரு நோயாளிக்கு சேவை செய்யப் போகிறுன். அவன் மனதில் சேவையுணர்ச்சி இல்லையேல் உண்மைசேவை எப்படி நடைபெறும்?

காளை நல்ல பலம் பொருந்தியதாய் இருந்த போதிலும் வண்டி யிழுக்க அதற்கு மனம் இல்லையாஞல் அது கழுத்தைத் தொங்கவிட்டுக்கொண்டு படுத்துவிடும். இழுத்துச் சென்ருலும் எங்கேனும் நொடியில் கொண்டுபோய்க் குடை சாய்த்துவிடும். எந்தக் காரியத்தில் உள்ளம் கலக்க வில்லையோ அதனுல் திருப்தியோ, தென்போ ஏற்படாது.

## (33) பக்தி பயக்கும் தூய ஆனந்தம்

இந்த பக்தி இருக்குமாஞல் அந்தப் பெரிய சைத்திரி கனது கலையின் சிறப்பை நாம் காணக்கூடும், அவன் கைத்திறனைப் பார்க்கக்கூடும். ஒரு தடவை அந்த உற்பத்தித் தலத்தில் அருவியின் அபூர்வமான இனிய ரசத்தை ருசித்துப் பார்த்து விட்டோமாஞல் பிறகு மற்ற எல்லா ரசங்களும் இழிந்தவையாய், சப்பென்ருய்விடும். இனிமையான வாழைப்பழத்தைத் தின்றவன் மரத்திலோ மண்ணிலோ செய்து வர்ணம் பூசிய வாழைப் பழத்தை கையில் எடுத்தால் 'மிகவும் நன்ருய் இருக்கிறதெ'ன்று சொல்லி ஒரு பக்கத்தில் வைத்துவிடுவான். உண்மை வாழைப் பழத்தின் ருசியைக் கண்டவனுகையால் அவனுக்கு இந்த வாழைப்பழ பொம்மைகளைக் காணும்பொழுது உற்சாகம் உண்டாகாது. இவ்வாறே, உண்மை அருவியின் இன்பத்தை நுகர்ந்தவன் புறத்திலுள்ள பானகங்களை விரும்ப மாட்டான். ஒரு வேதாந்தியிடம் மக்கள், "சுவாமி, வாருங்கள் போகலாம். பட்டணத்தில் இன்று தீப அலங்காரம் நடக்கும், பார்ப்போம்" என்ருர்கள். அதற்கு அவர், நண்பர்களை "இந்த தீப அலங்காரம் என்பது என்ன?" என்று கேட்டார். ஒரு விளக்கு பிறகு இரண்டு, மூன்று இவ்வாறே இலட்சம், பத்து இலட்சம், கோடி என்று எவ்வளவு வேண்டுமோ அவ்வளவு என்று எண்ணிக்கொள். கணக்கின் ஏறு வரிசையில் 1+2+3 என்று அனந்தம் வரையில் வைத்துக்கொள்ளலாம். ஒரு எண்ணுக்கும் மற்றதற்கும் இடையிலுள்ள வேற்றுமை தெரிந்து போகுமாஞல் எல்லா எண்களையும் எழுதவே தேவையில்லை. அவ்வாறே அந்த விளக்குகளையும் ஒன்றை யடுத்து ஒன்ருய் வைத்து விடவேண்டியதுதானே. இதில் இவ்வளவு மெய் மறந்து போவதற்கு என்ன இருக்கிறது? ஆஞல் மனிதனுக்கு இத்தகைய இன்பங்களே பிடிக்கின்றன. அவன் எலுமிச்சம்

பழமும், சர்க்கரையும் கொணர்ந்து தண்ணீரில் அவற்றைக் கலந்து, அதை ரசித்துக் குடித்துவிட்டு, "ஆஹா, எவ்வளவு நன்ருய் இருக்கிறது பானகம்!" என்பான். நாக்குக்கு ருசி பார்த்துச் சப்புகொட்டுவதைத் தவிர வேறு வேலை ஏது? இதை இதில் கல, அதை அதில் கல என்று கலந்து சாப்பிடுவதிலேயே அதற்கு இன்பமெல்லாம் அடங்கியிருக்கிறது. சிறு பிராயத்தில் நான் ஒரு சமயம் சினிமா பார்க்கப்போயிருந்தேன். தூக்கம் வந்தால் படுத்துத் தூங்குவதற்கென்று கையில் ஒரு கோணித் துண்டும் கொண்டுபோயிருந்தேன். திரையில் கண்களைக் கூசச் செய்யும் ஒளியைக் காணத் தொடங்கினேன். இரண்டு, மூன்று நிமிஷங்களுக்குள் அந்தத் தீச் சித்திரங்களைப் பார்த்து என் கண்கள் களைத்து விட்டன. நான் என் கோணியில் படுத்து ஆட்டம் முடிந்ததும் எழுப்பச் சொல்லி விட்டு உறங்கிப் போனேன். இரவில் திறந்த வெளியில் வானத்தில் சந்திரனையும், நட்சத்திரங்களையும் காண்பதை விடுத்து, அமைதியான சிருஷ்டியின் அந்தப் புனிதமான இன்பத்தை நுகராது, அந்தக் குறுகிய சினிமாக் கொட்டகையில்போய் தீச் சித்திரங்களின் ஆட்டத்தைப் பார்த்துக் கை கொட்டி மகிழ்கிருர்கள்! எனக்கு இவை யெல்லாம் என்ன வென்றே புரிந்ததில்லை.

மனிதன் இவ்வளவு ஆனந்த சூன்யனுய் இருப்பது ஏன்? அந்த உயிரற்ற விம்பங்களைக் கண்டு பாவம், அவன் எப்படியோ ஓரளவு இன்பம் பெறுகிருன். வாழ்க்கையில் இன்பம் இல்லாதபொழுது இத்தகைய செயற்கை இன்பங்களைத் தேடுகிருர்கள். ஒரு சமயம் எங்கள் வீட்டின் பக்கத்தில் மேளம் வாசிப்பது கேட்டது. நான் "இது எதற்கு?" என்று கேட்டேன். "பிள்ளை பிறந்திருக்கிறது" என்று சொன்ஞர்கள். மேளம் கொட்டி உலகிற்கு அறிவிக்கும்படியாக உங்கள் வீட்டில் தான் அபூர்வமாய்ப் பிள்ளை பிறந்திருக்கிறதோ? பிள்ளை பிறந்ததென்று ஆட்டமும், பாட்டும், கேளிக்கைகளும் நடக்கின்றன. இவையெல்லாம் சிறுபிள்ளைத்தனத்தைத் தவிர வேறு என்ன? ஏதோ ஆனந்தத்திற்கே உலகத்தில் பஞ்சம் வந்துவிட்டது போலிருக்கிறது இவர்கள் செயல்! பஞ்ச காலத்தில் எங்கேனும் கொஞ்சம் அரிசி காணப் பட்டால் மக்களெல்லாம் அடித்துப்பிடித்துக்கொண்டு அங்கு போய் விழுவதைப்போல் எங்கேனும் பிள்ளை பிறந்தது,

சர்க்கஸ் வந்தது, சினிமா வந்தது என்ருல், பாவம், இன்பத்தையே கண்டிராத இந்த மக்கள் ஈசல் கூட்டத்தைப் போலப் போய் விழுகிருர்கள்!

இது உண்மை இன்பமா? பாட்டு காதுகளில் நுழைய அதன் அலைகள் மூளையைப் போய்த் தொடுகின்றன. உருவங்கள் கண்களில் புகுந்து மூளையைப் போய்த் தட்டுகின்றன. இந்தத் தாக்குதலிலேயே இந்த எளிய மக்களுக்கு இன்பம் அடங்கியிருக்கிறது. ஒருவன் புகையிலையைப் பொடித்து மூக்கில் திணித்துக்கொள்ள, இன்னெருவன் அதை பீடியாய்ச் சுருட்டி வாயிற் செருகிக்கொள்கிருன். அந்தப் பொடி அல்லது புகை அவர்களைத் தாக்கியதும் அவர்களுக்கு இன்பமூட்டை கிடைத்துவிட்டதுபோல் தோன்றுகிறது. ஒரு பீடித்துண்டு கிடைத்ததும் அவர்களுக்கு ஏற்படும் இன்பத்திற்கு எல்லையில்லை. டால்ஸ்டாய், "அந்த சிகரெட்டின் மயக்கத்தில் அவன் ஒருவரைக் கொலை செய்தால்கூட நாம் ஆச்சரியப்படுவதற்கில்லை" என்கிருர். அதை ஒருவகை போதை என்றே கொள்ளவேண்டும்.

இத்தகைய இன்பத்தில் மனிதன் ஏன் மெய்மறந்து போகிருன்? ஏனெனில் உண்மையான இன்பம் எதுவென்றே அவனுக்குத் தெரியவில்லை. மனிதன் நிழலைக் கண்டே பித்தனுகிக் கொண்டிருக்கிருன். இன்று அவன் ஐந்து ஞான இந்திரியங்களைக்கொண்டே இன்பம் பெற்றுக் கொண்டிருக்கிருன். அவனுக்கு கண் என்ற பொறி இல்லையாஞல் உலகில் நான்கு பொறிகளின் இன்பமே உண்டு என எண்ணுவான். நாளை செவ்வாய் கிரகத்திலிருந்து ஆறு பொறிகளுள்ள ஒருவன் இறங்கி வருவாஞயின் ஐம்பொறிகளுள்ள இவர்கள், பாவம், வருந்துவார்கள். "இவனைவிட நாம் எவ்வளவு இழிந்தவர்கள்!" என்று சொல்லி அழுவார்கள்.

சிருஷ்டியின் பொருள்களனைத்தும் இந்த ஐம்பொறிகளுக்கு எவ்வாறு புலனுகும்? ஐம்பொறிகளிலும் சிலவற்றை அவன் தேர்ந்தெடுத்து அவைகளிலேயே ஈடுபட்டுக் கிடக்கிருன். கழுதையின் கனைப்பு அவன் காதில் நுழைந்ததும், 'இந்த அபசகுனம் எங்கிருந்து வந்தது?' என்று அலுத்துக் கொள்கிருன். உன்னைப்

பார்ப்பதனுல் அந்தக் கழுதைக்கு அபசகுனம் ஏற் படாதா? உனக்குத்தான் அதனுல் தீங்கு நேருமோ? பிறருக்கு உன்னுல் தீமை எதுவும் இல்லையோ? கழுதை யின் கனைப்பை அபசகுன மென்றே வைத்துக்கொள்வோம். நான் படௌதா (பரோடா) கல்லூரியில் இருந்த காலத்தில் ஐரோப்பிய சங்கீத வித்வான்கள் சிலர் அங்கு வந்தார்கள். அவர்கள் சிறந்த பாடகர்கள். அவர்கள் அபாரமாகத்தான் பாடிக்கொண்டிருந்தார்கள். ஆனுல் அவ்வகைப் பாட்டைக் கேட்டு எனக்குப் பழக்கமில்லாமையால் நான் 'எப்பொழுது இங்கிருந்து தப்பியோட சந்தர்ப்பம் கிடைக்குமெ'ன்று எண்ணிக்கொண்டே யிருந்தேன். அவர்கள் பாட்டு சல்லி பெருது என்று நான் முடிவு கட்டிவிட்டேன். நம் ஊர் பாடகர்கள் அவர்கள் ஊருக்குப் போனுல் இவர்களை அவர் களும் இப்படியே ஒருக்கால் மதிக்கலாம். இவ்வாறு சங்கீதத்தினுல் ஒருவருக்கு ஆனந்தம் ஏற்பட இன்னெருவ ருக்கு அது ஏற்படாது போகிறது. இதிலிருந்து இது உண்மை ஆனந்தமல்ல, மாயை என்று தெரிகிறது. உண்மை ஆனந்தத்தைக் காணும் வரையில் இந்தப் பொய்யான, ஏமாற்றமான ஆனந்தத்திலேயேதான் நாம் உழன்று கொண்டிருப்போம். உண்மைப்பால் கிடைக்கா திருந்த வரையில் மாவைக் கரைத்துச் செய்த பாலேயே அச்வத்தாமன் பாலென்று குடித்து வந்தான். இவ்வாறு நீங்கள் உண்மை உருவைப் புரிந்துகொண்டு அதன் ஆனந்தத்தைச் சுவைத்த பிறகு உங்களுக்கு மற்றவை யெல்லாம் சப்பென்ருய்விடும்.

இந்த ஆனந்தத்தைக் கண்டு பிடிப்பதற்குள்ள சிறந்த வழி பக்தியாகும். இவ்வழி செல்லும்பொழுதே உங்களுக்கு ஆண்டவனுடைய திறம் புலனுகும். அந்த தெய்வீகக் கற்பனை வந்ததும் பிற கற்பனைகளெல்லாம் தாமே மறைந்துபோம். பிறகு இழிந்த பொருள் எதுவும் உங்களைத் தன்னிடம் ஈர்க்காது. பிறகு உலகத்தில் ஒரே ஆனந்தம் நிரம்பியிருப்பது தெரியவரும். மிட்டாய்க் கடைகள் நூற்றுக்கணக்கிலிருந்த போதிலும் அவை அனைத்திலுமுள்ள மிட்டாயின் வகைகள் ஒன்றே. ஆகை யால் உண்மைப் பொருள் நமக்குக் கிட்டும் வரையில் சஞ்சலமான பறவையைப்போல நாம் இங்கு சிறிதும் அங்கு சிறிதுமாக வாயை வைத்து நுகர்ந்துகொண்டே யிருப்போம். காலையில் நான் துளசீராமாயணம்

படித்துக்கொண்டிருந்தேன். விளக்கினருகில் விட்டில் பூச்சிகள் கூடியிருந்தன. இதற்குள் அங்கே ஒரு பல்லி வந்தது. அதற்கு என் இராமாயணத்திஞல் என்ன பிரயோ ஜனம்? பூச்சிகளைப் பார்க்க அதற்கு ஆனந்தமா யிருந் தது. அது பூச்சிகள்மீது பாய இருந்த தருணத்தில் நான் கையைச் சிறிது ஆட்டவே அது ஓடிப்போய்விட்டது. ஆனுல் அதன் கவனம் மட்டும் பூச்சிகளின்மீதே இருந்து வந்தது. நான் என் மனதில், "நீ இந்தப் பூச்சியைத் தின்கிருயா? உன் நாவில் ஜலம் ஊறுகிறதா?" என்று கேட்டுக்கொண்டேன். என் நாவில் ஜலம் ஊறவில்லை. எந்த ரசத்தின் ஆனந்தத்தை நான் அனுபவித்துக்கொண் டிருந்தேனே அது அந்த எளிய பல்லிக்கு என்ன தெரியும்? இராமாயணத்தின் ரசத்தை அதனுல் அனுபவிக்க முடிய வில்லை. இந்தப் பல்லியினுடையது போன்றதே நம் நிலையும். நாம் பல்வேறு ரசங்களில் மெய்மறந்திருக்கிருேம். ஆனுல் உண்மை ரசம் கிடைக்கும்பொழுது எவ்வளவு இன்பமா யிருக்கும்! பகவான் பக்தி என்ற சாதனத்தைக் காட்டி யிருக்கிருர். அதன் மூலமாய் நாம் உண்மை ரசத்தைப் பெற்று நுகர இயலும்.

## (34) பயன் கருதிப் புரியும் பக்திக்கும் மதிப்புண்டு

பகவான் பக்தர்களில் மூன்று வகை யுண்டென்று சொல்லி யிருக்கிருர்: (1) ஸகாமபக்தன் அல்லது பயனை விரும்பி பக்தி செய்வோன், (2) நிஷ்காம அல்லது பயனைக் கருதாதிருப்பினும் ஒரு சார்பான பக்தி புரி வோன், (3) ஞானி அல்லது சம்பூர்ண பக்தி செய்வோன். பயனைக் கருதாத போதிலும் ஒரு சார்பான பக்தி புரி வோரில் மூன்று வகை உண்டு. அவர்கள் (1) ஆர்த்தன் அல்லது வருந்தி, நைந்து உருகுவோன், (2) ஜிஞ்ஞாஸு அல்லது அறிவை விரும்புவோன், (3) அர்த்தார்த்தி அல்லது பொருளை விரும்புவோன். பக்தி என்ற மரத்தின் பெரிய, சிறிய கிளைகளாகும் இவை.

அப்படியாஞல் ஸகாம அல்லது பயனை விரும்பும் பக்தன் என்பதற்குப் பொருளென்ன? மனதில் சில விருப் பங்களைத் தாங்கியபடியே பகவானை அணுகுவோன். இந்த பக்தி கீழ்த்தரமானது என்று கூறி நான் அவனை

தூஷிக்கமாட்டேன். பெயரும் புகழும் கிட்டுமென்ற ஆசையினுல் பலர் பொதுஜன சேவையில் இறங்குகிருர்கள். இதில் நஷ்டமென்ன? நீங்கள் அவர்களுக்கு மதிப் பளியுங்கள்; மரியாதை செய்யுங்கள். இதனுலெல்லாம் ஒன்றும் கெட்டுப்போகாது. இவ்வாறு கௌரவம் கிடைத்துக் கொண்டே யிருப்பதனுல் பிற்காலத்தில் அவர்கள் பொது ஜன சேவையில் நிலைத்து விடுவார்கள். பிறகு அவர்களுக்கு ஆனந்தமும் தோன்றத் தொடங்கும். மதிப்புப் பெற வேண்டுமென்ற ஆசை உண்டாகிறதே, அதற்கும் பார்க்கப் போனுல் அர்த்தமென்ன? ‘நாம் செய்யும் காரியம் சிறந்தது’ என்று அவர்களுக்குத் தாம் பெறும் மதிப்பின் மூலமாய் உறுதி ஏற்பட்டுவிடுகிறது என்பதே. நான் செய்யும் சேவை நல்லது அல்லது தீயது என்பதைப் புரிந்து கொள்வதற்கு தன் அகத்திலேயே கருவி எதையும் பெற் றிராதவன் இந்தப் புறச் சாதனத்தை ஏற்றுக்கொள்கிருன். தாய் குழந்தையின் முதுகைத் தட்டிக் கொடுத்து, “பேஷ்! நல்ல காரியம் செய்தாய்” என்று சொன்னதும் தாய்க்கு இன்னும் அதிக உதவிசெய்ய வேண்டுமென்று குழந்தைக் குத் தோன்றுகிறது. பயனைக் கருதிச் செய்யப்படும் ஸகாம பக்தியின் நிலையும் இதுவே. ஸகாம பக்தன் ஆண்டவனை அணுகி “கொடு” என்பான். எல்லாவற்றையும் ஆண்டவ னிடம் கேட்கவேண்டும் என்று தோன்றும் போக்கு சாதா ரண மானதல்ல; இது அசாதாரணமானது. ஞான தேவர் நாமதேவரிடம், “க்ஷேத்திர யாத்திரைக்கு வரு கிருயா?” என்று கேட்டார். நாமதேவர், “எதற்காக?” என்று பதில் கேள்வி போட்டார். ஞானதேவர், “சாது-மகாத்மாக்களுடைய பழக்கம் ஏற்படும்” என்று பதில் சொன்னுர். அதற்கு நாமதேவர், “அப்படியானுல் பகவா னிடம் கேட்டுக்கொண்டு வருகிறேன்” என்று சொல்லி விட்டுக் கோயிலுக்குள் போய் பகவானெதிரில் நின்ருர். அவர் கண்களிலிருந்து கண்ணீர் வழியத் தொடங்கிற்று; பகவானுடைய பாதங்களை உற்று நோக்கியவாறே நின்ருர். இறுதியில் அழுதுகொண்டே, “பிரபுவே, நான் போகவா?” என்று கேட்டார். ஞானதேவர் பக்கத்திலேயே இருந்தார். அந்த நாமதேவரை நீங்கள் பித்தர் என்பீர் களா? வீட்டில் மனைவி இல்லாமையால் அழுகிறவர்களுக் குக் குறைவில்லை. ஆனுல் பயனைக் கருதும் ஸகாமனு யிருந்தபோதிலும் ஆண்டவனிடம் போய் அழுவோன்

சாதாரணமானவன் அல்ல. எது உண்மையில் கோரத் நா அதை அவன் கோராதிருத்தல் அவனுடைய நானத்திஞல் என்று அறியவேண்டும். ஆஞல் இதஞலேயே அவனது ஸகாமபக்தியை அசட்டை செய்யத் தக்கதென்று கருதலாகாது.

பெண்கள் காலேயில் எழுந்து பலவகை விரதம் முதலியவைகளேச் செய்கிருர்கள்; விளக்கேற்றி வணங்குகிருர்கள்; துளசி மடத்தை வலம் வருகிருர்கள். எதற்காக? இறந்தபின் ஆண்டவனுடைய அருள் கிடைக்க வேண்டும் என்பதற்காக. அவர்கள் இத்தகைய கள்ளமற்ற நம்பிக்கை கொண்டிருக்கலாம்; ஆஞல் அதன் பொருட்டு அவர்கள் விரதம், ஜபம், உபவாசம் முதலியவைகளே அனுஷ்டிக்கிருர்கள். இத்தகைய விரத-அனுஷ்டானங்கள் நடைபெறும் குடும்பத்தில் மகான்கள் பிறக்கிருர்கள். துளசிதாசருடைய குலத்தில் ராமதீர்த்தர் பிறந்தார். ராம தீர்த்தர் பார்ஸி பாஷையை நன்கு கற்றவர். எவரோ அவரிடம், "துளசிதாசருடைய குலத்தில் பிறந்திருந்தும் உனக்கு ஸம்ஸ்கிருதம் தெரியவில்லேயே!" என்று சொன்ஞர். ராமதீர்த்தர் மனதில் இச்சொல் போய்த் தைத்து விட்டது. குலத்தின் நினேவுக்குள்ள இந்த சக்தியை என்னென்பது! இதஞல் தூண்டப்பட்ட அவர் ஸம்ஸ்கிருதத்தைக் கரைத்துக் குடித்து விடுவதென்று முனேந்து விட்டார். பெண்களிடம் காணப்படும் பக்தி உணர்ச்சியை நாம் கேலிசெய்யக்கூடாது. எங்கே பக்தியின் இத்தகைய ஒவ்வொரு துணுக்கு சேர்க்கப்படுகிறதோ அங்கே ஒளிமிக்க பிள்ளேகள் பிறக்கிருர்கள். இதஞலேயே பகவான், "என் பக்தன் ஸகாமஞய் இருந்தபோதிலும் நான் அவன் பக்தியை உறுதிப்படுத்துவேன். அவன் மனதைக் குழப்ப மாட்டேன். அவன் உண்மை உள்ளத்தோடு என் நோயைப் போக்கென்று வேண்டுவாஞஞல் நான் அவனுடைய ஆரோக்கிய பாவனேயை வலுப்படுத்தி அவன் நோயை அகற்றிவிடுவேன். அவன் எந்த நோக்கத்துடன் என்னே அணுகியபோதிலும் நான் அவன் முதுகைத் தடவிக் கொடுத்து அவனுக்கு மதிப்பேயளிப்பேன்" என்கிருர். துருவனுடைய உதாரணத்தையே எடுத்துக்கொள்ளுங்கள். அவனுக்கு தந்தையின் மடியில் அமர முடியாமற் போன பொழுது அவன் தாய், "ஆண்டவனிடம் போய் இடம் வேண்டு" என்று சொன்ஞள். அவன் உடனே

உபாசனையில் முனைந்துவிட்டான். பகவான் அவனுக்கு அழியாத இடத்தை அளித்துவிட்டார். மனம் பயனைக் கருதாததாய் நிஷ்காமமாய் இல்லையேயென்றால், அதனால் என்ன? இதில் முக்கியமான விஷயம் மனிதன் யாரை அணுகுகிறான், எவரிடம் வேண்டுகிறான் என்பதே. உலகத்தின்முன் கையை ஏந்தாது கடவுளை வேண்டிக்கொள்வதற்குள்ள பெருமையைக் குறைத்துக் கூறுவதற்கில்லை.

காரணம் எதுவாயிருந்த போதிலும் நீ பக்திக் கோயிலுள் புகு. ஆரம்பத்தில் ஏதோ பயன்களைக் கருதிக் கொண்டு போனபோதிலும், பின்னர் நீ பயன்களைக் கருதாதவனாய், நிஷ்காமனாகி விடுவாய். கண்காட்சிகள் நடக்கின்றன. அவைகளை நடத்துவோர் "ஐயா, வந்து பாருங்களேன். எவ்வளவு சிறந்த, பல நிறங்களுள்ள மெல்லிய கதர் தயாராகிறது! மாதிரியையாவது பார்த்துப் போங்கள்" என்கிறார்கள். போய்ப் பார்த்ததும் அவர்கள் மனம் கதரில் சென்று விடுகிறது. இதுவேதான் பக்தியின் விஷயத்திலும். பக்திக் கோயிலில் ஒருமுறை நுழைந்தால் போதும், பிறகு அவ்விடத்திய வனப்பும் சிறப்பும் தானே புலனாய்விடும். சுவர்க்கத்திற்குப் போய்க்கொண்டிருந்த தர்ம புத்திரருடன் இறுதியில் ஒரு நாய் மட்டும் இருந்தது. பீமன், அர்ஜுனன் ஆகிய அனைவரும் வழியிலேயே மடிந்து போனார்கள். சுவர்க்க வாயிலின் அருகில் தர்மரிடம் "நீங்கள் வரலாம். ஆனால் இந்த நாய்க்கு அனுமதியில்லை" என்றார்கள். தர்மர், "என் நாய் வரக்கூடாதென்றால் நானும் வரக்கூடாது தான்" என்றார். வேறு எதையும் கருதாது எஜமானனுக்கு சேவை செய்வதிலேயே கண்ணும் கருத்துமாய் உள்ளது நாயேயாயினும் 'நான், நான்' என்று சதா சொல்லிக் கொண்டிருக்கும் பிறரைவிட அது சிறந்ததே. அந்த நாய் பீமன், அர்ஜுனன் ஆகியோரைக் காட்டிலும் சிறந்தது என்று நிரூபிக்கப்பட்டது. ஆண்டவனை அணுகுவது ஒரு சிறு புழுவாயிருந்த போதிலும் அது அவனை அணுகா பெரியபெரிய மனிதர்களைவிடச் சிறந்ததும் பெருமை பொருந்தியதுமாகும். கோயிலில் ஆமை, நந்தி ஆகியவற்றின் சிலைகள் இருக்கின்றன. ஆனால் அந்த நந்தி என்ற எருதுக்கு எல்லோரும் வணக்கம் செலுத்துகிறார்கள். ஏனெனில், அது சாதாரண எருது அல்ல; பகவானுக்கெதிரில் இருப்பது. எருதாயினும் அது பகவானுடைய எருது என்பதை நாம்

மறத்தலாகாது. பெரியபெரிய அறிவாளிகளைவிட அது சிறந்தது. சாதாரணப் பேதை உயிராயினும் பகவானை நினைப்பதாயின் அது உலகத்தாரின் வணக்கத்திற்கு உரியதாய் விடுகிறது.

நான் ஒரு சமயம் ரயிலில் போய்க் கொண்டிருந்தேன். யமுனைப் பாலத்தின்மீது வண்டிவந்தது. பக்கத்திலிருந்த ஒருவர் மிக்க மகிழ்ச்சியோடு அதில் ஒரு காசை எடுத்து எறிந்தார். பக்கத்தில் பகுத்தறிவாளர் ஒருவர் உட்கார்ந்திருந்தார். அவர், "ஏற்கெனவே நாடு ஓட்டாண்டியாய் இருக்கிறது. போதாததற்கு இவர்கள் வேறு வீணுய்க் காசை எறிகிருர்கள்" என்ருர். நான், "நீங்கள் அதன் காரணத்தைப் புரிந்து கொள்ளவில்லை. எந்த பாவனையோடு அவர் ஒரு காசை எறிந்தாரோ அதற்கு நான்கைந்து காலணு மதிப்பாவது உண்டா இல்லையா? பிற நல்லகாரியங்களுக்குகாக இந்தக்காசைக் கொடுத்திருந்தால் இந்த தானம் இன்னும் நன்ருய் இருந்திருக்கும். இதைப்பற்றி நாம் பின்னர் யோசிப்போம். ஆனுல் அந்த பக்தர் இந்தக் காசைத்துறந்தது, இது வெறும் நதியல்ல, ஆண்டவனுடைய கருணையே இவ்வாறு பெருகிக் கொண்டிருக்கிறது என்ற பாவனையினுலேயே. இந்த பாவனைக்கு உங்களுடைய பொருளாதார சாஸ்திரத்தில் ஏதேனும் இடம் உண்டா? நாட்டின் ஒரு ஆற்றைக்கண்டதும் அவருடைய உள்ளம் உருகிப் போய்விட்டது. இந்த பாவனைக்கு, உணர்ச்சிக்கு நீங்கள் மதிப்பளிக்க முடியுமானுல் அதிலிருந்து நான் உங்கள் தேசபக்தியை அறிந்து கொள்வேன்" என்றேன். தேசபக்தி என்பதற்கு வெறும் உணவு என்பது தான் பொருளா? நாட்டின் ஒரு பெரிய ஆற்றைப் பார்த்ததும் தன் செல்வ மனைத்தையும் அதில் ஆழ்த்தி விடுவோம், அதன் பாதங்களில் சமர்ப்பித்து விடுவோம் என்ற பாவனை எழுமானுல் அது எவ்வளவு பெரிய தேசபக்தியாயிருக்க வேண்டும்? அந்த எல்லாச் செல்வங்களும் அந்த வெள்ளி மஞ்சள் கற்களும், புழுக்களின் மலத்தினுல் ஆன முத்துக்களும், நிலக்கரியினுலான வைரமும் இவை அனைத்தின் மதிப்பும் நீரில் ஆழ்த்திவிடத் தக்கதே. ஆண்டவனுடைய பாதங்களி னெதிரில் இவற்றை யெல்லாம் மண், இழிந்தவை என்றே மதி. ஆற்றுக்கும் ஆண்டவனுடைய பாதங்களுக்கும் என்ன சம்பந்தமென்று நீங்கள் நினைப்பீர்கள். உங்கள் சிருஷ்டியிருக்கிறதே அதற்கும் ஆண்டவ

னுக்கும் ஏதேனும் சம்பந்தமுண்டா, இல்லையா? ஆறு என்பது பிராணவாயுவும் நீரகமும் சேர்ந்தது; சூரியனே காஸ் வெளிச்சத்திற்கு ஒரு பெரிய மாதிரி. அதை வணங்குவதாவது? உங்கள் சோற்றுப்பானை இருக்கிறதே அதைத் தான் விழுந்து கும்பிடவேண்டும்! அந்தச் சோற்றில் தான் அப்படி என்ன வைத்திருக்கிறது? அதுவும் பார்க்கப் போனால் ஒரு வெள்ளைமண்ணே. அதற்காக உனக்கு ஏன் நாக்கில் இவ்வளவு நீர் ஊறுகிறது? இவ்வளவு பெரிய சூரியன் உதித்திருக்கிறது; இவ்வளவு அழகிய இந்த ஆறு ஓடுகிறது; இவைகளில் ஆண்டவனை உணர முடியா விட்டால் வேறெங்கு தான் முடியும்? ஆங்கிலக்கவி வோர்டுஸ்வர்த் மிகுந்த துக்கத்துடன், "முன்பெல்லாம் வானவில்லைக் கண்டால் துள்ளிக் குதிப்பேன், என் உள்ளத்தில் மகிழ்ச்சி பொங்கி எழும். ஆனால் இப்பொழுது நான் ஏன் மகிழ்ச்சியால் குதிப்பதில்லை? முன் இருந்த வாழ்க்கை இன்பத்தை இப்பொழுது இழந்து கல்லாகி விட்டேனா?" என்று கூறுகிறார். அதாவது பயனைக்கருதிச் செய்யும் பக்தி அல்லது விவரமறியாத நாட்டுப்புற மக்களின் பக்தி அல்லது பாவனைக்குப் பெரு மதிப்புண்டு. இறுதியில் அதிலிருந்தே பேராற்றல் உதயமாகும். மனிதன் எத்தகையவனாயிருந்தபோதிலும் ஆண்டவனுடைய சந்நிதிக்கு ஒரு முறைவந்து விடுவானாயின் அவன் மதிப்பிற்குரியவன் ஆய்விடுகிறான். தீயில் எந்த மரத்தை இட்டாலும் அது பற்றி எரியும். ஆண்டவனுடைய பக்தி என்பது ஒரு அபூர்வமான சாதனையாகும். ஆண்டவன் பயனை விரும்பிப் புரியப்படும் பக்திக்கும் மதிப்பளிப்பான். பிற்காலத்தில் அந்த பக்தியே பயன் கருதாததாகி பூரணத் துவத்தை நோக்கிச் செல்வதாய்விடும்.

## (35) பயன்கருதா பக்தியின் வகைகளும் நிறைவும்

பயனைக்கருதும் பக்தர் என்பவர் ஒரு வகை என்பதைப் பார்த்தோம். இனி பயனைக்கருதாது பக்தி செய்வோரைப் பார்போம். இவர்களுள்ளும் ஒரு சார்பினர், பூரணமானவர் என்ற இருவகையினர் உண்டு. ஒரு சார் பினருள் மூன்றுவகை. அவர்களுள் முதல்வகை ஆர்த்தர் அல்லது நைந்துருகும் பக்தர்களுடையது. ஆர்த்தர்

என்போர் நாமதேவரைப் போன்று தயையை, கருணையை வேண்டுவோர் ; ஆண்டவனைக் குறித்து அழுது அரற்றித் துடிதுடிப்போர். அவர் "என்று பகவானுடைய பிரேம ரசத்தை அருந்துவேன், எப்பொழுது அவனை அணைந்து கொண்டு வாழ்க்கைப் பயனைப் பெறு வேன், என்று அவன் பாதங்களில் என்னை சமர்ப் பித்துக் கடைத்தேறுவே னென்று ஆவலும் வியா கூலமும் பரபரப்பும் துடிப்பும் கொண்டிருப்பர். அவர் ஒவ்வொரு காரியத்திலும் உண்மையும் உள்ளமும் பேராவலும் அன்பும் கலந்திருக்கிறதா இல்லையா என்று பார்ப்பர். இரண்டாம்வகை, உண்மையை அறிவதில் ஆவல் கொண்டவர்களுடையது. தற்சமயம் நம் நாட்டில் இவ்வகையைச் சேர்ந்த பக்தர்கள் அதிக மில்லை. இவ்வகுப்பைச் சேர்ந்த பக்தர்களில் ஒருவர் கௌரீசங்கர் சிகரத்தின்மீது மீண்டும் மீண்டும் ஏறி உயிர் துறப்பார் ; வடதுருவத்தைத் தேடப்போய் தான் கண்டு பிடித்தவைகளைக் காகிதத்தில் வரைந்து அதை ஒரு சீசா வில் அடைத்து நீரில் மிதக்க விட்டுவிட்டு இறந்து போவார்; ஒருவர் எரிமலையின் உட்புறம் எப்படி இருக்கிறதென்று பார்க்க அதனுள் இறங்குவார். இப்பொழுது இந்தியர் களுக்கு சாவு என்ருலே ஒரு பெரும் பூதமாய்த் தோன்று கிறது ; குடும்பத்தை, பரிவாரத்தைப் பராமரித்துப் போஷிப்பதைவிடச் சிறந்த புருஷார்த்தம் எதுவுமே காணப்படவில்லை. ஜிஞ்ஞாசுவான பக்தனிடம் அடக்க முடியாத அறிவுப்பசி, உண்மையை அறியும் ஆவல் இருக்கும். அவன் ஒவ்வொரு பொருளின் தன்மையையும் இயற்கைக் குணங்களையும் ஆராய்வான். மனிதன் நதியின் மூலமாய் இறுதியில் கடலைப்போய் அடைவதைப்போல் ஜிஞ்ஞாசுவும் இறுதியில் ஆண்டவனை அணுகி விடுவான். மூன்ரும்வகை, பொருளைத் தேடுவோரு டையது. பொருளைத் தேடுவோ ரென்பதற்கு ஒவ் வொரு விஷயத்திலும் பொருளைத் தேடுவோரென்பது பொருள். 'பொருள்' என்பதற்கு இங்கே பணம், காசு என்பது அர்த்தமல்ல ; நன்மை, க்ஷேமம் என்றே அர்த்தம். ஏதேனும் ஒன்றை அவன் சோதிக் கையில் அதனுல் சமூகத்திற்கு என்ன நன்மை ஏற்படும் என்ற உரைகல்லில் அதை உரைத்துப் பார்ப்பான். தான் பேசுவது, எழுதுவது, செய்வது ஆகியவற்றினுல்

உலகிற்கு நன்மை உண்டா இல்லையா என்று பார்ப்பான். உபயோகமற்ற, தீமை விளைவிக்கக்கூடிய காரியத்தை அவன் ஒப்பமாட்டான். உலகத்திற்கு நன்மையை விரும்பு வோன் எவ்வளவு பெரிய மகாத்மாவா யிருக்கவேண்டும்! உலகத்தின் க்ஷேமமே அவனுக்கு ஆனந்தம் அளிப்பது. எவன் அன்பின் நோக்குடன் எல்லாக் காரியங்களையும் பார்க்கிருனே அவன் ஆர்த்தன்; அறிவின் நோக்குடன் பார்ப்போன் ஜிஞ்ஞாசுவும் அனைவரின் நன்மையை நோக்க மாய்க் கொண்டவன் அர்த்தார்த்தியும் ஆவான்.

இந்த மூவகை பக்தர்களும் பயன் கருதாதவர்களே ஆயினும் ஒரு சார்பினர் ஆகிருர்கள். ஒருவன் கர்மத்தின் மூலமாயும் இன்னொருவன் இதயத்தின் மூலமாயும் மூன்றுமவன் அறிவின் மூலமாயும் கடவுளிடம் போய்ச் சேருகிருன். இப்பொழுது பூரணபக்தனென்ற வகைபாக்கி இருக்கிறது. இவனையே ஞானி என்றும் சொல்லலாம். இவனுக்கு கண்ணுக்குத் தெரிபவை அனைத்தும் ஆண்ட வன் உருவங்களாகவே காணும். குரூபி, அழகியவன், அரசன், ஆண்டி, ஆண், பெண், பசு, பட்சி ஆகிய எல்லா வற்றிலும் பரமாத்மாவின் புனித உருவையே இவன் தரிசிப்பான்.

"ஆண் பெண், சிருர் அனைவரும் நாராயணர் என எண்ணுமாறு என் மனதை அமை."*

என்பது துகாராமுடைய பிரார்த்தனை. இந்துமதத்தில் நாக பூஜை, துதிக்கையுள்ள தேவதையின் பூஜை, மரங்களின் பூஜை என்பவை போன்ற பைத்தியக்காரத்தனங்கள் நடை பெறுகின்றன. இவற்றைவிட பெரிய பைத்தியக் காரத் தனங்களை ஞானவான்களான பக்தர்களிடம் காண்கிறோம். எறும்பிலிருந்து சந்திர சூரியர் வரை எதைக் கண்ட போதிலும் எல்லா இடங்களிலும் அவர்களுக்கு ஆண்ட வனே காட்சி அளிப்பதால் அவர்களுடைய உள்ளங்களில் ஆனந்தம் அலைமோதி எழுகிறது.

* "नर नारी बाळें अवघा नारायण ।
ऐसें माझें मन करीं देवा ॥"

"பிறகு அந்த இறுதியும் எல்லையுமற்ற ஆனந்தக் கடல் பொங்கி எழுகிறது." *

நகைய இந்த தெய்வீக, மனேகரக் காட்சியை நீங்கள் பிரமை என்று வேண்டுமானுல் சொல்லிக் கொள் ளுங்கள். ஆனுல் இந்த பிரமையே சுகத்தின் பொக்கிஷம், ஆனந்தத்தின் கஜானு. ஆழ்ந்த கடலில் அவருக்கு ஆண்டவன் பெருமை புலனுகிறது; கோமாதாவிடம் அவர் கடவுளின் புத்திர வாஞ்சையைப் பார்க்கிருர். பூமியினிடம் அவனுடைய பொறுமையையும் தூய ஆகாசத்தில் அவனுடைய தூய்மையையும், சூரிய, சந்திர, நட்சத்திரங் களில் அவனுடைய ஒளியையும் அழகையும் காண்கிருர். பூவில் அவனுடைய மென்மையையும், தீயோரிடம் தன்னைச் சோதிக்கும் ஆண்டவனையும் அவர் பார்க்கிருர். இவ்வாறு 'ஒரே பரம்பொருள் எங்கும் வியாபித்துள்ளது' என்ற உண்மையைக்காண ஞானியான பக்தர் பயிற்சிசெய்து வருகிருர். இவ்வாறு செய்து கொண்டே அந்த ஞானி யான பக்தர் ஒருநாள் கடவுளிடமே இரண்டறக் கலந்து விடுகிருர்.

ஞாயிறு, 3-4-'32

* "मग तया सुखा अंत नाहीं पार ।
आनंदें सागर हेलावती ॥"

எட்டாம் அத்தியாயம்

# பிரயாணம்–சாதனை : ஸாதத்ய யோகம்

*

## (36) நல்ல ஸம்ஸ்காரங்களைச் சேமித்தல்

மானிட வாழ்க்கை பல ஸம்ஸ்காரங்கள் பொருந்தியதாய் இருக்கிறது. நம்மூலமாக எண்ணிலடங்காத காரியங்கள் நடந்துகொண்டே இருக்கின்றன. நாம் அவைகளைக் கணக்கிடத் தொடங்குவோமானால் அதற்கு ஒரு முடிவேயிராது. இருபத்துநான்கு மணி நேரத்தில் நடைபெறும் காரியங்களையே மேலெழுந்தவாரியாய்ப் பார்த்தாலும் அவைகளின் தொகை எவ்வளவு அதிகமாகும் என்கிறீர்கள் ? உணவருந்துதல், நீரருந்துதல், இருத்தல், உறங்குதல், நடத்தல், சுற்றுதல், வேலைசெய்தல், எழுதுதல், பேசுதல், படித்தல் ஆகிய இவைகளைத் தவிர பலவகைக் கனவுகளும், விருப்புவெறுப்புக்களும், மான அவமானங்களும், இன்ப துன்பங்களும் என்று எண்ணிலடங்காத வகையில் அவை காணப்படும். இவை அனைத்தின் ஸம்ஸ்காரமும் நம் மனதில் ஏற்பட்டுக்கொண்டே இருக்கின்றன. ஆகையால் வாழ்க்கை என்பதென்னவென்று ஒருவர் என்னைக் கேட்பாராயின் நான் அதை ஸம்ஸ்காரங்களின் தொகுதி என்றே விளக்குவேன்.

ஸம்ஸ்காரம் நல்லது, தீயது என்ற இருவகையாயுள்ளது. இரண்டின் விளைவுகளும் மனித வாழ்க்கையில் ஏற்படுவன. சிறு பிராயத்தின் காரியங்களைப்பற்றி நமக்கு நினைவு இருப்பதில்லை ; பிள்ளைப் பிராயம் முழுமையுமே கற்பலகையில் எழுதி அழித்ததைப்போல் மறைந்து போகிறது. முன் ஜன்மத்தின் ஸம்ஸ்காரங்களோ நன்கு துடைத்துவிட்டதைப்போல் ஆய்விடுகின்றன. பூர்வ ஜன்மம் ஒன்று இருந்ததா, இல்லையா என்று சந்தேகிக்குமளவுக்கு அது அழிக்கப்பட்டுவிடுகிறது. இந்தப் பிறவியின் பிள்ளைப்பருவமே நினைவிலில்லாத பொழுது முன் பிறவியைப் பற்றிப் பேசுவானேன் ? முன் பிறவியை விட்டுவிட்டு நாம் இந்தப் பிறவியைப் பற்றியே ஆலோசிப்போம். நமக்கு எத்தனை காரியங்கள் நினைவிலிருக்கின்றனவோ அத்தனை தான் நடந்தவை என்று சொல்லுவதற்கில்லை. எத்தனையோ காரியங்கள் நடக்கின்றன ;

எத்தனையோ ஞானமும் பெறுகிறோம். ஆனால் இந்தக் காரியங்களும், ஞானமும் அழிந்துபோய் இறுதியில் சிறிது ஸம்ஸ்காரங்களே எஞ்சி நிற்கின்றன. இரவில் உறங்கு கையில் பகலில் நடந்த எல்லாக் காரியங்களையும் நாம் நினைத்துப் பார்க்க விரும்பினும் அவையெல்லாம் நினைவுக்கு வருவதில்லை. நினைவுக்கு வருபவை எவை? மிகவும் தெளிவாயும் நம் மனதைக் கவர்வனவாயும் இருந்தவையே நம் கண்முன் தோன்றுகின்றன. நாம் எவருடனாவது சண்டை சச்சரவு செய்திருந்தால் அது நினைவில் நிற்கிறது. ஏனெனில் அன்றைய முக்கிய மான சம்பாத்தியம் அதுவே. முக்கியமானவையும் தெளிவானவையுமான காரியங்களின் ஸம்ஸ்காரம் மனதில் ஆழ்ந்து பதிகிறது. முக்கியமான காரியம் நினைவிலிருக்க, மற்றவை எல்லாம் மங்கிப் போய்விடுகின்றன. நாம் தினக்குறிப்பு எழுதத் தொடங்கினால் இரண்டு மூன்று முக்கியமான விஷயங்களை மட்டும் எழுதுகிறோம். ஒவ்வொருநாளும் இவ்வாறு ஏற்படும் ஸம்ஸ்காரங்களையெல்லாம் கொண்டு ஒரு வாரக் கணக்குப் பார்ப்போமானால் இன்னும் பல விஷயங்கள் இதிலிருந்து அகற்றப்பட்டு விட முக்கியமானவைமட்டுமே எஞ்சி நிற்கும். மீண்டும் ஒரு மாதம் கழிந்தபிறகு நாம் நம் பிந்திய காரியங்களைக் கணக்குப்பார்க்க உட்காருவோமானால் அந்த மாதத்தில் மிகமிக முக்கியமானவை எவையோ அவைகளே நம் முன் தோன்றும். இவ்வாறே ஆறுமாதம், ஒருவருஷம், ஐந்து வருஷம் என்று கழிந்த காலக்கணக்கைப் பார்த்தோமானால் ஒரு சில முக்கியமான விஷயங்களே நினைவிலிருக்கும். அவைகளே ஸம்ஸ்காரங்கள். எண்ணிலடங்காத காரியங்கள் நடந்து, அளவிடமுடியாத ஞானம் கிடைத்திருந்தும் இறுதியில் மனதில் எஞ்சிநிற்பது மிகவும் குறைவே. அந்த வெவ்வேறு காரியங்களும் ஞானமும் வந்தன, தம் வேலையைச் செய்தன, போய்விட்டன. அந்த எல்லாக் காரியங்களிலும் ஐந்து அல்லது பத்து ஸம்ஸ்காரங்களே எஞ்சி நிற்பவை. இந்த ஸம்ஸ்காரங்களே நம் சொத்து. நாம் வாழ்க்கை என்ற வாணிபம் நடத்தி ஸம்ஸ்காரமென்ற சொத்தைச் சேர்க்கிறோம். வணிகன் அன்றாட வரவு செலவும், மாத, வருஷ வரவு செலவும் குறித்துவந்து இறுதியில் லாபம் அல்லது நஷ்டம் என்ற ஒரே எண்ணைக் குறிப்பதைப் போலவே வாழ்க்கையின் தன்மையும் இருக்

கிறது. பற்பல ஸம்ஸ்காரங்களை வரவு வைத்துக்கொண்டே போகையில் இறுதியில் மிகவும் திடமான வரம்பிற்குட்பட்ட சாரம் போன்ற பொருளொன்று எஞ்சிநிற்கிறது. வாழ்க்கையின் இறுதிக் கணம் வரும்பொழுது வாழ்க்கையின் இலாப நஷ்டக் கணக்கை, கடைசியாய்க் குறித்திருப்பதை ஆன்மா நினைத்துப் பார்க்கத் தொடங்குகிறது. வாழ்க்கை முழுமையும் தான் என்னென்ன செய்ததென்று அது நினைத்துப் பார்க்கையில் சேர்த்த சொத்தெல்லாம் இரண்டு மூன்று விஷயங்களுள் அடங்கிவிடுவது தெரிகிறது. இதற்கு அந்த எல்லாக்காரியங்களும், ஞானமும் வீண் போயின என்பது பொருளல்ல. அவைகளின் காரியம் ஆய்விட்டது. எத்தனையோ ஆட்டங்களுக்குப் பிறகு ஐயாயிரம் ரூபாய் இலாப—நஷ்டமோ அல்லது பத்தாயிரம் ரூபாய் இலாபமோதான் வணிகனுக்கு ஏற்படுகிறது. நஷ்டம் ஏற்பட்டால் சப்த நாடியும் ஒடுங்கிப் போய்விட, இலாபம் ஏற்பட்டாலோ உற்சாகத்தில் உள்ளம் துள்ளிக் குதிக்கிறது. நம் வாழ்க்கையின் நிலைமையும் இதுவே. இறக்கும்தருவாயில் ஏதேனும் சாப்பிட வேண்டுமென்று தோன்றுமானல் நாம் ஆயுள் முழுவதையும் சுவைத்துச் சுவைத்து உணவுண்ணும் பயிற்சியையே செய்துவந்தோம் என்பது ருஜுவாகிறது; உணவு அல்லது நாக்கு ருசி என்ற வாசனையே நாம் வாழ்க்கையில் சம்பாதித்த சொத்தாகிறது. ஒரு தாய்க்கு அவள் இறக்கும் தருணத்தில் பிள்ளையின் நினைவு வருமானல் அவளுக்கு பிள்ளைப் பாசம் என்ற ஸம்ஸ்காரமே பலமாய் இருக்கிறதென்று கொள்ளவேண்டும்; அவள் செய்த மற்ற எண்ணிலடங்காத காரியங்கள் அவ்வளவு முக்கியமானவை அல்ல என்பது தெளிவு. எண் கணிதத்தில் அபூர்வ எண்களைப்பற்றிய கேள்விகள் எழுவதுண்டு. பெரிய பெரிய எத்தனையோ எண்களிருக்கும். ஆனல் அவைகளைச் சுருக்கிக்கொண்டே போவோமானல் இறுதியில் ஒன்று அல்லது பூஜ்யம் என்ற விடையே கிடைக்கும். இவ்வாறே வாழ்க்கையில் ஏற்பட்ட ஸம்ஸ்காரங்களின் அநேக எண்கள் அடிபட்டுப் போய்விட ஒரேஒரு சக்தி வாய்ந்த ஸம்ஸ்காரம் மட்டும் சாரமாய் எஞ்சி நிற்கும். வாழ்க்கை என்ற கேள்விக்கு இது விடையாகிறது. இறுதிக் கணத்தில் எழும் எண்ணமே முழு வாழ்க்கையின் பயனைக் காட்டும்.

வாழ்க்கையின் இந்த முடிவான சாரம் இனியதாய்

அமையவேண்டும், இந்த இறுதிக் கணம் இனியதாய் இருக்க வேண்டும் என்ற நோக்குடன் வாழ்க்கையின் எல்லா முயற்சிகளும் நடந்துவர வேண்டும். எவனுடைய இறுதி இனியதோ அவனுடைய வாழ்க்கை முழுதுமே இனிது. அந்த இறுதி விடையைக் கவனித்து வாழ்க்கைப் பிரச்னையைத் தீர்க்கவேண்டும். இந்த இலட்சியத்தைக் கருத்தில் கொண்டு வாழ்க்கை முழுவதையும் திட்டம் செய்துகொள். ஏதேனும் ஒரு கேள்விக்கு விடை தரும் பொழுது கேள்வியில் எது முக்கியமான அம்சமோ அதைக் கருத்தில் கொண்டு விடையளிக்கிறோம்; அதே முறையில் நாம் செய்யவேண்டும். ஆகையால் இறக்கும் தருவாயில் எந்த ஸம்ஸ்காரம் உறுதியாயிருக்கவேண்டும் என்று விரும்புகிறோமோ அதை அனுசரித்து நம் வாழ்க்கையின் போக்கை அமைக்கவேண்டும்; அல்லும் பகலும் அவ் வழியிலேயே வாழ்க்கை செல்லவேண்டும்.

## (37) சாவின் நினைவு இருக்கட்டும்

இந்த அத்தியாயத்தில், எந்த எண்ணம் தருவாயில் மேலெழுந்து நிற்கிறதோ அதுவே அடுத்த ஜன்மத்தில் வலுவுள்ளதாகிறது என்ற தத்துவம் சொல்லப் பட்டிருக்கிறது. இந்தச் சோற்று மூட்டையை உடன் கொண்டு ஜீவன் மேலே யாத்திரைக்குப் புறப்படுகிறான். இன்று பகலில் சம்பாதித்ததை எடுத்துக்கொண்டு உறக்கத் திற்குப் பின் நாளைய தினத்தைத் தொடங்குகிறோம். அவ் வாறே இந்த ஜன்மத்தில் சேர்த்த சொத்துடன் மரணம் என்ற உறக்கத்திற்குப் பிறகு நமது யாத்திரை மீண்டும் தொடங்குகிறது. இந்த ஜன்மத்தின் இறுதியே வரும் ஜன்மத்தின் தொடக்கமாகிறது. ஆகையால் எப்பொழுதும் மரணத்தை நினைவில் வைத்துக்கொண்டே நட.

சாவை நினைத்துக் கொண்டிருப்பதற்கு உள்ள மற் றொரு காரணம், சாவினிடம் ஏற்படும் பயத்தைச் சமாளித்து அதைக் கடத்தல் நமக்குச் சுலபமாக வேண்டும் என்பது. ஏகநாத சுவாமிகளைப் பற்றிய ஒரு செய்தியுண்டு. ஒருவர் அவரிடம், " சுவாமி, தங்கள் வாழ்க்கை எவ்வளவு சிக்கலற்றதாய், பாபமற்றதா யிருக்கிறது! எங்கள் வாழ்க்கை ஏன் அவ்வாறு இல்லை? தாங்கள் எவரையும் கோபிப்பதில்லை. எவரிடமும் சண்டை—சச்சரவோ, விரோ

தமோ, வழக்கோ இல்லை. தங்களுடைய சுபாவம் எவ்வளவு அமைதியும் அன்பும் பொருந்தியதாய், எவ்வளவு புனிதமா யிருக்கிறது!'' என்றார். அதற்கு ஏகநாதர், ''இப் பொழுதைக்கு என் விஷயம் இருக்கட்டும். உன்னைப்பற்றி எனக்கொரு விஷயம் தெரிய வந்திருக்கிறது. இன்றி லிருந்து ஏழாம் நாள் நீ இறந்து போவாய்'' என்றார். ஏகநாதர் வாயிலிருந்து வந்ததை யார்தான் பொய் என்று எண்ணுவார்கள்? ஏழு நாளில் சாவு, நூற்றறுபத்தெட்டு மணி நேரம்தான் பாக்கியிருக்கிறது! ஏ கடவுளே! இதென்ன ஆபத்து! அந்த மனிதன் அவசர அவசரமாய் வீட்டிற்கு ஓடோடியும் சென்றான். அவனுக்கு ஒன்றுமே புரியவில்லை. இறுதிக்காலம் பற்றிய எல்லாவற்றையும் முடித்துக் கொள்வதாய்ப் பேசிக்கொண்டிருந்தான். இப் பொழுது அவனுக்கு நோய் உண்டாய்விட்டது. படுக்கை யில் நீட்டிப் படுத்துவிட்டான். ஆறு நாட்கள் கழிந்தன. ஏழாம் நாள் ஏகநாதர் அவனைப் பார்க்கவந்தார். அவன் நமஸ்காரம் செய்தான். ஏகநாதர், ''என்ன விசேஷம்?'' என்றார். அவன், ''எல்லாம் ஆயிற்று; இனிப் போகவேண்டியதுதான்!'' என்றான். ஏகநாதர், ''இந்த ஆறு நாட்களில் எவ்வளவு பாவம் செய்தாய்? எத்தனை பாவ எண்ணங்கள் மனதில் உதித்தன?'' என்றார். மரணத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தவன், ''நாதரே, தீயவிஷயங்களைக் குறித்து எண்ணுவதற்கு நேரமே கிட்ட வில்லையே! மரணம்தான் சதா கண்முன் நின்று கொண் டிருக்கிறதே!'' என்றான். ஏகநாதர், ''என் வாழ்க்கை இவ்வளவு பாவமற்றதாய் இருப்பதற்குக் காரணம் என்ன வென்று இப்பொழுது புலனாய்விட்டதல்லவா? மரணம் என்ற சிங்கம் எப்பொழுதும் எதிரே நின்றுகொண்டிருக் கையில் எவருக்குத் தீய எண்ணங்கள் தோன்றும்? பாவம் செய்வதற்கும் கவலையற்ற நிலை இருக்கவேண்டும். சாவைப் பற்றி எப்பொழுதும் நினைத்துக்கொண்டிருத்தல் பாவத்தி லிருந்து தப்புவதற்குள்ள ஒரு உபாயமாகும். மரணம் எப்பொழுதும் எதிரில் நின்றுகொண்டே யிருக்குமானால் மனிதன் எந்தத்தென்பைக்கொண்டு பாவம் புரிவான்?'' என்றார்.

ஆனால் மனிதன் மரணத்தின் நினைவு தோன்றாமல் செய்துகொண்டே இருக்கிறான். பாஸ்கல் என்ற பிரஞ்சு விஞ்ஞானி ஒருவர் இருந்தார். அவர் 'பாஸே' என்ற

புத்தகமொன்று எழுதியிருக்கிருர். 'பாஸே' என்பதற்கு 'சிந்தனைகள்' என்பது பொருள். அவர் அந்தப் புத்தகத்தில் பற்பல கருத்துக்களை வெளியிட்டிருக்கிருர். அதில் அவர் ஒரு இடத்தில், "மரணம் எப்பொழுதும் பின்னுல் நின்றுகொண்டிருக்கிறது. ஆனுல் அதை மறப்பதற்காக மனிதன் எப்பொழுதும் முயற்சி செய்த வண்ணமிருக்கிருன்; மரணத்தை நினைத்துக்கொண்டே நடப்பது எப்படி என்பதை அவன் எண்ணுவதேயில்லை" என்கிருர். மனிதனுக்கு மரணமென்ற சொல்லைக் கேட்கவே பிடிப்பதில்லை. உணவருந்தும் பொழுது எவரேனும் 'சாவு' என்று சொல்லிவிட்டால் போதும், 'என்ன அச்சான்யமான வார்த்தை சொல்லுகிருயே!' என்கிருன். இவ்வாறிருந்தும் நாம் வைக்கும் ஒவ்வொரு அடியும் மரணத்தை நோக்கியே நம்மை இட்டு ஏகிக்கொண்டிருக்கிறது. பம்பாய்க்கு டிக்கெட் வாங்கிக்கொண்டு நாம் ரயிலில்போய் உட்கார்ந்துவிட்டோமாஞல் நாம் இருந்த இடத்திலிருந்து நகராதிருந்தபோதிலும் வண்டி நம்மை பம்பாயில் கொண்டு போய்ச் சேர்த்தேவிடும். பிறவி எடுத்ததுமே நாம் சாவுக்குரிய டிக்கெட் வாங்கிக் கொண்டவர்களாய் விட்டோம். இப்பொழுது நீங்கள் உட்கார்ந்து கொண்டிருங்கள், அல்லது ஓடிக் கொண்டேயிருங்கள்; உட்கார்ந்து கொண்டேயிருந்தாலும் மரணம் வரும், ஓடிக்கொண்டிருந்தாலும் வரும். நீங்கள் மரணத்தைப்பற்றி எண்ணிஞலும் சரி, எண்ணுதிருந்தாலும் சரி அது வராதிராது. மற்ற விஷயங்கள் உறுதியில்லாது போயினும் மரணம் என்பது மட்டும் உறுதி. சூரியன் மேற்கு அடிவானத்தில் மறையும் பொழுது நம் ஆயுளின் ஒரு பகுதியை அது உண்டு விட்டது என்று ஆயிற்று. வாழ்க்கையின் பகுதிகள் இவ்வாறு குறைந்துகொண்டே போகின்றன; வாழ்க்கை தேய்ந்து கொண்டே போகிறது; ஒவ்வொரு துளியாக வாழ்க்கைக் குடத்தின் நீர் குறைந்துகொண்டே போகிறது. ஆயினும் மனிதனுக்கு அதைப்பற்றிச் சிறிதும் கவலை இருப்பதில்லை. ஞானேச்வரர், "என்ன விந்தை இது?" என்கிருர். ஞானதேவருக்கு மனிதர் இவ்வாறு கவலையற்றிருப்பது குறித்து வியப்புண்டாகிறது. மனிதனுக்கு மரணமென்ற எண்ணமே பொறுக்கமுடியாமல் போகும் அளவுக்கு அதனிடம் பயம் ஏற்படுகிறது. அவன் எப்

பொழுதும் அந்த எண்ணமே உண்டாகாதிருக்கும்படி செய்துகொள்ளப் பார்க்கிறன். கண்கள்மீது துணியைக் கட்டிக்கொண்டு உட்கார்ந்து விடுகிறன்; போருக்குப் போகும் சிப்பாய்கள் மரணத்தின் எண்ணமே தோன்ரு திருக்கும்பொருட்டு விளையாடுகிறர்கள்; ஆடிப்பாடுகிறர் கள்; சிகரெட் குடிக்கிறர்கள். பாஸ்கல், "எங்கும் மரணம் நேருக்கு நேராய்க் காணப்பட்ட போதிலும் இந்த டாமி (சிப்பாய்) அதை மறப்பதற்காக உணவிலும் குடியிலும் பாட்டிலும் கூத்திலும் ஆழ்ந்து போய் இருக்கிறன்" என்கிறர்.

நாம் அனைவரும் அந்த 'டாமி'யைப் போலவே இருக்கிறேம். முகத்தை மலர்ச்சியுள்ளதாய், சந்தோஷ மானதுபோல் வைத்துக் கொள்ளவும், உலர்ந்து போயிருந் தால் எண்ணெய் தேய்த்து பௌடர் பூசுதல், தலை நரைத் துப்போயிருந்தால் அதில் கூந்தல் மை பூசுதல் ஆகிய வற்றையும் மனிதன் செய்கிறன். நம் மார்பின் மீது மரணம் நர்த்தனம் செய்துகொண் டிருக்கிறது; ஆயினும் நாம் டாமியைப்போல அதை மறப்பதற்கு முடிவில்லாத முயற்சி செய்துகொண் டிருக்கிறேம். நாம் வேறு எதைப் பற்றி வேண்டுமானுலும் பேசிக்கொண்டிருப்போம்; ஆனல் 'மரணமென்ற பேச்சையே எடுக்காதே' என்போம். மெட்ரிக் பரீக்ஷை தேறிய பையனிடம், "மேலே என்ன உத்தேசம்?" என்று கேட்டால் அவன், "இப்பொழுது கேட்காதீர்கள். இப்பொழுது முதல் வருஷம் (ஜூனியர் இண்டர்) தானே நடக்கிறது" என்பான். இரண்டாம் வருஷம் மீண்டும் விசாரித்தீர்களானுல், "முதலில் இண்டர் பூர்த்தி யாகட்டும். பிறகு பார்த்துக்கொள்வோம்" என்பான். இதே வகையில் எல்லாம் நடந்துகொண்டே போகிறது. இனிமேல் நடக்க விருப்பதைக் குறித்து முன்கூட்டியே சிந்திக்க வேண்டாமா? எடுத்து வைக்கப்போகும் அடுத்த அடியைப்பற்றி முன்பே யோசித்து வைக்க வேண்டாமா? இல்லையேல் அது நம்மைப் படுகுழியில் கொண்டுபோய் இறக்கிவிடக்கூடுமே! ஆனல் மாணவன் இதைத் தட்டிக் கழிக்கிறன். பாவம், அவன் படிக்கும் படிப்பே அக்கரையில் என்ன இருக்கிறதென்பது புலனுகாதிருக்குமாறு இருள் அடர்ந்ததாய் உள்ளது. ஆகையால் மேலே செய்ய வேண்டியது என்ன என்ற கேள்வி எழாமல் அவன் பார்த்துக்கொள்கிறன். ஏனெனில், அவனுக்கு நாற்புறமும்

தென்படுவது இருளே. ஆனால் வரப்போவதைத் தட்டிக் கழிக்க முடியாது. அது வந்தே தீரும்.

கல்லூரியில் பேராசிரியர் தர்க்க சாஸ்திரம் போதிக்கிறார்: "மனிதன் இறக்கக்கூடியவன். சோக்ரத்தன் மனிதன். ஆகையால் சோக்ரத்தன் இறப்பான்," என்று அனுமான தத்துவத்தைப் போதிக்கிறார். அவர் சோக்ரத்தரை உதாரணமாய்ச் சொல்லுகிறாரே, தம்மையே உதாரணமாய் ஏன் சொல்லக்கூடாது? பேராசிரியரும் மரணத்திற் குரியவரே. "எல்லா மனிதர்களும் இறக்கக் கூடியவர்கள். ஆகையால் பேராசிரியனாகிய நானும் இறத்தற் குரியவன்; மாணவர்களாகிய நீங்களும் இறக்கக் கூடியவர்க"ளென்று அவர் போதிக்கமாட்டார். அவர் மரணத்தை சோக்ரத்தரிடம் தள்ளிவிடுவார். ஏனெனில், சோக்ரத்தர்தான் இறந்து போனவராயிற்றே; அவர் ஆக்ஷேபிப்பதற்கு எதிரில் இல்லை என்ற தைரியம்! சீடர்களும் குருவும் மரணத்தை சோக்ரத்தரிடம் ஒப்புவித்து விட்டு 'நானும் நீங்களும்' என்று ஒத்துப் பேசிக்கொண்டு இருந்துவிடுகிறார்கள். அவ்வாறு இருந்துவிட்டால் தமக்கு ஆபத்தில்லை என்பது அவர்கள் எண்ணம் போலும்!

இவ்வாறு மரணத்தை மறப்பதற்கான முயற்சி எல்லா விடங்களிலும் வேண்டுமென்றே நடந்துகொண்டிருக்கிறது. ஆனால் இதனாலெல்லாம் மரணத்தைத் தவிர்க்க முடியுமா? நேற்று தாய் இறந்தபொழுது மரணம் எதிரில் வந்து நின்றது. மனிதன் அஞ்சாது மரணத்தைக் குறித்துச் சிந்தித்து அதைக் கடப்பதற்கான வழியைக் கண்டுபிடிக்கத் துணிவதில்லை. ஒரு மானை ஒரு சிங்கம் துரத்திக்கொண்டு போகிறது. சபலத் தன்மை உள்ளதாகையால் மான் நாற்கால் பாய்ச்சலில் ஓடுகிறது. ஆனால் போகப்போக அதன் சக்தி குறைந்துகொண்டே வந்து இறுதியில் களைத்துப் போகிறது. பின்னாலோ சிங்கமென்ற யமன் ஓடிவந்துகொண்டே இருக்கிறது. அச்சமயத்தில் அந்த மானின் நிலை எவ்வாறிருக்கும்? சிங்கத்தின் பக்கம் பார்க்கவும் அதற்கு முடியவில்லை. அது தரையில் தன் கொம்புகளையும் முகத்தையும் நுழைத்துக்கொண்டு ஆதரவற்று நின்றுவிடுகிறது. "இப்பொழுது நீ வந்து என்னைச் சாப்பிடலாம்" என்று அழைப்பது போலிருக்கிறது அது நின்றுகொண்டிருப்பதைப் பார்த்தால். நாம் மரணத்தை

நம் எதிரில் பார்க்க விரும்புவதில்லை. நாம் அதன் கையி லிருந்து தப்புவதற்காக ஆயிரம் உபாயங்கள், யுக்திகள் செய்தபோதிலும் அது தன் பேராற்றலினுல் இறுதியில் நம் கழுத்தைப் பிடித்து நெறித்தேவிடுகிறது.

மரணம் வரும்பொழுது மனிதன் தன் வாழ்க்கையின் வரவு செலவுக் கணக்கைப் புரட்டி மிச்ச மென்னவென்று பார்க்கிருன். பரீக்ஷை எழுத உட்கார்ந்திருக்கும் சூடிகை யில்லாத சோம்பேறிப் பையன் மைக்கூட்டில் பேனுவை இடுவதும் எடுப்பதுமாய் இருக்கிருனே தவிர வெள்ளைக் காகிதத்தைக் கறுப்பாக்குவதற்கு அவனுக்குத் துணிவு ஏற்படுவதில்லை. தம்பீ, நீ ஏதாவது எழுதப்போகிருயா, இல்லையா? சரசுவதி தேவி வந்து உன் பேனுவைப் பிடித்து உனக்காக எழுதப்போவதில்லையே! மூன்றுமணி நேரமும் முடிந்துபோகிறது, அவன் காகிதத்தை அப்படியே மடித்துக் கொடுத்துவிடுகிருன்; அல்லது ஏதோ நான்கு வரி கிறுக்கிக் கொடுத்துவிட்டுப் போகிருன்; கேள்வி களுக்கு பதில் எழுதவேண்டும், கணக்குகளுக்கு விடைகள் கண்டுபிடிக்க வேண்டும் என்றே அவனுக்குத் தோன்றுவ தில்லை; இங்கு பார்ப்பதும் அங்கு பார்ப்பதுமாய் இருந்து விடுகிருன். நம் நிலைமையும் அப்படியேதானிருக்கிறது. ஆகையால் வாழ்க்கையின் மறு முனை மரணத்தை நோக்கிப் போய்க்கொண் டிருக்கிறது என்பதை நினைவிலிருத்திக் கொண்டு இறுதிக் கணத்தைப் புண்ணியமயமாய் புனித மானதாய் இனியதாய்ச் செய்வதற்கு ஆயுள் முழுதும் நாம் பயின்றுகொண்டே இருக்கவேண்டும். இன்று முதலே மனதில் மிகவும் உயர்ந்த மிகமிக அழகிய ஸம்ஸ்காரங்கள் பதிவதற்கு நாம் செய்யவேண்டிய தென்ன என்பதைக் குறித்துச் சிந்தித்தவண்ண மிருக்கவேண்டும். ஆனுல் நல்ல ஸம்ஸ்காரங்களின் பயிற்சியைப்பற்றி யாருக்குக் கவலை? இதற்கு மாருக, அல்லும் பகலும் தீய விஷயங் களின் பயிற்சி நடந்துகொண்டே யிருக்கிறது. நாவிற்கும் கண்களுக்கும் காதுகளுக்கும் சபலத்தில் பயிற்சியளித்துக் கொண்டே யிருக்கிருேம். சித்தத்திற்கு வேறுவகைப் பயிற்சி அளிக்கவேண்டும். நல்ல விஷயங்களில் சித்தத்தை ஈடுபடுத்த வேண்டும். அதிலேயே அது தோய்ந்து போக வேண்டும். எந்தக் கணத்தில் நமக்கு நம் பிழை புலனு கிறதோ அந்தக் கணத்திலிருந்தே அதைத் திருத்திக் கொள்வதில் முனைந்துவிட வேண்டும். பிழை என்று

தெரிந்தபிறகும் அதை அப்படியே செய்துகொண்டிருப் போமா? எப்பொழுது நமக்கு நம் பிழை புலனாயிற்றோ அப்பொழுதே நாம் மறு பிறப்பு எடுத்தது போலாயிற்று. அதை நமது புதிய பிள்ளைப் பருவம், வாழ்க்கையின் புதிய காலை என்று எண்ணிக்கொள். இப்பொழுது நீ உண்மையிலேயே விழித்துவிட்டாய். இனி அல்லும் பகலும் வாழ்க்கையை ஆராய்ந்து பார்த்துக்கொண்டே எச்ச ரிக்கையாய் இருந்துவா. இவ்வாறு செய்யாவிடில் மீண் டும் வழுக்கிவிழுவாய்; தீய பழக்கங்கள் ஆரம்பமாய்விடும்.

பல வருஷங்களுக்கு முன் நான் என் பாட்டியைப் பார்க்கப் போயிருந்தேன். அவருக்கு வயது மிகவும் அதிகமாய்விட்டது அவர், "வின்யா, எனக்கு இப் பொழுது ஞாபக சக்தியே போய்விட்டது. நெய்க் குவளை எடுப்பதற்காகப் போகிறேன். ஆனால் அதை மறந்து திரும்பிவிடுகிறேன்" என்றார். ஆனால் ஐம்பது வருஷங் களுக்கு முன் நடந்த நகையைப்பற்றிய ஏதோ ஒரு விஷ யத்தை என்னிடம் சொல்லிக்கொண்டிருந்தார். ஐந்து நிமிஷங்களுக்கு முன் நடந்தது நினைவில்லை; ஐம்பது வருஷத்திற்கு முந்திய உறுதியான ஸம்ஸ்காரம் இறுதி வரை மங்காதிருந்தது. இதற்குக் காரணம் என்ன? அந்த நகையின் விஷயத்தை அவர் ஒவ்வொருவரிடமும் சொல்லிக் கொண்டேயிருந்திருப்பார். அது மீண்டும் மீண்டும் சொல்லப்பட்டதொன்று. ஆகையால் அது வாழ்க்கையுடன் ஒட்டிக்கொண்டிருந்துவிட்டது; வாழ்க் கையுடன் கலந்துவிட்டது. நான் மனத்துள், "கடவுளே, பாட்டிக்கு மரணத் தருவாயில் அந்த நகைகளின் நினைவு வராதிருக்கும்படி செய்ய வேண்டும்! அப்பொழுதுதான் அவள் இறப்பாள்" என்று சொல்லிக்கொண்டேன்.

## (38) அதிலேயே எப்பொழுதும் தோய்ந்திரு

நாம் அல்லும் பகலும் எந்த விஷயத்தைப் பயின்று வருகிறோமோ அது நம்முடன் ஏன் ஒட்டிக்கொள்ளாது? அந்த அஜாமிளனுடைய கதையைப் படித்துவிட்டு ஏமாறு தீர்கள். அவன் வெளிப் பார்வைக்கு பாவியாயிருந்த போதிலும் அவன் வாழ்க்கையில் உள்ளுக்குள் புண்ணியம் பெருக்கெடுத்து ஓடிக்கொண்டிருக்கிறது. அந்தப் புண்

ணியம் இறுதிக் கணத்தில் தலைதூக்கி நின்றது. எப் பொழும் பாவமே செய்துகொண்டிருந்தால் இறுதி நேரத் தில் தவருமல் ராமநாமம் நினைவுக்கு வரும் என்று எண்ணி ஏமாற வேண்டாம். சிறு பிராயம் முதலே மனதைச் செலுத்திப் பயிற்சி செய். எப்பொழுதும் நல்ல ஸம்ஸ் காரங்களே நம்மிடம் சேர வேண்டுமென்ற எண்ணம் கொண்டிரு. இதனுலென்ன, அதனுலென்ன, நான்கு மணிக்கு ஏன் எழவேண்டும், ஏழு மணிக்கு எழுந் தால் என்ன கெட்டுப்போகும் என்றெல்லாம் சொல்லாதே. இவ்வாறெல்லாம் சொல்லுவதனுல் காரியம் நடைபெருது. மனதை இவ்வாறு அதுபோகும் வழியில் விட்டுக்கொண் டிருப்பாயாகில் இறுதியில் ஆபத்தில் சிக்கிக்கொள்வாய். பிறகு நல்ல ஸம்ஸ்காரங்கள் பதியமாட்டா. ஒவ்வொரு துணுக்காக லக்ஷ்மியை, செல்வத்தைச் சேர்க்க வேண்டி யிருக்கிறது ; ஒவ்வொரு கணத்தையும் பாழ்படுத்தாது கல்வி கற்பதில் செலவிட வேண்டியிருக்கிறது. ஒவ்வொரு கணமும் நல்ல ஸம்ஸ்காரங்களே ஏற்படுகின்றனவா இல்லையா என்று கவனித்து வாருங்கள். தீய சொல் லொன்று வாயிலிருந்து வந்ததென்ருல் அப்பொழுதே தீய ஸம்ஸ்காரம் ஒன்று ஏற்பட்டுவிட்டது. நம்முடைய ஒவ் வொரு செயலும் ஒரு உளியாகி நம் வாழ்க்கை என்ற கல் லிற்கு உருவை அளிக்கிறது. பகற்பொழுது நன்கு கழிந்த போதிலும் கனவில் கெட்ட எண்ணங்கள் தோன்று கின்றன. ஐந்து, பத்து நாளைய எண்ணங்களே கன வில் தோன்றும் என்பதல்ல. எத்தனையோ தீய ஸம்ஸ் காரங்கள் நம்மனத்துள் மறதித் திரையுள் மறைந்து கிடக் கின்றன. அவை எப்பொழுது எழுமென்று சொல்லுவதற் கில்லை. ஆகையால் சின்னஞ் சிறு விஷயங்களிலும் நாம் விழிப்புடனிருக்க வேண்டும். நீரில் மூழ்குவோனுக்கு ஒரு துரும்பும் தெப்பமாகிறது. நாம் சம்சார சாகரத்தில் மூழ் கிக் கொண்டிருக்கிருேம். நாம் ஒரு நல்ல வார்த்தை சொன்னுல் அதுவும் நமக்கு உதவியாகும். செய்த நல்ல காரியம் வீண் போவதில்லை. அது உன்னைக் கரையேற் றும். தீய ஸம்ஸ்காரம் சிறிதளவும் ஏற்படக்கூடாது. கண்கள் புனிதமாய் இருக்கவும், காதுகள் தூஷணையைக் கேளாதிருக்கவும், வாய் நல்ல விஷயங்களையே பேசவும் எப்பொழுதும் பயிற்சி நடந்துகொண்டிருக்கட்டும். இவ் வாறு எச்சரிக்கையாய் இருந்து வருவாயாளுல் இறுதிக்

காலத்தில் அதிர்ஷ்டச் சீட்டு விழும். வாழ்வுக்கும் சாவுக்கும் நாமே அதிகாரிகள் ஆவோம்.

புனிதமான ஸம்ஸ்காரங்கள் உண்டாக்கிக் கொள்வதற்கு மனதில் எப்பொழுதும் உயர்ந்த எண்ணங்கள் உலவிக்கொண்டிருக்கச் செய்ய வேண்டும். கைகள் புனிதமான காரியங்களில் ஈடுபட்டிருக்க வேண்டும். அகத்தில் ஆண்டவன் நினைவும் புறத்தே சுதர்மம் புரிதலும், கைகளினுல் சேவை என்ற தர்மமும் மனதில் விகர்மமுமாக தினமும் செய்துகொண்டே இருக்க வேண்டும். காந்திஜியைப் பாருங்கள்; ஒவ்வொரு நாளும் அவர் ராட்டையில் நூற்கிருர்; அவர் பிரதி தினமும் நூற்க வேண்டுமென்று வற்புறுத்துகிருர். பிரதி தினமும் ஏன் நூற்க வேண்டும்? துணிக்காக எப்பொழுதேனும் நூற்று வந்தால் போதாதா? அவ்வாறு செய்வது சாதாரண, உலக நடவடிக்கையாகும். பிரதி தினமும் நூற்பதில் பாரமார்த்திகம் இருக்கிறது. நாட்டிற்காக ஏதேனும் செய்ய வேண்டும் என்று நான் எண்ணுவதை இது குறிக்கிறது. நாம் நூற்கும் அந்நூல் நம்மை பிரதி தினமும் தரித்திரநாராயணனுடன் சேர்த்துப் பிணைக்கிறது. அந்த ஸம்ஸ்காரம் உறுதி பெறுகிறது.

வைத்தியர் நம்மை பிரதி தினமும் மருந்து சாப்பிடச் சொல்லுகிருர். ஆனல் நாம் எல்லா மருத்தையும் ஒரே நாளில் சாப்பிட்டுவிட்டாலென்ன? அது பெரிய தவருகிவிடும். மருந்து சாப்பிடுவதன் நோக்கம் அப்பொழுது நிறைவேருது. மருந்தின் ஸம்ஸ்காரம் ஒவ்வொரு நாளும் ஏற்படும்படிச் செய்து இயற்கையின் கோளாறுகளைப் போக்க வேண்டும். வாழ்க்கையின் விஷயமும் இப்படிப் பட்டதே. சிவன்மீது சிறிது சிறிதாகவே அபிஷேகம் செய்யவேண்டியிருக்கிறது. எனக்குப் பிடித்தமான உதாரணம் இது. சிறு பிராயத்தில் நான் இதைப் பார்த்திருக்கிறேன். இருபத்து நான்கு மணி நேரமும் செய்யப்படும் அபிஷேக நீரைச் சேர்த்துப் பார்த்தால் இரண்டு வாளி இருக்கும். அந்த இரண்டு வாளி நீரையும் ஒரே தடவையில் எடுத்து சிவலிங்கத்தின்மீது ஊற்றிவிட்டால் என்ன? இதற்கு பதில் என் சிறு வயதிலேயே எனக்குச் சொல்லப்பட்டுவிட்டது. நீரை ஒரே மூச்சில் ஊற்றுவதனுல் அந்தக் கர்மம் பயனுள்ளதாகாது. ஒவ்வொரு சொட்

டாய் நீரை ஊற்றுவதுதான் உபாசனே. ஒரே வகையான ஸம்ஸ்காரங்கள் இடையருது நீரொழுக்கைப்போல் ஏற்பட்டுக்கொண்டே யிருக்க வேண்டும். எந்த ஸம்ஸ்காரம் காலேயில் ஏற்பட்டதோ, அதுவே உச்சிவேளேயிலும் அதுவே மாலேயிலும், அதுவே பகலிலும், இரவிலும், அதுவே நேற்றும் இன்றும், இன்று எதுவோ அதுவே நாளேயும், இவ்வாண்டிலெதுவோ அதுவே வரும் ஆண்டிலும், இந்த ஜன்மத்தில் எதுவோ அதுவே வரும் ஜன்மத்திலும், வாழ்வில் எதுவோ அதுவே இறக்கும் தருவாயிலும் என்று ஸம்ஸ்காரங்களின் ஒவ்வொரு துளியாய்ச் சேர்ந்து அமையும் தெய்வீக ஒழுக்கு வாழ்க்கையில் இடையருது பெருகிக்கொண்டே இருக்க வேண்டும். இத்தகைய ஸம்ஸ்கார ஒழுக்கு இடையருது இருந்துகொண்டே வந்தால்தான் நாம் இறுதியில் வெற்றியைக் காணக்கூடும். அப்பொழுது தான் நாம் சேர வேண்டிய இடத்திற் போய்ச் சேர்ந்து வெற்றிக்கொடியை நாட்ட முடியும். ஸம்ஸ்காரங்களின் நீரோட்டம் ஒரே திசையை நோக்கிச் செல்லுவதாயிருக்க வேண்டும். இல்லேயேல் அது மலேயின்மீது விழும் அருவி நீர் பல திசைகளிலும் ஓடி ஆருகாது போவதைப்போல் ஆய்விடும். இதற்கு மாருக, எல்லா நீரும் ஒரே திசையில் ஓடுமாஞல் அருவி சிற்ருருகி, சிற்ருறு பேராருகி, பேராறு கங்கையைப் போன்று மிகப்பெரிய ஆருகி சமுத்திரத்தில் போய்க் கலக்கும். ஒரே திசையில் ஓடும் ஆறு கடலில் போய்க் கலக்கிறது. ஆஞல் நாற்றிசையிலும் ஓடும் நீரோ சிறிது தூரம் சென்றதும் நின்று போய்விடும். இதுவே தான் ஸம்ஸ்காரங்களின் விஷயத்திலும். ஸம்ஸ்காரங்கள் வருவதும் போவதுமாய் இருந்தால் அவைகளிஞல் பயனென்ன? வாழ்க்கையில் ஸம்ஸ்காரங்களின் புனித நீரோட்டம் இடையருது பெருகிக் கொண்டிருந்தால்தான் இறுதியில் வரும் மரணம் பேரானந்தத்தைத் தருவதாய்த் தோன்றும். எந்தப் பிரயாணி வழியில் அதிகம் தாமதியாமல், வழியில் ஏற்படும் மோகங்களுக்கும், ஆசைகளுக்கும் தப்பி சிரமமான ஏற்றப் பாதைகளிலும் காலே உறுதியாய் எடுத்து வைத்து ஏறி மலே உச்சியில் போய்ச் சேருகிருனே அவன் மேலே போனதும் முதுகில் கட்டியிருந்த மூட்டைகளேயெல்லாம் அவிழ்த்தெறிந்துவிட்டு அவ்விடத்தில் விட்டு வீசும் காற்றை அனுபவிக்கத் தொடங்குவான். அவனுக்கு உண்டாகும் ஆனந்தத்தைப் பிறர் உணர முடி

யுமா ? ஆனால் வழியிலேயே நின்றுவிடும் பிரயாணிக்காக சூரியன் நிற்குமா ?

## (39) அல்லும் பகலும் போர்

கருத்தென்னவென்றால், புறத்தே சுதர்மம் இயற்றலும் அகத்தே ஆண்டவனை நினைத்தல் என்ற சித்தசுத்திக்கான கிரியையும் என்று இந்தக் கர்ம—விகர்மம் என்ற நீரொழுக்கு அகத்திலும் புறத்திலும் பெருகிக்கொண்டேயிருக்குமானால் மரணம் ஆனந்தமளிப்பதாய் அமையும். இதனாலேயே பகவான்,

तस्मात् सर्वेषु कालेषु मामनुस्मर युद्धय च

(தஸ்மாத் ஸர்வேஷு காலேஷு மாமனுஸ்மர யுத்ய ச)

'என்னை இடையறாது நினைத்துக்கொண்டு போர் புரிந்து கொண்டேயிரு' என்கிறார். "सदा मद्भाव मागत: (ஸதா மத்பாவ மாகத:)" என்றபடி, எப்பொழுதும் ஆண்டவனிடம் ஆழ்ந்திரு. அகமும் புறமும் ஆண்டவன் அன்பிலேயே தோய்ந்துபோய் அந்த அன்பே வாழ்க்கை எங்கும் பரவிவிடும்பொழுது புனிதமான விஷயங்களில் எப்பொழுதும் ஆனந்தம் தோன்றத் தொடங்கும் ; அப்பொழுது தீய போக்குகள் எதிரில் வரவேமாட்டா. அழகிய சிறந்த ஆவல்கள் மனத்துள் முளைக்கத் தொடங்கும். நல்ல காரியங்கள் தாமே உருப்பெற ஆரம்பிக்கும்.

ஆண்டவனை நினைத்துக்கொண்டிருப்பதால் நல்ல காரியங்கள் தாமே நடைபெறத் தொடங்கும் என்பது சரியே. ஆனால் 'இடையறாது போர் புரிந்து கொண்டிரு' என்பதும் பகவானுடைய கட்டளையாயிற்றே. துகாராம சுவாமிகள்,

**" அல்லும் பகலும் நமக்கு யுத்தத்தின் முனைப்பே**
**அகத்தும் புறத்தும் உலகிலும் மனதிலும் " ***

என்கிறார். அகத்தும் புறத்தும் எல்லையற்ற சிருஷ்டி பரவியிருக்கிறது. இந்த சிருஷ்டியுடன் மனம் இடையறாது போரிட்டவண்ணமிருக்கிறது. இந்தப் போரில் ஒவ்வொரு

* रात्रंदिन आम्हां युद्धाचा प्रसंग ।
अंतर्बाह्य जग आणि मन ॥

முறையும் வெற்றியே ஏற்படுமென்று சொல்லுவதற்கில்லை. இறுதியைக் காண்போனே உண்மையான வெற்றிவீரன்; இறுதி முடிவே உண்மை முடிவு. பல தடவைகளில் புகழ் கிட்டுமாயின் பல முறை பழியும் கிட்டும். பழி அல்லது தோல்வி கிடைக்குமாயின் அதற்காகச் சோர்வுறுவானேன்? கல்லின்மீது பத்தொன்பது அடி அடித்தும் அது உடைய வில்லை; இருபதாவது அடி விழுந்ததும் அது நிச்சயம் உடையும் என்னும்பொழுது முந்திய பத்தொன்பது அடி களும் வீண் போயினவென்று சொல்வது? அந்த இருப தாவது அடி பயனுள்ளதானதற்கு முந்திய பத்தொன்பது அடிகளும் வழி கோலின என்றே சொல்லவேண்டும்.

நம்பிக்கை இழத்தல் என்பதற்கு நாஸ்திகனாதல் என்பது பொருள். ஆண்டவன் நம்மைக் காப்பானென்று நம்பு. குழந்தைக்கு தைரியம் வளரும்பொருட்டு தாய் அதை இங்குமங்கும் போகவிடுகிறாள். ஆனால் அவள் அதை விழும்படி செய்யமாட்டாள். அது விழும் என்று தெரிந்ததும் ஓடோடியும் வந்து அதற்குக் கைகொடுப் பாள். ஆண்டவனும் உன்னை இடையறாது கவனித்துக் கொண்டிருக்கிறான்; உன் வாழ்க்கைக் காற்றாடியின் நூல் அவன் கையிலிருக்கிறது. அவன் அதை ஒரு சமயம் இழுத்தும் ஒரு சமயம் தளர்த்தியும் பிடிக்கிறான். ஆனால் நூல் அவன் கையிலேயே இருக்கிறதென்று நம்பு. கங்கைத் துறையில் நீச்சுக் கற்றுக் கொடுக்கிறார்கள். கரையிலுள்ள மரத்தில் சங்கிலியோ, கயிறோ கட்டப்பட்டிருக்கிறது. அதை இடுப்பில் கட்டி ஆளை நீரில் எறிந்து விடுகிறார்கள். ஆனால் கற்றுக் கொடுக்கும் உபாத்தியாயரும் நீரிலேயே இருக்கிறார். நீந்தப் பழகுவோன் ஆரம்பத்தில் இரண்டு மூன்று தடவை மூழ்குவதும் எழுவதுமாயிருந்து இறுதி யில் நீச்சுக் கலையைக் கற்றுவிடுகிறான். இதே வகையில் ஆண்டவன் நம்மை வாழ்க்கைக் கலையில் பயிற்றி வரு கிறான்.

## (40) சுக்ல–கிருஷ்ண கதிகள்

ஆகையால் ஆண்டவனிடம் நம்பிக்கைகொண்டு மனோவாக்கு காயங்களினால் அல்லும் பகலும் வாழ்க்கைப் போரை நடத்திக்கொண்டே செல்வாயானால் இறுதிக்கணம் மிகமிகச் சிறந்ததாய் அமைந்துவிடும். அப்பொழுது

எல்லா தேவதைகளும் அனுகூலமாவார்கள் என்ற விஷயமே இந்த அத்தியாயத்தின் இறுதியில் ஒரு உருவகத்தின் வாயிலாக விளக்கப்பட்டிருக்கிறது. இந்த உருவகத்தை நீங்கள் புரிந்துகொள்ளுங்கள். எவன் இறக்கும் தருவாயிலிருக்கும்பொழுது தீ கனன்று கொண்டிருக்கிறதோ, சூரியன் ஒளி வீசிக்கொண்டிருக்கிறதோ, சுக்லபக்ஷ சந்திரன் வளர்ந்து கொண்டிருக்கிறதோ, உத்தராயணத்தில் ஆகாயம் மேகமற்று அழகாய்க் காண்கிறதோ அவன் பிரம்மத்தில் கலக்கிறான். எவனுடைய மரண காலத்தில் புகை சூழ்ந்துகொண்டிருக்கிறதோ, உள்ளும் புறமும் இருள் அடர்ந்திருக்கிறதோ, கிருஷ்ணபக்ஷ சந்திரன் தேய்ந்து கொண்டிருக்கிறதோ தக்ஷிணாயனத்தில் வானம் மேகம் சூழ்ந்து இருண்டிருக்கிறதோ, அவன் பிற பிறப்பென்ற சுழலில் மீண்டும் சிக்குவான்.

பலர் இந்த உருவகத்தைப் படித்து ஒன்றும் புரியாது தவிப்பதுண்டு. புண்ணியச் சாவு வேண்டுமானால் தீ, சூரியன், சந்திரன், ஆகாயம் ஆகிய தேவதைகளின் கிருபை வேண்டும். தீ அல்லது அக்னி கர்மத்தின், யக்ஞத்தின் சின்னமாகும். இறுதிக் காலத்திலும் யக்ஞம் கொழுந்துவிட்டெரிந்து கொண்டிருக்க வேண்டும். நியாய மூர்த்தியான ரானடே, "இடையறாது கடமையைச் செய்து கொண்டிருக்கையிலேயே ஒருவனுக்குச் சாவு வருமாயின் அவன் பாக்கியம் செய்தவனே. நான் ஏதோ படித்துக்கொண்டோ எழுதிக்கொண்டோ வேலை செய்து கொண்டோ இருக்கையில் எனக்குச் சாவு வருமானால் நான் புண்ணியம் செய்தவனே," என்று சொல்லுவதுண்டு. 'தீ எரிந்து கொண்டிருக்கிறது' என்பதற்கு இதுவே பொருள். இறக்கும் தருவாயிலும் கர்மம் புரிந்து கொண்டே யிருத்தல் அக்னியின் கிருபையினாலேயே ஏற்படக்கூடியது. சூரியனுடைய கிருபை என்பதற்கு அறிவின் ஒளி இறுதிவரையில் பிரகாசித்துக்கொண்டிருக்க வேண்டும் என்பது பொருள். சந்திரனது கிருபை என்பதற்கு மரணகாலத்தில் புனிதமான கருத்துக்கள் இடையறாது பெருகிக்கொண்டே யிருக்கவேண்டும் என்பது பொருள். சந்திரன் மனதின், பாவனையின், உணர்ச்சிகளின் தேவதை. சுக்லபக்ஷ சந்திரனைப்போல மனதில் அன்பு, பக்தி, உற்சாகம், பரோபகார சிந்தை, தயை முதலிய தூய உணர்ச்சிகள் பூரணமாய் வளரவேண்டும்.

ஆகாயத்தின் கிருபை என்பதற்கு உள்ளமென்ற வானத்தில், ஆசை என்ற மேகமே இருக்கக்கூடாது என்பது பொருள். ஒரு சமயம் காந்திஜி, " நான் ராட்டை ராட்டை என்று கத்திக் கொண்டிருக்கிறேன். ராட்டையை மிகவும் புனிதமானதென்று நம்புகிறேன். ஆனல் இறுதிக் காலத்தில் இந்த ஆசையும், இந்த வாசனையும் இருக்கக்கூடாது. எவன் எனக்கு ராட்டையைப்பற்றி எண்ணும் அறிவை அளித்தானே அவனுக்கு ராட்டையைக் கவனித்துக் கொள்ள பூரணத் திறமையுண்டு. ராட்டையை இப்பொழுது நல்ல நல்ல பெரியோர் பலர் ஏற்றுக்கொண்டு விட்டனர். ராட்டையைப் பற்றிக் கவலைகொள்வதை விட்டு இனி நான் ஆண்டவனிடம் போய்ச் சேர்வதற்கு ஆவன செய்யவேண்டும் " என்று சொன்னர். அதாவது உத்தராயணம் என்பதற்கு உள்ளத்தில் பற்று, ஆசை என்ற மேகம் படர்ந்திருக்கக் கூடாது என்பது பொருள்.

இறுதி மூச்சு வரையில் கையினல் ஏதேனும் ஒரு சேவைக் காரியம் நடந்து கொண்டிருக்கிறது; உணர்ச்சியின் பூர்ணிமைச் சந்திரன் ஒளி வீசிக்கொண்டிருக்கிறது; உள்ள வானில் ஆசை சிறிதுமில்லை, அறிவு முனை மழுங்காதிருக்கிறது என்று சொல்லக்கூடிய நிலையில் எவன் இறக்கிருனே அவன் ஆண்டவனுடன் கலந்து விட்டான். இத்தகைய பரம மங்களமான முடிவைப் பெறுவதற்காக அல்லும் பகலும் விழித்திருந்து திறமையுடன் போர் புரிந்துகொண்டே இருக்கவேண்டும். ஒரு கணமும் மனதில் தீய ஸம்ஸ்காரம் ஏற்பட விடாதீர்கள். இதற்குத் தேவையான பலம் கிட்டுமாறு ஆண்டவனிடம் எப்பொழுதும் வேண்டிக்கொண்டே யிருக்கவேண்டும்; நாம ஜபமும் தத்துவ சிந்தனையும் அடிக்கடி செய்துகொண்டே இருக்கவேண்டும்.

ஞாயிறு, 10–4–'32.

ஒன்பதாம் அத்தியாயம்

# மானிட சேவை யென்ற ராஜவித்தை : ஸமர்ப்பணயோகம்

*

## (41) நேர் அனுபவத்தில் வரும் வித்தை

இன்று என் தொண்டையில் நோவாயிருக்கிறது. என் குரல் உங்கள் காதுக்கு வந்து எட்டுமோ என்று எனக்கு சந்தேகம். இந்த சமயத்தில் புனித வாழ்க்கை வாழ்ந்த பெரிய மாதவராவ் பேஷ்வாவின் இறுதிக்காலச் செய்தி எனக்கு நினைவுக்கு வருகிறது. அம் மகாபுருஷர் சாகுந்தரு வாயிலிருந்தார். கபம் மிகவும் அதிகமாய்விட்டது. கபத்தை அதிசாரமாக மாற்றிவிட முடியும். ஆகையால் மாதவராவ் வைத்தியரிடம், "எனக்கு இந்தக் கபம் போய் அதிசாரம் ஏற்படும்படி ஏதேனும் யுக்தி செய்யுங்கள். அப்பொழுது எனக்கு வாய் பேச முடியுமாகையால் நான் ராமஜபம் செய்து கொண்டிருப்பேன்" என்றார். நானும் இன்று ஆண்டவனிடம் வேண்டிக் கொண்டிருந்தேன். ஆண்டவன், "உன்னால் உன் தொண்டையைக்கொண்டு முடிந்த அளவு உரக்கப் பேசிக்கொண்டிரு" என்றார். நான் இங்கே கீதை சொல்லிக் கொண்டிருக்கிறேனே, அது எவருக்கும் போதிப்பதற்காக அல்ல. இதைப் பயன்படுத்திக் கொள்ள விரும்புகிறவர்களுக்கு இதனால் கட்டாயம் பயன் ஏற்படும். ஆனால் நானோ கீதையை ராமநாமம் என்று கருதியே சொல்லிக் கொண்டிருக்கிறேன். கீதைப் பேருரை நிகழ்த்துங்கால் பகவத் பஜனை புரிவது போன்ற உணர்ச்சியே எனக்கு இருந்து வருகிறது.

நான் இப்பொழுது சொல்லிக் கொண்டிருந்ததற்கும் இன்றைய ஒன்பதாம் அத்தியாயத்திற்கும் சம்பந்தமுண்டு. இந்த அத்தியாயத்தில் ஆண்டவன் பெயரை ஜபிப்பதற்கு பெரிய மகிமை உண்டென்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்த அத்தியாயம் கீதையின் நட்டநடுவில் அமைந்திருப்பது மகாபாரதம் முழுவதின் நடுவில் கீதை ; கீதையின் நடுவிலிருப்பது இந்த ஒன்பதாம் அத்தியாயம். பல்வேறு காரணங்களினால் இந்த அத்தியாயத்திற்குப் புனிதமான தென்ற பெயர் ஏற்பட்டிருக்கிறது. ஞானதேவர் இறுதிச் சமாதியில் அமர்ந்தபொழுது இந்த அத்தியாயத்தை

ஜபித்தவாறே உயிர் நீத்தார் என்று சொல்வதுண்டு. இந்த அத்தியாயத்தை நினைத்த மாத்திரத்தில் என் கண்களில் நீர் பெருகுகிறது; உள்ளத்தில் உணர்ச்சி பொங்கி எழுகிறது. வியாசதேவர் நமக்கு எத்தகைய பேருபகாரம் செய்திருக்கிறார்! பாரத நாட்டிற்குமட்டுமல்ல, மனித சமூக மனைத்திற்குமே அவர் செய்துள்ள உபகாரமாகும் இது. பகவான் அர்ஜுனனுக்குச் சொன்ன அபூர்வமான விஷயம் சொற்களினால் வெளியிடத்தக்கதல்ல. ஆனால் தயையினால் தூண்டப்பட்ட வியாசர் இதை ஸம்ஸ்கிருத பாஷை யில் வெளியிட்டார்; இரகசியமான தொன்றை பாஷையின் உருப்பெறச் செய்தார். இந்த அத்தியாயத்தின் தொடக் கத்தில் பகவான்,

"राज-विद्या महागुह्य उत्तमोत्तम पावन।"

(ராஜவித்யா மஹாகுஹ்ய உத்தமோத்தம பாவன)

என்று சொல்லுகிறார்.

இந்த வித்தை, இந்த அபூர்வமான விஷயம் நேருக்கு நேராய் உணர வேண்டியதொன்று. பகவான் அதை 'प्रत्यक्षावगम' (பிரத்யக்ஷாவகம) என்கிறார். சொல்லில் அடங்காததும் ஆனால் நேருக்கு நேராய் அனுபவம் என்ற உரை கல்லில் உரைத்துப் பார்க்கப்பட்டதுமான விஷயம் இந்த அத்தியாயத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இதனால் இது மிகவும் இனியதாகிவிட்டது. துளசிதாஸர்—

"को जाने को जैहे जम-पुर को सुर-पुर पर-धामको,
तुलसिहि बहुत भलो लागत जग जीवन राम-गुलामको।"

(கோஜானே கோஜைஹே ஜமபுரகோ ஸுரபுர பரதாமகோ।
துளஸிஹி பஹுதபலோ லாகத ஜகஜீவனராம குலாமகோ ||)

என்று கூறியிருக்கிறார்.

இறந்த பிறகு கிடைக்கவிருக்கும் சுவர்க்கத்தினாலும் அதுபற்றிய கதைகளினாலும் இங்கே என்ன பயன்? சுவர்க் கத்திற்கு யார் போவார்கள், யமபுரிக்குப் போவோர் யார் என்று யார் சொல்லமுடியும்? உலகத்தில் நான்கு நாள் இருப்பதென்றால் இராமனுக்கு அடிமை பூண்டு வாழ்வதே எனக்கு இன்பமென்று துளசிதாஸர் சொல்லுகிறார். ராம னுக்கு அடிமை பூண்டு வாழ்வதிலுள்ள ஆனந்தம் இந்த அத்தியாயத்தில் அமைந்துள்ளது. இந்த உடலிலேயே

நேருக்கு நேராய் இந்தக் கண்களினல் பார்க்கக்கூடிய இவ்வாழ்விலேயே நுகரக்கூடிய விஷயங்கள் இந்த அத்தியாயத்தில் சொல்லப்பட்டிருக்கின்றன. வெல்லம் தின்னும் பொழுது அதன் இனிப்பு நிதரிசனமாய்த் தெரிகிறது. இராமனுக்கு அடிமை பூண்டு வாழ்வதிலுள்ள அதே வகையான இன்பம் இதில் இருக்கிறது. மரணத்தோடு பொருந்திய இவ்வுலக வாழ்க்கையின் இவ்வின்பம், நிதரிசனமாய்ப் புலனுகும் ராஜவித்தை இந்த அத்தியாயத்தில் கூறப்பட்டிருக்கிறது. அது இரகசியமானதாயிருந்த போதிலும் பகவான் அதை அனைவரும் புரிந்துகொள்ளுமாறு விளக்கிக் கூறுகிருர்.

## (42) சுலப வழி

கீதை எந்த தர்மத்தின் சாரமோ அதை வைதிக தர்மம் என்று அழைக்கிருர்கள். வைதிக தர்மம் என்பதற்கு வேதங்களிலிருந்து தோன்றிய தர்மம் என்பது பொருள். இப்பூவுலகில் மிகவும் புராதனமான கிருதிகளுக்கெல்லாம் முன்பு தோன்றிய கிருதி வேதங்களென்று கருதப்படுகிறது. இதனுலேயே பாவனு சீலர்கள் அவைகளை அனுதி யென்று மதிக்கிருர்கள். இதனுலேயே வேதங்களுக்கு ஒரு தனிச் சிறப்பு ஏற்பட்டுள்ளது. நாம் அவைகளை சரித்திர நோக்குடன் கவனித்தாலும் அவை நமது சமூகத்தின் புராதனமான எண்ணங்களின் மிகப் பழைய சின்னங்களாய் உள்ளன. தாமிரப்பட்டயங்கள், கல்லிற் பொறித்த சாசனங்கள், நாணயங்கள், பாத்திரங்கள், பிராணிகளின் உடற்பகுதிகள் ஆகியவற்றைவிட எழுத்துருவிலுள்ள இவை மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தவை. உலகத்திலேயே சரித்திர சம்பந்தமான முதல் ஆதாரம் ஒன்றிருக்கிறதென்ருல் அது வேதங்களே. இந்த வேதங்களில் விதையினுருவிலிருந்த தர்மம் முளைத்து வளர்ந்து மரமாக, இறுதியில் அதில் கீதை என்ற இனிய பழம் தோன்றிற்று; பழமில்லையேல் நாம் மரத்திலுள்ள வேறு எதைச் சாப்பிட முடியும்? மரத்தில் பழம் பழுக்கும்பொழுதுதான் நாம் தின்பதற்கு அதனிடமிருந்து ஒன்று கிடைக்கிறது. வேத-தர்மத்தின் வடித்தெடுத்த சாரமாகும் இந்த கீதை.

பண்டைக் காலத்திலிருந்து அனுஷ்டானத்திலிருந்து வந்த இந்த வேத-தர்மத்தில் பலவகை யாகயக்ஞங்களும்

கிரியைச் சடங்குகளும் பல்வேறு தவஒழுக்கங்களும், பல சாதனைகளும் சொல்லப்பட்டிருந்தன. இந்தக் கர்ம காண்டங்களெல்லாம் உபயோகமற்றவை யென்பதற்கில்லை யாயினும் அவைகளைச் செய்வதற்கு அதிகாரம் வேண்டும்; கர்மகாண்டம் எல்லோருக்கும் சுலுவாயில்லை. ஓங்கி வளர்ந்துள்ள தென்னை மரத்திலேறித் தேங்காயைப் பறிப்பது யார்? அதை உரித்து உடைப்பது யார்? எனக்கு எவ்வளவு தான் பசியிருந்தபோதிலும் உயரமான மரத்திலுள்ள அந்தத் தேங்காய் எனக்கு எப்படிக் கிடைக்கும்? நான் கீழிருந்து அதைப் பார்த்துக்கொண்டிருக்க, அது மேலேயிருந்து என்னைப் பார்க்கிறது! ஆனால் அதனால் வயிற்றுப் பசி எப்படி அடங்கும்? அந்தத் தேங்காய் என் கைக்கு வராதவரையில் எல்லாம் வீணே. வேதங்களின் இந்தப் பலவகைக் கிரியைகளில் மிகவும் நுணுக்கமான கருத்துக்கள் அடங்கியிருந்தன. சாதாரண மக்களுக்கு அவைகளெல்லாம் எப்படிப் புரியும்? வேத மார்க்கத்தை அனுசரித்தால் அல்லது மோட்சமில்லை; ஆனால் வேதங்களைப் படிக்கவோ உரிமையில்லை. அப்பொழுது மற்றவர்களின் கதி என் ஆவது? ஆகையால் கருணைக் கடலான மகாத்மாக்கள் முன்வந்து, "வாரீர், நாங்கள் இந்த வேதங்களின் ரசத்தைப் பிழிந்தெடுக்கிறோம். வேதங்களின் சாரத்தைச் சிறிய அளவில் திரட்டி உலகிற்கு வழங்குகிறோம்" என்றார்கள். இதனாலேயே துகாராம சுவாமிகள்—

"வேத விஷயங்கள் அனந்தம்—
ஆனால் சிந்தனைக்குரிய சாரம் இதுவே" *

என்கிறார்.

அந்த சாரம் தான் என்ன? அதுதான் ஆண்டவனின் திருநாமம். ஆண்டவன் திருநாமமே வேதங்களின் சாரமாகும். ராம நாமத்தினால் மோட்சம் கிட்டுவது உறுதியாயிற்று. பெண்கள், குழந்தைகள், சூத்திரர், வைசியர், அறிவிலிகள், எளியோர், பலவீனர், நோயாளிகள், அங்கவீனர் ஆகிய அனைவருக்கும் மோட்சம் சுலுவாய்விட்டது. வேதங்களென்ற பீரோவில் வைத்துப் பூட்டியிருந்த மோட்சத்தை பகவான் நாற்சந்தியிற் கொணர்ந்து வைத்து விட்டார். இது மோட்சத்திற்கு எவ்வளவு நேரிடையான

* "वेद अनंत बोलला । अर्थ इतुका चि साधला"

எளிய சுலுவான உபாயமாய் விட்டது! எவனுக்கு எத் தகைய சுலுவான வாழ்க்கை அமைந்திருக்கிறதோ, எவன் எந்தக் கர்மத்தை, சுதர்மமென்று செய்து வருகிருனே அதையே யக்ஞமாய் (வேள்வியாய்) மாற்றிவிட்டாலென்ன? பிற யக்ஞயாகங்களுக்குத் தேவை ஏது? நீ தினமும் செய்து வரும் சாதாரணமான சேவைக் கர்மத்தையே யக்ஞமெனக் கருதிச் செய். இதுவே ராஜபாட்டையாகும்.

यानास्थाय नरो राजन् न प्रमाद्येत कर्हिचित् ।
धावन्निमील्य वा नेत्रे न स्खलेन्न पतेदिह ॥

(யாநாஸ்தாய நரோ ராஜன் ந ப்ரமாத்யேத கர்ஹிசித்
தாவன்நிமீல்ய வா நேத்ரே ந ஸ்கலேந்ந பதேதிஹ ||)

இந்த வழியில் கண்ணை மூடிக்கொண்டே ஓடினலும் கால் இடறும் என்றோ, கீழே விழுவோம் என்றோ அஞ்ச வேண்டியதில்லை. மற்ற வழியோ 'क्षुरस्य धारा निशिता दुरत्यया' (க்ஷுரஸ்ய தாரா நிஶிதா துரத்யயா) வாளின் முனை ஒருக்கால் சிறிது மழுங்கியிருந்தாலும் இருக்கலாம்; ஆனால் இந்த வைதிக மார்க்கம் அதைவிட அதிக ஆபத் தானது. இதைவிட இராமனுக்கு, ஆண்டவனுக்கு அடிமை பூண்டு வாழும் வழி சுலுவானது. ஒரு என்ஜினியர் மேலே ஏறஏற படிக்கட்டுகளைச் சிறிது சிறிதாய் உயர்த்திக் கொண்டுபோய் நம்மை இறுதியில் உச்சிக்கழைத்துப்போய் அமர்த்துகிறார். நமக்கு நாம் எவ்வளவு உயரே ஏறிவந்து கொண்டிருக்கிறோம் என்பதே அப்பொழுது தெரிவதில்லை. என்ஜினியருடைய இந்தத் திறமைபோன்றதே இந்த ராஜபாட்டையிலுள்ள விசேஷமும். மனிதன் எந்த இடத்தில் கர்மம் செய்து கொண்டிருக்கிருனே அங்கேயே அந்தச் சாதாரண கர்மத்தின் மூலமாகவே அவன் பரம் பொருளைப் பெற இயலும். இத்தகையது இந்த வழி.

ஆண்டவன் எங்கேனும் ஒளிந்து கொண்டா இருக் கிருன்? குகையிலோ, சந்து பொந்திலோ, ஆற்றிலோ சுவர்க்கத்திலோ அவன் மறைந்துகொண்டிருக்கிருனு? வைரம், வைடூரியம், தங்கம், வெள்ளி என்பவை பூமியில் மறைந்திருக்கின்றன. முத்தும், பவழமும் ரத்ன கரம் எனப்படும் சமுத்திரத்தில் மறைந்திருக்கின்றன. அவ்வாறு ஆண்டவன் என்ற இந்த இரத்தினம் எங்கேனும்

ஒளிந்துகொண்டிருக்கிறதா? ஆண்டவனை நாம் எங்கிருந்தேனும் தோண்டி வெளிக்கொணர வேண்டுமா? அவன் தான் எப்பொழுதும் நம் அனைவரின் எதிரிலும் எங்கும் நின்று கொண்டிருக்கிறானே. இங்கேயுள்ள இத்தனை பேரும் ஆண்டவனின் உருவங்கள் தாமே. ஆண்டவன், "மனித உருவிலுள்ள இந்த ஆண்டவனை அவமதியாதே" என்கிறான். ஆண்டவனே சராசரங்களாய்க் காட்சியளிக்கிறான். அவனைத் தேடுவதற்குச் செயற்கை உபாயங்கள் என்ன அவசியம்? உபாயம் மிகவும் சுளுவாயிருக்கிறது. நீ செய்துவரும் சேவைக் காரியங்களையெல்லாம் ஆண்டவனுடன் இணைத்துவிட்டால் போதும். நீ இராமனுக்கு அடிமை பூண்டுவிடு. அந்தக் கடினமான வேத மார்க்கம், அந்த யக்ஞம், அந்த சுவாஹாக்கள், அந்த சுதாக்கள், அந்த சிரார்த்தமும், தர்ப்பணமும் நம்மை மோட்சத்திற்கு இட்டேகும்; ஆனால் இதில் அதிகாரமுள்ளவன், இல்லாதவனென்ற தொந்தரவு ஒன்று தோன்றுகிறது. நமக்கு அது தேவை இல்லை. நீ இதை மட்டும் செய்: நீ எதைச் செய்கிறாயோ அதை ஆண்டவனிடம் சமர்ப்பித்து விடு. நீ செய்யும் காரியம் ஒவ்வொன்றையும் ஆண்டவனுடன் இணைத்துவிடு. இந்த ஒன்பதாம் அத்தியாயத்தின் போதனை இதுவே. ஆகையால் அது பக்தர்களுக்கு மிகவும் பிரியமானது.

## (43) தகுதி பற்றிய தொந்தரவில்லை

கிருஷ்ணனுடைய வாழ்க்கை முழுவதிலும் அவருடைய பிள்ளைப்பருவம் மிகவும் இனிமையானது. பாலகிருஷ்ணனையே அனைவரும் அதிகமாய் வழிபடுகிறார்கள். அவன் இடைச்சிறார்களோடு மாடு மேய்க்கப் போகிறான்; அவர்களோடு உண்டு களித்து சிரித்து விளையாடுகிறான். இடைப்பிள்ளைகள் இந்திர பூஜைக்குக் கிளம்பியபொழுது அவன் அவர்களிடம், "இந்திரனைக் கண்டவர்கள் யார்? அவன் நமக்கு அப்படி என்ன உதவி செய்திருக்கிறான்? ஆனால் இந்த கோவர்த்தன மலையோ நம் கண் முன் தெரிகிறது. இதில் நம் பசுக்கள் மேய்கின்றன. இதில் அருவிகள் பெருகுகின்றன. ஆகையால் நீங்கள் இதற்கே பூஜை செய்யுங்கள்" என்றான். அவன் இம்மாதிரியான விஷயங்களை அவர்களுக்குப் போதித்து வந்தான். எந்தக் கோபா

லகர்களின் இடையில் அவன் விளையாடினானோ எந்தக் கோபியர்களுடன் சிரித்தும் பேசியும் வந்தானோ, எந்தப் பசுக்கள், கன்றுகள் ஆகியவற்றினிடையில் தன்னை மறந்து ஒன்றியிருந்து வந்தானோ அவையனைத் திற்கும் அவன் மோட்ச வாயிலைத் திறந்துவிட்டான். கிருஷ்ண பரமாத்மா தம் அனுபவத்திலிருந்து இந்தச் சுளுவான வழியைக் காட்டியிருக்கிறார். பிள்ளைப் பிரா யத்தில் அவன் மாடு, கன்றுகளுடன் பழகினான்; வயது வந்ததும் குதிரைகளுடன் பழகினான். குழலோசை கேட்டதும் பசுக்கள் மெய்மறந்து போகும்; கிருஷ்ண னுடைய கையால் தடவப்பட்டதும் குதிரைகளுக்கு கும்மா ளம் பிறந்துவிடும். அந்த மாடு கன்றுகளும் ரதத்தில் பூட்டிய அந்தக் குதிரைகளும் கிருஷ்ண மயமாய்விட்டன. பாவத்தில் பிறந்தவை எனப்படும் அந்தப் பிராணிகளுக்கும் மோட்சம் கிடைத்ததுபோல் ஆய்விட்டது. மனிதனுக்கு மட்டுமே மோட்சத்திற்குரிமையுண்டு என்பதில்லை; பசு, பட்சிகளுக்கும் உண்டு என்ற விஷயத்தை ஸ்ரீ கிருஷ்ணர் தெளிவுறுத்திவிட்டார். தம் வாழ்க்கையில் அவர் இதை அனுபவித்துணர்ந்தார்.

பகவானுக்குண்டான அனுபவம் வியாசருக்கும் உண் டாயிற்று. கிருஷ்ணர், வியாசர் என்ற இருவரும் ஒரு வரே. இருவரின் வாழ்க்கையின் சாரதத்துவமும் ஒன்றே. மோட்சமென்பது விசேஷப் படிப்பையோ காரியங்களின் மிகுதியையோ பொருத்ததல்ல. அதற்கு நேரிடையான எளிய பக்திமட்டுமிருந்தால் போதும். 'நான் நானெ'ன்று சொல்லிக்கொண்டிருந்த ஞானிகளெல்லாம் பின் தங்கிவிட, கபடமே அறியாத உணர்ச்சிமிக்க பெண்கள் அவர்களை முந்திக்கொண்டுவிட்டார்கள். மனம் புனிதமாயிருந்து நேரிடையான கபடமற்ற பக்தி இருக்குமானால் மோட்சம் பெறுதல் சிரமமல்ல. மகாபாரதத்தில் 'ஜனக சுலபா சம் வாதம்' என்ற ஒரு அத்தியாயம் இருக்கிறது. அதில் வியாசர் ஜனகராஜன் ஞானம் பெறும்பொருட்டு ஒரு பெண்ணை அணுகுவதாக ஒரு சந்தர்ப்பத்தை சிருஷ்டித் திருக்கிறார். நீங்கள் பெண்களுக்கு வேதம் படிக்க உரிமை உண்டு—இல்லையென்று உங்களுக்குள் தர்க்கம் வேண்டு மானால் பண்ணிக்கொண்டிருங்கள்; ஆனால் இங்கே சுலபை ஜனகராஜனுக்கு பிரம்மவித்தை போதிப்பதை நாம் நிதரி சனமாய்ப் பார்க்கிறோம். அவள் ஒரு சாதாரணப் பெண்.

ஆனல் ஜனகரோ எவ்வளவு பெரிய சக்கரவர்த்தி, எவ்வளவு படித்தவர்! அந்தப் பெரிய அறிவாளியான ஜனகர் கையில் மோட்சமில்லாமையால் வியாசமுனிவர் அவரை சுலபையின் பாதங்களில் போய் விழும்படி அனுப்பி யிருக்கிறர். துலாதாரனென்ற அந்த வைசியனுடைய விஷயமும் இத்தகையதே. ஜாஜலி என்ற பிராமணன் ஞானம் பெறுவதற்காக அவனிடம் போகிறன்; "தராசுக் கோலை சமநிலையில் பிடிப்பதிலேயே என் ஞானமெல்லாம் அடங்கியுள்ளது" என்கிறன் துலாதாரன். வேடன் ஒருவ னுடைய கதையும் இத்தகையதே. வேடனே கசாப்புத் தொழில் புரிபவன்; பிராணிகளைக் கொன்று அவன் சமூகத் திற்குப் பணிபுரிந்து வந்தான். ஒரு அகங்காரமுள்ள பிராமண தவசியை அவனுடைய குரு அந்த வேடனிடம் போகும்படி சொன்னர். பிராமணனுக்கு, 'இந்தக் கொலைகாரன் எனக்கு என்ன கற்றுக் கொடுக்கப்போகி றன்?' என்று வியப்பாயிருந்தது. பிராமணன் வேட னிடம் சென்றன். வேடன் அப்பொழுது என்ன செய்து கொண்டிருந்தான்? மாமிசத்தை வெட்டுவதும் கழுவுவதும், கழுவியதை விற்பனைக்கு எடுத்து வைப்பதுமாயிருந்தான். அவன் பிராமணனிடம், "பார். நான் இந்த என் கர்மத்தை எந்த அளவுக்கு தர்மத்தை ஒட்டிச் செய்ய முடியுமோ செய்து வருகிறேன். என் ஆன்மாவை இதில் செலுத்தக் கூடிய அளவு செலுத்தி இந்தக் கர்மத்தைச் செய்து என் பெற்றேருக்குப் பணிவிடை புரிகிறேன்" என்றன். வேட னுருவில் வியாச முனிவர் இந்த ஆதரிச மனிதனை நம் முன் நிறுத்தியிருக்கிறர்.

மகாபாரதத்தில் பெண், வைசியன், சூத்திரன் ஆகி யோரின் இந்தக் கதைகள் வந்திருப்பதன் நோக்கம் மோட்ச வாயில் எல்லோருக்கும் திறந்துள்ளது என்பது அனைவருக்கும் தெளிவாய்ப் புலனுக வேண்டும் என்பதே. அந்தக் கதைகளின் தத்துவம் இந்த ஒன்பதாம் அத்தியாயத் தில் கூறப்பட்டிருக்கிறது. அந்தக் கதைகளின்மீது இவ் வத்தியாயத்தில் முத்திரை இடப்பட்டிருக்கிறது. இராம னுக்கு அடிமை பூண்டு வாழ்வதிலுள்ள அதே இன்பம் வேடனுடைய வாழ்க்கையிலும் இருக்கிறது. துகாராம சுவாமிகள் அஹிம்சா பக்தர். ஆனல் ஸஜன் என்ற கசாப்புக்காரன் கசாப்புத் தொழிலைச் செய்து மோட்சம் பெற்றதை மிகுந்த மகிழ்ச்சியோடு அவர் விவரித்திருக்கிறர்.

துகாராம் ஒரு இடத்தில், "பகவானே, மிருகங்களைக் கொல்லுபவர்களுக்கு எந்த கதி ஏற்படும்?" என்று கேட்டவர் உடனே 'கசாப்புக்கார ஸஜனுவுடன் அவன் மாமிசம் விற்கிறான்' என்ற அடியை எழுதி பகவானே கசாப்புகார ஸஜனுக்கு உதவியளிப்பதாகக் கூறியிருக்கிறார். நரசி மேதாவினிடம் உண்டித்தாளை சுருட்டித் தருகிறவரும், ஏகநாதருக்குத் தண்ணீர்க் காவடி தூக்குகிறவரும், தாமாஜிக்காக சக்கிலித் தொழில் புரிந்தவரும், மகாராஷ்டிர மக்களின் அன்பைப் பெற்ற ஜனுபாய்க்கு நெல் குத்தி மாவு அரைத்துத் தருவோரும் ஆன பகவான் கசாப்புக்காரன் ஸஜனுக்கும் அதே அன்புடன் உதவி வந்தாரென்று துகாராம் சொல்லுகிறார். கருத்தென்னவென்றால், தம் காரியங்களனைத்தையும் ஆண்டவனுடன் இணைத்துவிட வேண்டும். கர்மம் தூய பாவனை நிரம்பியதாய், சேவை உணர்ச்சிமயமாயிருக்குமானால் அதுவே யக்ஞமாய்விடு

## (44) கர்மத்தின் பயன் பகவானுக்கு அர்ப்பணம்

ஒன்பதாம் அத்தியாயத்தில் இந்த முக்கிய விஷயமே சொல்லப்பட்டிருகிறது. இதில் கர்மயோகமும், பக்தி யோகமும் இனிய முறையில் சேருகின்றன. கர்மயோகம் என்பதற்கு கர்மத்தைச் செய்து அதன் பயனை தியாகம் செய்துவிடுதல் என்பது பொருள். பயனுடைய வாசனை சித்தத்தைத் தீண்டாத வகையில் திறமையாய்க் கர்மத்தைச் செய். இது அக்ரோட் மரம் வளர்ப்பது போன்றது. அக்ரோட் மரம் வைத்து இருபத்தைந்து வருஷம் கழித்துக் காய்க்கத் தொடங்கும். அதை நடுவோன் தன் ஆயுளிலேயே அது காய்த்து அதன் பழத்தைத் தான் தின்னலாமென்று எண்ணுவதற்கில்லை. ஆயினும் மரம் நட்டுப் பிரியமாய் அதற்குத் தண்ணீர் ஊற்றிக் கொண்டே வர வேண்டும். கர்மயோகம் என்பதற்கு மரம் வைத்துப் பயிரிடுதல், ஆனால், அதன் பழத்தில் ஆசை வையாதிருத்தல் என்று அர்த்தம். பக்தியோகம் என்பது என்ன? பாவ உணர்ச்சியுடன் ஆண்டவனோடு ஒன்றி விடுவதையே பக்தியோக மென்பது. ராஜயோகத்தில் கர்மயோகம், பக்தியோகம் ஆகிய இரண்டும் ஒன்று

சேர்ந்துவிடுகின்றன. ராஜயோகம் என்பதை எத்தனையோ பேர் விளக்கிக் கூறியிருக்கிறார்கள். ஆனால் ராஜயோகம் என்பது சுருங்கக் கூறுமிடத்து கர்மயோகம், பக்தியோகம் ஆகிய இரண்டின் இனிய சேர்க்கையே என்று நான் விளக்குவேன்.

நாம் கர்மத்தைச் செய்வோம், ஆனால் அதன் பயனை வீசி எறிந்துவிடாமல் அதைப் பரம்பொருளுக்கு அர்ப்பணம் செய்துவிடுவோம். பயனை எறிந்துவிடு என்று சொல்லும் பொழுது பயனை மறுத்தல் என்ற பொருளாகிறது. ஆனால் அர்ப்பணத்தில் இவ்வாறுவதில்லை. எவ்வளவு அழகிய ஏற்பாடு இது! இதில் மிக்க இனிமை அடங்கி இருக்கிறது. பயனைத் துறத்தல் என்பதற்கு அதை எவருமே ஏற்கமாட்டார்கள் என்று அர்த்தமல்ல. எவரோ ஒருவர் அதை நிச்சயம் ஏற்கச் செய்வார்; யாரோ ஒருவருக்கு அது கிடைக்கவே போகிறது. இந்தப் பயனைப் பெறுகிறவர் இதற்குத் தகுதி யுள்ளவரா இல்லையா என்ற வாதம் வேறு எழக்கூடும். பிச்சைக்காரனொருவன் நம் வீட்டிற்கு வந்தானாயின் நாம் உடனே, "நல்ல கட்டுமஸ்தாயிருக்கிறாய்; நீ பிச்சை எடுப்பது அழகாயில்லையே, போ!" என்கிறோம். அவன் பிச்சை யெடுத்தல் சரியா அல்லவா வென்று நாம் ஆலோசிக்கிறோம். பாவம்! பிச்சைக்காரன் வெட்கமுற்றுப் போய்விடுகிறான். நம் மனதில் அவன் விஷயத்தில் அனுதாபம் அறவே இல்லை. மேலும் பிச்சை எடுப்பவனுடைய தகுதியை நாம் எப்படி முடிவு செய்வோம்? நான் என் சிறு பிராயத்தில் என் தாயினிடம் பிச்சைக்காரர்களைப்பற்றி இம்மாதிரியான சந்தேகம் ஒன்றைக் கேட்டேன். அவர் அளித்த பதில் இப்பொழுது கூட என் காதுகளில் ஒலித்துக்கொண்டிருக்கிறது. நான் அவரிடம், "இந்தப் பிச்சைக்காரன் நல்ல திண்டனாய்க் காண்கிறானே. இவனுக்கு பிச்சை யிடுவதனால் கெட்ட பழக்கமும், சோம்பேறித் தனமும் அல்லவா பெருகும்?" என்று சொல்லி கீதையின் 'देशे काले च पात्रे च' (தேசே காலே ச பாத்ரே ச) என்ற சுலோகத்தையும் அவருக்கு எடுத்துச் சொன்னேன். அவர், "பிச்சைக்கு வந்தவன் யாருமில்லை, ஆண்டவனே; இப்பொழுது தகுதி, தகுதியின்மை என்றெல்லாம் சொல் பார்க்கலாம்! பகவானையே தகுதி இல்லாதவனென்று சொல்லிவிடுவாயோ? தகுதி இன்மையைப் பற்றிச் சிந்திப்பதற்கு உனக்கும் எனக்

கும் உரிமை ஏது? அதிக சிந்தனை எனக்கு அவசியம் என்றே தோன்றவில்லை. எனக்கு அவன் பகவான்தான்" என்றார். தாயின் இந்த பதிலுக்குச் சரியானவிடை எனக்கு இதுவரையில் தோன்றவேயில்லை.

பிறருக்கு உணவளிக்கும் பொழுது அவர்களுடைய தகுதியையும் தகுதி இன்மையையும் பற்றி நான் எண்ணுகிறேன். ஆனால் என் வயிற்றில் சோற்றை இடும்பொழுது எனக்கு இதற்குத் தகுதி உண்டா இல்லையா என்ற எண்ணமே எழுவதில்லை. நம் வாயிலைத் தேடி வருகிறவனை பிச்சைக்காரனென்று ஏன் எண்ண வேண்டும்? நாம் எவனுக்குக் கொடுக்கிறோமோ அவன் பகவானே என்று ஏன் எண்ணக் கூடாது? ராஜயோகம், "உன் கர்மத்தின் பயன் எவரோ ஒருவருக்குக் கிடைக்கப்போகிறதல்லவா? அப்படியானால் அதை பகவானுக்கே கொடுத்துவிடு. அவனுக்கே அர்ப்பணம் செய்துவிடு" என்று சொல்லு
ராஜயோகம் நாம் செய்யும் அர்ப்பணத்திற்குத் தகுந்த ஸ்தானத்தை எனக்குச் சுட்டிக்காட்டுகிறது. இங்கே பயனைத் துறத்தலென்ற எதிர் மறைக் கர்மமும் இல்லை; எல்லாவற்றையும் பகவானுக்கே அர்ப்பணம் செய்ய வேண்டுமாகையால் தகுதி, தகுதி இன்மை பற்றிய பிரச்னையும் தீர்ந்து போகிறது. பகவானுக்கு அளிக்கப்படும் தானம் எப்பொழுதும் தூயதாய்த்தானிருக்கும். உன்னுடைய கர்மத்தில் குறைபாடிருந்தபோதிலும் அவன் கையில் பட்டதும் அது புனிதமாய்விடும். நாம் குறைபாடுகளைப் போக்குவதற்கு எவ்வளவு உபாயங்களைச் செய்தபோதிலும் அவை இருந்தேதான் வரும். ஆயினும் இயன்ற அளவு தூய்மையுடன் இருந்துகொண்டு நாம் கர்மம் செய்ய வேண்டியது. அறிவு ஆண்டவனளிப்பு. அதை நாம் இயன்ற அளவு தூய உருவில் கையாளுதல் நம் கடமையே; அவ்வாறு செய்யாமை குற்றமாகும். ஆகையால் தகுதி, தகுதி இன்மை என்ற விஷயத்தையும் நாம் சிந்திக்க வேண்டியதே. ஆனால் கடவுள் உணர்ச்சி கொள்ளும்பொழுது அது சுளுவாகிவிடுகிறது.

சு: பெறுவதற்கு பயனைத் துறத்தல் வேண்டும். எந்தக் காரியம் எவ்வாறு உருவாயிற்றோ அவ்வாறே பகவானிடம் அர்ப்பணம் செய்துவிடு. நிதரிசனமான காரியம் எவ்வகையில் நடந்து வருகிறதோ

அதை அப்படி அப்படியே பகவானுக்கு அர்ப்பணமாக்கி மனத்திருப்தி பெற்றுக்கொண்டிருக்க வேண்டும். பயனை விடக் கூடாது; அதை பகவானுக்கு அர்ப்பணம் செய்ய வேண்டும். இதை மட்டுமென்ன, மனதிலெழும் வாசனைகள், காமம், வெகுளி முதலிய விவகாரங்கள் ஆகியவற்றையும் ஆண்டவனுக்கு அர்ப்பணம் ஆக்கிக் கவலையற்றிருக்க வேண்டியதே.

"என் காமக் குரோதங்கள் ஆண்டவனுக் கர்ப்பணம்" *

இங்கே புலனடக்க மென்ற தீயில் வாடவோ வதங்கவோ தேவையில்லை. அர்ப்பணம் செய்வதும் ஓய்வு பெறுவதுமாய் இருந்துவர வேண்டியது. எவரையும் எதையும் அடக்கவோ அழிக்கவோ தேவையில்லை.

"வெல்லம் தின்றே இறப்பவனுக்கு, விஷமேன்?" †

பொறிகளும் சாதனங்களே. அவைகளை ஆண்டவனுக்கு அர்ப்பணமாக்கிவிடு. காதுகள் கேட்கவில்லை என்கிறார்கள்; அப்படியானால் காதையே பொத்திக் கொண்டுவிடலாமா? வேண்டாம். கட்டாயம் கேள். ஆனால் ஹரிகதையைக் கேள்: காதைப் பொத்திக் கொண்டிருத்தல் மிகவும் சிரமம். ஆனால் ஹரி கதை கேட்டல் என்ற வேலையைத் தந்து காதைப் பயன்படுத்தல் அதிக இன்பமும் நன்மையும் பயப்பது. தன் காதுகளை நீ இராமனுக்கு அளித்துவிடு. வாயினால் ராமநாமத்தை ஜபித்துக் கொண்டேயிரு. பொறிகள் விரோதிகள் அல்ல; அவை நல்லவையே; அவைகளின் திறமைக்கு எல்லையில்லை. ஆகையால் ஆண்டவனுக்கு அர்ப்பணம் என்ற அறிவோடு ஒவ்வொரு பொறியையும் பயன்படுத்தல் என்பதே ராஜபாட்டை ஆகும். இதையே ராஜயோகம் என்பது.

## (45) சிறந்த காரியமே தேவை என்பதல்ல

நாம் செய்யும் முக்கியமான காரியத்தையே பகவானுக்கு அர்ப்பணம் செய்ய வேண்டும் என்பதல்ல.

---

* "कामक्रोध आम्हीं वाहिलें विठ्ठलीं"

† "रोग जाय दुधें साखरे। तरी निंब कां पियावा"

கர்மங்களனைத்தையுமே அவனிடம் ஒப்புவித்துவிடு. சபரியின் அந்த இலந்தைப் பழங்களை இராமர் எவ்வளவு ஆசையாய் நுகர்ந்தார்! ஆண்டவனை வழி படுவதற்கு குகையில் போய் அமரத் தேவையில்லை. நீ எங்கே, எந்தக் கர்மம் புரிந்தாலும் அதை ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய். தாய் குழந்தையைப் பராமரிக்கிறாள். அது ஆண்டவனையே பராமரித்தல் போன்றதே. குழந்தையை நீராட்டுகிறாள் என்றால் ஆண்டவனுக்கு, சிவலிங்கத்திற்கு அபிஷேகம் செய்வது போன்றதே. குழந்தை ஆண்டவனுடைய கருணையின் பயன் என்று கொண்டு தாய் கடவுள் உணர்வோடு குழந்தையைப் பராமரிக்க வேண்டும். கோசலை இராமனையும், யசோதை கிருஷ்ணனையும் எவ்வளவு கவலையுடன், அன்புடன் பார்த்து வந்தார்கள். அதை வர்ணிப்பதில் சுகரும், வால்மீகியும், துளசிதாஸரும் பெரும் பேறு பெற்றதாகவே எண்ணிக் கொண்டார்கள். அதில் அவர்களுக்கு மிகுந்த உற்சாகம். தாயின் அந்தப் பாதுகாப்பு, பராமரிப்புக் காரியம் மிகவும் உயர்ந்தது. அந்தக் குழந்தைக்கு ஆண்டவனுடைய அந்த உருவிற்குப் பணிவிடை செய்வதை விடப் பெரும் பேறு என்ன இருக்கக் கூடும்? நாம் ஒருவருக் கொருவர் பணி புரியும் பொழுது இத்தகைய பாவனையுடன் புரிந்துவருவோமானால் நம் காரியங்கள் எவ்வளவு மாறிவிடும்! கிடைத்த பணியெல்லாம் ஆண்டவன் பணியே என்ற பாவனை எப்பொழுதும் கொண்டிருக்க வேண்டும்.

விவசாயி எருதுக்குச் சேவை செய்கிறான். அந்த எருதை இழிந்த தென்று எண்ண வேண்டுமா? கூடாது. வேதங்களில் வாமதேவர் சக்தியின் உருவில் உலகெங்கும் பரவியுள்ள எந்த எருதை வர்ணித்திருக்கிறாரோ அதுவே அந்த விவசாயியின் எருதினிடத்திலும் இருக்கிறது!

चत्वारि शृंगा त्रयो अस्य पादा
द्वे शीर्षे सप्त हस्तासो अस्य
त्रिधा बद्धो वृषभो रोरवीति
महो देवो मर्त्यां आविवेश ।

(சத்வாரி ச்ருங்கா த்ரயோ அஸ்ய பாதா
த்வே சீர்ஷே ஸப்த ஹஸ்தாஸோ அஸ்ய

*த்ரிதா பத்தோ வ்ருஷபோ ரோரவீதி*
*மஹோ தேவோ மர்த்யான் ஆவிவேஶ ।)*

நான்கு கொம்புகளும் மூன்று கால்களும் இரு தலைகளும் ஏழு கைகளும் உடையதாய் மூன்றிடங்களில் கட்டப்பெற்று பேரொளி பொருந்தியதாய் எல்லா அழியும் பொருள்களிலும் பரவி கர்ஜிப்பதும் உலகெங்கும் வியாபித்துள்ளதுமான அந்த எருதை விவசாயி வழிபடுகிறான். விரிவுரை வரைந்தவர்கள் இந்த ஒரு பாசுரத்திற்கு ஆறு, ஏழு வகைப் பொருள் கூறியிருக்கிறார்கள். இந்த எருதும் விசித்திரமானதே. வானத்தில் கர்ஜித்து மழை பொழிவது எந்த எருதோ அதுவே மலஜலத்தைப் பொழிந்து வயலில் பயிரை விளைவிக்கும் இந்த விவசாயியின் எருதினிடத்திலும் இருந்து வருகிறது. விவசாயி இந்த உயர்ந்த பாவனையுடன் தன் எருதுகளுக்கு சேவை செய்து வருவானாயின் அவனுடைய இந்த சாதாரண சேவையும் ஆண்டவனுக்கு அர்ப்பணமாய் விடும்.

இவ்வாறே நம் வீட்டின் கிருகலக்ஷ்மி, இல்லக்கிழத்தி, அடுப்பு அமைத்துச் சமயலறையைத் துப்புரவாக்கி அடுப்புக்கொளுத்தி சுத்தமானதும் ஸாத்விகமானதுமான உணவைத் தயாரித்து இந்த உணவு என் வீட்டிலுள்ளவரனைவருக்கும் தென்பையும் இன்பத்தையும் அளிக்க வேண்டுமென்று நினைக்கிறாளே, அவளுடைய இந்த எல்லாக் காரியங்களும் யக்ஞ காரியங்களே. அடுப்பென்பது என்ன? அது அந்தத் தாய் மூட்டியுள்ள ஒரு சிறு வேள்வித்தீயே. ஆண்டவனைத் திருப்தி செய்ய வேண்டும் என்ற பாவனையை மனதிற் கொண்டு சமைக்கப்படும் உணவு எவ்வளவு தூயதாய் புனிதமானதாய் அமையுமென்று சிறிது எண்ணிப்பாருங்கள். அந்த கிருகலக்ஷ்மியின் மனதில் இத்தகைய உயர்ந்த பாவனை இருக்குமானால் அவளை பாகவதத்தில் வரும் ரிஷிகளின் மனைவிமாரின் வரிசையில் வைத்தே எண்ண வேண்டும். இத்தகைய எத்தனையோ தாய்மார் சேவையின் மூலமாகவே கடைத்தேறி விட, 'நான் நானெ'ன்று சொல்லிக் கொண்டிருக்கும் பண்டிதரும் ஞானிகளும் கேட்பாரற்று மூலையிற் கிடப்பார்கள்.

## (46) வாழ்க்கை முழுமையும் கடவுள் மயமாக்கலாம்

நமது அன்றாட வாழ்க்கையில் கழியும் ஒவ்வொரு கணமும் சாதாரணமானதாய்த் தோன்றிய போதிலும் உண்மையில் அவை அத்தகையவையல்ல; அதில் பெரிய பொருள் பொதிந்திருக்கிறது. வாழ்க்கை முழுவதும் ஒரு பெரிய யக்ஞ கர்மமே. உன்னுடைய உறக்கம் என்பது என்ன? அது ஒரு சமாதி. எல்லா வகை போகங்களையும் நாம் ஆண்டவனிடம் அர்ப்பணம் செய்து விட்டுத் தூங்கு வோமானால் அந்தத் தூக்கம் சமாதியே யல்லாது வேறு என்ன? நம்மிடையே ஸ்நானம் செய்யும் பொழுது 'புருஷ ஸூக்தம்' சொல்லும் வழக்கமிருந்து வருகிறது. செய்யும் இந்த ஸ்நானத்திற்கும் புருஷஸூக்தத்திற்கும் என்ன சம்பந்தமென்று எண்ணிப் பாருங்கள். பார்க்க விரும்பினால் நிச்சயம் புலனாகும். எந்த விராட் புருஷனுக்கு ஆயிரம் கைகளும், ஆயிரம் கண்களும் உண்டோ, அவனுக்கும் என் இந்த ஸ்நானத்திற்கும் என்ன சம்பந்தம்? சம்பந்த மென்னவென்றால், நீ எடுத்துத் தலையில் ஊற்றிக் கொள்ளும் அந்தச் செம்பு ஜலத்தில் ஆயிரக்கணக்கான துளிகளிருக்கின்றன. அந்தத் துளிகள் உன் தலையைக் கழுவி உன் பாவத்தை அகற்றுகின்றன. உன் தலையின் மீது ஆண்டவனுடைய ஆசியே பொழிவது போல் ஆகும் அது. ஆண்டவனுடைய ஆயிரம் கைகளும் ஆயிரம் நீரொழுக்குகளை உன்மீது பொழிந்து கொண்டிருக்கின்றன. இந்தத் துளிகளின் மூலமாய் ஆண்டவனே உன் தலைக்கு அகத்திலுள்ள அழுக்கையும் கழுவிக் கொண்டிருக்கிறான் இத்தகைய தெய்வீக பாவனையை அந்த ஸ்நானத்தில் புகுத்துவாயானால் அந்த ஸ்நானம் வேறு தன்மை பெற அதில் அளவிட முடியாத சக்தி வந்து சேர்ந்து கொள்ளும்.

இந்த பாவனையுடன், அதாவது இது ஆண்டவனுடையது என்ற உணர்ச்சியுடன் ஒரு சாதாரணமான காரியத்தைச் செய்த போதிலும் அது புனிதமாய் விடுகிறது. இது அனுபவத்தில் உணரப்பட்டதொன்று. நம் வீட்டிற்கு வந்திருப்பவர் ஆண்டவனே என்று மனதில் சிறிது எண்ணிக் கொண்டு பாருங்கள். சாதாரணமான பெரிய மனிதன் ஒருவன் நம் வீட்டிற்கு வந்தாலே நாம் எவ்வளவு

வீட்டைத் துப்புரவெல்லாம் செய்கிறோம், விருந்துச் சாப்பாடெல்லாம் தயாரிக்கிறோம்? வருவோன் ஆண்டவனென்று எண்ணத் தொடங்குவோமானால் நம் பாவனை எந்த அளவுக்கு மாறக்கூடுமென்று நீங்களே சொல்லுங்கள். கபீர் துணி நெய்து கொண்டிருந்தார். அதிலேயே ஆழ்ந்து போகும் அவர், ஆண்டவனுக்கு அணிவிப்பதற்கென்றே தாம் ஆடை நெய்வதாக எண்ணிக்கொண்டு,

"झीनी झीनी बिनी चदरिया।"

(ஜீனீ ஜீனீ பினீ சதரியா)

என்று பாடியவராய் மெய் மறந்து போவார். ரிக்வேதத்தில் வரும் ரிஷி,

"वस्त्रेव भद्रा सुकृता सुपाणी"

(வஸ்த்ரேவ பத்ரா ஸுக்ருதா ஸுபாணீ)

"நான் எனது இந்த ஸ்தோத்திரத்தை அழகிய கைகளினால் நெய்த ஆடையைப்போல் ஆண்டவனை ஏற்கச் செய்கிறேன்" என்கிறார். கவிஞன் இயற்றும் ஸ்தோத்திரம் ஆண்டவனுக்காகவே. கைக்கோளன் நெய்யும் ஆடையும் ஆண்டவனுக்கென்றே நெய்கிறான். எத்தகைய உள்ளத்தைப் போய்த் தொடும் கற்பனை! சித்தத்தைத் தூய்மைப் படுத்தி உள்ளத்தைத் துள்ளி எழச் செய்யும் எத்தகைய தூய கருத்துக்கள்!! இந்த பாவனை வாழ்க்கையில் ஒரு முறை வந்து விடுமானால் அது எவ்வளவு தூய்மை பெற்று விடும்! இருளில் மின்னல் ஒளிக்கும் பொழுது ஒரு கணத்தில் அந்த இருளெல்லாம் ஒளியாகி விடுகிறது. இருள் மெல்ல மெல்லவா ஒளியாகிறது? இல்லை. ஒரு கணத்திலேயே அகமும் புறமும் எல்லாம் மாறிப் போகின்றன. அவ்வாறே ஒவ்வொரு காரியத்தையும் ஆண்டவனுடன் இணைத்தவுடன் வாழ்க்கையில் அற்புதமான சக்தி தோன்றி விடுகிறது. ஒவ்வொரு காரியமும் தூயதாகத் தொடங்கி விடுகிறது. வாழ்க்கையில் உற்சாகம் பரவுகிறது. இன்று நம் வாழ்க்கையில் உற்சாகம் எங்கே இருக்கிறது? நாம் வாழ்ந்திருப்பது சாவு வராமையினாலேயே. எங்கு பார்த்தாலும் உற்சாகத்திற்குப் பஞ்சமேற்பட்டிருக்கிறது. கலையில்லாத ஒப்பாரியாயிருக்கிறது வாழ்க்கை. ஆனால் நம் காரியங்களனைத்தையும் ஆண்டவ

னுடன் இணைத்து விடுவதென்று சிறிது எண்ணிப் பாருங்கள். பிறகு உங்கள் வாழ்க்கை எவ்வளவு இனிமை பொருந்தியதாய் மதிப்பிற்குரியதாய் ஆகிறதென்பது புலனாகும்.

ஆண்டவனுடைய ஒரு பெயரினாலேயே உடனே மாறுதல் ஏற்பட்டு விடுகிறது. இதில் ஐயப்பாடு தேவையில்லை. இராமன் என்று சொல்லுவதனால் என்ன ஆகப்போகிறது என்று சொல்லாதீர்கள். சிறிது சொல்லித்தான் பாருங்களேன். மாலை நேரத்தில் உழவன் வேலையை முடித்து விட்டு வீட்டிற்கு வந்துகொண்டிருக்கிறான். வழியில் அவனுக்கு ஒரு பிரயாணி கிடைத்துவிடுகிறான். அவன் பிரயாணியிடம்—

"பிரயாணம் செய்யும் அண்ணா! ஏ நாராயணா, சிறிது நில்லும். இப்பொழுது இரவு வந்து விட்டது. பகவானே, என் வீட்டிற்கு எழுந்தருளும்" என்கிறான். அந்த உழவன் வாயிலிருந்து இம்மாதிரியான சொற்கள் வெளிவருமானால் அந்தப் பிரயாணியின் தன்மையே மாறி விடுகிறதா, இல்லையா என்று பாருங்கள். அந்தப் பிரயாணி வழிப்பறி செய்யும் திருடனாயிருந்த போதிலும் அவன் நல்லவனாய் விடுவான். இந்த மாறுபாடு பாவனை காரணமாக ஏற்படுகிறது. பாவனையிலேயே எல்லாம் பொதிந்திருக்கிறது. வாழ்க்கையே பாவனை மயந்தான். இருபது வயதான பிற வீட்டுப் பையனொருவன் நம் வீட்டிற்கு வருகிறான். தந்தை அவனுக்குத் தன் பெண்ணைக் கொடுக்கிறார். அந்தப் பையனுக்கு வயது இருபதே ஆயிருந்த போதிலும் ஐம்பது வயதான அந்தப் பெண்ணின் தந்தை அவன் காலைத் தொடுகிறார். இதற்கு என்ன அர்த்தம்? பெண்ணை அளிக்கும் அந்தக் காரியம் எவ்வளவு புனிதமானது! எவனுக்கு அவள் அளிக்கப்படுகிறாளோ அவன் ஆண்டவனாகவே காணப்படுகிறான். மருமகனிடம் கொள்ளப்படும் இந்த பாவனையையே இன்னும் மேலே கொண்டு போங்கள், முன்னே கொண்டு செல்லுங்கள்.

இவ்வாறு பொய்க்கற்பனைகள் செய்து கொள்வதால் பயன் என்னவென்று சிலர் சொல்லலாம். எடுத்ததுமே உண்மை—பொய் என்று சொல்லாதீர்களென நான் சொல்லுகிறேன். முதலில் பயின்று பாருங்கள், அனுபவம்

பெறுங்கள் ; அதன் பின் உங்களுக்கு உண்மையும் பொய் யும் தெரியவரும். அந்தக் கன்னிகாதானத்தில் சொல்லள வோடு நில்லாது மருமகன் உண்மையிலேயே பரம்பொரு ளென்று உணர்ந்தீர்களானால் எவ்வளவு மாறுதல் தோன்று கிறதென்று தெரியவரும். இந்தப் புனிதமான பாவனை யின் பயனைக் குறித்தபொருள் ஏற்கெனவே இருந்த தற்கும் பின் அது ஆவதற்கும் ஆகாயத்திற்கும் பாதா ளத்திற்குமுள்ள வேற்றுமை இருக்கும். தீயவன் நல்லவ னையும், தகுதியற்றவன் தகுதியுள்ளவனையும் மாறிவிடுவான். * பால்யா என்றவேடன் மாறியது இதேவகையில் அல்லவா? வீணையின் மீது விரல்கள் ஓடிக்கொண்டிருக்கின்றன. வாயினால் நாராயண நாமஜபம் நடந்துகொண்டிருக்கிறது. அவன் கொல்லுவதற்கு ஓடுகிறான். அப்பொழுதும் சிறிதும் அமைதி கலைவதற்கு மாறாக அவன் பக்கம் அன்புடன் பார்க் கிறார். பால்யா இத்தகைய காட்சியை இதற்குமுன் கண்டதே யில்லை. அவன் அந்தக் கணம்வரையில் இரண்டேவகைப் பிராணிகளைத்தான் பார்த்திருந்தான். ஒன்று அவனது வில்லையும் அம்பையும் பார்த்து ஓடுவது, மற்றதோ அவன் மீது எதிர்த்துப் பாய்வது. ஆனால் நாரதரோ அவனைக் கண்டதும் ஓடவுமில்லை, அவனை எதிர்க்கவுமில்லை. சாந்த ராய் நின்று கொண்டிருந்தார். பால்யாவின் அம்பும் வில் லும் அப்படியே நின்றுவிட்டன. நாரதரோ இமையையும் அசைக்கவில்லை ; கண்களையும் மூடவில்லை. இனிய கீதம் முன்புபோல் ஒலித்துக்கொண்டிருந்தது. நாரதர் பால்யா விடம், "உன் அம்பு ஏன் நின்றுவிட்டது ?" என்று கேட் டார். அதற்கு பால்யா, "உங்களுடைய சாந்த பாவத்தைப் பார்த்து" என்று பதில் சொன்னான். நாரதர் பால்யாவின் தன்மையையே மாற்றி விட்டார். இந்த மாறுபாடு உண் மையா பொய்யா ?

உண்மையில் உலகத்தில் துஷ்டன் இருக்கிறான் அல் லது இல்லை என்பதைத் தீர்மானிப்பது யார் ? உண்மை யான துஷ்டன் உன் எதிரில் தோன்றினாலும் இவன் ஆண் டவனே என்று பாவித்துக்கொள். அவன் துஷ்டனா யிருந்தபோதிலும் மகாத்மாவாய் மாறிவிடுவான். அப்படி யானால் பொய்யாகவே இவ்வாறு பாவிப்பதா ? அவன் துஷ் டனே என்று யாருக்குத் தெரியுமென்று நான் கேட்கிறேன்.

* வால்மீகி முனிவரின் ஆரம்பகாலப் பெயர்.

சிலர், “நல்லவர்கள் தாம் நல்லவர்களாயிருப்பதால் அவர்களுக்கு எல்லாமே நல்லதாய்த் தோன்றுகிறது” என்கிறுர்கள். ஆனுல் உண்மையில் இவ்வாறு ஒன்றும் நடப்பதில்லே. அப்படியானுல் உனக்கு எது தோன்றுகிறதோ அதையும் உண்மை என்று எப்படிக் கொள்வது? துஷ்டர்களிடம் மட்டுமே சிருஷ்டியைப் பற்றிப் பூரணமாய் அறிந்து கொள்வதற்கு வேண்டிய சாதனங்கள் உள்ளன போலும்! சிருஷ்டி நல்லதுதான்; ஆனுல் நீ துஷ்டனுயிருப்பதால் அது உனக்குத் தீயதாய்த் தோன்றுகிறது என்று ஏன் சொல்லக்கூடாது? சிருஷ்டி என்னவென்பதைப் பார். அது ஒரு கண்ணுடி. நீ எப்படியிருக்கிருயோ அப்படியேதான் உனது பிரதி விம்பம் எதிரிலுள்ள சிருஷ்டியில் உனக்குத் தோன்றும். நமது கண் எப்படியிருக்கிறதோ அப்படியே தான் சிருஷ்டியின் உருவும் காணப்படும். ஆகையால் இந்த சிருஷ்டி நல்லது, புனிதமானதென்று எண்ணிக்கொள். உன் சாதாரணக் காரியங்களிலும் இத்தகைய பாவனே இருக்கும்படி செய். பிறகு எத்தகைய அற்புதம் நிகழ்கிறதென்று பார்! பகவான் இதே விஷயத்தை அறிவுறுத்த விரும்புகிருர்:

> “எதை உண்டாலும் செய்தாலும், ஓமம் செய்தாலும் தவம் புரிந்தாலும்
> தானம் முதலியன செய்தாலும் அனைத்தையும் எனக்கே அர்ப்பணமாகச் செய்”

நீ எதைச் செய்தாலும் எல்லாவற்றையும் அப்படியே பகவானிடம் சமர்ப்பித்துவிடு.

என்தாய், என் பிள்ளேப் பிராயத்தில் ஒரு கதை சொல்வது வழக்கம். விஷயம் வேடிக்கையானது தான், ஆனுல் அதில் அடங்கியுள்ள கருத்து மிகவும் முக்கியமானது. ஒரு பெண் இருந்தாள். அவள் தான் எதைச் செய்தாலும் கிருஷ்ணுர்ப்பணமாச் செய்வதென்று உறுதி கொண்டிருந்தாள். அவள் செய்து வந்ததென்ன? அடுப்பை மெழுகிவிட்டு எஞ்சும் சாணத்தை உ ரடையாய் உருட்டி வாயிலில் எறியும்பொழுது ப் பணம் என்று சொல்லுவாள். இதனுல் நடந்தது என்னவென்றுல், அந்தச் சாண உருண்டை அங்கிருந்து எழும்பிக் கோயிலிலுள்ள கிருஷ்ண விக்கிரகத்தின் முகத்தில் போய் ஒட்டிக்கொள்ளும். அர்ச்சகர் பாவம், விக்கிரகத்தை தின

மும் கழுவிக் கழுவிக் கை சளைத்துப் போய்விட்டார். அவருக்கு என்னசெய்வதென்றே புரியவில்லை. இறுதியில் இது அந்தப் பெண்ணின் வேலை என்று தெரியவந்தது. அந்தப் பெண் உயிரோடிருக்கும் வரையில் விக்கிரகம் துப்புரவாய் இருப்பது சாத்தியமில்லை. ஒரு நாள் அந்தப் பெண் நோயுற்றாள். சாகுந்தருணம் நெருங்கிவிட்டது. அவள் சாவையும் கிருஷ்ணார்ப்பணம் ஆக்கிவிடவே கோயிலிலிருந்த விக்கிரகம் வெடித்து விழுந்து விட்டது. பெண்ணை அழைத்துப் போவதற்காக ஆகாயத்தில் விமானம் வந்து நின்றது. அவள் விமானத்தையும் கிருஷ்ணனுக்கு அர்ப்பணம் செய்து விட்டாள். வந்த விமானம் கோயிலில் போய் மோதி சுக்குநூறாய்விட்டது. சுவர்க்கமும் ஸ்ரீ கிருஷ்ணனின் நினைவின் முன் வீணே.

இதன் கருத்தென்னவென்றால், நாம் நல்லதோ தீதோ எந்தக் காரியம் செய்த போதிலும் எல்லாவற்றையும் ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்து விடுவதனால் அவைகளில் ஒரு புதிய சக்தி தோன்றிவிடுகிறது. மக்காச் சோளம் சிறிது மஞ்சளும் சிவப்பும் கலந்த நிறமுள்ளது. ஆனால் அதையே மணலில் இட்டுப் பொரிக்கும் பொழுது எவ்வளவு நல்ல பொரியாகி விடுகிறது! நல்ல வெண்மையும் தும்பைப் பூவைப் போன்ற மென்மையும் உள்ள அந்தப் பொரியை அந்தச் சோளத்தின் பக்கத்தில் வைத்துப் பார்த்தால் இரண்டிற்கும் எவ்வளவு வேற்றுமை! ஆனால் அந்தப் பொரி இந்தச் சோளத்திலிருந்தே ஆனது என்பதில் ஐயமில்லை. இந்த வேறுபாடு வெறும் தீயினால் ஏற்பட்டது. இவ்வாறே அந்த கெட்டியான சோளத்தை இயந்திரத்திலிட்டு அரைப்பாயானால் அது மிருதுவான மாவாய்விடும். தீயின் சேர்க்கையினால் பொரியானது போல் இயந்திரத்திலிட்டு அரைத்ததனால் மிருதுவான மாவாய்விட்டது. இவ்வாறே நமது எந்தச் சிறிய காரியத்திலும் ஆண்டவன் நினைவைச் செலுத்தும்பொழுது அதன் உருவே மாறிவிடும். பாவனையினால் மதிப்பு உயர்ந்து விடுகிறது. அந்தச் சாதாரணக் கொன்றைப் பூவையும் வில்வ இலைகளையும் துளசிக் கொழுந்தையும் அருகம்புல்லையும் இழிந்தவையென்று நினையாதே.

“ ராம நாமக் கலப்பினால் இனிப்பாய்விட்டது ”*

---

* “ तुका म्हणे चवी आलें । जें का मिश्रित विठ्ठलें ”

ஒவ்வொரு விஷயத்திலும் பகவானை இணைத்துப்பின் அது எப்படியிருக்கிறதென்று பார். இந்த இராமன் என்ற கலவையைப் போன்றதொன்று உண்டா? இந்தத் தெய்வீகக் கலவையை விடச் சிறந்ததொன்றை நீ எங்கிருந்து கொணர்வாய்? ஆண்டவனென்ற இந்தக் கலவையை உனது ஒவ்வொரு காரியத்திலும் கலந்துவிடு. பிறகு எல்லாம் அழகும் இனிமையும் பெறும்.

இரவு எட்டு மணிக்கு கோயிலில் தீபாராதனை நடக்கும் பொழுது, சாம்பிராணி மணம் பரவிக்கொண்டிருக்கும் பொழுது, விளக்கொளி செய்யப்படும்பொழுது, கற்பூர ஆரத்தி நடைபெறும்பொழுது நாம் உண்மையில் ஆண்டவனை நம்முன் காண்பதுபோன்ற உணர்ச்சி ஏற்படுகிறது. பகவான் பகல் முழுவதும் விழித்திருந்தார். இப்பொழுது அவர் உறங்கவேண்டிய சமயமாய் விட்டது. பக்தர்,

"இனிது கண் வளர ஏகுவாய், கண்ணா!" *

என்று பாடுகிறார்.

ஒரு சந்தேகாத்மா, "போ ஐயா, ஆண்டவன் எங்கேயாவது தூங்குவதுண்டா?" என்று கேட்கிறார்.

பகவான் என்னதான் செய்யமாட்டார்? முட்டாளே, பகவான் தூங்குவதில்லை, விழிப்பதில்லை என்றால் இந்தக் கல் தூங்கவும் விழிக்கவும் செய்யுமா? தம்பி, பகவான்தான் தூங்குகிறார், பகவான்தான் விழிக்கிறார், பகவான்தான் உண்டு உடுத்துகிறார். துளசிதாஸர் பொழுது புலர்ந்ததும் பகவானை எழுப்புகிறார், எழுமாறு வேண்டுகிறார்—

"ரகுநாத குமாரா, விழித்தெழுவீர்!
பக்ஷிகள் வனத்தில் பேசின"

தம் சகோதர சகோதரிகளை, ஆண் பெண் அனைவரையும் இராமசந்திரனென்றே கொண்டு அவர் "என் இராமர்களே, எழுவீர்" என்கிறார். எவ்வளவு அழகிய கருத்து! இல்லையேல் ஒரு உணவு விடுதியை எடுத்துக்கொள்ளுங்கள். அங்குள்ள பிள்ளைகளை எழுப்பும்பொழுது, "எழுகிறீர்களா இல்லையா?" என்று அதட்டுகிறார்கள். மங்களமான

---

* "आतां स्वामी सुखें निद्रा करा गोविंदा"

காலை நேரத்தில் இத்தகைய கடூரமான குரல் நன்றாயிருக்கிறதா? விச்வாமித்திரருடைய ஆசிரமத்தில் இராமசந்திரர் தூங்கிக்கொண்டிருக்கிறார். விச்வாமித்திரர் அவரை எழுப்புகிறார். வால்மீகி ராமாயணத்தில் அது இவ்வாறு வர்ணிக்கப்பட்டிருக்கிறது: —

"रामेति मधुरां वाणी विश्वामित्रोऽभ्यभाषत ।
उत्तिष्ठ नरशार्दूल पूर्वा सन्ध्या प्रवर्तते ॥"

(ராமேதி மதுராம் வாணீ விஶ்வாமித்ரோப்ய பாஷத ।
உத்திஷ்ட நரஶார்தூல பூர்வாஸந்த்யா ப்ரவர்த்ததே ॥)

"குழந்தாய் ராமா, எழு!" இவ்வாறு இனிய குரலில் விச்வாமித்திரர் அவரை எழுப்புகிறார். இந்த முறை எவ்வளவு இனிதாயிருக்கிறது! உணவு விடுதியில் எழுப்பும் அந்த முறை எவ்வளவு கடூர மாயிருக்கிறது! பாவம், உறங்கும் பிள்ளைகளுக்கு தங்கள் ஜன்ம விரோதி ஒருவன் வந்து எழுப்புவதாகவே தோன்றும்! முதலில் மெல்லக் கூப்பிடு, பிறகு சிறிது உரக்கக் கூப்பிடு. ஆனால் கடூரம், கடுமை சிறிதும் கூடாது. எழாவிடில் பத்து நிமிஷம் தாழ்த்தி மீண்டும் சென்று எழுப்பு. இன்று இல்லையேல் நாளை கட்டாயம் எழுந்து விடுவானென்று நம்பு. அவனை எழுப்ப இனிய கீதங்களை, பள்ளி எழுச்சிப் பாடல்களை ஸ்தோத்திரம் முதலியவைகளைச் சொல்லு. தூங்குபவனை எழுப்புதல் என்பது ஒரு சாதாரணக் காரியம். ஆனால் நாம் அதையும் எவ்வளவு காவியமயமாய், உள்ளம் கலந்ததாய், அழகாய்ச் செய்யலாம்! பகவானையே எழுப்புவது போல் ஆக்கிவிடலாமே! ஆண்டவனுடைய மூர்த்தியை மெதுவாகவே எழுப்பவேண்டும். தூக்கத்திலிருப்பவனை எழுப்புவதும் ஒரு சாஸ்திரமே.

தன் காரியங்கள் அனைத்திலும் இந்தக் கருத்தைப் புகுத்து. போதனை சாஸ்திரத்திலோ இந்தக் கற்பனை மிகவும் தேவை. பிள்ளைகள் யார்? ஆண்டவனுடைய உருவங்களே. நான் இந்த தேவதைகளுக்குப் பணிவிடை செய்துகொண்டிருக்கிறேன் என்ற பாவனையே ஆசிரியருக்கு இருக்கவேண்டும். அப்பொழுது அவர் பிள்ளைகளிடம், "போ வீட்டிற்கு. இந்த மணி முழுமையும் நில், நீட்டு கையை, சட்டை துணி யெல்லாம் எவ்வளவு அழுக்கு! கை, மூக்கு எல்லாம் என்ன ஆபாசம்!" என்

றெல்லாம் அதட்டமாட்டார். அதற்கு மாருக மெதுவாய் மூக்கைத் துடைத்து விடுவார்; அழுக்குத் துணியைத் துவைத்துக் கொடுப்பார்; கிழிந்த துணியைத் தைத்துக் கொடுப்பார். ஆசிரியர் இவ்வாறெல்லாம் செய்தால் அதற்கு நல்ல விளைவு உண்டாகும். அடியினுலும் கண்டிப்பினுலும் எங்கேனும் நன்மை விளைந்ததுண்டா? பிள்ளைகளும் இதே தெய்வீக பாவனையுடன் ஆசிரியரிடம் நடந்துகொள்ள வேண்டும். ஆசிரியர், சீடர்களை கடவுளர் என்றும் சீடர்கள் ஆசிரியரைக் கடவுளென்றும் கொள்ளவேண்டும். இத்தைய பாவனை பரஸ்பரம் இருந்து வருமாறல் கல்வி எவ்வளவு சிறந்ததாய் அமையும்! பிள்ளைகளும் பகவான், ஆசிரியரும் பகவான்! பிள்ளைகள், 'இவர் நம் ஆசிரியர் அல்ல பகவான் சங்கரரே; நாம் அவருடைய போதனை என்ற அமுதைப் பருகி வருகிறேம், அவருக்குப் பணி புரிந்து அறிவு விளக்கப் பெறுகிறேம்' என்று எண்ணுவார்களாறல் அவர்கள் அவரிடம் எப்படி நடந்துகொள்வார்களென்று நீங்களே சொல்லுங்கள்.

## (47) பாவபயம் இல்லை

எல்லா இடங்களிலும் ஆண்டவனிருக்கிறனென்ற பாவனை சித்தத்தில் பதிந்துவிடுமாறல் பிறகு நாம் பரஸ்பரம் எப்படி நடந்துகொள்ளவேண்டும் என்ற நீதிமுறை நம் உள்ளத்தில் தானே தோன்றத் தொடங்கும்; சாஸ்திரம் படிப்பதற்கு அவசியமே ஏற்படாது. அப்பொழுது எல்லாக் குறைகளும் விலகிப்போம், பாவம் ஓட்டம் பிடிக்கும், தீமைகளின் இருள் விலகும். துகாராம்,

"ஹரிநாமம் சொல் நீ சுதந்திரனுவாய்;
பாவம் எதுவும் உன்னுல் நேராது;
பேரைச் சொன்னுல் பக்கலில் வருவான்" *

என்று சொல்லி யிருக்கிறர்.

---

* चाल केलासी मोकळा । बोलें विठ्ठल वेळोवेळां
तुज पाप चि नाही ऐसे । नाम घेतां जवळी वसे
पंचपातकांच्या कोडी । नामें जळतां न लगे घडी
केलीं मागें नको पाहों । तुज जमान आम्ही आहों

உனக்குப் பாவம் செய்ய அனுமதி கிடைத்துவிட்டது. நீ பாவம் செய்து செய்து அலுக்கிருயா அல்லது ஹரிநாமந் தான் உன் பாவங்களை அழித்தழித்துச் சளைக்கிறதா என்று நான் பார்க்கிறேன். ஆண்டவன் பெயரினெதிரில் நிலைத்து நிற்கக்கூடிய அவ்வளவு சக்தி வாய்ந்த பாவம் தான் எது? உனக்கு எவ்வளவு இஷ்டமோ அவ்வளவு பாவம் புரி; உன்னால் எவ்வளவு முடியுமோ அவ்வளவு செய். பூரண சுதந்திரம் உனக்குக் கொடுக்கப்பட்டுவிட்டது. ஆண்டவன் பெயருக்கும் உன் பாவங்களுக்கும் மற்போர் நடக்கட்டும். அடே, இந்த ஆண்டவன் பெயர் இருக்கிறதே, அதற்கு இந்த ஜன்மத்தில் மட்டுமல்ல எண்ணிலடங்காத எத்தனையோ ஜன்மங்களில் செய்த பாவங்களையும் ஒரு இமைப்பொழுதில் பொசுக்கிச் சாம்பலாக்கும் சக்தியுண்டு. குகையில் எத்தனையோ யுகங்களாய் இருள் சூழ்ந்திருந்தும் ஒரு தீக்குச்சியைக் கொளுத்திப் பிடித்ததும் அவ்விருள் ஓடிப்போய்விடுகிறது. சற்று முன் இருளாயிருந்தது இப்பொழுது ஒளியாய் விடுகிறது. பாவம் எவ்வளவு பழையதோ அவ்வளவுக்கு விரைவாய் அழிந்து போகிறது. ஏனெனில், அது அழிவதற்குத் தயாராயிருக்கிறது. பழைய விறகு வெகு விரைவில் எரிந்து சாம்பலாகும்.

ராமநாமத்தின் அருகில் பாவம் நிற்கவே முடியாது. குழந்தைகள் இராமன் பெயரைச் சொன்னதும் பூதம் ஓடிப் போகிறதென்று சொல்லுகிருர்கள் அல்லவா? நான் சிறு வயதில் இரவில் மயானத்திற்குப் போய் வருவதுண்டு. மயானத்தில் போய் ஆணியை அடித்து வருவதென்று பந்தயம் வைப்பதுண்டு. இரவில் அங்கே பாம்பிருக்கும், வழியில் முள் கிடக்கும், நாற்புறமும் ஒரே இருளாயிருக்கும்; ஆயினும் அதெல்லாம் ஒன்றும் அப்பொழுது தோன்ருது. பேய் பிசாசு என்பவைகளோ கண்ணில் பட்டதே யில்லை. பேயும் பிசாசும் மனப் பேய்கள் தானே! ஆகையால் அவைகளை எங்கே காணமுடியும்? ஒரு பத்து வயதுப் பையனுக்கு மயானத்திற்குப் போய் வரும் தைரியம் எங்கிருந்து வந்தது? ராம நாமத்திலிருந்து. சத்திய உருவினனை பரம்பொருளின் மகிமையாகும் இது. ஆண்டவன் என்னருகிலிருக்கிருர் என்ற பாவனை இருக்கு

---

करीं तुजसी करवती। आणिक नामें घेऊं किती
तुका म्हणे काळा। रीघ नाहीं निघती ज्वाळा ॥

மானால் உலகமே புரண்டு போவதாயிருந்தாலும் பக்தனுக்குச் சிறிதும் பயம் தோன்றாது. அவனை எந்த இராட்சசன் சாப்பிட்டுவிடமுடியும்? இராட்சசன் ஒருவன், அவனுடைய உடலைத் தின்று ஜரித்து விட்டாலும் அவனுக்கு சத்தியம் ஜீரணமாகாது. சத்தியத்தை அழிக்கக்கூடிய சக்தி உலகில் எங்குமே யில்லை. ஆண்டவன் பெயரினெதிரில் பாவத்தினால் சிறிது நேரங்கூட நிற்கமுடியாது. ஆகையால் ஆண்டவனிடம் மனதைச் செலுத்து. அவனுடைய கருணையைப் பெறு. எல்லாக் கர்மங்களையும் அவனுக்கு அர்ப்பணம் செய்துவிடு. நீ அவனுடையவனாகிவிடு. தன் கர்மங்களனைத்தையும் ஆண்டவனுக்கு நிவேதனமாக அர்ப்பணம் செய்யவேண்டுமென்ற பாவனையை மேன்மேலும் தீவிரமாக்கிக்கொண்டே போவாயானால் இழிந்த வாழ்க்கையும் தெய்வீக வாழ்க்கையாகும்; மலின வாழ்க்கையும் அழகு பெற்று விளங்கும்.

## (48) சிறிதே ஆயினும் இனிது

'पत्रं पुष्पं फलं तोयम्' (பத்ரம் புஷ்பம் பலம் தோயம்) என்றபடி எதுவாயிருந்தாலும் அதனுடன் பக்தி பாவம் இருக்குமானால் போதும். எவ்வளவு கொடுத்தாய்? எவ்வளவு காணிக்கை யளித்தாய் என்பதில் அல்ல கணக்கு; எந்த பாவனையுடன் கொடுத்தாய் என்றே கணக்கிடப்படும். ஒரு சமயம் ஒரு பேராசிரியரிடம் நான் பேசிக்கொண்டிருந்தேன். பேச்சு போதனை சாஸ்திரத்தைப் பற்றி நடந்தது. எங்கள் இருவரின் அபிப்பிராயங்களினிடையில் ஒற்றுமையில்லை. இறுதியில் பேராசிரியர், "சுவாமி, நான் பதினெட்டு வருஷமாய் இந்த உத்தியோகம் பார்க்கிறேன்" என்றார். பேராசிரியர் தம் யுக்தி வாதங்களினால் என் அபிப்பிராயத்தை மாற்றி யிருக்கவேண்டும்; அவ்வாறு செய்யாது 'நான் இவ்வளவு வருஷங்களாக போதனைத் தொழில் செய்து வருகிறவனாயிற்றே' என்று சொல்லவே, நான் அவரிடம் வேடிக்கையாய், "பதினெட்டு வருஷம் ஒரு எருது ஒரு யந்திரத்தைச் சுற்றிக்கொண்டே யிருந்தால் அது யந்திர சாஸ்திரத்தில் வித்வானாகிவிடமுடியுமா?" என்று கேட்டேன். யந்திர சாஸ்திரத்தைத் தெரிந்துகொள்வதென்பது வேறு விஷயம். கண்ணை மூடிக்கொண்டு மாட்டைப்போல் யந்திரத்தைச் சுற்றி வருவதல் வேறு

விஷயம். போதனை சாஸ்திரத்தைப் புரிந்துகொள்வது வேறு, போதித்தல் என்ற சுமையைத் தாங்கிக்கொண்டிருப்பது வேறு. சாஸ்திரம் தெரிந்தவன் ஆறுமாதத்தில் பெறக்கூடிய அனுபவத்தை பதினெட்டு வருஷம் மூட்டை தூக்கி உழைத்த கூலியாளினால் பெறமுடியாது. அதாவது அந்தப் பேராசிரியர் எனக்கு இந்தத் தொழிலிலேயே தலைநரை கண்டுவிட்டதென்று சொன்னார். ஆனால் தலைநரையினால் உண்மையை நிலைநாட்டமுடியாது. இவ்வாறே ஆண்டவனெதிரில் எவ்வளவு கொண்டு போய்க் குவித்தோம் என்பதற்கல்ல சிறப்பு. பேருக்கோ உருவுக்கோ பொருளின் விலைக்கோ அங்கே மதிப்புக் கிடையாது; மதிப்பு பாவனை ஒன்றுக்கே உண்டு. எதை எவ்வளவு அர்ப்பணம் செய்தோம் என்ற கேள்வி யில்லை; எப்படிச் செய்தோம் என்பதே கேள்வி. கீதையில் மொத்தம் எழுநூறு சுலோகங்களே யிருக்கின்றன. பத்தாயிரம் சுலோகங்களுள்ள நூல்களும் உண்டு. ஆனால் ஒரு பொருளின் உருவம் பெரிதாயிருப்பதனாலேயே அதன் உபயோகமும் அதிகமாயிருக்குமென்று சொல்ல முடியாது. ஒரு பொருளின் சக்தி எவ்வளவு என்பதையே நாம் பார்க்கவேண்டும். வாழ்க்கையில் எத்தனை காரியங்கள் நடந்தன என்பதற்கு முக்கியத்துவம் இல்லை; ஆண்டவனுக்கு அர்ப்பண மென்ற அறிவோடு ஒரே ஒரு காரியம் செய்திருந்தாலும் அதுவே நமக்குப் பூரண லாபம் அல்லது அனுபவம் தந்துவிடும். சிற்சில சமயங்களில் நமக்குப் பத்துப் பன்னிரண்டு வருஷங்களில் ஏற்படமுடியாத அனுபவம் புனிதமான ஒரே கணத்தில் ஏற்பட்டு விடக்கூடும்.

கருத்தென்னவென்றால், வாழ்க்கையின் சாதாரண கர்மங்களையும் கிரியைகளையும் ஆண்டவனுக்கு உரிமையாக்கி விடுவோமானால் அதிலிருந்து வாழ்க்கையில் ஒரு தனித் திறமை தோன்றும்; மோட்சம் கைக்கு வந்துவிடும். கர்மத்தைச் செய்தும் அதன் பயனை விடாது ஆண்டவனிடம் அர்ப்பணம் செய்தல் என்ற இது ராஜயோகமாகும். இது கர்ம யோகத்தை விட ஒரு அடி முன்னே போகிறது. கர்மயோகம், "கர்மம் செய். பயனைவிடு, பயனில் ஆசை வையாதே" என்று சொல்லுகிறது. இத்துடன் கர்ம யோகம் முடிந்து விடுகிறது. ராஜயோகமோ, "கர்மத்தின் பயன்களை விடாதே; எல்லாவற்றையும் ஆண்டவனுக்கு

உரிமையாக்கி விடு. அவை புஷ்பங்கள், உன்னை மேலே அழைத்தேகும் சாதனங்கள். அவைகளை அந்த மூர்த்திக்கு அணிவித்து விடு'' என்கிறது. ஒருபுறம் கர்மமும் மறுபுறம் பக்தியுமாய் ஒன்று சேர்த்து வாழ்க்கையை அழகுபடுத்திக் கொண்டே போ. பயன்களைத் துறந்து விடாதே. பலன்களைத் துறவாது ஆண்டவனுடன் இணைத்துவிட வேண்டும். கர்ம யோகத்தில் விடப்பட்ட பயன் ராஜயோகத்தில் சேர்த்து இணைக்கப்படுகிறது. விதைப்பதற்கும் வீசி எறிவதற்கும் வித்தியாசமுண்டு. விதைக்கப்பட்டது சிறிதாயினும் எண்ண முடியாத அளவு பெருகிப் பயனளிக்கும். எறியப் பட்டதோ பயனின்றிப் போகும். ஆண்டவனிடம் அர்ப்பணம் செய்யப்பட்ட கர்மம் வயலில் விதைத்த விதை போன்றது; அதனால் வாழ்க்கையில் அளவிலடங்காத ஆனந்தமும் தூய்மையும் ஏற்படும்.

ஞாயிறு 17-4-'32.

## பத்தாம் அத்தியாயம்

# விபூதி சிந்தனை

*

## (49) கீதையின் முற்பகுதி—ஒரு கண்ணோட்டம்

நண்பர்களே, கீதையின் முற்பகுதி முடிந்து விட்டது. பிற்பகுதிக்குப் போகு முன் முடிந்த பகுதியின் மீது ஒரு கண்ணோட்டம் விடுதல் நலம். முதல் அத்தியாயத்தில் கீதை மோகத்தை அழித்து சுதர்மத்தில் நம்மைச் செலுத்த ஏற்பட்டதென்று சொல்லப்பட்டது. இரண்டாம் அத்தியாயத்தில் வாழ்க்கையின் தத்துவங்களையும் கர்மயோகத்தையும் ஸ்திதப் பிரக்ஞையும் கண்டோம். மூன்றும், நான்காம், ஐந்தாம் அத்தியாயங்களில் கர்மம், விகர்மம், அகர்மம் ஆகியவை விவரிக்கப்பட்டன. கர்மம் என்பதற்கு சுதர்மத்தைச் செய்தல் என்பது பொருள்; விகர்மம் என்பதற்கோ புறத்தே செய்யப்படும் சுதர்மத்திற்கு உதவியாக அகத்தில், மனதில் செய்யப்பட வேண்டிய கர்மம் என்பது பொருள். கர்மமும் விகர்மமும் ஒருமிக்கச் சேருவதனால் சித்தம் தூய்மை பெற்று எல்லாவகை அழுக்கும் கழுவப்பட்டு வாசனை குறைந்து விகாரங்களடங்கி வேற்றுமை உணர்ச்சிகள் அழிந்து போகும் பொழுது அகர்மநிலை ஏற்படுகிறது. இந்த அகர்ம நிலையே இரு வகையானதென்று மேலே சொல்லப்பட்டிருக்கிறது. ஒரு வகையோ அல்லும் பகலும் கர்மம் செய்து கொண்டேயிருந்தும் ஒரு சிறிதும் கர்மம் செய்யாதது போன்று உணருதல். இதற்கு மாறான மற்றொரு வகையோ எதுவுமே செய்யாதிருந்தும் இடையறாது கர்மம் செய்து கொண்டேயிருத்தல். இவ்வாறு அகர்ம நிலை இரண்டு வகையாய் மாறிப் போகிறது. இரண்டு வகையாகத் தோன்றிய போதிலும் அவை முற்றிலும் ஒன்றே. அவைகளின் பெயர்கள் கர்மயோகம், சந்நியாசம் என்று வெவ்வேறாய்க் கூறப்படினும் உள்ளே சார அம்சமாய் இரண்டிலும் இருப்பது ஒன்றே. அகர்மநிலையே இறுதியில் பெறவேண்டிய நிலை, போய்ச் சேர வேண்டிய கட்டம். இந்நிலைக்கு மோட்சம் என்ற பெயர் அளிக்கப் பட்டிருக்கிறது. ஆகை

யால் கீதையின் முதல் ஐந்து அத்தியாயங்களில் வாழ்க்கை சாஸ்திரம் எல்லாம் சொல்லப்பட்டு விட்டது.

அதன் பிறகு ஆறும் அத்தியாயத்திலிருந்து அகர்ம மென்ற இலட்சியத்தை எய்துவதற்கு உதவும் விகர்மத்தின் பல் வேறு வழிகளும் மனதை உள்ளேயே சுத்தம் செய்வ தற்கு உள்ள அநேக சாதனங்களில் முக்கியமானவையும் சொல்லப் பட்டிருக்கின்றன. ஆறும் அத்தியாயத்தில் சித்தத்தின் ஏகாக்ரதைக்காக தியான யோகத்தைக் குறிப் பிட்டு அதற்குதவியாக பயிற்சி, வைராக்கியம் ஆகியவை குறிப்பிடப்பட்டிருக்கின்றன. ஏழாம் அத்தியாயத்தில் பரந்த பக்தியென்ற உயர்ந்த சாதனம் கூறப்பட்டது. 'நீ ஆண்டவனிடம் அன்புணர்ச்சி கொண்டு போ, அறிவு வேட்கையினால் போ, உலகிற்கு நன்மை செய்ய வேண்டு மென்ற ஆவலினால் போ அல்லது சொந்த இலாபத்திற்காகப் போ. எதற்காகப் போனாலும் சரி, அவனுடைய சந்நி தானத்திற்கு மட்டும் கட்டாயம் போ.' இந்த அத்தியாயத் தின் இந்த விஷயத்திற்கு 'பிரபத்தியோக' மென்று, அதா வது கடவுளிடம் சரண்புகத் தூண்டும் யோகமென்று நான் பெயரிட்டிருக்கிறேன். ஏழாவதில் பிரபத்தி யோகத்தைச் சொல்லிய பிறகு எட்டாவதில் 'ஸாதத்யயோகம்' சொல்லப் பட்டிருக்கிறது. நான் இங்கே சொல்லும் இந்தப் பெயர்களை நீங்கள் புத்தகத்தில் காண முடியாது. எனக்கு உபயோக மாய்த் தோன்றிய பெயர்களை நான் வைத்தேன். ஸாதத்ய யோகம் என்பதற்கு தன் சாதனைகளை இறுதிக் காலம் வரையில் தொடர்ந்து செய்து வருதல் என்பது பொருள். எந்தப் பாதையில் நாம் ஒரு முறை போகத் தொடங்கி னோமோ அதிலேயே நில்லாது போய்க் கொண்டே யிருக்க வேண்டும். சில நாள் செய்வதும் சில நாள் செய்யாதிருப் பதுமாய் இருந்து வருவோமானால் நாம் இலட்சியத்தைப் போய்ப் பிடிப்போமென்று எண்ணவே முடியாது. அலுத் துக் கொண்டும் நம்பிக்கை இழந்தும், 'நாம் இவ்வாறு எவ்வளவு காலம் தான் சாதனை புரிவது?' என்று எண்ணவே கூடாது. பயன் விளையும் வரையில் சாதனையை நிறுத்தாது புரிந்துகொண்டே போக வேண்டும்.

இந்த ஸாதத்ய யோகத்தை அறிமுகப்படுத்தி விட்டு ஒன்பதாம் அத்தியாயத்தில் மிகவும் சாதாரணமானதும் ஆனால் வாழ்க்கையின் தன்மை முழுவதையுமே மாற்றி

விடக் கூடியதுமான ஒரு விஷயத்தை பகவான் சொல்லி யிருக்கிறார். அதுவே ராஜயோகம். ஒன்பதாம் அத்தி யாயம் ஒவ்வொரு கணமும் நடக்கும் கர்மங்களனைத்தையும் கிருஷ்ணார்ப்பணமாக்கி விடு என்று கூறுகிறது. இந்த ஒரே விஷயத்தில் எல்லாச் சாஸ்திர சாதனங்களும், எல்லாக் கர்ம விகர்மங்களும் அழுந்திப் போயின; எல்லாக் கர்ம சாதனைகளும் இந்தச் சமர்ப்பண யோகத்தில் மறைந்து போயின. சமர்ப்பண யோகத்தையே ராஜயோகம் என்பது. இங்கே எல்லாச் சாதனைகளும் முற்றுப்பெற்று விட்டன. பரந்ததும் சக்தி வாய்ந்ததுமான ஆண்டவ னுக்கு அர்ப்பணம் செய்தல் என்ற இச் சாதனம் ஏதோ மிகவும் எளியதாய்ச் சாதாரணமானதாய்த் தோன்றிய போதிலும் இது மிகவும் கடினமானதே. இந்தச் சாதனம் சுலுவாயிருப்பதற்குக் காரணம் இது ஒன்றுமறியாத ஒரு சாதாரண எளிய மனிதனிலிருந்து பெரிய வித்துவான் வரை அதிக சிரமமின்றி யாவரும் தத்தம் வீட்டிலிருந்து கொண்டே செய்யக்கூடியதா யிருப்பதே. இது இவ்வளவு சுலுவானதாயிருந்தும் இதைச் செய்வதற்கு நமக்குப் பெரிய புண்ணிய பலம் வேண்டும்.

**"எத்தனையோ புண்ணியச் சேர்க்கையின் பயன் விட்டலினிடம் அன்பு"***

எத்தனையோ ஜன்மங்களின் புண்ணியம் சேரும் பொழுதே ஆண்டவனிடம் நமக்குப் பற்று ஏற்படுகிறது. ஏதாவது ஒன்று நேர்ந்து விட்டால் கண்களிலிருந்து கண்ணீர் தாரையாய்ப் பெருக ஆரம்பித்து விடுகிறது. ஆனால் பகவானுடைய பெயரைச் சொல்லிய உடனே கண்ணிலிருந்து இரு துளிகள் கூட வெளிவருவதில்லை. இதற்கு வழி என்ன? மகான்கள் கூறியுள்ளபடி ஒரு வகையில் இதற்குரிய சாதனை வெகு சுலபம். ஆனால் வேறு வகையில் பார்க்கும் பொழுது இது கடினமும் ஆகும். இக் காலத்திலோ இது இன்னும் சிரமமாய் விட்டது.

இன்று ஜடவாதத்தின் திரை நம் கண்கள் மீது விழுந் திருக்கிறது. இன்றோ 'கடவுள் எங்கேனும் இருக்கிறாரா?' என்ற கேள்வியிலிருந்தே தொடங்குகிறார்கள். இருக்கிறார் என்று எவருக்கும் தோன்றக் காணோம். வாழ்க்கை

* बहुता सुकृतांची जोडी । म्हणुनी विठ्ठलीं आवडी

முழுமையும் விகாரமயமாய், விஷய·வாசனை நிரம்பியதாய், கோணல் முறைகள் மலிந்ததாயிருக்கிறது. இன்றுள்ள மிகமிக உயர்ந்த தத்துவ ஞானிகளின் கருத்துக்களும் மக்கள் அனைவருக்கும் வயிறு நிரம்பச் சோறு கிடைப்ப தற்கு வழியென்ன என்பதைப் பற்றிச் சிந்திப்பதற்கு மேலே செல்ல முடியவில்லை. இதில் அவர்களுடைய குற்ற மொன்றுமில்லை. ஏனெனில், இன்றைய நிலைமை பலருக்கு உணவே கிடைக்கக்கூடாததா யிருக்கிறது. இன்றுள்ள பெரிய பிரச்னை உணவைப் பற்றியதே. இந்த பிரச்னையைத் தீர்ப்பதிலேயே அறிவெல்லாம் போய் சிக்கிக் கொண்டிருக் டிருக்கிறது. ஸாயனாசாரியார் ருத்திரன் என்பதற்கு "दरिद्री बुभुक्षमाण: रुद्ररूपेण अवतिष्ठते" (தரித்ரீ புபுக்ஷ மாண: ருத்ரரூபேண அவதிஷ்டதே) என்று விளக்கம் கூறி யிருக்கிறார்.

பசியால் வாடும் மக்களே ருத்திரனின் அவதாரங்கள். அவர்களுடைய பசியைப் போக்குவதற்காக அநேக தத் துவ ஞானங்களும் பல்வேறு அரசியல் முறைகளும் அமைக்கப்பட்டிருக்கின்றன. வெவ்வேறு 'வாதங்கள்' இந்தச் சோற்றுக்காகவே தோன்றியிருக்கின்றன. இந்தப் பிரச்னைகளிலிருந்து தலையைத் தூக்குவதற்கு இன்று நேரமே கிட்டுவதில்லை. இன்று நாம் செய்யும் பகீரதப் பிரயத்தனங்களெல்லாம் ஒருவரோடொருவர் சண்டையிட் டுக் கொள்ளாது அன்பாய் அமைதியாய் நிறைந்த மனத் துடன் உணவைச் சாப்பிடுவதெப்படி என்ற விஷயத்திற் காகவே நடைபெறுகின்றன. இத்தகைய விசித்திர முறை யில் சமூக அமைப்பு இருந்து வரும்பொழுது ஆண்டவ னுக்கு அர்ப்பணம் செய்தலென்ற சுலுவான, தெளிவான விஷயமும் மிகவும் சிரமமாய்த் தோன்றினால் ஆச்சரியப் படுவதற்கில்லை! ஆனால் இதற்கு உபாயம்தான் என்ன? பத்தாம் அத்தியாயத்தில் இன்று நாம் ஆண்டவனுக்கு உரிமையாக்கும் யோகத்தை எவ்வாறு கைவரச்செய்வது, எப்படிச் சுலுவாக்குவது என்பதைப் பார்க்கப் போகி றோம்.

## (50) ஆண்டவனைத் தரிசிக்க சுலப முறை

சிறு பிள்ளைகளுக்குப் போதிக்க நாம் எந்த உபாயங் களைக் கையாளுகிறோமோ அதே வகை உபாயங்கள் பரம்

பொருளை எங்கும் காணும் பொருட்டு இந்த அத்தியாயத்தில் கையாளப்பட்டிருக்கின்றன. குழந்தைகளுக்கு நெடுங்கணக்கு (எழுத்து வரிசை) இரண்டு வகையில் கற்பிக்கப்படுகிறது. ஒருவகை, முதலில் எழுத்துக்களைப் பெரிய உருவிலெழுதிக் காட்டி, பிறகு அதே எழுத்துக்களைச் சிறியவையாய் எழுதிக் காட்டுதல். அதே 'க' வும் 'ங' வும் தான். ஆனால் முதலில் பெரியவையாயிருந்த அவை இப்பொழுது சிறுத்துவிட்டன. போதிப்பதற்குதவும் ஒரு விதி இது. மற்றொரு விதியோ, முதலில் சுலபமான எழுத்துக்களைச் சொல்லிக் கொடுத்துவிட்டு, பிறகு சிக்கலான எழுத்துக்களைக் கற்பித்தல் என்பது. இவ் வகையிலேயே ஆண்டவனைக் காணக் கற்க வேண்டும். முதலில் ஸ்தூலமான, தெளிவான ஆண்டவனை தரிசிக்க வேண்டும். கடல், மலை ஆகிய, சிருஷ்டியின் பெரும் பகுதிகளில் தோன்றும் ஆண்டவன் உடனே நம் கண்களில் நிரம்பிவிடுகிறான். இந்த ஸ்தூலமாயுள்ள பரம்பொருளை நாம் புரிந்து கொண்டோமானால் ஒவ்வொரு நீர்த்துளியிலும் மண்ணின் ஒரு சிறு திவிலையிலும் அதே பரம்பொருள் பொதிந்திருக்கிறதென்பதும் பின்னர் நமக்குப் புரிந்துவிடும். பெரிய 'க' வுக்கும் சிறிய 'க' வுக்கும் வேற்றுமை எதுவுமில்லை. பெரியதிலிருப்பதே தான் சிறியதிலும்; ஸ்தூலத்திலிருப்பது தான் சூக்குமத்திலும். இது ஒரு முறை. இனி இரண்டாவது முறையோவென்றால், நேரிடையான எளிதாய்த் தோன்றும் பரம்பொருளை முதலில் பார்த்துவிட்டு அதன் சிக்கலான உருவத்திற்கு பின்னர் போவதென்பது. எந்த மனிதனிடம் சுத்தப் பரம்பொருள் தன் இயற்கை உருவில் காட்சியளிக்கிறதோ அதை நாம் சுளுவாய்ப் புரிந்து கொள்ள முடிகிறது. இதற்கு உதாரணம் இராமனிடம் வெளியாகியிருந்த பரம்பொருளின் தோற்றம் உடனே நம் மனதில் பதிந்து விடுவது. இராமனென்பது சுளுவான எழுத்து. இது சிரமமில்லாது புரியக்கூடிய பரம்பொருள். ஆனால் இராவணனோ? அது சிக்கலான எழுத்து. அதில் ஓரளவு கலப்படம் இருக்கிறது. இராவணனுடைய தவமும் செயல் திறனும் மிகப் பெரியவை; ஆனால் அவற்றில் கொடுமையும் கலந்திருக்கிறது. முதலில் இராமனென்ற சுளுவான எழுத்தைக் கற்றுக் கொண்டு விடுங்கள். எவனிடம் தயையும் வாத்ஸல்யமும் அன்புணர்ச்சியும் இருக்கின்றனவோ அந்த

இராமன் சுளுவான பரம்பொருள். ஆகையால் அவன் உடனே நம் வசமாய் விடுவான். இராவணனிடம் இருக்கும் பரம்பொருளைப் புரிந்து கொள்ளச் சிறிது நேரமாகும். முதலில் சுளுவான எழுத்து, பிறகு சிக்கலான எழுத்து. பரம்பொருளை முதலில் நல்லோரிடம் பார்த்துவிட்டு, தீயோரிடமும் அதை இறுதியில் பார்க்கப் பயிலவேண்டும். கடலில் உள்ள பரந்த பரம்பொருளே நீரின் ஒரு துளியிலும் இருக்கிறது. இராமசந்திரனுக்குள்ளேயுள்ள பரம்பொருளே இராவணனிடமும் இருக்கிறது. தூலத்திலிருப்பது சூக்குமத்திலும் இருக்கிறது. சுளுவானதிலிருப்பதே சிரமமானதிலுமிருக்கிறது. இந்த இரண்டு விதிகளின்படி நாம் இந்த உலகமென்ற நூலை ஓதக் கற்கவேண்டும்.

இந்த எல்லையற்ற சிருஷ்டி ஆண்டவனுடைய புத்தகமாகும். கண்கள் மீது கனமான திரை மூடியிருப்பதால் நமக்கு இந்தப் புத்தகம் மூடியிருப்பதாய்த் தோன்றுகிறது. இந்த சிருஷ்டியாம் புத்தகத்தில் அழகிய வண்ணங்களில் ஆண்டவன் எல்லா விடங்களிலும் தீட்டப்பெற்றிருக்கிறான். ஆனால் நமக்கது புலனாகவில்லை. ஆண்டவனை நாம் பார்க்க முடியாது ஒரு பெரிய தடை குறுக்கிட்டிருக்கிறது. அதாவது, அருகிலுள்ள சுளுவான ஆண்டவனின் உருவங்கள் மனிதனுக்குப் புரிவதில்லை; தொலைவிலுள்ள கண்ணைப் பறிக்கும் அவனது உருவங்களையோ அவனால் சமாளிக்க முடியாமலிருக்கிறது. ' நீ உன் தாயிடம் ஆண்டவனைப் பார்!' என்று நாம் சொல்லுவோமானால், ' ஆண்டவன் இவ்வளவு அப்பாவியா? ஒன்றும் தெரியாதவனா?' என்று அவன் கேட்பான். ஒளிமிக்க பரம்பொருள் உன் எதிரில் தோன்றுமானால் அதன் ஒளியை உன்னால் தாங்க முடியுமா? குந்தியின் மனதில், 'தொலைவிலுள்ள சூரியன் என் அருகில் நேருக்கு நேராய் வரவேண்டும்' என்று தோன்றிற்று. ஆனால் அது அருகணையவும் அவளுக்கு எரிச்சல் உண்டாய் விட்டது. அதன் தேஜஸை அவளால் சகிக்க முடியவில்லை. ஆண்டவன் தன் முழு சக்தியோடு நம் எதிரில் வந்து நிற்பானானால் நம்மால் அதைத் தாள முடியாது. ஆனால் சாந்தமான அடக்கமான உருவில் தோன்றினாலோ நமக்கு அவனிடம் மதிப்பே ஏற்படுவதில்லை. லட்டு, ஜிலேபி ஜீர்ணமாவதில்லை; வெறும் பாலோ நாவிற்கு ருசிப்பதில்லை. இவை துரதிர்ஷ்டத்திற்கும் மரணத்திற்குமுரிய அறிகுறிகளாகும். இத்தகைய

நோயுற்ற மனநிலை பரம்பொருளைக் காண்பதற்குப் பெரும் தடையாயுள்ளது. இந்த மனோநிலையை அகற்றுவது மிகவும் அவசியம். முதலில் நாம் நம் அண்மையிலுள்ள ஸ்தூலமான சுளுவான பரம்பொருளைப் படிப்போம்; பின்னர் சூக்குமமான சிக்கலான பரம்பொருளைப் படிப் போம்.

## (51) மானிட உருவில் கடவுள்

நம்முன் உள்ள ஆண்டவனின் முதல் உருவம் நம் தாயே. வேதம் ‘मातृ देवो भव’ (மாத்ரு தேவோ பவ) என்று கூறுகிறது. பிறந்தவுடனே தாயைத் தவிர குழந் தைக்குத் தென்படுவது வேறு யார்? வாத்ஸல்யத்தின் உரு வில் ஆண்டவனே தான் அங்கே நின்றுகொண்டிருக் கிறான். அந்தத் தாயின் உருவையே விஸ்தரித்து ‘வந்தே மாதரம்’ என்று சொல்லி நாடாம் தாயையும் பிறகு பூதேவியாகிய பூமி முழுவதையும் வழிபடுவோம். ஆனால் ஆரம்பத்தில் அனைத்திலும் உயர்ந்த ஆண்டவன் குழந்தையின் முன் தாயின் உருவிலேயே வருகிறான். தாயை வழிபடுவதனால் மோட்சம் பெறுவது அசாத்திய மல்ல. தாய் வழிபாடென்பது வாத்ஸல்யத்தோடு நம்முன் நிற்கும் ஆண்டவன் வழிபாடே. தாய் என்பவள் ஒரு நிமித்தமே. ஆண்டவன் அவளிடத்தில் தன் அன்பை, ஆற்றலையைப் பொழிந்து அவளை ஆட்டி வைக்கிறான். பாவம், அவள் உள்ளத்தில் இவ்வளவு வாஞ்சையும் பாச மும் ஏன் தோன்றுகிறதென்றே புரியவில்லை! தன் முது மையில் பயன்படுவானென்று கணக்கிட்டா அவள் குழந் தையைப் பராமரிக்கிறாள்? இல்லவே இல்லை. அவள் அந் தக் குழந்தையைப் பெற்றாள்; அவனைப் பெறும் வேதனையை அவள் பட்டிருக்கிறாள்; அந்த வேதனைகள் அந்தக் குழந்தையின் விஷயத்தில் அவளுக்குப் பித்தமுண் டாக்கி விட்டன. அந்த வேதனைகளே அவனை அன்பிற் குரியவனாக்கிவிட்டன. அவளால் அன்பு செலுத்தாது இருக்கவே முடியாது. அவளுக்கு வேறு வழியே இல்லை. அந்தத் தாய் எல்லையற்ற சேவையே உருவானவள். ஆண்டவனுக்குச் செய்யும் தலைசிறந்த வழிபாடொன்று உண்டென்றால் அது அன்னையின் வழிபாடே. ஆண்ட வனை ‘அன்னாய்’ என்றே அழை. ‘தாய்’ என்பதைவிட

உயர்ந்த சொல்லேது? அம்மா என்பது முதலில் தோன்றும் ஸ்தூலமான எழுத்து. அதில் ஆண்டவனைக் காணக் கற்பாய்; பிறகு தந்தை, குரு ஆகியோரிடமும் காண். குரு கல்வியளிக்கிறார். அவர் மிருகங்களாக இருந்த நம்மை மனிதர்களாக்கினார். அவர் செய்துள்ள உபகாரத்தை என்னென்பது! முதலில் அம்மை, பிறகு அப்பன், பிறகு ஆசான்; அதன் பிறகு கருணைமிக்க பெரியோர்கள், மகான்கள். மிகவும் ஸ்தூல உருவில் நம்முன்னுள்ள இந்த ஆண்டவனை முதலில் பார். இங்கே உனக்கு ஆண்டவன் காணப்படவில்லையெனில் வேறு எங்குதான் காணப்படுவான்?

அம்மை, அப்பன், ஆசான், மகான்கள் ஆகிய இவர்களிடத்தில் ஆண்டவனைப் பார். அதே வகையில் சிறு குழந்தைகளிடமும் நாம் ஆண்டவனைக் காணக் கூடுமானால் எவ்வளவு ஆனந்தமாயிருக்கும்? துருவன், பிரகலாதன், நசிகேதன், ஸனகன், ஸநந்தனன், ஸனத்குமாரன் ஆகிய இவரெல்லோரும் குழந்தைகள் தானே? ஆனால் புராண ஆசிரியர்களுக்கு, வியாசர் முதலியோருக்கு அவர்களைப் பற்றி எங்கே பேசுவது எங்கே பேசாதிருப்பது என்பதே விளங்காமற் போகுமளவுக்கு அவர்களிடம் பேரன்பு ஏற்பட்டிருக்கிறது. சுகதேவரும், சங்கராசாரியாரும் சிறு பிராயத்திலேயே வைராக்கியம் பெற்று விட்டனர்; ஞானதேவரும் அப்படியேதான். இவர்கள் அனைவருமே பால்மணம் மாறாத பிள்ளைகள். ஆனால் இவர்களிடம் ஆண்டவன் தூய உருவில் தோன்றிய வகையில் வேறு எங்கும் தோன்றவில்லை. ஏசுநாதர் குழந்தைகளைப் பெரிதும் விரும்பி வந்தார். ஒரு சமயம் அவர் சீடர்கள் அவரிடம், "நீங்கள் எப்பொழுதும் பரலோகம், பரம்பொருளின் லோகம் என்று பேசுகிறீர்களே; அந்த லோகத்திற்கு யாரால்தான் போகமுடியும்?" என்று கேட்டார்கள். அருகிலேயே ஒரு குழந்தை இருந்தான். ஏசுநாதர் அவனை எடுத்து மேஜை மீது நிறுத்தி, "இக்குழந்தையைப் போன்றவர்களே அங்கு போக இயலும்" என்றார். ஏசுநாதர் கூறியது முற்றிலும் உண்மை. ராமதாஸ சுவாமிகள் ஒரு சமயம் குழந்தையுடன் விளையாடிக் கொண்டிருந்தார். குழந்தையுடன் சமர்த்தர் (ராமதாஸர்) விளையாடிக் கொண்டிருப்பதைக் கண்ட சில முதியோருக்கு ஆச்சரியமாயிருந்தது. ஒருவர் அவரிடம், "என்ன நீங்கள்

இப்படி ஆரம்பித்து விட்டீர்கள்?" என்று கேட்டார். அதற்கு சமர்த்தர்,

"தம்மைச் சிறியோரென்று நினைத்தோர் பெரியோ
ராஞர். பெரியோர் உண்மைப் பெரியோரல்லர்"*

என்ருர்.

வயது ஏற ஏற மனிதனுடைய மனதில் கொம்புகள் முளைக்கின்றன—வாசனைகள் வளர்கின்றன. அப்பொழுது ஆண்டவன் நினைவு எப்படிவரும்? சிறு குழந்தைகளின் மனம் பூச்சற்றது; அவர்களறிவு நிர்மலமானது. குழந்தைக்கு நாம், "பொய் சொல்லாதே" என்று போதிக்கிறேம். அவன், "பொய் என்ருல் என்ன?" என்று கேட்கிருன். அப்பொழுது நாம் அவனுக்கு, "உள்ளதை உள்ளபடியே சொல்லவேண்டும்" என்ற தத்துவத்தைக் கூறுகிறேம். உள்ளதை உள்ளவாறே உரைப்பதைத் தவிர வேறு வகையில் உரைக்கும் முறையுமுண்டா என்று எண்ணிக் கொண்டு அவன் குழம்புகிருன். இல்லாத தொன்றைச் சொல்லுவ தெப்படி? சதுரத்தை சதுரமென்றுசொல், வட்டமென்று சொல்லாதே என்பதைப் போல் அல்லவா இது இருக்கிறது? குழந்தைக்கு வியப்புத் தோன்றுகிறது. குழந்தைகள் யார்? தூய பரம்பொருளின் உருவங்களே. பெரியவர்கள் அவர்களுக்குத் தவருக போதிக்கிருர்கள். அது எவ்வாருயினும் தாய், தந்தை, குரு, மகான்கள், குழந்தைகள் ஆகிய இவர்களிடம் நாம் பரம்பொருளைப் பார்க்க இயலவில்லையேல் வேறு எந்த உருவில்தான் பார்க்க இயலும்? இதிலும் சிறந்த ஆண்டவனின் உருவம் வேறில்லை. ஆண்டவனின் இந்த எளிய இனிய உருவங்களை முதலில் அறிந்துகொள். இவர்களிடம் ஆண்டவன் தெளிவான கொட்டை எழுத்துக்களில் எழுதப்பட்டிருக்கிருன்.

## (52) சிருஷ்டியில் கடவுள்—சில சிறந்த உதாரணங்கள்

முதலில் நாம் மனிதனுடைய மிகவும் சாந்தமும் புனிதமுமான உருவங்களில் பரம்பொருளைக்காணப் பயிலு

* "वयें पोर ते थोर होऊन गेले
वयें थोर ते चोर होऊन ठेले।"

வோம். அவ்வாறே இந்த சிருஷ்டியிலுள்ள விசாலமான, மனோகரமான பகுதிகளில் அதை முதலிற் காண்போம். உஷாகால மெனப்படும் அதிகாலை நேரத்தையே எடுத்துக் கொள்ளுங்கள். சூரியன் தோன்றுவதற்கு முன்னுள்ள அந்த தெய்வீக உஷா தேவதையின் புகழைப்பாடும் ரிஷிகள் அந்த மகிழ்ச்சியில் மெய்மறந்து ஆடுகிறார்கள். "ஏ உஷையே! நீ ஆண்டவன் செய்தியைக் கொணரும் தேவதூதி. நீ பனித்துளியில் குளித்து வந்திருக்கிறாய். நீயே சாகா நிலையின் ஜயக்கொடி" என்று இவ்வாறு உஷையை உள்ளத்திலிருந்து எழும் சொற்களால் ரிஷிகள் வர்ணித்திருக்கிறார்கள். வேதரிஷி, "ஆண்டவனின் செய்தியைக் கொணரும் உன்னைக்கண்ட பின்னும் எனக்கு அவன் புலனாகாவிட்டால், அவனைப் புரிந்து கொள்ள முடியாவிட்டால் வேறு யார்தான் எனக்கு அவனைக் காட்டு வார்?" என்கிறார். உஷை இவ்வளவு நேர்த்தியாய்த் தன்னை அலங்கரித்துக் கொண்டு நம் எதிரில் வந்து நிற்கிறாள். ஆனால் நம் கண்கள் அவளைப் பார்த்தால் தானே!

அவ்வாறே அந்த சூரியனைப் பார். அதன் காட்சி பரம்பொருளின் காட்சி போன்றதே. அது வானில் பல்வகை வண்ண சித்திரங்களை வரைகிறது. ஓவியன் மாதக்கணக்காய்த் தூலிகையை இங்குமங்கும் திருப்பி சூரியோதயக் காட்சியைச் சித்திரமாய் வரைந்து அதற்கு வர்ணம் பூசுகிறான். ஆனால் நீ காலையில் எழுந்து அந்த ஆண்டவனின் கலைத்திறனைக் கொஞ்சம் கண் திறந்து பாரேன். அந்த தெய்வீகக்கலையை, அந்த எல்லையில்லா வனப்பை எதனுடன் ஒப்பிடலாம்? ஆனால் அதை யார் பார்க்கிறார்கள்? அங்கே அழகிய ஆண்டவன் நின்று கொண்டிருக்க இங்கே இவன் முகத்தின் மீது போர்வையை இழுத்து மூடிக்கொண்டு குறட்டை விடுகிறான். சூரியன், "ஏ சோம்பேறி! நீ படுத்துக் கொண்டே யிருக்க விரும்பு கிறாய். ஆனால் நான் உன்னை எழுப்பி விடுகிறேன்" என்று சொல்லி தன் உயிர்க்கிரணங்களைப் பலகணி வழியே உள்ளே செலுத்தி அந்தச் சோம்பேறியை எழுப்பி விடுகிறது.

"सूर्य आत्मा जगतस्तस्थुषश्च"

(ஸூர்ய ஆத்மா ஜகதஸ் தஸ்துஷச்ச)

சூரியன் நிலைத்தவை, நகருபவை ஆகிய அனைத்தின் ஆன்மா. அதுவே சராசரங்களுக்கு ஆதாரம். ரிஷி, அதற்கு 'மித்திரன்' அல்லது நண்பன் என்ற பெயர் அளித்திருக்கிறார்.

"मित्रो जनान् यातयति ब्रुवाणो,
मित्रो दाधार पृथिवीमुत द्याम् ।"

*மித்ரோ ஜனான் யாத யதிப்ருவாணோ*
*மித்ரோ தாதாரப்ருதிவீ முதத்யாம்*

"இந்த மித்திரன் மக்களைக்கூவி அழைத்து அவர்களைத் தம் பணிகளில் ஈடுபடுத்துகிறான். அவன் சுவர்க்கத்தையும் புவியையும் தாங்குகிறான்." உண்மையிலேயே சூரியன் வாழ்க்கைக்கு ஆதாரமானது. அதில் பரம்பொருளைக் காண்.

மேலும் அந்தப் புனிதமான கங்கையோ! நான் காசியிலிருந்த பொழுது கங்கைக் கரையில் போய் அமர்ந்து விடுவேன். இரவில் ஊரடங்கிய பிறகு தனித்துச் செல்லுவேன். அதன் பிரவாகம் எவ்வளவு அழகாய், ஆனந்தமாயிருக்கும்! அதன் அந்த அழகிய பெருமை மிக்க வெள்ளமும் அதனுள் அடங்கியதாய்த் தோன்றும் வானத்தின் எண்ணிறந்த மீன்களும்! நான் வாய்திறவாது இருந்து விடுவேன். சிவபெருமானுடைய ஜடாமகுடத்திலிருந்து, அதாவது இமயத்திலிருந்து இழிந்துவரும் அந்த கங்கையை, எதன் கரையில் தம் ராஜ்யபாரங்களை யெல்லாம் துரும்பென வீசி எறிந்துவிட்டு ராஜாக்கள் தவமியற்றச் சென்றார்களோ அந்த கங்கையைக் கண்ணுறக் காணும் பொழுது எனக்கு மிக்க மனவமைதி ஏற்படும். அந்த மனவமைதியை நான் எவ்வாறு வர்ணிப்பேன்? அங்கே என் வாய் அடைத்துப் போகிறது. தான் இறந்த பிறகு தன் எலும்புகளாவது கங்கையிற் சேரவேண்டு மென்று இந்து விரும்புவதன் காரணம் எனக்குப் புலனாகத்தொடங்கிற்று. நீங்கள் வேண்டுமானால் சிரியுங்கள். உங்கள் சிரிப்பால் ஒன்றும் கெட்டுவிடவில்லை. ஆனால் எனக்கு இந்த பாவனைகள், உள்ள உணர்ச்சிகள் மிகவும் புனிதமாய், போற்றத்தக்கவையாய்த் தோன்றுகின்றன. இறக்கும் தருவாயில் இரண்டு துளி கங்கைநீரை வாயில் ஊற்றுகிறார்கள். அந்த இருதுளிகள் என்பவை என்ன? ஆண்டவனே

வாயில் இழிவது போலாகிறது. அந்த கங்கையை பரம் பொருளென்றே கொள். ஆண்டவனுடைய கருணையே அவ்வாறு பெருகிக் கொண்டிருக்கிறது. உன் அகத்திலும் புறத்திலுமுள்ள எல்லாக் குப்பை கூளங்களையும் அந்தத் தாய் கழுவுகிறாள்; தன்போக்கில் அடித்துக்கொண்டு போகிறாள். கங்கைத்தாயிடம் நமக்கு ஆண்டவன் காட்சி யளிக்கவில்லை என்றால் வேறு எங்குதான் அளிப்பான்? சூரியனும் ஆறுகளும் 'ஓ ஓ' வென்று அலைகளை வீசி எறியும் அந்தப் பரந்த கடலுமாகிய இவை யெல்லாம் ஆண்டவனின் பல்வேறு உருவங்களே.

மேலும் இந்தக் காற்றோ! அது எங்கிருந்து வருகிறதோ, போவதுதான் எங்கோ, நாம் அறியோம். இது ஆண்டவன் தூதனே. இந்தியாவில் ஒரு காற்று இமயத்திலிருந்தும் மற்றொன்று மாபெருங் கடலிலிருந்தும் வருகிறது. இப் புனிதக்காற்றும் நம் உள்ளத்தைத் தொட்டு நம்மைத் தட்டி எழுப்பி நம் காதுகளுக்குச் செய்தி கொணருகிறது. ஆனால் இந்தக் காற்றின் செய்தியை யார் கேட்கிறார்கள்? சிறை அதிகாரி (ஜெயிலர்) நான்குவரி கொண்ட நம் கடிதத்தை நம்மிடம் தரவில்லை என்றால் நம் மனம் வெறுப்புறுகிறது. ஏ துரதிர்ஷ்ட முள்ளவனே! அந்தக் கடிதத்தில் அப்படி என்ன வைத்திருக்கிறது? ஆண்டவனின் அன்புச் செய்தியை ஒவ்வொரு கணமும் இந்தக் காற்று தாங்கி வருகிறதே, அதைக் கேளேன்!

நம் வீட்டில் தினமும் உதவிவரும் இந்தப் பிராணி களைப்பார். அந்த பசுத்தாய்க்கு எவ்வளவு அன்பு, எவ்வளவு பாசம், எவ்வளவு வாஞ்சை! அவை இரண்டு மூன்று மைல்களுக்கப்பால் காடுமேடுகளில் மேய்ந்துவிட்டு தம் கன்றுகளைக்காண எவ்வளவு ஆவலுடன் ஓடி வருகின்றன! வேத ரிஷிகளுக்கு மலைகளிலிருந்து தூய நீருடன் கலகலவென்று ஒலித்துக் கொண்டு ஓடிவரும் ஆறுகளைப் பார்க்கும்பொழுதெல்லாம் தம் கன்றுகளுக் காகப் பால் நிரம்பிய மடியுடன் 'அம்மா!' என்று கத்திக் கொண்டு பாய்ந்துவரும் பிள்ளைப்பாச மிக்க பசுக்களின் நினைவு வருகிறது. அந்த ரிஷி ஆற்றை நோக்கி, "ஏ தேவி, பாலைப்போல் தூய நீரைத் தாங்கிவரும் நீ பசுவைப் போன்றிருக்கிறாய். பசுக்களால் காட்டிலேயே இருந்துவிட முடியாதிருப்பதைப் போல் உன்னால் மலைகளில் இருக்க

முடியாது. நீ வறட்சியால் அவதிப்படும் தன் பிள்ளைகளைக் காணத் தலை தெறிக்க ஓடிவருகிருய் '' என்கிருர்.

" वाश्रा इव धेनवः स्यंदमानाः "

(வாஶ்ரா இவ தேநவ: ஸ்யந்தமாஞ:)

வாஞ்சை மிக்க பசுவின் உருவில் பகவானே வாயிலில் நிற்கிருர்.

மேலும் அந்தக் குதிரையைப்பார்! எவ்வளவு உண்மை யானது, எவ்வளவு நன்றி யுள்ளது! அராபியர் தம் குதிரைகளை எவ்வளவு நேசிக்கிருர்கள்! அந்த அராபியனின் கதை உங்களுக்குத் தெரியுமல்லவா? ஆபத்தில் சிக்கிய ஒரு அராபியன் தன் குதிரையை ஒரு வியாபாரிக்கு விற்கச் சித்தமாய் விடுகிருன். அவன் கையில் பணப்பையுடன் குதிரைக் கொட்டடிக்குப் போகிருன். ஆனல் குதிரையின் அந்த கம்பீரமான அன்பு ததும்பும் கண்களை அவன் கண்டதும் அவன் பணப்பையை வீசி எறிந்து விட்டு, " என் உயிரே போனலும் சரி, நான் குதிரையை விற்க மாட்டேன் '' என்கிருன். " எனக்கு என்ன நேர்ந்தாலும் நேரட்டும். உணவு கிடைக்காவிட்டால் வேண்டாம். ஆனல் குதிரையை விற்கமாட்டேன். ஆண்டவன் எனக்கு உதவு வான் '' என்கிருன். முதுகைத் தட்டிக் கொடுத்ததும் அது எப்படி சிலிசிலிக்கிறது. அதன் பிடரிதான் எவ்வளவு நேர்த்தியாயுள்ளது! உண்மையில் குதிரையிடமுள்ள குணங்களை அளவிட முடியாது. அந்த சைக்கிளில் என்ன இருக்கிறது? குதிரைக்குத் தீனிவைத்துத் தேய்த்துப் பரா மரி. அது உன் பொருட்டு தன் உயிரையே தந்துவிடும். அது உன்னுடன் இணைபிரியாதிருக்கும். என் நண்பரொருவர் குதிரை சவாரி செய்யக் கற்றுவந்தார். குதிரை அவரைக் கீழே தள்ளிக்கொண்டேயிருந்தது. அவர் என்னிடம், " இந்தக் குதிரை என்னைத் தன்முதுகில் இருக்கவே விடமாட்டே னென்கிறதே!'' என்ருர். நான் அவரிடம், " நீர் குதிரைமீது ஏறுவதோடு சரியா? அதற்குத் தீனி வைத்துத் தண்ணீர் காட்டி ஏதேனும் செய்கிறீரா இல்லையா? இதையெல்லாம் வேருெருவன் செய்ய நீர் அதன் முதுகில் ஏறி உட்காருவதென்ருல் அது எப்படி சரியாகும்? நீரே அதற்குத் தீனிவைத்துத் தண்ணீர் காட்டித் தேய்த்து விட்டுப் பிறகு சவாரி செய்யும் '' என்றேன். அவர் அப்

படியேசெய்தார். சில நாட்களுக்குப் பிறகு அவர் என்னிடம் வந்து, "இப்பொழுது குதிரை என்னைக் கீழே தள்ளுவதில்லை" என்றார். குதிரைதான் ஆண்டவனாயிற்றே! அவன் ஏன் பக்தனைத் தள்ளுகிறான்? அவருடைய பக்தியைக்கண்டு குதிரை பணிந்து போய்விட்டது. இவன் பக்தனா அல்லது வேறு எவனேனுமா என்று குதிரை அறிய விரும்புகிறது. பகவான் ஸ்ரீகிருஷ்ணர் தாமே குதிரைக்கு உடலை தேயத்துவிடுவார், தினவெடுப்பார், தம் பீதாம்பரத்தில் கொள்ளைக் கொண்டுபோய்க் கொடுப்பார். ஒரு பள்ளமோ, வாய்க்காலோ சேறோ வழியில் குறுக்கிட்டால் சைக்கிள் அங்கேயே நின்றுவிட, குதிரை எல்லாவற்றையும் ஒரு எட்டில் தாண்டிப் போய்விடுகிறது. இந்த அழகிய அன்பு மிக்க குதிரை ஆண்டவனின் உருவே.

அந்த சிங்கத்தை எடுத்துக் கொள். நான் படௌதாவில் இருந்துவந்தேன். பொழுது விடிந்ததுமே அதன் கர்ஜனையின் கம்பீர தொனி காதில் விழும். அதன் குரலின் காம்பீர்யமும் சிறப்பும் உள்ளத்தை ஒரு குலுக்குக் குலுக்கிவிடும். கோயில்களின் கர்பக்கிரகங்களில் எழும் எதிரொலியைப் போன்ற கம்பீரம் வாய்ந்ததே அதன் உள்ளத்தினடியிலிருந்து எழும் த்வனியும். மேலும் சிங்கத்தினுடைய தீரம், பெருமை, அஞ்சாமை ஆகியவற்றை வெளியிடும் முகப் பொலிவையும் அரசனுக்குரிய அதன் போக்கையும் பெருமையையும் என்னென்பது! இந்தப் பெருமை பொருந்திய அழகிய பிடரி இருக்கிறதே, அதை வனராஜன்மீது இயற்கையிலேயே போர்த்தப்பட்டுள்ள சாமரம் என்று சொல்லாமல் வேறு என்னென்பது? படௌதாவில் ஒரு அழகிய தோட்டத்திலிருந்தது அந்த சிங்கம். அங்கே அது சுதந்திரமா யிருக்கவில்லை; கூண்டிலடைபட்டு அதனுள் சக்கரம் சுற்றிக்கொண்டே யிருந்தது. அதன் கண்களில் கொடுமை சிறிதும் காணப்படவில்லை. அதன் முக முத்திரையிலும் பார்வையிலும் கருணை நிரம்பியிருந்தது. அது உலகத்தைச் சிறிதும் பொருட்படுத்துவதாகவே தோன்றவில்லை; ஆத்ம சிந்தனையிலேயே ஆழ்ந்து கிடந்தது போன்றிருந்தது. உண்மையில் சிங்கம் ஆண்டவனின் ஒரு புனிதமான வேலைப்பாடே. சிறு பிராயத்தில் நான் 'அண்ட்ராக்ளிஸும் சிங்கமும்' என்ற கதை படித்ததுண்டு. அது எவ்வளவு சிறந்த கதை! அந்த பசியாலும் தாகத்தாலும் வாடும் சிங்கம் அண்ட்

ராக்ளிஸ் முன்னர் செய்த உபகாரத்தை நினைத்து அவனுடன் நட்புப் பூண்டு அவன் காலை நக்க ஆரம்பிக்கிறது. இதன் மர்மம் என்ன? அண்ட்ராக்ளிஸ் சிங்கத்தினிடம் உள்ள ஆண்டவனைக் கண்டுகொண்டான். சிவனருகில் எப்பொழுதும் சிங்கம் இருந்துவருகிறது. சிங்கம் பகவானுடைய திவ்ய சிருஷ்டியே.

புலியின் பெருமைதான் என்ன குறைவா? அதனிடமும் ஆண்டவனின் அம்சம் பெரிதும் வெளியாகிறது. அதை நண்பனுக்கிக் கொள்வது அசாத்தியமல்ல. பாணினி பகவான் காட்டில் அமர்ந்து சீடர்களுக்குப் பாடம் போதித்துக் கொண்டிருந்தார். இதற்குள் புலி வந்துவிட்டது. பிள்ளைகள் 'வியாக்ரம், வியாக்ரம்' (புலி, புலி) என்று பயந்து கூக்குரலிட்டார்கள். பாணினி, "சரி, வியாக்ரம் என்றால் என்ன? 'व्य जिघ्रतीति व्याघ्र:' (விய ஜிக்ரதீதி வ்யாக்ர:) எதனுடைய மோப்ப சக்தி தீவிரமா யிருக்கிறதோ அதுவே வியாக்ரம். பிள்ளைகளுக்கு அதைக் கண்டதும் அச்சமுண்டான போதிலும் பாணினிக்கோ அந்த வியாக்ரம் தீங்கற்ற இன்பமான ஒரு சொல்லே ஆயிற்று. புலியைப் பார்த்து அவர் அதன் பெயரின் உற்பத்தியை விளக்கத் தொடங்கிவிட்டார். புலி பாணினியைத் தின்றுவிட்டது. ஆனால் புலி தின்றதனால் என்ன ஆயிற்று? பாணினியின் உடலினுடைய இனிய மணம் அதற்குப் பிடிக்கவே அது அதைக் கிழித்துத் தின்றது. ஆனல் பாணினி அங்கிருந்து ஓடித் தப்பவில்லை. ஏனெனில், அவர் சப்த பிரம்மத்தின் பக்தர். அவருக்கு எல்லாம் அத்வைத மயமாய், ஒன்றாய்விட்டது. புலியினிடத்திலும் அவர் சப்த பிரம்மத்தை உணர்ந்தார். பாணினியின் இந்தச் சிறப்பு காரணமாகவே பாஷ்யங்களில் அவர் பெயர் வரும் இடங்களிலெல்லாம் பாணினி பகவான் என்று அடைமொழியோடு மரியாதையுடன் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

अज्ञानांधस्य लोकस्य ज्ञानांजन-शलाकया ।
चक्षुरुन्मीलितं येन तस्मै पाणिनये नमः ॥

(அஜ்ஞாநாந்தஸ்ய லோகஸ்ய ஜ்ஞாநாஞ்ஜன ஶலாகயா
சக்ஷுருன்மீலிதம் யேனதஸ்மை பாணினயே நம:)

என்று அவர்களெல்லாம் பாணினிக்குத் தம் பெரும் நன்றியைத் தெரிவிக்கிறார்கள்.

இத்தகைய பாணினி பகவான் புலியினிடம் ஆண்டவனை தரிசிக்கிறார். ஞானதேவர்,

"வீட்டிற்கே சுவர்க்கம் வந்தாலும், நம்மீது புலி பாய்ந்தாலும் ஆத்ம புத்திக்குஅழிவு ஏற்படாதிருக்க!" *

என்கிறார்.

பாணினி மகரிஷியின் நிலை இவ்வாறு இருந்தது. புலி ஒரு தெய்வீக விபூதி என்பதை அவர் உணர்ந்திருந்தார்.

பாம்பையும் அவ்வாறே எண்ணுங்கள். பாம்பைக் கண்டு எல்லோரும் அஞ்சுகிறார்கள். ஆனால் பாம்பு ஆசாரத்தில் தீவிர புத்தியுள்ள பிராமணனைப் போன்றது; எவ்வளவு துப்புரவாய் இருக்கிறது! எவ்வளவு அழகாயிருக்கிறது! அதற்கு அசுத்தம் சிறிதும் பிடிக்காது. அசுத்தமான பிராமணர்கள் எவ்வளவோ பேரைப் பார்க்கலாம். ஆனால் அழுக்கில் தோய்ந்த பாம்பை எவரேனும் பார்த்திருக்கிறீர்களா? தனித்து வாழும் ரிஷியைப்போல் அல்லவா அது இருக்கிறது! துப்புரவாய், பளபளவென்று அழகிய மாலைபோலிருக்கிறது அந்த பாம்பு. அதைக் கண்டு அஞ்சுவதேன்? நம் முன்னோர் அதன் வழிபாட்டிற்கல்லவா ஏற்பாடு செய்திருக்கிறார்கள்? இந்து மதத்தில் எத்தனையோ குருட்டுப் பழக்கங்கள் இருக்கின்றனவென்று வேண்டுமானால் நீங்கள் சொல்லிக்கொள்ளுங்கள். ஆனால் அதில் நாக பூஜைக்கு நிச்சயமாக ஏற்பாடு இருக்கிறது. சிறு பிராயத்தில் நான் என் தாய்க்காக மஞ்சளைக்கொண்டு பாம்பின் சித்திரம் வரைந்து தருவதுண்டு. நான் என் தாயிடம், "கடையில் நல்ல பாம்புப் படம் விற்கிறதே அம்மா," என்பேன். என் தாய், "அது நன்றாயிராது. எனக்கது வேண்டாம்; என் குழந்தை வரைந்ததுதான் எனக்குப் பிடிக்கும்" என்பார். அந்தப் பாம்பை பூஜை செய்யப்படும். இது பைத்தியக்காரத்தனமா? ஆனால் சிறிது சிந்தித்துப் பாருங்கள். அந்தப் பாம்பை பூஜை மாசத்தில் விருந்தினராய் நம் வீட்டிற்கு வரும். கார்கால மாகையால் பாவம், அதன் வீடு முழுமையும் நீர் நிரம்பிப்

---

* घरीं येवो पां स्वर्ग। कां वरी पडो व्याघ्र
परी आत्मबुद्धीसी भंग। कदा नोहे

போய்விடும். அப்பொழுது அது என்ன செய்யும்? தொலைவில் தனித்து வாழும் அந்த ரிஷி உங்களுக்கு வீண் சிரமம் கூடாதென்று எங்கேனும் கூரை மேட்டிலோ மரங்களினிடையிலோ வந்து கிடக்கும். அது மிக மிகக் குறைந்த இடத்தையே அடைத்துக் கொள்ளுகிறது. ஆனால் நாம் தடி எடுத்துக் கொண்டு ஓடுகிறோம். ஆபத்தில் சிக்கிய விருந்தினன் ஒருவன் நம் வீட்டிற்கு வந்தால் அவனை அடித்தல் சரியா? பிரான்ஸிஸ் யோகியைப் பற்றிச் சொல்லுவதுண்டு: அவர் காட்டில் பாம்பைக் காணும்பொழுது அதனிடம் மிக்க அன்புடன் "வா தம்பீ, வா" என்பாராம். பாம்பு அவருடைய மடியில் தவழ்ந்து அவர் உடல்மீது ஏறி இறங்குமாம். இதைப் பொய் என்று எண்ணாதீர்கள். அன்பிற்கு நிச்சயமாய் இத்தகைய சக்தி உண்டு. பாம்பை விஷம் உள்ளதென்று சொல்லுகிறோமே, மனிதர்களிடமுள்ள விஷம் குறைவா? பாம்பாவது எப்பொழுதாவது தீண்டுகிறது; அது வலுவில் போய் தீண்டுவதுமில்லை. நூற்றில் தொண்ணூற்று ஒன்பது பாம்புகள் விஷமில்லாதவையே. அது உன் வயலைப் பாதுகாக்கிறது. பயிரை அழிக்கும் எத்தனையோ பூச்சிகளையும் பிற ஜந்துக்களையும் தின்று வாழுகிறது. இத்தகைய உபகாரியும் சுத்தமானதும் சக்தியுள்ளதும் தனிமையை விரும்புவதுமான பாம்பு ஆண்டவனின் உருவமே. நம் தேவர்களிடையில் பாம்பும் வருகிறது. கணேசரின் இடையில் பாம்பே கட்டப்பட்டிருக்கிறது. சிவன் கழுத்தில் பாம்பு சுற்றிக் கொண்டிருக்கிறது. விஷ்ணு பகவானோ பாம்புப் பாயலிலேயே படுத்துறங்குகிறார். இதன் மர்மத்தை இதிலுள்ள இனிமையைச் சிறிது உணருங்கள். இவை அனைத்தின் கருத்து, பாம்பின் மூலமாய் ஆண்டவன் உருவமே வெளியாகியிருக்கிறது என்பதே. பாம்பிலுள்ள இந்தப் பரம்பொருளைப் புரிந்து கொள்ளுங்கள்.

## (53) சிருஷ்டியில் கடவுள்—இன்னும் சில உதாரணங்கள்

இத்தகைய உதாரணங்கள் எத்தனை கொடுக்க வேண்டும்? நான் கூறி வருவது வெறும் கண்ணோட்டமே. இராமாயணத்தின் சாரமனைத்தும் இத்தகைய இனிமை மிக்க

கற்பனைகளிலேயே அடங்கியுள்ளது. இராமாயணத்தில் தந்தைக்கும் மகனுக்கும் உள்ள அன்பு, தாய்க்கும் பிள்ளைகளுக்கும் உள்ள அன்பு, சகோதரரிடையே உள்ள அன்பு, கணவனுக்கும் மனைவிக்குமுள்ள அன்பு ஆகியவையெல்லாம் இருக்கின்றன. ஆனால் எனக்கு இராமாயணம் மிகவும் பிடித்தமாயிருப்பது இவைகள் காரணமாய் அல்ல. இராமனுக்கும் குரங்குகளுக்கும் ஏற்பட்ட அன்பு காரணமாகவே எனக்கு அது பிடித்தமாயுள்ளது. இந்தக் காலத்தில் அந்தக் குரங்குகள் நாக ஜாதியைச் சேர்ந்தவை என்று சொல்லுகிறார்கள். சரித்திர வல்லுனருடைய வேலையே பண்டை விஷயங்களை ஆராய்ந்து அலசிப் பார்ப்பதாகும். அவர்கள் செய்யும் இந்தக் காரியத்தை நான் ஆக்ஷேபிக்கவில்லை. ஆனால் இராமன் உண்மையான குரங்குகளிடமே நட்புப் பூண்டானென்றால் இதில் நடக்கக் கூடாதது என்னவிருக்கிறது? இராமனுடைய ராமன் தன்மை, இனிமை, உண்மையில் அவன் குரங்குகளுடன் நட்புரிமை பூண்டதில்தானிருக்கிறது. இதே வகையானது தான் கிருஷ்ணருக்கும் பசுக்களுக்குமுள்ள சம்பந்தமும். கிருஷ்ணர் வழிபாட்டனைத்தின் ஆதாரம் இந்தக் கற்பனையே. ஸ்ரீ கிருஷ்ணருடைய எந்தப் படத்தைப் பார்த்தாலும் அதில் உங்களுக்கு அவரைச் சூழ பசுக்கள் நிற்பது தெரிய வரும். கோபால கிருஷ்ணன்! கோபால கிருஷ்ணன்! பசுக்களை கிருஷ்ணரிடமிருந்து பிரித்து விடுவோமானால் கிருஷ்ணரிடம் என்ன எஞ்சியிருக்கும்? இராமனிடமிருந்து வானரங்களை அகற்றி விடுவோமானால் அந்த இராமனிடம் ராமனுடைய அம்சம் எவ்வளவு மிச்சமிருக்கும்? இராமன் வானரங்களிடமும் பரம்பொருளைக் கண்டு அவைகளுடன் அன்பும் உறவும் கொண்டார். இராமாயணத்தின் இரகசியம், திறவுகோல் இதுவே. இந்தத் திறவுகோலை நீங்கள் மறந்து போவீர்களானால் இராமாயணத்தின் இனிமையையே இழந்து விடுவீர்கள். தந்தைக்கும் மகனுக்கும், தாய்க்கும் பிள்ளைக்கும் உள்ள அன்பு வேறு இடங்களிலும் கிடைக்கும்; ஆனால் நரனுக்கும் வானரத்திற்கும், மனிதனுக்கும் குரங்கிற்கும் உள்ள இந்த ஒப்பற்ற இனிய நட்பை இராமாயணத்தில் மட்டுமே காணலாம்; வேறு எங்கும் காண முடியாது. குரங்கினிடம் உள்ள பகவானை இராமாயணம் தனதாக்கிக் கொண்டது. குரங்குகளைக் கண்டதும் ரிஷிகளுக்கு

மிகுந்த குதூகலம் தோன்றும். ராமகட்டத்திலிருந்து கிருஷ்ணு நதிக்கரை வரை தரையில் காலை வையாது அந்தக் குரங்குகள் மரத்திற்கு மரம் தாவிக்குதித்து விளையாடும். இத்தகைய அந்த அடர்ந்த காட்டையும் அதில் விளையாடும் குரங்குகளையும் கண்ட அந்த அருள் மிக்க ரிஷிகளின் மனதில் கவிதை பீரிட்டெழும்; குதூகலம் தோன்றும். பிரம்மத்தின் கண்கள் எப்படியிருக்கும் என்பதை விளக்கப்புகும் உபநிடதங்கள் குரங்குகளின் கண்களையே உவமையாகத் தந்திருக்கின்றன. குரங்குகளின் கண்கள் மிகவும் சஞ்சலமானவை. அவைகளின் நோக்கு நாற்புறமும் இருந்து கொண்டே யிருக்கும். பிரம்மத்தின் கண்களும் இப்படித்தானிருக்க வேண்டும். ஆண்டவனின் வேலை கண்கள் நிலைத்திருப்பதனுல் நடைபெறுது. நானும் நீங்களும் வேண்டுமானுல் தியானத்தில் ஆழ்ந்து போய் அமர்ந்திருக்கலாம். ஆனுல் ஆண்டவனே தியானத்தில் ஆழ்ந்து விட்டால் உலகின் கதி என்னுகும்? ஆகையால் குரங்குகளிடம் ரிஷிகளுக்கு அனைவரையும் பற்றிக் கவலை கொள்ளும் பிரம்மத்தின் கண்கள் காணப்படுகின்றன. குரங்குகளிடம் பரம்பொருளைக் காணக் கற்றுக்கொள்.

மேலும் அந்த மயிலோ—மகாராஷ்டிரத்தில் மயில்கள் அதிகமில்லை. ஆனுல் குஜராத்தில் அவை ஏராளம். நான் குஜராத்திலிருந்தேன். தினமும் பத்து, பன்னிரண்டு மைல் சுற்றுவது எனக்கு வழக்கம். சுற்றும்பொழுது, மயில்கள் காணப்படும். ஆகாயத்தில் மேகம் திரளும்பொழுது மழை பெய்வதற்கு ஆயத்தம் நடந்துகொண்டிருக்கையில், வானமெங்கும் இருள் சூழ்ந்து விடுகையில் மயில் கூவுகிறது. உள்ளத்தினடியிலிருந்து எழுந்துவரும் அதன் அந்த உரத்த குரலை நீங்கள் ஒருமுறை கேட்டால்தான் அது உங்களுக்குப் புரியும். நம் சங்கீத சாஸ்திரம் முழுவதும் இந்த மயூரத் தொனியின் அடிப்படையிலேயே அமைக்கப் பட்டிருக்கிறது. மயிலின் குரலே ஷட்ஜம ஸ்வரம் षड्ज रौति (ஷட்ஜம் ரௌதி) இந்த முதல் ஸ்வரமான ஷட்ஜமம் நமக்கு மயிலினிடமிருந்தே கிடைத்தது. பிறகு கூட்டிக் குறைத்து மற்ற ஸ்வரங்களையும் அமைத்துக்கொண்டோம். மேகத்திலேயே பதிந்துள்ள அதன் அந்த நோக்கையும், அதன் அந்த கம்பீரத்வனியையும், மேகத்தின் அந்த கடகட வென்ற கர்ஜனையைக் கேட்டதும் விரிக்கப்படும் அதன்

தோகைக் குடையையும் என்னென்பது ! ஆஹா ! அந்தக் குடையின் அழகின் முன் மனிதனுடைய பெருமையெல்லாம் மங்கி மறைந்து விடுகிறதே ! ராஜா, மகாராஜாக்களும் ஏதேதோ அழகெல்லாம் படுத்திக் கொள்ளுகிறார்களே, ஆனால் அந்த மயில் தோகையின்முன் இவர்களுடைய ஜோடிப்பெல்லாம் எம்மாத்திரம்? அதன் அழகை என்னென்பது ! அந்த ஆயிரமாயிரம் கண்களையும், அந்த பல வண்ண ஒளியையும், அந்த அற்புதமான மெத்தென்ற அழகிய அமைப்பையும், அந்த சிறந்த வேலைப்பாடுகளையும் என்னென்போம் ! அந்தக் குடையைச் சிறிது பாருங்கள் ; அதில் பரம்பொருள் இருப்பதையும் காணுங்கள். இந்த சிருஷ்டி முழுமையும் இதேவகையில்தான் ஜோடிக்கப்பட்டிருக்கிறது. எங்கு நோக்கினும் பரம்பொருளே காட்சி தந்துகொண்டு நிற்கிறது. ஆனால் அதைக் கண்கொண்டு காணாத நாமே துரதிர்ஷ்டசாலிகள் ! துகாராம்,

“ ஆண்டவனுக்கு எல்லாம் நல்லகாலமே ;
துரதிர்ஷ்ட முள்ளவனுக்கே காலம் தீயது ” *

என்கிறார்.

மகான்களுக்கு எங்கும் நல்ல காலமே ; துரதிர்ஷ்டம் பிடித்த நம்மையே எங்கும் கெட்டகாலம் வதைக்கிறது !

வேதங்களில் அக்னி வழிபாடு சொல்லப்பட்டிருக்கிறது. அக்னி நாராயணனாகும். அது எவ்வளவு பளபள வென்று ஒளி பொருந்தியதாயுள்ளது ! இரண்டு மரங்களை ஒன்றுடன் ஒன்றாக உராய்ந்ததும் அது வெளிப்பட்டுவிடுகிறது. அது முன்பு எங்கே மறைந்திருந்ததோ ? அதில் தான் எவ்வளவு வெப்பம், எவ்வளவு ஒளி ! வேதத்தொனி முதன் முதலில் தோன்றியது தீயின் வழிபாட்டின் பொருட்டே—

“ अग्निमीळे पुरोहितं यज्ञस्य देवमृत्विजम् ।
होतारं रत्नधातमम् । ”

(அக்னிமீளே புரோஹிதம் யஜ்ஞஸ்ய தேவ மிருத்விஜம்
ஹோதாரம் ரத்ன தாதமம்)

எந்த அக்னியின் வழிபாட்டில் வேதம் தொடங்கிற்றோ

* देवा हे सुकाळ देशीं, अभाग्यासी

அதைப் பாரேன். அதன் ஜுவாலைகளைப் பார்க்கையில் எனக்கு ஜீவான்மாக்களின் தோற்றமும் அழிவும், ஏற்ற இறக்கங்களும் பல்வேறு மாறுபாடுகளும் நினைவுக்கு வருகின்றன. அந்தத் தீக்கொழுந்துகள் வீட்டு அடுப்பிலிருந்தாலும், காட்டுத் தீயினுடையதாயிருந்தாலும் வைராக்கிய சீலனுடைய குடும்பத்தைப்போல (அடக்கமாய் அமரிக்கையாய்) இருப்பதில்லை. அந்தத் தீக்கொழுந்துகள் எங்கே இருந்தபோதிலும் அவை தம் அமளிதுமளியை ஆரம்பித்து விடுகின்றன. அவை இடையறாது துடித்தவண்ணமிருக்கின்றன. அவை எப்பொழுதும் மேலோங்கி எழவே தவிக்கின்றன. விஞ்ஞானம் படித்தவர்களாகிய நீங்கள் 'ஈதர்' காரணமாக அவை அசைகின்றனவென்றும் காற்றின் அமுக்கத்தினால் அசைகின்றனவென்றும் சொல்லுவீர்கள். ஆனால் என்னைப்பற்றிய வரையிலாவது நான் கொள்ளும் பொருள் என்னவென்றால், மேலேயுள்ள பரம் பொருளுடன் ஒளிக்கடலான அந்த சூரிய நாராயணனுடன் கலக்கும் பொருட்டே அது இடையறாது மேலே தாவிக்கொண்டிருக்கிறது என்பது. அது தோன்றியது முதல் அவியும்வரையில் அதன் இந்தப் பாய்ச்சல் நிற்பதில்லை. சூரியன் அம்சியும் இந்தத் தீக்கொழுந்துகள் அம்சமுமாகும். அம்சம் அம்சியினிடம் போவதற்குத் துடித்துக் கொண்டிருக்கிறது; அது அவியும்பொழுதுதான் அதன் துடிப்பும் அடங்கும்; அதற்குமுன் அடங்காது. 'சூரியன் எங்கே, நாம் எங்கே! நாம் எவ்வளவு தொலைவிலிருக்கிறோம்!' என்று அவை எண்ணுவதேயில்லை. பூமியிலிருந்து தம் சக்திக்குகந்த வகையில் மேலே எழும்புவதென்ற ஒன்றே அதற்குத் தெரியும். இத்தகைய இந்த அக்னி என்பதென்ன? அக்னியின் உருவில் ஜொலிக்கும் வைராக்கியமே வெளியாயிருக்கிறது. இதனாலேயே வேதத்தின் முதல் ஒலி 'அக்னி மீளே' என்று எழுந்தது.

மேலும் நான் அந்தக் குயிலை எப்படி மறப்பேன்? அது யாரை அழைக்கிறது? கோடையில் ஆறு குளங்களெல்லாம் வறண்டுவிட்டன; ஆனால் மரங்களில் கொழுந்துகள் தளிர்த்துக் கொண்டிருக்கின்றன. அதற்கு இந்தச் சிறப்பை கொடுத்தது யார், அந்தக் கொடையாளி எங்கே என்று அது கேட்கிறது? எவ்வளவு ஆவல் ததும்பும் இனிய கூவல்! இந்துமதத்தில் குயிலின் குரல்பற்றிய ஒரு விரதமே உண்டு. பெண்கள் குயிலின் கூவலைக் கேளாது

உணவு கொள்வதில்லை என்று ஒரு விரதம் இருக்கிறார்கள். குயிலின் உருவில் வெளியாகும் பரம்பொருளை தரிசிப்ப தற்கு போதிப்பது இந்த விரதம். அந்தக் குயில் எவ்வளவு அழகாய்க் கூவுகிறது! அது உபநிடதமே பாடுவது போலல்லவா இருக்கிறது! அதனுடைய 'குகூ . . குகூ' என்ற தொனி காதில் விழுகிறதே யல்லாது அது கண் ணிற் படுவதில்லை. அந்த ஆங்கிலக்கவி வோர்ட்ஸ்வர்த் அதே பயித்தியமாய் அதைத் தேடிக்கொண்டு காடு காடாய்த் திரிகிறார். இங்கிலாந்தின் பெரிய கவிஞர் குயிலைத் தேடிக் கொண்டிருக்க இந்தியாவிலோ வீடுகளிலுள்ள சாதாரணப் பெண்கள் குயிலைக் காணாது உணவும் கொள்வதில்லை. இந்த 'கோகில விரதம்' காரணமாக இந்தியப் பெண்கள் பெரிய கவிகளுக்குரிய பதவியைப் பெற்றுவிட்டார்கள். பேரானந்தம் அளிக்கும் இனிய குரலில் கூவும் அதனுரு வில் அழகிய பரம்பொருளே நமக்குக் காட்சியளிக்கிறது.

குயில் அழகியதென்றால் காகம் விகாரமானதா? காகத் துக்கும் மதிப்பளி. எனக்கோ அது மிகவும் பிரியமானது. அதன் அந்தக் கன்னங்கரேலென்ற நிறமும் அந்த அழுத்த மான குரலும்! அதன் அந்தக் குரல் அப்படி என்ன மோசமா? இல்லை. அதுவும் இனியதே. அது சிறகுகளை அடித்துக்கொண்டு வருவது எவ்வளவு நேர்த்தியாயிருக் கிறது! சிறு குழந்தைகளின் உள்ளத்தை அல்லவா அது கவர்ந்து விடுகிறது! சிறிய குழந்தை வீட்டில் அடைத் திருக்கையில் உணவு கொள்ள மறுக்கிறான்; வெளியே முற்றத்தில் உட்காரவைத்து அவனுக்கு காக்கை, குருவி ஆகியவற்றைக் காட்டி உணவு ஊட்ட வேண்டியிருக்கிறது. காக்கையிடம் நேசமுள்ள அந்தக் குழந்தை பைத்தியமா? அவன் பைத்தியமல்ல. அவனிடம் அறிவு நிரம்பியிருக் கிறது. காக்கையின் உருவில் தோன்றும் பரம்பொருளுடன் அந்தக் குழந்தை உடனே இரண்டறக் கலந்துவிடுகிறான். தாய் சாதத்தின் மீது தயிரை ஊற்றட்டும், பாலை ஊற் றட்டும், சர்க்கரை போடட்டும், அந்தக் குழந்தைக்கு அதெல் லாம் ஒன்றும் பிடிக்கவில்லை. காக்கை இறக்கைகளை பட படவென்று அடித்துக் கொள்வதிலும் அது தன் அலகை விரிப்பதிலுமே அவனுக்கு ஆனந்தம். குழந்தைகளுக்கு சிருஷ்டியின் விஷயத்தில் இருந்துவரும் ஆவலை, அடிப் படையாகக் கொண்டே 'ஈசப் நீதிக் கதைகள்' அத்தனை யும் அமைக்கப்பட்டிருக்கின்றன. ஈசப்புக்கு எங்கும்

ஆண்டவன் மயமாய், கடவுள் மயமாய்த் தோன்றிற்று. எனக்கு மிகவும் பிரியமான புத்தகங்களின் வரிசையில் 'ஈசப் நீதிக்கதைகளு'க்கு நான் முதலிடம் அளிப்பேன்; அதை நான் மறக்கமாட்டேன். ஈசப்பின் ராஜ்யத்தில் இரண்டு கைகளும் இரண்டு கால்களும் கொண்ட மனிதப் பிராணி மட்டுமில்லை. அதில் நரிகள், நாய்கள், காகங்கள், மான்கள், முயல்கள், ஆமைகள், பாம்புகள், புழுக்கள் ஆகிய எல்லாம் தம்முள் பேசிச் சிரிக்கின்றன. அதை ஒரு பிரம்மாண்டமான மகாநாடென்றே எண்ணிக்கொள்ள லாம்! ஈசப்புடன் சிருஷ்டியிலுள்ள சராசரங்கள் அனைத் தும் உரையாடுகின்றன. அவனுக்கு தெய்வ திருஷ்டி ஏற்பட்டிருந்தது. இராமாயணமும் இதே நோக்கின் அடிப் படையில் அமைந்துள்ளது. துளசிதாஸர் இராமருடைய பாலலீலையை வர்ணித்திருக்கிறார். இராமர் முற்றத்தில் விளையாடிக் கொண்டிருக்கிறார். ஒரு காக்கை அங்கே வருகிறது. இராமர் அதை மெதுவாய்ச் சென்று பிடிக்க விரும்புகிறார். காகம் பின்னால் தாவி உட்காருகிறது. இறுதியில் இராமர் களைத்துப் போகிறார். ஆனால் அவருக்கு ஒரு யுக்தி தோன்றுகிறது. ஒரு மிட்டாய் துண்டுடன் இராமர் காக்கையினிடம் போகிறார். இராமர் மிட்டாயைச் சிறிது முன்னே நீட்டியதும் காக்கை சிறிது பக்கத்தில் வருகிறது. இத்தகைய வர்ணனையில் துளசிதாஸர் பல பக்கங்களைச் செலவழிக்கிறார். ஏனெனில், அந்தக் காகம் ஆண்டவனே; இராமரிடமுள்ள அந்தக் கடவுளின் அம்சமேதான் காகத்தினிடமும் இருக்கிறது. இராமருக்கும் காகத்திற்கும் ஏற்பட்ட அந்தப் பழக்கம் பரம்பொருளுக்கும் பரம்பொருளுக்கும் ஏற்பட்ட பழக்கம் போன்றதே.

## (54) தீயோரிடமும் கடவுளைக் காணல்

கருத்தென்னவென்றால், இந்த சிருஷ்டி எங்கும் பல் வேறு உருவங்களில்—புனிதமான ஆறுகளாயும், பெரிய மலைகளாயும், ஆழ்ந்த கடலாயும், பிள்ளைப் பாசமுள்ள பசுவாயும், சிறந்த குதிரைகளாயும், வீரம் மிக்க சிங்க மாயும், இனிய குயிலாயும், அழகிய மயிலாயும், சுத்த மான, தனிமையை விரும்பும் பாம்பாயும், சிறகை அடித்துக்கொள்ளும் காகமாயும், ஓங்கி எழும் தீயாயும், அமைதியான நட்சத்திரமாயும், எங்கும் கடவுளேதான்

வியாபித்திருக்கிறார். கண்களை அவரைக் காணப் பயிற்று விக்கவேண்டும். முதலில் பெரிதான சுலபமான எழுத்துக் களையும், பிறகு நுண்ணிய சிக்கலான எழுத்துக்களையும் கற்கவேண்டும். சிக்கலான எழுத்துக்களைக் கற்றாகும் வரையில் படிப்பில் முன்னேற்றம் ஏற்படாது. வார்த் தைக்கு வார்த்தை அடிக்கடி சிக்கலான எழுத்துக்கள் வரும். தீயோரிடம் உள்ள பரம்பொருளைப் பார்க்கவும் கற்க வேண்டும். இராமர் நமக்கு புரிகிறார்; ஆனால் இரா வணனும் புரிய வேண்டும். பிரகலாதன் புரிகிறான்; இரண்யகசிபுவும் புரியவேண்டும். வேதத்தில்—

"नमो नमः स्तेनानां पतये नमोनमः
नमः पुंजिष्ठेभ्यो नमो निषादेभ्यः"

"ब्रह्म दाशा ब्रह्म दासा
ब्रह्मवेमे कितवाः ।"

(நமோ நம: ஸ்தேனானாம் பதயே நமோ நம:
நம: புஞ்ஜிஷ்டேப்யோ நமோ நிஷாதேப்ய:
ப்ரம்ஹதாசா பிரம்மதாஸா
ப்ரஹ்மவேமே கிதவா:)

"அந்த திருடர் தலைவருக்கு நமஸ்காரம்; அந்தக் கொடியவர்களுக்கு, ஹிம்சை புரிவோருக்கு நமஸ்காரம்; அந்த மோசக்காரர், திருடர், கொள்ளைக்காரர் ஆகிய அனைவரும் பிரம்மமே. அவர்கள் அனைவருக்கும் நமஸ் காரம்"

இதன் பொருளென்ன? இதன் பொருள் சுளுவான எழுத்துக்களைக் கற்றுக்கொண்டாய்விட்டது, இனி கடின எழுத்துக்களையும் கற்பாய் என்பது. காலையில் 'வீரர் வழிபாடு' என்று ஒரு புத்தகம் எழுதியிருக்கிறார். அதில் நெப்போலியனையும் ஒரு வீரனென்று, தேவ அம்சம் பொருந்தியவனென்று கூறியிருக்கிறார். இங்கே சுத்தப் பரம்பொருளல்ல, கலப்படமான பரம்பொருளே இருப்பது. ஆனால் இந்தப் பரம்பொருளையும் புரிந்துகொள்ளவேண்டும். இதனாலேயே துளசிதாஸர் இராவணனை இராமருடைய விரோதியான பக்தனென்று சொல்லியிருக்கிறார். ஆம், இந்த பக்தனுடைய தன்மையும் போக்கும் சிறிது வேறானதே. தீ படுவதனால் கால் கொப்புளித்து வீங்கிப் போகிறது;

ஆனால் வீக்கத்திற்கு சூடான ஒத்தடம் கொடுத்தால் அது அடங்கிவிடுகிறது. இரண்டிலுமுள்ளது ஒரே தீ. ஆனால் அவை வெவ்வேறு வகையில் செயல்படுகின்றன. இராமரிடத்தும் இராவணனிடத்தும் வெவ்வேறு வகையில் செயல் பட்டபோதிலும் அவ்விருவரிடத்திலும் உள்ள பரம்பொருள் ஒன்றே.

ஸ்தூலம் – சூக்குமம், சுளுவானது – சிக்கலானது, சுளுவான எழுத்து – சிக்கலான எழுத்து ஆகிய அனைத்தையும் கற்றுக்கொள். இறுதியில் ஆண்டவனில்லாத எதுவுமேயில்லை என்பதை உணர்ந்துகொள். ஒவ்வொரு துளியிலும் ஒவ்வொரு அணுவிலும் அவனே இருக்கிறான். எறும்பு முதல் பிரம்மாண்டம் ஈருக எங்கும் பரம்பொருளே பரவியிருக்கிறது. எல்லோரையும் குறித்துக் கவலைகொண்டு, கருணையுடன், ஞான மூர்த்தியாய் வாஞ்சையுடன் திறமையாயும் புனிதமாயும் அழகாயுமுள்ள பரம்பொருள் நமக்கு நாற்புறமும் எங்குமே நிற்கிறது.

ஞாயிறு, 24-4-'32

## பதினோராம் அத்தியாயம்

## விச்வரூப தரிசனம்

*

### (55) விச்வரூப தரிசனத்தில் அர்ஜுனன் ஆவல்

சகோதரர்களே, சென்ற வாரத்தில் நாம் இந்த உலகத்தின் அளவிலடங்காத வஸ்துக்களில் வியாபித்துள்ள பரம் பொருளை எப்படிப் புரிந்துகொள்வது, கண்முன் தோன்றும் இந்தப் பெருத்த கண்காட்சியை எப்படி நம்முடைய தாக்கிக் கொள்ளுவது என்பதைப் புரிந்து கொண்டோம். முதலில் ஸ்தூலத்திலும் பிறகு சூக்குமத்திலும், முதலில் சுளுவிலும், பிறகு சிக்கலிலுமென இவ்வாறு எல்லாப் பொருள்களிலும் பகவானைப் பார்த்தல், அவனை தரிசித்தல், அல்லும் பகலும் பயிலுவதன் மூலமாய் அகில உலகமும் நாமே என உணரக் கற்றுக் கொள்ளுதல் என்பதை நாம் பிந்திய அத்தியாயத்தில் பார்த்தோம்.

இப்பொழுது பதினோராம் அத்தியாயத்தில் நம் பார்வையைச் செலுத்த வேண்டும். இந்த அத்தியாயத்தில் பகவான் தம் பிரத்யக்ஷ ரூபத்தைக் காட்டி அர்ஜுனனிடம் தம் கருணையைப் புலப்படுத்தியிருக்கிறார். அர்ஜுனன் பகவானிடம், "பிரபுவே, தங்களுடைய எந்த எந்த சம்பூரண உருவில் தங்கள் மகிமை பொருந்திய பிரபாவம் அனைத்தும் வெளியாயிருக்கிறதோ அதை நான் என் கண்களால் பார்க்க விரும்புகிறேன்" என்றான். அர்ஜுனனுடைய இந்தக் கோரிக்கை விச்வரூப தரிசனம் பற்றியது.

நாம் 'விச்வம்' 'ஜகத்' என்ற சொற்களைக் கையாளுகிறோம். இந்த ஜகத் அல்லது உலகம், விச்வம் அல்லது சிருஷ்டியின் ஒரு சிறு பகுதியே. இந்தச் சிறு துணுக்கைக்கூட நம்மால் புரிந்துகொள்ள இயலவில்லை. சிருஷ்டியனைத்தையும் கருத்தில் கொண்டு பார்த்தோமானால் இவ்வளவு விசாலமாய்க் காணப்படும் இந்த உலகம் மிகவும் சிறியதென்று தெரியும். இரவு நேரத்தில் நாம் வானத்தைச் சிறிது நோக்குவோமானால் எண்ணற்ற கோளங்கள் காணப்படுகின்றன. வானவெளியில் அமைக்கப்பட்டுள்ள அந்தக்

கோள வரிசைகள், அந்தச் சின்னஞ்சிறு அழகிய பூக்கள், கண்ணைச் சிமிட்டிச் சிமிட்டிப் பார்க்கும் இலட்சக் கணக்கான நட்சத்திரங்கள் ஆகிய இவை அனைத்தின் சொரூபம் உங்களுக்குத் தெரியுமா? இந்தச் சின்னஞ்சிறு நட்சத்திரங்கள் மிகமிகப் பெரியவை. அவைகளினுள் அளவிலடங்காச் சூரியன்களும் அடங்கிப்போம். அவை ரசமயமான, ஒளிமயமான தகதகவெனக் கொதிக்கும் தாதுக்களின் கோளங்கள். இத்தகைய இந்த எண்ணிலடங்காத உருளைகளை யார் கணக்கிட முடியும்? இவைகளுக்கு அளவுமில்லை, எண்ணிக்கையுமில்லை. வெறும் ஊனக் கண்களுக்கே ஆயிரமாயிரம் இருப்பதாய்த் தெரிகிறது. தூரதிருஷ்டிக் கண்ணுடி கொண்டு பார்க்கையில் இவை கோடிக் கணக்கில் தென்படுகின்றன. இன்னும் பெரிய தூரதிருஷ்டிக் கண்ணுடி யிருக்குமாளுல் இன்னும் எவ்வளவோ அதிகம் இருப்பது தெரியும். அப்பொழுது இது எங்கே முடிகிறது, இது எப்படி அமைந்துள்ளது என்பதைப் புரிந்து கொள்வதே கஷ்டமாய்விடும். மேலும் கீழும் எல்லா இடங்களிலும் பரவியுள்ள இந்த அனந்த சிருஷ்டியின் ஒரு சிறு துணுக்கே உலகமென்ப்படுகிறது. ஆனுல் இந்த உலகமே எவ்வளவு பெரியதாய்த் தோன்றுகிறது!

இந்த விசாலமான சிருஷ்டி பரம்பொருளின் சொரூபத்தின் ஒரு அம்சம். இனி அதன் மற்றொரு அம்சத்தைப் பார்ப்போம்; அதுதான் காலம். நாம் கழிந்த காலத்தைக் கவனிப்போமாளுல் சரித்திர எல்லைக்குள், அதிகமாளுல் பத்தாயிரம் வருஷம் வரை போகக்கூடும். அதற்குப் பிந்திய காலம் புரிவதேயில்லை. சரித்திரகாலம் என்பது பத்தாயிர வருஷமாயிருக்க, நம் ஆயுட்காலமோ நூறு வருஷம் கூட இல்லை. உண்மையில் காலம் ஆதியும் அந்தமும் அற்றது. இதற்குள் கழிந்த காலம் எவ்வளவு என்பதற்கு ஒரு அளவோ, கணக்கோ இல்லை. இனி எவ்வளவு காலமிருக்கிறது என்பதையும் கணக்கிட முடியவில்லை. நமது உலகம் சிருஷ்டியுடன் ஒப்பிடுகையில் மிகவும் இழிந்ததாய், சிறியதாய் இருப்பதைப் போல சரித்திரம் கண்ட இந்தப் பத்தாயிரம் வருஷமும் அனந்த காலத்துடன் ஒப்பிடப்படுகையில் ஒன்றுமே இல்லாததைப் போன்றதே. கடந்த காலம் அனுதியாயிருக்க வருங் காலமோ இறுதியற்றதாயிருக்கிறது. இந்தச் சிறிய நிகழ்

காலமோ நாம் பேசிக்கொண்டிருக்கையிலேயே கழிந்த காலத்தில் போய்க் கலந்துவிடுகிறது. நிகழ்காலம் உண்மையில் எங்கேயிருக்கிறது என்பதைச் சொல்லி முடிப்பதற்குள் அது இறந்த காலமாய்விடுகிறது. இத்தகைய இந்தச் சிறிதும் நிலையற்ற நிகழ்காலம் மட்டுமே நம்முடையது. நான் இப்பொழுது பேசிக்கொண்டிருக்கிறேனே, இந்தப் பேச்சு என் வாயிலிருந்து வெளிவந்ததும் அது நான் பேசியதாக, இறந்த காலத்தைச் சேர்ந்துவிடுகிறது. இவ்வாறு இந்தப் பெரிய கால வெள்ளம் ஒரே வகையில் ஓடிக் கொண்டேயிருக்கிறது. அதன் உற்பத்தி ஸ்தானமும் தெரியவில்லை, அது போய்க் கலக்கும் கடலும் நம் கண்ணுக்குத் தெரியவில்லை; இடையிலுள்ள சிறு பகுதியையே நாம் பார்க்கிறோம்.

இவ்வாறு பூமியின் பிரமிக்கச் செய்யும் விஸ்தாரம் ஒரு புறமும், காலத்தின் பலமிக்க பிரவாகம் ஒரு புறமுமாயுள்ள சிருஷ்டியின் இந்த இரண்டு பகுதிகளின் மூலமாய் நாம் சிருஷ்டியை நோக்குவோமானால் நாம் நம் கற்பனைத் திறனை எவ்வளவுதான் தூண்டிவிட்டபோதிலும் இவைகளின் எல்லையை நம்மால் காணவே முடியவில்லை. மூன்று காலங்களிலும்—இறந்தகாலம், எதிர்காலம், நிகழ்காலம்—மேலே, கீழே, இங்கே ஆகிய எல்லாவிடங்களிலும் வியாபித்துள்ள விராட் பரம்பொருளை ஒருமிக்க ஒரே காலத்தில் பார்க்கவேண்டும்—பரம்பொருளை இவ்வுருவில் காணவேண்டும் என்ற விருப்பம் அர்ஜுனன் மனதில் எழுந்தது. இவ்விருப்பத்திலிருந்து தோன்றியதே பதினோராவது அத்தியாயம்.

அர்ஜுனன் பகவானுக்கு மிகவும் பிரியமானவன்; எவ்வளவு பிரியமானவனென்றால், பத்தாம் அத்தியாயத்தில் எந்தெந்த உருவில் தன்னைச் சிந்திக்க வேண்டுமென்று வரிசையாகச் சொல்லிக்கொண்டு வந்த பகவான், "பாண்டவர்களுள் அர்ஜுனனுடைய உருவில் நானிருப்பதாய்ச் சிந்தனை செய்" என்கிறார். "பாண்டவர்களுள் தனஞ்சயன்" என்கிறார் ஸ்ரீ கிருஷ்ணர். இதைவிட அதிகமான அன்பின் பித்தம், அன்பின் போதை எங்கேயிருக்கும்? அன்பு எவ்வளவு போதை தரத்தக்கது, பைத்தியம் உண்டு பண்ணக் கூடியது என்பதற்கு இது உதாரணமாகும். அர்ஜுனன் மீது பகவானுக்கு அளவிடமுடியாத அன்பு.

இந்தப் பதினோராம் அத்தியாயம் அந்த அன்பளித்த பிரசாதமே. தெய்வ உருவைக் காணவேண்டுமென்ற அர்ஜுனனுடைய ஆவலை பகவான் அவனுக்கு தெய்வப் பார்வையை அளித்துப் பூர்த்திசெய்தார்; அர்ஜுனனுக்கு அன்பின் பிரசாதம் அளித்தார்.

## (56) சிறிய உருவிலும் பூரண தரிசனம் கிட்டும்

அந்த தெய்வ உருவின் அழகிய, நேர்த்தியான வர்ணனை இந்த அத்தியாயத்திலிருக்கிறது. இவையெல்லாம் உண்மையாயினும் இந்த சிருஷ்டியினிடத்தில் எனக்குத் தனி ஆசை இல்லை; சிறிய உருவத்திலேயே எனக்குச் திருப்திதான். சிறியதாய் சாதாரணமாய் என்முன் காணப்படுகிற உருவின் இனிமையை அனுபவிக்க நான் கற்றுக்கொண்டு விட்டேன். ஆண்டவன் துண்டு துண்டாய்ப் பிரிக்கப்பட்டிருக்கவில்லை. ஆண்டவனுடைய எந்த உருவை நாம் பார்க்கிறோமோ அது அவனுடைய ஒரு பகுதி என்றும் எஞ்சிய பகுதி புறத்தே இருக்கிறதென்றும் எனக்குத் தோன்றவில்லை. எந்த ஆண்டவன் இந்தப் பெருத்த சிருஷ்டியில் வியாபித்திருக்கிறானோ அவனே பூரணமாய் ஒரு சிறிய விக்கிரகத்திலும், ஒரு சிறு மண் துளியிலும் வியாபித்திருக்கிறானே யல்லாது எவ்வகையிலும் குறைவாய் அல்ல. அமுதக்கடலில் உள்ள இனிமை அதன் ஒரு துளியிலும் இருக்கிறது. எனக்குக் கிடைத்துள்ள ஒருசிறு அமுதத்துளியின் இனிப்பை நான் ருசித்துக் கொண்டே இருக்கலாமென்று எனக்குத் தோன்றுகிறது. நான் வேண்டுமென்றேதான் அமுதத்தை உதாரணமாகக் கொண்டு, தண்ணீரையோ, பாலையோ கூறவில்லை. ஒரு கிண்ணம் பாலுக்குள்ள ருசியேதான் ஒரு செம்புப் பாலுக்கும் இருக்கும். ஆனால் ருசி அவ்வாறே இருந்த போதிலும் புஷ்டி அதே அளவு இராது. ஒரு துளி பாலுக்குள்ளதைவிட ஒரு கிண்ணப் பாலுக்குள்ள புஷ்டி அதிகம். ஆனால் அமுதத்தின் விஷயமோ இவ்வாறல்ல. அமுதக்கடலின் இனிப்பு அமுதத்துளியில் இருப்பதோடு புஷ்டியும் அதே அளவுதானிருக்கும். அமுதம் ஒரு துளியே அருந்திய போதிலும் நமக்குச் சாகாவரம் கிடைத்துவிடும்.

அவ்வாறே ஆண்டவனுடைய விராட்ரூபத்தில் எந்த

தெய்வத்தன்மையும், புனிதமும் இருக்கிறதோ அதுவே ஒரு சிறிய உருவிலும் இருக்கிறது. என்னிடம் நீங்கள் ஒரு பிடி கோதுமையை மாதிரிக்காகக் கொடுக்க எனக்கு அதை கோதுமை என்று புரிந்துகொள்ள முடியாதிருக்கையில் என்முன் ஒரு மூட்டை கோதுமையைக் கொட்டினால் என்ன பயன்? என் முன்னுள்ள சிறிய மாதிரிகளிலிருந்து நான் அவனைப் புரிந்துகொள்ளாமலிருக்கையில் பேருருவம் தாங்கியுள்ள ஆண்டவனை எப்படி அறிந்து கொள்வேன்? பெரியவை, சிறியவை என்பவை என்ன? சிறிய உருவைப் புரிந்து கொண்டுவிட்டால் பெரியதைப் புரிந்துகொண்டமாதிரிதான். ஆகையால் ஆண்டவன் எனக்குத் தன் பேருருவைக் காட்டவேண்டுமென்ற ஆவல் எனக்கில்லை. அர்ஜுனனைப்போல் விச்வரூப தரிசனம் காட்ட வேண்டுமென்று கோர எனக்குத் தகுதியும் இல்லை. மேலும், எனக்குக் காணப்படுவது விச்வரூபத்தின் ஒரு பகுதி என்பதுமல்ல. ஒரு சித்திரத்தின் ஒரு பகுதியைக் கிழித்துக் கொணர்ந்தால் அதிலிருந்தே நாம் முழுச் சித்திரம் எப்படியிருக்குமென்று உணரமுடியாது. ஆனால் பரம்பொருளோ இவ்வாறு பல துண்டுகளால் ஆனதல்ல; பரம்பொருள் துண்டுதுண்டாய் வெட்டப்பட்டதல்ல. ஒரு சிறிய உருவிலும், சிலையிலும் அந்த இறுதியற்ற ஆண்டவன் முழுமையும் அடங்கியிருக்கிறான். ஒரு சிறிய புகைப்படத்திற்கும் பெரிய புகைப்படத்திற்கும் உள்ள வேற்றுமை என்ன? பெரிய புகைப்படத்திலுள்ள எல்லா அம்சங்களும் சிறியதிலும் இருக்கின்றன. சிறிய புகைப்படம் பெரியதின் பகுதி அல்ல, துண்டல்ல. சிறிய எழுத்துக்களால் கோர்த்து அமைத்த ஒரு சொல்லுக்கு உள்ள பொருள் எதுவோ அதுவேதான் பெரிய எழுத்துக்களால் அமைந்த சொல்லுக்கும் இருக்கும். பெரிய எழுத்துச் சொல்லுக்குள்ள பொருள் பெரியதாயும் சிறிய எழுத்துச் சொல்லுக்குள்ள பொருள் சிறியதாயும் இருக்கும் என்பதில்லை.

விக்கிரக ஆராதனைக்கு அடிப்படையாயுள்ள கருத்து இதுவே. விக்கிரக ஆராதனையை இதுவரையில் எத்தனையோ பேர் தாக்கியிருக்கிறார்கள். வெளிநாட்டினர், நம் நாட்டையே சேர்ந்த சில சிந்தனைசீலர்கள் விக்கிரக ஆராதனையைத் தவறென்று கூறியிருக்கிறார்கள். ஆனால் நான் சிந்திக்கச் சிந்திக்க விக்கிரக ஆராதனையின் சிறப்பு எனக்கு மேன்மேலும் விளங்கிக்கொண்டே வருகிறது.

விக்கிரக ஆராதனையின் கருத்தென்ன? ஒரு சிறிய பொரு ளில் அகில சிருஷ்டியையும் உணர உதவும் வித்தையே விக்கிரக ஆராதனை என்பது. ஒரு சிறிய கிராமத்தில் அகில பிரம்மாண்டத்தையும் காண உதவும் வித்தையைக் கற்பது தவருகுமா? இது வெறும் கற்பனையல்ல; நிதரிசன மான, அனுபவத்தில் வந்த விஷயம். விராட் உருவில் உள்ளவையெல்லாம் ஒரு சிறிய விக்கிரகத்திலும் ஒரு சிறு மண் திவிலையிலும் அடங்கியிருக்கின்றன. அந்த மண் கட்டியின் கீழே மா, வாழை, கோதுமை, தங்கம், தாமிரம், வெள்ளி ஆகிய எல்லாம் இருக்கின்றன. சிருஷ்டி அனைத் தும் அந்தத் திவிலையினுள் அடங்கியிருக்கிறது. ஒரு நாடக கோஷ்டியில் ஒரே ஆள் அடிக்கடி வெவ்வேறு வேஷம் புனைந்துகொண்டு நாடகமேடைக்கு வருவதைப் போலவே தான் ஆண்டவனும் என்று உணருங்கள். ஒரு நாடகாசிரி யன் நாடகம் ஒன்றை எழுதி, தானே அந்த நாடகத்தில் நடிப் பதைப் போல பரம்பொருளும் முடிவில்லாத நாடகத்தை எழுதி அளவிலடங்காப் பாத்திரங்களின் வேஷம் பூண்டு நாடகமேடையில் வந்து நடிக்கிறது. இந்த முடிவில்லா நாடகத்தின் ஒரு பாத்திரத்தைப் புரிந்துகொள்வதே எல்லாப் பாத்திரங்களையும் புரிந்துகொள்வதற்கு ஈடாகும்.

காவியத்தின் உவமை, உதாரணம் ஆகியவைகளுக்கு ஆதாரமெதுவோ அதுவேதான் விக்கிரக ஆராதனைக்கும். உருண்டு திரண்டுள்ள பொருளெதையும் பார்க்கும்பொழுது நமக்கு ஆனந்தம் ஏற்படுகிறது. ஏனெனில், அதில் ஒரு ஒழுங்குமுறை இருக்கிறது. ஒழுங்கு முறை என்பது ஆண்டவனுடைய தன்மையே. ஆண்டவனுடைய சிருஷ்டி சர்வாங்க சுந்தரமானது. அதில் ஒழுங்குமுறை இருக் கிறது. அந்த உருண்டு திரண்டுள்ள பொருள் ஒழுங்கான ஆண்டவனுடைய உருவே. ஆனால் காட்டில் வளர்ந்துள்ள கோணல் மாணலான மரமும் ஆண்டவன் உருவமே. அதில் ஆண்டவனுடைய கட்டுக்கடங்காத தன்மை காணப் படுகிறது. அந்த மரத்திற்குக் கட்டுதிட்டம் எதுவும் கிடையாது. ஆண்டவனை யார் கட்டுப்படுத்துவார்? அந்தக் கட்டிலடங்காத ஆண்டவன் அந்தக் கோணல் மாணலான மரத்திலிருக்கிருன். நேராக நெடிது ஓங்கிநிற்கும் கம்பத் தைத் காணும்பொழுது அது ஆண்டவனை ஒத்திருப்ப தாய்த் தோன்றுகிறது. சித்திர வேலைப்பாடுள்ள, நகாசு வேலைப்பாடமைந்த தூணைப் பார்ப்போமாளுல் அதில்

வானத்தில் நட்சத்திரங்கள் என்ற நகாசு வேலையைச் செய்யும் ஆண்டவன் காணப்படுகிருன். கத்தரித்து வெட்டிவிட்ட மரம் செடிகளுள்ள அழகிய, சிங்காரத் தோட்டத்தில் ஆண்டவனுடைய அடக்கமான உருவம் தோன்றுகிறதென்ருல், பெரிய காட்டில் ஆண்டவனுடைய பெருமையும் கட்டிலடங்காத் தன்மையும் காட்சியளிக்கின்றன. காட்டிலும் இன்பம் ஏற்படுகிறது, அழகிய பூங்காவிலும் மகிழ்ச்சி உண்டாகிறது. அப்படியானுல் நாம் பித்தர்களா? இல்லை, இரண்டிலுமே இன்பம் ஏற்படுவதற்குக் காரணம், ஆண்டவனுடைய தன்மை இரண்டிலும் இருப்பதே. மழுமழுவென்றுள்ள சாலக்கிராமத்திலுள்ள தேஜஸே நர்மதையில் எடுக்கப்படும் கரடுமுரடான சிவலிங்கத்திலும் இருக்கிறது. ஆகையால் எனக்கு அந்தப் பேருருவம் தனியாய்த் தெரியாதிருப்பினும் பாதகமில்லை.

ஆண்டவன் எங்கும் வெவ்வேறு பொருள்களில் வெவ்வேறு குணங்களின் மூலமாய்த் தோன்றியிருப்பதனுலேயே நமக்கு அந்தந்தப் பொருளினுல் ஆனந்தம் ஏற்படுகிறது; அவை நம்மைச் சேர்ந்தவையென்ற உணர்ச்சி உதிக்கிறது. நமக்குக் காரணமில்லாமல் ஆனந்தம், உண்டாகவில்லை. ஆனந்தம் தோன்றக் காரணமென்ன? அதற்கும் நமக்கும் ஏதோ தொடர்பிருப்பதனுலேயே ஆனந்தமேற்படுகிறது. குழந்தையைப் பார்த்ததும் தாயினுள்ளம் துள்ளுகிறது. ஏனெனில், அவளுக்கு உறவு தெரியும். இதே வகையில் ஒவ்வொரு பொருளுடனும் பரம்பொருளை இணைத்துக்கொள். என்னிடமுள்ள ஆண்டவனே அதிலும் இருக்கிருன் என்று இவ்வகையில் தொடர்பை வளர்ப்பதே ஆனந்தத்தை வளர்ப்பதாகும். ஆனந்தத்திற்கு வேறு உபாயம் எதுவுமில்லை. நீங்கள் எல்லாவிடங்களிலும் அன்புத் தொடர்பை அமைத்துக்கொள்ளுங்கள்; பிறகு என்ன அற்புதம் நிகழ்கிறதென்று பாருங்கள்! எல்லையில்லாத சிருஷ்டி அனைத்திலும் வியாபித்துள்ள பரம்பொருள் ஒவ்வொரு அணுவிலும் திவிலையிலும் காணப்படுவான். இந்தக் காட்சி, இந்தக் காட்சியைப் பெறும் சக்தி கிட்டிய பிறகு நமக்கு வேறென்னவேண்டும்? ஆனுல் இதற்கு பொறிகளுக்குப் பயிற்சி அளிக்க வேண்டியது அவசியம். நமது போக வாசனைகள் விலகி அன்பின் புனித நோக்கு ஏற்பட்டுவிடுமானுல் நமக்கு ஒவ்வொரு பொருளிலும் ஆண்டவனே காட்சியளிப்பான்.

உபநிடதங்களில் இவ்விஷயம் வெகு அழகாய் வர்ணிக்கப் பட்டிருக்கிறது. ஆன்மாவின் நிறம் எப்படியிருக்கும்? ஆன்மாவின் நிறத்தை எந்த நிறமென்று சொல்லுவது? ரிஷி அன்புடன்,

"यथा अयं इंद्रगोप:"—(யதா அயம் இந்த்ரகோப:)

என்கிறார்.

இந்த செக்கச் செவேரென்று பட்டைப்போன்று மிருதுவான பூச்சி இருக்கிறதே அதைப் போன்றதேதான் ஆன்மாவின் உருவமும். இந்தப் பட்டுப் பூச்சியைக் கண்டதும் எவ்வளவு இன்பம் ஏற்படுகிறது! இந்த இன்பத்திற்குக் காரணமென்ன? எனக்கு என்னிடம் எந்த பாவனை யிருக்கிறதோ அதுவே இந்தப் பட்டுப் பூச்சியி னிடமும் உள்ளது. என்னுடன் அதற்குச் சம்பந்தமில்லா விடில் இன்பம் ஏற்படுமா? என்னுள் உள்ள அழகிய ஆன்மாவே பட்டுப் பூச்சியினிடமும் உள்ளது. இதனு லேயே அதை உவமையாகக் கூறப்பட்டது. உவமை ஏன் கூறுகிறோம்? அதனுல் இன்பம் ஏற்படுவது ஏன்? இரண்டு பொருள்களினிடையில் ஒற்றுமை யிருப்பதனு லேயே உவமை அளிக்கிறோம்; அதனுலேயே இன்பமும் ஏற்படுகிறது. உவமேயமும் உவமானமும் முற்றிலும் வேறுபட்டிருக்குமானுல் இன்பம் ஏற்படாது. ஒருவன் உப்பு மிளகாயைப் போலிருக்கிறதென்று சொல்லுவா னுனல் நாம் அவனைப் பித்தனென்போம். ஆனுல் ஒருவன் நட்சத்திரங்கள் பூக்களைப் போலிருக்கின்றன என்றுல் அவைகளினிடையில் ஒற்றுமையிருப்பதால் இன்பம் ஏற்படுகிறது. உப்பு மிளகாயைப் போலிருக்கிறது என் னும்பொழுது ஒற்றுமை உணர்ச்சி ஏற்படவில்லை. ஆனுல் உப்பிலுள்ள பரம்பொருளே மிளகாயிலும் இருக்கிறது என்று உணரக்கூடிய அளவுக்கு ஒருவருடைய நோக்கு பரந்து போயிருக்கையில் அவர் உப்பு மிளகாயைப் போலிருக்கிறதென்று சொல்லுவாரானுல் அவர் கூற்றிலும் நமக்கு இன்பமே ஏற்படும். கருத்தென்ன வென்றுல், ஆண்டவனுடைய உருவம் ஒவ்வொரு பொருளிலும் நிரம்பி வழிந்துகொண்டிருக்கிறது. அதற்கு விராட் உருவத்தைக் காணத் தேவையில்லை.

## (57) விச்வரூபத்தைத் தாங்கவும் முடியாது

அப்படியானால் அந்தப் பேருருவக் காட்சியை நான் எப்படித்தான் ஏற்க முடியும்? சிறிய சகுணமான அழகிய உருவினிடம் எனக்கு எந்த அன்பும் என்னைச் சேர்ந்த தென்ற உணர்ச்சியும், இனிமையும் தோன்றுகிறதோ அது விச்வரூபத்தைப் பார்ப்பதில் ஒருபொழுதும் ஏற்படாது. அர்ஜுனனுடைய நிலையும் இவ்வாறேதான் ஆய்விட்டது. அவன் வெடவெடத்துப்போய் இறுதியில், "பகவானே, எனக்கு அந்த உமது பழைய இனிய உருவைக் காட்டும்" என்கிறான். அர்ஜுனன் சொந்த அனுபவத்திலிருந்து விராட் ரூபத்தைக் காண ஆவல் கொள்ளாதே என்கிறான். முக்காலங்களிலும் மூவிடங்களிலும் வியாபித்துள்ள ஆண்டவனே சிறந்தவன். அந்த நட்சத்திரம் தன்னைக் குறுக்கிக் கொண்டு தகதகவென்று எரியும் தீப்பந்தாகி என்னெதிரில் வந்து நின்றால் அப்பொழுது என் கதி என்னவாகும்? இந்த நட்சத்திரங்கள் எவ்வளவு சாந்தமாய் அடக்கமாய்க் காணப்படுகின்றன! அவை இவ்வளவு தொலைவிலிருந்து என்னோடு உரையாடுவதாக அல்லவோ தோன்றுகிறது! ஆனால் கண்ணுக்கு அமைதியை அளிக்கும் அதே நட்சத்திரம் அண்மையில் வந்துவிட்டாலோ அது எரிக்கும் தகதகவென்ற தீயே ஆகும்; அப்பொழுது நான் சாம்பலாய்விடுவேன். ஆண்டவனுடைய இந்த எல்லையற்ற பிரம்மாண்டம் முழுமையிலும் எவை எவை எங்கெங்கே எப்படி எப்படி யிருக்கின்றனவோ, அப்படியே இருக்கட்டும். அவை அனைத்தையும் ஒரே அறையில் சேர்த்துக் குவிப்பதில் என்ன இன்பம் இருக்கிறது? பம்பாயில் உள்ள அந்தப் புறுக் கொட்டடியில் ஆயிரக் கணக்கான புறுக்கள் இருக்கின்றனவே, அங்கே அவைகளுக்குச் சுதந்திரம் ஏது? அந்தக் காட்சியே பார்ப்பதற்கு அருவருப்பா யிருக்கிறது. இந்த சிருஷ்டி மேலும் கீழும் இங்கே நடுவிலுமாக மூவிடங்களிலும் கூறிடப்பட்டிருப்பதில்தான் ஆனந்தம் இருக்கிறது. இடம்பற்றிய சிருஷ்டியைப்பற்றி நாம் சொல்லுவது காலம் பற்றியதற்கும் பொருந்தும். நமக்குக் கடந்த காலம் பற்றிய நினைவு இருப்பதில்லை; வருங்காலத்தைப்பற்றிய தெதுவும் தெரிவதுமில்லை. இவ்வாறு இருப்பது நமக்கு நன்மையே. புனிதக் குரானில் ஆண்டவனுடைய அதிகாரம் மட்டுமே

இருந்துவருவதும் மனிதனுடைய கைவரிசை சிறிதும் செல்லாததுமான ஐந்து விஷயங்கள் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. அவைகளுள் ஒன்று வருங்கால அறிவு. நாம் ஊகமென்னவோ செய்யலாம்; ஆனால் ஊகம் அறிவாகாது. வருங்காலம் பற்றிய அறிவே நமக்கில்லா திருப்பதில்தான் நம் நன்மை அடங்கியிருக்கிறது. அவ்வாறே கடந்த காலம் நமக்கு நினைவில்லாமலிருப்பதும் உண்மையில் நமக்கு மிகவும் நல்லதே. ஒரு துஷ்டன் நல்லவனாகி என்முன் வந்தாலும் எனக்கு அவனுடைய பிந்திய வாழ்க்கையின் நினைவிருப்பதால் அவனிடம் எனக்கு மனதில் மதிப்புண்டாவதில்லை. அவன் எவ்வளவுதான் சொன்னபோதிலும் அவனுடைய பிந்திய பாவங்களை என்னால் உடனே மறக்க முடிவதில்லை. அந்த மனிதன் இறந்துபோய் வேற்றுருவில் வரும் பொழுதுதான் உலகத்தினால் அவனுடைய பாவங்களை மறக்க முடிகிறது.

பழைய நினைவுகளினால் மனோவிகாரம் பெருகுகிறது. இந்தப் பழைய நினைவுகள் அனைத்தும் மறந்துபோய் விடும்பொழுது எல்லாமே முடிந்துபோகின்றன. பாவ புண்ணியங்களை மறப்பதற்கு ஏதேனும் யுக்தி இருக்க வேண்டும். அந்த யுக்தி அல்லது உபாயம்தான் மரணம். நமக்கு இந்தப் பிறவியின் சிரமங்களையே பொறுக்க முடியாமலிருக்கையில் கடந்த பிறவியின் குப்பைமேட்டைப்போய் ஏன் கிளறிக்கொண்டிருக்கவேண்டும்? இந்தப் பிறவி என்ற அறையிலே உள்ள குப்பை கூளங்கள் போதாவா? நம் பிள்ளைப் பிராயத்தை நாம் பெரும்பாலும் மறந்துபோகிறோம். இந்த மறதி நமக்கு நன்மையானதே. இந்து முஸ்லிம் ஐக்கியத்திற்கு கடந்த காலத்தை மறப்பதொன்றே உபாயம். ஔரங்கசீப் மிகுந்த கொடுமை செய்தான் என்பதை எவ்வளவு காலம் தான் திரும்பத் திரும்பச் சொல்லிக்கொண்டிருப்பாய்? குஜராத்தியில் ரத்தன்பாயினுடைய 'கர்பா' பாட்டு ஒன்றுண்டு. அதை நாம் இங்கே அடிக்கடி கேட்கிறோம். அதன் கடைசி சரணத்தில், "உலகத்தில் இறுதியில் கீர்த்திதான் நிலைத்திருக்கும்; பாவத்தை மக்கள் மறந்து போவார்கள்" என்று வருகிறது. காலம் சல்லடையாகச் சலித்துக்கொண்டிருக்கிறது. சரித்திரத்திலுள்ள நல்ல அம்சங்களையெல்லாம் எடுத்துக்கொண்டு பாவங்களை

எறிந்துவிட வேண்டும். மனிதன் தீமைகளை விட்டுவிட்டு நல்லவைகளைமட்டும் நினைவில் கொள்ளுவானாயின் எவ்வளவு ஆனந்தமாயிருக்கும்! ஆனால் இவ்வாறு நடப்பதில்லை. இதனாலேயே மறதி மிகவும் அவசியமாகிறது. இதன் பொருட்டு பகவான் சாவை ஏற்படுத்தியிருக்கிறார்.

கருத்தென்னவென்றால், இந்த உலகம் நல்லவகையிலேயே அமைந்துள்ளது. காலமும் இடமும் சேர்ந்து உருவாகியுள்ள இவ்வுலகை ஒருமிக்கச் சேர்த்து உருட்டத் தேவையில்லை. அதிகப் பழக்கத்தில் இன்பமில்லை. சில விஷயங்களிடம் நெருங்கிப் பழகவும் சிலவற்றிலிருந்து விலகி இருக்கவும் வேண்டும். ஆசிரியரிடம் பணிவாய் விலகி உட்காருவோம்; ஆனால் தாயிடமோ மடியில் போய் அமர்வோம். எந்த மூர்த்தியிடம் எப்படி நடந்துகொள்ள வேண்டுமோ அப்படியே நடந்துகொள்ள வேண்டும். புஷ்பத்தைக் கையில் எடுத்துக்கொண்டு, தீயைக் கண்டால் தள்ளி நிற்கவேண்டும். நட்சத்திரங்கள் தொலைவிலேயே அழகாய்க் காண்கின்றன. இதே நிலைமைதான் சிருஷ்டியின் விஷயத்திலும். மிகத் தொலைவிலுள்ள அந்த சிருஷ்டியை அண்மையில் கொண்டுவருவதனால் அதிக இன்பம் ஏற்படும் என்பதல்ல. எது எது எங்கெங்கே இருக்கிறதோ அது அதை அங்கங்கே விடுவதில்தான் இன்பம் இருக்கிறது. தொலைவிலிருக்கையில் அழகாய் இருக்கும் ஒன்றைப் பக்கத்தில் கொண்டுவருவதால் இன்பமே விளையுமென்று சொல்வதற்கில்லை. அதை அங்கேயே தொலைவில் வைத்தே அதன் இன்பத்தை நுகரவேண்டும். முரட்டுத்தனமாக அதிக நெருக்கமும் பழக்கமும் செய்துகொள்வதில் சாரமில்லை.

சாரமென்னவென்றால், காலங்கள் மூன்றும் நம் எதிரில் நின்றுகொண் டில்லாதிருப்பது நல்லதே. முக்காலங்களையும் உணர்வதனால் இன்பமோ நன்மையோதான் ஏற்படுமென்று சொல்லுவதற்கில்லை. அர்ஜுனன் அன்பின் வயப்பட்டுப் பிடிவாதம் பிடித்தான், வேண்டிக் கொண்டான். ஆகையால் பகவான் அதை ஏற்றுக் கொண்டார். அவர் அவனுக்கு தன் பேருருவை, விராட் ரூபத்தைக் காட்டினார். ஆனால் எனக்கோ பகவானுடைய சிற்றுருவே போதுமானது. இந்தச் சிறிய உருவம் பரம் பொருளின் ஒரு துணுக்கல்ல. துணுக்காகவே இருந்த

போதிலும் அந்த எல்லையற்ற விசால மூர்த்தியின் ஒரு காலோ, காலின் ஒரு விரலோ நான் காணக் கிடைத்தாலும் "என் பாக்கியமே பாக்கியம்!" என்றே நான் சொல்லிக் கொள்வேன். அனுபவத்திலிருந்து எனக்கு இந்த அறிவு ஏற்பட்டிருக்கிறது. ஜம்னுலால்ஜி வர்தாவில் லக்ஷ்மீ நாராயணர் கோயிலை ஹரிஜனங்களுக்குத் திறந்து விட்ட பொழுது நான் சுவாமி தரிசனத்திற்குப் போயிருந்தேன். பதினைந்து, இருபது நிமிஷம் அந்த ரூபத்தைப் பார்த்துக் கொண்டே இருந்தேன்; சமாதி நிலையிலிருப்பது போன்று இருந்துவிட்டேன். பகவானுடைய அந்த முகத்தையும் அந்த மார்பையும் கைகால்களையும் பார்த்துக்கொண்டே பாதங்களுக்கு வரவும் பாதங்களிலேயே என் பார்வை இலயித்துவிட்டது. 'உன் சரண சேவையின் இனிமையே இனிமை!' என்ற பாவனை நிலைத்துவிட்டது. ஒரு சிறிய விம்பத்தில் அந்தப் பெரிய பிரபு அடங்கமாட்டாரென்றால் அந்த மகாபுருஷனுடைய சரணங்கள் தென்படுவதே போதுமானது. அர்ஜுனன் ஆண்டவனிடம் வேண்டிக் கொண்டான். அவனுக்கிருந்த உரிமை பெரிது. அவனுக்கு எவ்வளவு நெருங்கிய நட்பு, எவ்வளவு அன்பு, எவ்வளவு நேசம் இருந்தது! எனக்குத் தகுதி ஏது? எனக்குப் பாதங்கள் கிடைத்தாலே போதும். எனக்குள்ள உரிமை இவ்வளவே.

## (58) 'ஸர்வார்த்த ஸாரம்'

அந்த ஆண்டவனுடைய தெய்வீக ரூபம் பற்றிய வர்ணனையில் அறிவைச் செலுத்த எனக்கு விருப்பமில்லை; அதில் அறிவைச் செலுத்துவதே பாவமாகும். அந்த விச்வரூப வர்ணனை அடங்கிய அந்தப் புனிதமான சுலோகங்களைப் படித்துப்படித்து நாம் புனிதமாவோம். புத்தியைச்செலுத்தி ஆண்டவனுடைய அந்த உருவைத் துண்டாடுவது எனக்குப் பிடிக்கவில்லை; அது அகோர உபாசனை ஆய்விடும். அகோர மார்க்கத்தைச் சேர்ந்த வர்கள் மயானத்திற்குப் போய்ப் பிணத்தைக் கிழித்து தந்திர வழிபாடு செய்கிறார்கள். நம் அறிவைச் செலுத்து வதும் அவ்வாறேயாகும். ஆண்டவனுடைய அந்த தெய் வீக ரூபம்—

"विश्वतश्चक्षुरुत विश्वतोमुखो
विश्वतो बाहुरुत विश्वतस्यात् ।"

(விச்வதச்சக்ஷுருத விச்வதோ முகோ
விச்வதோ பாஹுருத விச்வ தஸ்யாத் ।)

என்று விசாலமானதும் இறுதியற்றதுமாகும். அதை வர்ணிக்கும் சுலோகங்களை ஓதி நம் மனதின் பாவத்தைக் கழுவிப் புனிதமாக்கிக் கொள்வோம்.

ஆண்டவனுடைய இந்த வர்ணனை முழுவதிலும் ஒரே ஒரு இடத்தில்தான் அறிவு சிந்திக்கத் தொடங்குகிறது. ஆண்டவன் அர்ஜுனனிடம், "அர்ஜுனா, இவர்களெல்லாம் இறப்பவர்களே. நீ ஒரு நிமித்தமாய், வெறுங் காரணமாய் இரு. எல்லாவற்றையும் செய்பவன் பொறுப்பேற்பவன் நானிருக்கிறேன்" என்கிறார். இதே குரல் மனதில் ஒலித்துக்கொண்டே யிருக்கிறது. நாம் ஆண்டவன் கையில் ஒரு கருவியாய்விடவேண்டும் என்ற எண்ணம் மனதில் எழும்போது அறிவு சிந்திக்கத் தொடங்குகிறது. ஆண்டவன் கைக் கருவியாவதெப்படி? அவன் கையில் குழலாகலாமா? அவன் என்னைத் தன் உதட்டில் வைத்துக்கொண்டு என் மூலமாய் இனிய ஸ்வரத்தை எழுப்பினால், என்னை ஊதினால் எப்படி இருக்கும்? குழலாவதென்றால் உள்ளே எதுவுமில்லாமல் காலியாவது என்பதாகும். ஆனால் என்னுள்ளே தான் விகாரங்களும் வாசனைகளும் திணித்து நிரப்பப்பட்டிருக்கின்றனவே! இந்நிலையில் இனிய துவனி எப்படிக் கிளம்பும்? என் துவனியே அடைப்பட்டுப் போயிருக்கிறதே! நான் கனப் பொருளல்லவா? என்னுள் அகங்காரம் பொதிந்திருக்கிறதே! நான் அகங்கார மற்றவனாகவேண்டும். நான் பூரணமாய் முக்தனாய் காலியாகும்பொழுது தான் ஆண்டவன் என்னை ஊதுவான். ஆனால் ஆண்டவனுடைய வாய்க் குழலாவதென்பது மிகவும் துணிவான காரியம். அவன் கால் செருப்பாக விரும்புவதும் சுலபமல்ல. ஆண்டவன் கால்களுக்கு நோவு சிறிதும் உண்டாகாத வகையில் செருப்பு மிருதுவாயிருக்கவேண்டும். நான் ஆண்டவனுடைய பாதங்களுக்கும், முட்கள் - கற்களுக்கும் இடையில் அமைந்துவிட வேண்டும். நான்என்னைப் பதப்படுத்திக் கொள்ள வேண்டும். என் தோலைக் கழற்றி அதைப்

பதமாக்கிக்கொண்டே, மிருதுவாக்கிக்கொண்டே யிருக்க வேண்டும். ஆகையால் ஆண்டவனுடைய பாதுகை யாவதும் சுலபமல்ல. ஆண்டவனுடைய கையிலிருந்து இயங்கும் கருவியாகவேண்டுமென்ருல் நான் பத்துச் சேர் எடையுள்ள இரும்புத் துண்டாய் இருக்கக்கூடாது. தவமென்ற சாணையில் ஏற்றி என்னைக் கூரிய முனை யுள்ளவனாய்ச் செய்துகொள்ளவேண்டும். ஆண்டவன் கையில் என் வாழ்க்கை என்ற வாள் பள பளத்துக்கொண் டிருக்கவேண்டும். இந்த துவனி என் அறிவில் எழத் தொடங்குகிறது. ஆண்டவன் கையில் ஒரு கருவியாக வேண்டும் என்ற இதே எண்ணத்தில் நான் ஆழ்ந்து போகிறேன். இது ஈடேறுவதற்குரிய விதியை ஆண்டவன் கடைசி சுலோகத்தில் கூறியிருக்கிருர். ஸ்ரீ சங்கராசாரியார் தம் பாஷ்யத்தில் இந்த சுலோகத்தை ‘सर्वार्थसारम्’ (ஸர்வார்த்த ஸாரம்) கீதை அனைத்தின் சாரமென்று சொல்லி யிருக்கிருர்—

“मत्कर्मकृन्मत्परमो मद्भक्तः संगवर्जितः ।
निर्वैरः सर्वभूतेषु यः स मामेति पाण्डव ॥”

(மத்கர்மக்ருத் மத்பரமோ மத்பக்த: ஸங்கவர்ஜித: |
நிர்வைர: ஸர்வபூதேஷு-ய: ஸ மாமேதி பாண்டவ ||)

“என் பக்தனாய் என்னையே வழிபட்டு எனக்காகவே கர்மம் புரிந்து பற்றற்றவனாய் விரோதம் அற்றவனாய் உள்ளவன் என்னை அடைகிருன்.”

எவனுக்கு உலகில் எவரிடமும் விரோதமில்லையோ எவன் நடுவு நிலைமையில் நிற்பவனாய் பற்றற்றுப் பணி புரிகிருனோ, எவன்தான் செய்வதனைத்தையும் எனக்கு அர்ப்பணம் செய்துவிடுகிருனோ, என் பக்தியில் மூழ்கியிருக் கிருனோ, சகிப்புணர்ச்சியும் ஆசையின்மையும் வைராக் கியமும் அன்பும் உள்ளவனாய் பக்தனாயிருக்கிருனோ அவன் ஆண்டவனுடைய கையில் ஆயுதமாய் அமைகிருன், என்பதே இந்த சாரமாகும்.

ஞாயிறு, 1–5–’32.

## பன்னிரண்டாம் அத்தியாயம்

# ஸகுண–நிர்குண பக்தி

*

### (59) ஏகாக்ரதையிலிருந்து ஸமக்ரதை வரை

கங்கை ஓடும் எல்லா இடங்களுமே பொதுவாய் புனிதமானவைதாம் : ஆனால் அரித்துவாரம், காசி, பிரயாகை முதலிய இடங்கள் அதிகப் புனிதமானவை. அவை உலகம் முழுவதையுமே பரிசுத்தமாக்கி விட்டன. பகவத் கீதையின் தன்மையும் இதுவே. பகவத்கீதை ஆரம்பம் முதல் முடிவு வரை முழுமையுமே புனிதமானது. ஆனால் இடையிலுள்ள சில அத்தியாயங்கள் புண்ணியத் தலங்களாய் விட்டன. இன்று நாம் பேசவேண்டிய அத்தியாயம் மிகவும் புனிதமான புண்ணிய க்ஷேத்திரமாய்விட்டது. பகவானே இதை 'அமுத தாரை' என்று அழைக்கிறார்—"ये तु धर्म्यामृतमिदं यथोक्तं पर्युपासते।" (யேது தர்ம்யாம்ருதமிதம் யதோக்தம் பர்யுபாஸதே) இது இருபது சுலோகங்கள் கொண்ட சிறிய அத்தியாயம்; ஆனால் அமுத ஒழுக்காய் அமைந்தது. இது அமுதத்தைப்போல் இனியது, புத்துயிர் அளிப்பது. இந்த அத்தியாயத்தில் பகவானே திருவாய் மலர்ந்து பக்திரஸ தத்துவ மகிமையைப் பாடியருளியிருக்கிறார்.

பார்க்கப்போனால் உண்மையில் ஆறும் அத்தியாயத்திலிருந்தே பக்தி தத்துவம் ஆரம்பமாய்விட்டது. ஐந்தாம் அத்தியாயத்தின் இறுதியோடு வாழ்க்கை சாஸ்திரத்தின் விளக்கம் முடிவுற்றது. சுதர்மம் இயற்றல் என்ற கர்மமும் அதற்குப் பக்கபலமான மனோசாதனையாய் அமையும் விகர்மமும் இவ்விரு சாதனைகளினால் பூர்த்தியான கர்மங்களைப் பொசுக்கிவிடக்கூடிய இறுதியான அகர்மத்தின் ஆதார பீடமும் என்ற இவ்வளவு விஷயங்களும் முதல் ஐந்து அத்தியாயங்களில் விவரிக்கப்பட்டன. இத்துடன் வாழ்க்கை சாஸ்திரம் பூர்த்தியாய் விட்டது. பிறகு ஆறும் அத்தியாயத்திலிருந்து பதினோராம் அத்தியாயத்தின் இறுதி வரை ஒரு வகையில் பக்தி தத்துவமே ஆராயப்பட்டது. ஏகாக்ரதையிலிருந்து ஆரம்பமாயிற்று; ஆறும் அத்தியாயத்தில் சித்தத்தை ஏகாக்ரப் படுத்துவதெப்படி, அதற்

குதவும் சாதனங்கள் எவை, அதன் அவசியம் என்ன என்பவை கூறப்பட்டன. பதினோராம் அத்தியாயத்தில் ஸமக்ரதை அல்லது தொகுப்பு கூறப்பட்டிருக்கிறது. இப்பொழுது ஏகாக்ரதையில் தொடங்கி ஸமக்ரதை வரையிலுள்ள நெடிய பாதையை நாம் எப்படிக் கடந்தோம் என்பதைப் பார்க்கவேண்டும்.

சித்தத்தின் ஏகாக்ரதையில் ஆரம்பம் செய்யப்பட்டது. ஏகாக்ரதை கைகூடியதும் மனிதன் எந்த விஷயத்தைக் குறித்தும் சிந்திக்கலாம். எனக்குப் பிரியமான விஷயத்தை எடுத்துக்கொள்ளுவதென்றால், கணிதப் பயிற்சியில் சித்தத்தின் ஏகாக்ரதையைப் பயன்படுத்தலாம். அதனால் நிச்சயமாய் பயன் ஏற்படும். ஆனால் சித்தத்தின் ஏகாக்ரதையினால் எய்தக்கூடிய தலைசிறந்த இலட்சியமல்ல இது. கணிதப் பயிற்சியைக்கொண்டு ஏகாக்ரதையின் முழுப் பரீக்ஷை ஆய்விடாது. கணிதம் அல்லது இதே மாதிரியான அறிவு பற்றிய விஷயத்தில் சித்தத்தின் ஏகாக்ரதையினால் வெற்றி ஏற்படுமாயினும் இது உண்மையான பரீக்ஷையல்ல. ஆகையினால் ஏழாம் அத்தியாயத்தில் நமது நோக்கு பகவானுடைய பாதங்களைக் குறித்திருக்க வேண்டுமென்று சொல்லியிருக்கிறது. எட்டாம் அத்தியாயத்தில் பகவானுடைய பாதங்களில் நாம் இடையறாது ஏகாக்ரதை கொண்டிருக்கவேண்டும்—நம் வாக்கும், காதுகளும், கண்களும் அதிலேயே இலயித்திருக்கும் பொருட்டு ஆயுள் முழுமையும் முயன்று வரவேண்டுமென்று சொல்லப்பட்டது. நம் பொறிகள் அனைத்திற்கும் இத்தகைய பயிற்சி ஏற்பட்டுவிடவேண்டும். "எல்லாப்பொறிகளுக்கும் இதிலேயே பழக்கமும் வேறு எதுவும் தெரியாமலும்" இருக்கக்கூடிய ஒரு நிலை ஏற்பட்டுவிடவேண்டும். எல்லாப் பொறிகளுக்கும் தெய்வப்பித்தம் தலைக்கேறிவிடவேண்டும். நம் அருகில் ஒருவர் ஒப்பாரி வைத்துக்கொண்டோ ஸ்தோத்திரம் பாடிக்கொண்டோ இருந்தாலும், நம்மை விஷயவாசனைகளில் சிக்கவைக்க முயன்றாலும், வைராக்கிய சீலர்களான பெரியோரின் பழக்கம் ஏற்பட்டாலும் பகலோ இரவோ எதுவானாலும் சரி இறக்கும் தருவாயில் ஆண்டவன் நம் சித்தத்தின் எதிரில் வந்து நிற்கும்படியான பயிற்சியை ஆயுள் முழுமையும் எல்லாப் பொறிகளையும் கொண்டு செய்வதென்ற இந்த 'ஸாதத்யம்' அல்லது உடனிருக்கைப் பயிற்சி பற்றி எட்டாம் அத்தியாயத்தில் கூறப்

பட்டிருக்கிறது. ஆறும் அத்தியாயத்தில் ஏகாக்ரதையும் ஏழில் ஆண்டவனை நோக்கியுள்ள ஏகாக்ரதை அல்லது பிரபத்தியும் எட்டில் ஸாதத்யம் அல்லது உடனிருக்கையும், ஒன்பதில் சமர்ப்பணம் செய்தலும் காட்டியிருக்கிறது. பத்தில் எதன் பின் எது என்ற முறை வகுத்துச் சொல்லப் பட்டிருக்கிறது; ஒவ்வொரு அடியாக வைத்து முன் சென்று ஆண்டவன் உருவை எவ்வாறு உள்ளத்தில் ஏற்றுக்கொள்வது, எறும்பு முதல் பிரம்மதேவன் ஈருக எங்கும் பரவியுள்ள பரம்பொருளை மெல்ல மெல்ல எவ்வாறு தனதாக்கிக் கொள்வது என்பது கூறப்பட்டிருக்கிறது. பதி ஞென்றும் அத்தியாயத்தில் ஸமக்ரதை அல்லது தொகுப்பு முறை சொல்லப்பட்டது. விச்வரூப தரிசனத்தையே நான் ஸமக்ரதா யோகம் அல்லது 'தொகுப்பு யோகம்' என்று சொல்லுகிறேன். விச்வரூப தரிசன மென்றல் ஒரு சாதாரண மண் திவிலையிலும் அகில சிருஷ்டியும் அடங்கி யிருக்கிறது என்பதை உணர்வதென்பதே. இதுவே விராட் தரிசனம் அல்லது பெரு நோக்கு என்பதும். ஆறும் அத்தியாயத்திலிருந்து பதிஞென்றுவது வரை பக்தி ரஸம் இவ்வாறு வெவ்வேறு வகையில் வடிகட்டியெடுக்கப் பட்டிருக்கிறது.

## (60) ஸகுண உபாசகனும் நிர்குண உபாசகனும்—தாயின் இரு பிள்ளைகள்

இப்பொழுது பன்னிரண்டாம் அத்தியாயத்தில் பக்தி தத்துவத்தைப் பூர்த்தி செய்ய வேண்டும். அர்ஜுனன் பூர்த்தி செய்வது பற்றிக் கேட்டான். ஐந்தாம் அத்தியாயத்தில் வாழ்க்கையைப் பற்றிய சாஸ்திரங்கள் அனைத்தின் ஆராய்ச்சி முடிவுற்ற சமயத்தில் கேட்டது போன்றே அர்ஜுனன் இங்கும் கேட்டிருக்கிறன். அர்ஜுனன், "பகவானே, சிலர் ஸகுணத்தை வழிபட வேறு சிலர் நிர்குணத்தை உபாசிக்கிறர்களே; இவை இரண்டில் உங்களுக்குப் பிரியமானதெது?" என்று கேட்கிறன்.

பகவான் இதற்கு என்ன பதில் அளிப்பார்? ஒரு தாய்க்கு இரண்டு குழந்தைகள் இருக்கையில் அவர்களைப் பற்றி அவளைக் கேட்பது போன்றே இருக்கிறது இது. இரு

வரில் ஒருவன் சிறியவன். தாயினிடம் அவனுக்கு மிகுந்த நேசம். தாயைக் கண்டதும் அவனுக்கு மகிழ்ச்சி பொங்கு கிறது. தாய் சிறிது பிரிந்தாலும் அழத் தொடங்கிவிடுகிறான். அவனால் தாயை விட்டுத் தனித்திருக்கவே முடிவதில்லை. அவளை அவனால் விடவே முடியாது ; அவளுடைய பிரிவை அவனால் பொறுக்கவே முடியாதிருக்கிறது. தாய் இல்லை யென்றால் அவனுக்கு உலகமே சூனியமாய்த் தோன்று கிறது. இப்படியிருக்கிறான் அந்தச் சிறிய குழந்தை. இன் னொருவன் பெரிய பிள்ளை. அவனும் அதே வகையில் தாயின் அன்பில் மூழ்கித்தான் இருக்கிறான். ஆனால் அவன் விஷயம் தெரிந்தவனாய் விட்டான். அவனால் தாயை விட்டுப் பிரிந்திருக்க முடியும். ஐந்தாறு மாதம் தாயைக் காணமலே இருக்க நேர்ந்தாலும் அவனால் இருக்க முடியும். அவன் தாய்க்குப் பணிவிடை செய்கிறான். எல்லாப் பொறுப்பையும் தானே ஏற்று வேலை செய்கிறான். வேலைகளில் முனைந்திருப்பதால், தாயின் பிரிவை அவனால் பொறுக்க முடிகிறது. மக்களிடையே அவனுக்கு மதிப் பிருக்கிறது. நாற்புறமும் அவனுடைய புகழைக் கேட்டுத் தாய் மிக்க இன்புறுகிறாள். இப்படியிருக்கிறான் இந்தப் பிள்ளை. இத்தகைய இரு பிள்ளைகளையும் பற்றி தாயினிடம், " ஏ தாயே ! இந்த இரு பிள்ளைகளில் ஒருவன் மட்டும் உமக்குக் கொடுக்கப்படுவான். உமக்கு யார் வேண்டும் ?" என்று கேட்கப்படுமானால் அவள் என்ன பதில் சொல்லு வாள் ? அவள் எந்தப் பிள்ளை வேண்டுமென்று சொல்லு வாள் ? அவள் இரு பிள்ளைகளையும் தராசிலிட்டு நிறுத்துப் பார்ப்பாளா ? தாயின் மனதின் அமைப்பைக் கவனித்துப் பாருங்கள். அவளுடைய இயற்கையான பதில் எதுவா யிருக்கும் ? அவள் வேறு வழியில்லையே என்று, " பிரியத் தான் வேண்டுமென்றால் பெரியவனை அழைத்துக் கொண்டு போங்கள். அவன் பிரிவை நான் சமாளித்துக் கொள் வேன் " என்று பதில் சொல்லுவாள். சிறிய பிள்ளையை அவள் தன் மார்போடு அணைத்துக் கொண்டு தன்னிட மிருந்து பிரிய விடமாட்டாள். சிறிய பிள்ளையின் அதிகக் கவர்ச்சியைக் கண்டு அவள் ஒருக்கால் " பெரியவன் போனால் பாதகமில்லை " என்பது போன்ற பதிலொன்றைச் சொல்லலாம். ஆனால் ' அவளுக்கு அதிகப் பிரியம் யாரிடத் தில் ?' என்ற கேள்விக்கு இது பதிலென்று சொல்லுவதற் கில்லை. ஏதோ பதில் சொல்லியாக வேண்டுமே என்பதனால்

அவள் வாயிலிருந்து சில வார்த்தைகள் வெளி வந்தன. ஆனால் அந்த வார்த்தைகளைத் தோண்டித் துராவி அவற்றின் பொருளைக்காண முயலுதல் சரியாகாது.

இந்தக் கேள்விக்கு பதில் சொல்ல வேண்டி வந்த போது அந்தத் தாய்க்கு எத்தகைய சங்கடம் ஏற்பட்டதோ அதே நிலை பகவானுடைய மனதிற்கும் ஏற்பட்டு விட்டது. அர்ஜுனன், "பகவானே, இரண்டு வகை பக்தர்கள் உங்களுக்கு இருக்கிறார்கள். ஒருவர் உங்களிடம் மிக்க அன்பு கொண்டு எப்பொழுதும் உங்கள் நினைவாகவே இருக்கிறார். அவர் கண்கள் உங்கள் தரிசன ஆவல் கொண்டும் அவர் காதுகள் உங்களுடைய ஸ்தோத்திரப் பாடல்களைக் கேட்க ஆவலுள்ளவையாயும், அவருடைய கைகால்கள் உங்களுக்குப் பணிவிடை புரிய ஆவலுடனும் இருக்கின்றன. மற்றவரோ தம் தேவைக்குப் பிறரை எதிர்பாராது தம் பொறிகளை அடக்கி வைத்துக் கொண்டு எல்லா உயிர்களுக்கும் நன்மை செய்வதிலேயே ஆழ்ந்தவராய் அல்லும் பகலும் பயனைக் கருதாது சமூகத்திற்குப் பணி புரிவதிலேயே ஈடுபட்டிருப்பதால் உங்கள் நினைவே இல்லாதவர் போல் இருந்து வருகிறார். இவர் உங்களுடைய இரண்டாவது, அத்வைத தத்துவத்தில் மூழ்கிய பக்தர். இவ்விருவரில் உங்களுக்குப் பிரியமாவர் யாரென்று சொல்லுங்கள்" என்று அர்ஜுனன் பகவானிடம் கேட்கிறான். அந்தத் தாய் எந்த பதிலை அளித்தாளோ அதே பதிலைச் சிறிதும் மாறுபாடின்றி பகவான், "அந்த ஸகுண பக்தன் எனக்குப் பிரியமானவன். அந்த மற்ற அத்வைத பக்தனும் எனக்கு வேண்டியவனே" என்கிறார். இவ்வாறு பகவான் சங்கடத்தில் சிக்கியவராய் ஏதாவது சொல்லியாக வேண்டுமே என்று பதில் சொல்லி விட்டார்.

மேலும், விஷயமும் உண்மையில் இப்படித்தானிருக்கிறது. இரு பக்தர்களும் முற்றிலும் ஒரே வகையினரே. இருவரின் தகுதிகளும் ஒரே தன்மையனவே. அவைகளை ஒப்பு நோக்குதல் வரம்பை மீறும் செயலாகும். ஐந்தாம் அத்தியாயத்தில் கர்மத்தைப் பற்றி அர்ஜுனன் எந்தக் கேள்வி கேட்டானோ அதே வகையில் இங்கு பக்தியைப் பற்றிக் கேட்டிருக்கிறான். ஐந்தாம் அத்தியாயத்தில்: கர்மம், விகர்மம் ஆகியவற்றின் உதவியினால் மனிதன் அகர்ம நிலையை எய்துகிறான்; அந்த அகர்மநிலை இரண்டு

வகையில் வெளியாகிறது; ஒருவனே அல்லும் பகலும் அனவரதமும் கர்மம் செய்து கொண்டிருந்தும் சிறிதும் கர்மம் செய்யாதிருக்க, மற்றவனே இருபத்து நான்கு மணி நேரத்தில் ஒரு காரியமும் செய்யாது உலகத்தையே தலை கீழாய் மாற்றி விடுகிறன். இந்த இரண்டு விதங்களில் அகர்மநிலை வெளியாகிறது. இவைகளை எப்படி ஒப்பிடுவது? ஏதேனும் ஒரு வட்டத்தின் ஒரு அம்சத்தைப் பிரிதொரு வட்டத்தின் அம்சத்துடன் ஒப்பிடுங்கள்; ஒரே வட்டதின் இரு அம்சங்களை எப்படி ஒப்பிடுவது? இரு அம்சங்களும் ஒரே அளவுள்ளவையாய், ஒரே தன்மையாய், ஒரே உருவாய் இருக்குமானல்? அகர்மத்தின் ஆதாரத்தை விளக்கும் பொழுது பகவான் ஒன்றை சந்நியாசம் என்றும் மற்றதை யோகமென்றும் சொல்லியிருக்கிறர். பெயர் வெவ்வேருயிருந்த போதிலும் பொருள் ஒன்றே. சந்நியாசம், யோகம் ஆகிய இரண்டையும் இறுதியில் சுளுவாய்ப் புரியும்படி விளக்கியிருக்கிறர். ஸகுணம், நிர்குணம் பற்றிய கேள்வியும் இத்தகையதே. ஸகுண பக்தன் புலன்களின் மூலமாய் ஆண்டவனுக்கு சேவை செய்கிறன். நிர்குண பக்தனை மற்றவனே மனதினல் உலக நன்மைக்கானவற்றைச் சிந்திக்கிறன். முதலவன் வெளி சேவையில் ஆழ்ந்திருப்பதாய்க் காணப்படுகிறன்; ஆனல் உள்ளிலோ அவன் இடையருது சிந்தித்த வண்ணம் இருக்கிறன். மற்றவனே பிறர் பார்க்கும்படி நேரிடையான சேவை எதுவும் செய்யக் காணேம்; ஆனல் உள்ளே அவனுடைய மாபெரும் சேவை நடந்து கொண்டேயிருக்கிறது. இத்தகைய இவ்விரு பக்தர்களில் சிறந்தவன் எவன்? அல்லும் பகலும் கர்மம் செய்துகொண்டே சிறிதும் கர்மம் செய்யாதிருப்பவன் ஸகுண பக்தன். நிர்குண உபாசகனே உள்ளுக்குள் எல்லோருடைய நன்மையையும் கோரினவனுய் எல்லோரையும் பற்றிச் சிந்தித்தவண்ணமிருக்கிறன். வெளிப் பார்வைக்கு வெவ்வேருய்த் தோன்றிய போதிலும் உள்ளே இவ்விரு பக்தர்களும் ஒரே தன்மையரே. இருவரும் ஒரே வகையினர்; இருவரும் பகவானுக்கு நேசமானவர். ஆனல் இவைகளுள் ஸகுணபக்தி அதிகச் சுளுவானது. இவ்வாறு ஐந்தாம் அத்தியாயத்தில் அளித்த பதிலையே பகவான் இங்கும் அளித்திருக்கிறர்.

## (61) ஸகுணம் சுலபமானது, ஆபத்தில்லாதது

ஸகுண பக்தியோகத்தில் பொறிகளினால் நேராகவே காரியங்களைச் செய்யலாம். பொறிகள் சாதனமாகவோ தடையாகவோ அல்லது இரண்டு வகையிலுமோ உதவு கின்றன. பார்ப்பவருடைய நோக்கத்தை அனுசரித்து அவை காப்பவையாகவோ கெடுப்பவையாகவோ அமை கின்றன. ஒருவனுடைய தாய் சாகுந் தருவாயிலிருப்ப தாயும் அவன் அவளைப் பார்க்க விரும்புவதாயும் வைத்துக் கொள்ளுங்கள். பதினைந்து மைல் தொலை போயாக வேண்டும். அந்த வழியே மோட்டார் போகாது; மேடுபள்ளமான ஒற்றையடிப் பாதை. இச் சமயத்தில் அந்தப் பாதையினால் உதவியா, தடையா? "இந்த மோச மான நடை பாதை குறுக்கிடா விட்டால் நான் எப்பொழு தோ தாயைப் போய்ப் பார்த்திருப்பேனே!" என்று அவன் சொல்லுவான். இந்த ஆளுக்கு அந்தப் பாதை விரோத மானதே. அவன் எப்படியோ வழியைக் கடந்து போய்ச் சேருகிறான். போகும் பொழுது பாதையைத் திட்டிக் கொண்டே போகிறான். ஆனால் தாயைப் பார்ப்பதற்காக அவன் எந்த நிலையிலும் அவசர அவசரமாய் அடி வைத்துப் போக வேண்டியவனே. பாதையைத் தன் விரோதி என்று கொண்டு வழியிலேயே உட்கார்ந்து விடுவானானால் விரோதியைப் போல் தோன்றும் அந்தப் பாதைக்கு வெற்றி ஏற்பட்டு விடுகிறது. ஓட்டமாய் ஓடுவதன் மூலமாய் அவன் அந்த விரோதி மீது வெற்றி காணமுடியும். இன் னொரு பேர்வழி, "இந்தக் கொடிய வனாந்தரத்தில் இந்தப் பாதையாவது இருப்பது விசேஷந்தான். எப்படியோ தாயிடம் போய் விடலாம் அல்லவா? இதுவும் இல்லா திருக்குமானால் இந்தக் காடு, மலைகளை நான் எப்படிக் கடக்க முடியும்?" என்கிறான். இவ்வாறு சொல்லி விட்டு அவன் அந்த நடைபாதையையே தனக்கு உதவும் கருவியாய்க் கொண்டு விசையாய் நடந்து போகிறான். பாதையி னிடத்து அவன் மனதில் நேசப்பாங்கே இருக்கிறது. அவன் அதைத் தன் நண்பனென்றே மதிக்கிறான். நீங்கள் அந்தப் பாதையை நண்பனாய்க் கொண்டாலும் சரி, விரோதியாய்க் கருதினாலும் சரி, தடையாய்க் கொண்டாலும் சரி, சாதகம் செய்வதாய்க் கருதினாலும் சரி, நீங்கள் வேகமாய் நடந்து போய்த்தான் ஆக வேண்டும். ஒவ்வொரு

வருடைய மனப் போக்கு அல்லது நோக்கத்தை அனுசரித்து போக வேண்டிய வழி தடையாகவோ உதவியாகவோ அமையும். இதே விஷயம் பொறிகளுக்கும் பொருந்தும். அவை தடையாகவோ சாதகமாகவோ அமைவது உங்க ளுடைய நோக்கத்தைப் பொருத்திருக்கிறது.

ஸகுண உபாசகருக்குப் பொறிகள் ஒரு கருவியே. பரம்பொருளுக்கு அணிவிக்கவேண்டிய புஷ்பங்களைப் போல் அவருக்குப் பொறிகள் இருக்கின்றன. கண்களி னால் கடவுள் ரூபத்தை தரிசிக்கிறார்; காதுகளால் அவர் கதையைக் கேட்கிறார்; வாயினால் அவரது நாமத்தை ஜபிக்கிறார்; கால்களினால் க்ஷேத்திராடனமும், கைகளினால் பாத சேவையும் செய்கிறார். இவ்வாறு எல்லாப் பொறிகளை யும் அவர் ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்துவிடுகிறார்; பொறிகள் இன்ப நுகர்ச்சிக்கு உதவுவதே இல்லை. புஷ் பங்கள் பகவானுக்கு அணிவிக்கவே இருக்கின்றன; தம் கழுத்தில் அணிந்துகொள்வதற்காக இல்லை. இவ்வாறே ஆண்டவன் பணியில் பொறிகளை யெல்லாம் பயன்படுத்த வேண்டும். ஸகுண உபாசகருடைய நோக்கு இது. ஆனால் நிர்குண உபாசகருக்கோ பொறிகள் தடை யாய்த் தோன்றுகின்றன. அவர் அவைகளை அடக்கி வைக்கிறார்; அறையிலிட்டுப் பூட்டி வைக்கிறார். அவை களின் உணவை மறுத்து அவைகளுக்குக் காவல் வேறு போட்டுவிடுகிறார். ஆனால் ஸகுண உபாசகருக்கோ இவற் றிலெதுவும் செய்ய வேண்டிவருவதில்லை. அவர் எல்லாப் பொறிகளையும் ஹரி சரணங்களில் அர்ப்பணம் செய்து விடுகிறார். இவ்விரு முறைகளும் பொறிகளை அடக்கவே பொறிகளைக் கட்டுக்குட்படுத்தவே ஏற்பட்டவை. நீங்கள் எம்முறையை அனுசரித்த போதிலும் பொறிகளைத் தம் வசத்தில் அடக்கி வைத்துக்கொள்ளுங்கள். இரண்டின் நோக்கமும் அவைகளை விஷயங்களில் கிடந்து உழலாது பார்த்துக் கொள்ளுதல் என்ற ஒன்றே. ஒரு முறை சுலு வாயிருக்க, மற்றது சிரமமானது.

நிர்குண உபாசகன் எல்லா உயிர்களின் நன்மையை யும் கோருகிறவன். இது அப்படி சாதாரண விஷயமல்ல. 'எல்லோரையும் இன்புறச் செய்தல்' என்பது சொல்வ தற்கென்னவோ எளிதாயிருந்த போதிலும் செய்தல் மிகவும் சிரமம். எவனுக்கு அகில உலகின் நலத்திலேயே

கருத்திருக்கிறதோ அவன் அது ஒன்றைத் தவிர வேறு எதையும் சிந்திக்க இயலாது. இதனாலேயே நிர்குண உபாசனை சிரமமென்று கூறப்பட்டிருக்கிறது. ஸகுண உபாசனையோ அவரவரின் சக்திக்கொத்தபடி பலவகைகளில் செய்யப்படலாம். நாம் பிறந்த சிறிய கிராமத்திற்குச் சேவை செய்வதோ, பெற்றோருக்குப் பணிபுரிவதோ ஸகுண பூஜை எனப்படும். இதில் கவனத்திலிருக்க வேண்டிய விஷயம், நாம் செய்யும் இந்தப் பூஜையினால் உலகத்திற்குத் தீங்கெதுவும் நேராமல் பார்த்துக் கொள்வதொன்றே. நீங்கள் செய்யும் சேவை எவ்வளவு சிறியதாயிருந்த போதிலும் அதனால் பிறருடைய நன்மைக்குக் குந்தகம் எதுவும் விளையாதிருக்குமானால் அது பக்தி என்றே கருதப்படும். இல்லையேல், அந்த சேவை ஆஸக்தி அல்லது சொந்த நலமாய் மாறிவிடும். நம் பெற்றோரையும் துன்பப்படும் பந்து–மித்திரர்களையும், சாது–மகாத்மாக்களையும் ஆண்டவனென்றே கொண்டு இவர்களுக்கு சேவை செய்ய வேண்டும். இவர்கள் ஒவ்வொருவரிடமும் ஆண்டவனே இருப்பதாய்க்கொண்டு திருப்திப்படு. இந்த ஸகுண சேவை சுலுவானது. ஆனால் நிர்குண சேவையோ மிகவும் கடினம். இரண்டின் பொருளும், சாரமும் பார்க்கப் போனால் ஒன்றே. எது சுலு, எது சிரமமானது என்று பார்க்கையில் ஸகுண முறை சுலபமாகிறது, அவ்வளவு தான்.

சுலுவானது என்பதைத் தவிர இன்னும் ஒரு விஷயமும் இருக்கிறது. நிர்குண உபாசனையில் பயமுண்டு. நிர்குணம் ஞானமயமானது. ஸகுணமோ அன்பு மயமானது, உணர்ச்சி மயமானது. ஸகுணத்தில் நைப்பு உண்டு; அதில் பக்தனுக்கு அதிக பந்தோபஸ்து உண்டு. நிர்குணத்திலோ சிறிது ஆபத்திருக்கிறது. ஒரு காலத்தில் நான் ஞானத்தையே அதிகமாய் நம்பியிருந்தேன். ஆனால் இப்பொழுது அனுபவத்திலிருந்து வெறும் ஞானம் மட்டும் இருந்தால் போதாது என்று உணர்ந்துவிட்டேன். ஞானத்தினால் மனதிலுள்ள ஸ்தூல அழுக்கு பொசுங்கிச் சாம்பலாய்விடுகிறது. ஆனால் சூக்ஷுமமான நுண்ணிய அழுக்கைப் போக்கும் சக்தி அதற்கில்லை. சுய தேவைப் பூர்த்தி, சிந்தனை, விவேகம், பயிற்சி, வைராக்கியம் ஆகிய இந்த எல்லாச் சாதனங்களையும் உபயோகியுங்கள். பிறகும் இவைகளின் மூலமாயும் மனதின் நுண்ணிய அழுக்கு

நீங்குவதில்லை. பக்தி என்ற நீருக்குத்தான் அந்த சக்தி யிருக்கிறது. இதை நீங்கள் வெளி உதவி என்று வேண்டுமானால் சொல்லிக் கொள்ளுங்கள். ஆனால் 'வெளி' என்பதற்கு தனக்குப் புறம்பானது என்று பொருள் கொள்ளாது பரவெளி அல்லது பரம்பொருள் என்று பொருள் கொண்டு அதை அண்டியிருத்தல் என்று கருதுங்கள். பரம்பொருளின் உதவியை நாடாதவரையில் சித்தத்தின் அழுக்கு நீங்குவதற்கில்லை.

இங்கே ஞானம் என்ற சொல்லுக்குக் குறுகிய பொருள் கொள்ளப்பட்டுவிட்டது என்று எவரேனும் சொல்லலாம். ஞானத்தினால் சித்தத்தின் அழுக்கு நீங்காதெனில் ஞானத்தின் மதிப்பு குறைந்து போய்விடுகிறதே என்ற ஆக்ஷேபணையை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனால் மண்ணாலான இந்த உடலில் இருந்துவரும் வரையில் சுத்த ஞானம் ஏற்படுவது சிரமம் என்றே நான் சொல்லுகிறேன். இந்த உடலிலிருந்து வருகையில் நமக்கு ஏற்படும் ஞானம், அது எவ்வளவுதான் சுத்தமாயிருந்தபோதிலும், குறைந்த மாற்றுள்ளதாகவே, கலப்படமாகவே தானிருக்கும். இந்த உடலில் உதயமாகும் ஞானத்தின் சக்தி ஒரு அளவுக்கு உட்பட்டதாய், வரம்புள் அடங்கியதாகவே இருக்கும். சுத்த ஞானம் தோன்றும்பொழுது அதனால் எல்லா அழுக்கும் பொசுக்கப்பட்டுவிடும் என்பதில் எனக்கு எள்ளளவும் சந்தேகமில்லை. சித்தத்தோடு சேர்த்து எல்லா மலங்களையும், அழுக்கையும் பொசுக்கும் சக்தி ஞானத்திற்குண்டு. ஆனால் இந்த விகாரம் மலிந்த உடலில் ஞானத்தின் சக்தி குறைந்து போவதால் அதன் மூலமாய் நுண்ணிய அழுக்கைப் போக்குவது முடியாது போகிறது. ஆகையால் பக்தியின் உதவியின்றி நுண்ணிய அழுக்குகளை அறவே அகற்ற முடியாது. இதனாலேயே பக்தியின் உதவி பெறும் பொழுது மனிதன் அதிகப் பாதுகாப்புள்ளவனாகிறான். இந்த 'அதிக' என்ற சொல் நானாகக் கூட்டிக் கொண்டது என்று கொள்ளுங்கள். ஸகுண பக்தி சுளுவானது. இதில் பரம்பொருளை நம்பியிருத்தல் என்பதிருக்க நிர்குணத்திலோ தன்னையே நம்புதல் இருக்கிறது. இதில் 'தன்னை' என்பதற்கும் பொருளென்ன? தன்னுள் உள்ள பரம்பொருளை நம்பியிருத்தல் என்பதே. அறிவின் உதவி ஒன்றை மட்டும் கொண்டு தூய்மைபெற்ற மனிதன் எவனும் கிடைக்க மாட்டான். தன்னையே நம்பியிருப்

பதனல், அதாவது உள்நோக்கோடமைந்த ஆன்ம ஞானத்திஞல் சுத்த ஞானம் ஏற்படும். அதாவது, நிர் குண பக்தியில் உள்ள தன்னேயே நம்பிய வாழ்க்கைக்கும் ஆன்மாவே அடிப்படையாகிறது.

## (62) நிர்குணமின்றி ஸகுணமும் குறைபாடுள்ளதே

ஸகுண உபாசனேயின் விஷயத்தில் நான் அது சுளு வானது, ஆபத்தில்லாதது என்று அதிலுள்ள சாதகாம் சங்கஃளக் கூறியது போல் நிர்குணத்தின் விஷயத் திலும் சொல்ல முடியும். நிர்குணத்தில் ஒரு வரம்புண்டு. உதாரணமாக, நாம் வெவ்வேறு வேலேகளுக்கு, சேவை களுக்கு ஸ்தாபனங்கள் அமைக்கிருேம். தோன்றும் ஸ்தா பனங்களெல்லாம் முதலில் தனி மனிதனுக்காகவே தோன்றுகின்றன. அந்த மனிதன் முக்கிய ஆதாரா மாயிருக்கிறன்; ஸ்தாபனம் மனிதனே அண்டியதாய் இருந்து வருகிறது. ஆனல் அது வளர வளர அதன் மனிதனே அண்டிய தன்மை போய் தத்துவப் பற் றுள்ளதாய் அது மாறிவிட வேண்டும். இத்தகைய தத் துவப் பற்று அதில் தோன்றவில்லே யெனின் அதற்கு ஊக்க மூட்டி வந்த மனிதன் தலே மறைந்த உடனே அந்த ஸ்தா பனத்தில் இருள் மண்டிப் போகும். நான் எனக்குப் பிரிய மான உதாரணத்தையே தருகிறேன். ராட்டையின் மாலேக் கயிறு அறுந்து போனவுடன் மேலே நூல் நூற்க முடியாமல் போவதோடல்லாமல் நூற்ற நூலேக் கண்டில் ஊற்றுவதும் கடினமாய்விடுகிறது. இந்த மனிதனுடைய பலம் போன தும் ஸ்தாபனத்தின் கதியும் இப்படியேதான் ஆய்விடு கிறது; அது அனதையாய் விடுகிறது. ஆனல் மனிதப் பற்றிலிருந்து தத்துவப் பற்று தோன்றிவிடும் பொழுது இவ்வாறு ஆவதில்லே. ஸகுணத்திற்கு நிர் குணத்தின் உதவி இருக்க வேண்டும். ஒரு சமயம் இல்லா விட்டால் ஒரு சமயம் தனி மனிதனிடமிருந்து—உருவி லிருந்து—வெளியேறிப் போகப் பயில வேண்டும். கங்கை இமாலயத்திலிருந்து, சங்கரருடைய ஜடா முடியிலிருந்து கிளம்பிற்று; ஆனல் அது அங்கேயே நின்றுவிடவில்லே. ஜடாமுடியிலிருந்து கிளம்பி இமாலயத்தின் குன்று-குகைகளிலும், மேடு பள்ளங்களிலும் ஓடிக் காடுகளேக்

கடந்து சம மைதானத்தில் கலகல துவனியோடு ஓடிவந்த பொழுதுதான் அது மக்களுக்குப் பயன்பட்டது. இவ்வாறு ஸ்தாபனம் தனி மனிதனுடைய ஆதாரம் போன பிறகும் தத்துவமென்ற தூண்களின்மீது நிற்பதற்குச் சித்தமாயிருக்க வேண்டும். வீடுகளில் வளைவுகள் அமைக்கும் பொழுது முதலில் முட்டுக்கொடுத்த போதிலும் பிற்பாடு அதை எடுத்துவிட வேண்டியிருக்கிறது. முட்டை நீக்கிய பிறகும் வளைவு விழாமல் நின்றால்தான் கொடுத்த முட்டு சரியானதென்று கருதப்படும். இவ்வாறே ஊக்கத்தின் பிரவாகம் ஸகுணத்திலிருந்து தோன்றுவது சரியே; ஆனால் அதன் பூர்த்தி தத்துவப்பற்றில், நிர்குணத்தில் ஏற்படவேண்டும். பக்தியின் வயிற்றிலிருந்து ஞானம் தோன்ற வேண்டும். பக்திக் கொடிகளில் ஞானபுஷ்பம் மலர வேண்டும்.

புத்த பகவான் இந்த விஷயத்தைக் கவனத்தில் கொண்டிருந்தார். இதனாலேயே அவர் மூன்று வகை உறுதிகளைப் போதித்தார். முதலில் தனி மனிதனிடத்தில் உறுதியிருந்த போதிலும் அதிலிருந்து தத்துவ உறுதியும் நினைத்தவுடன் தத்துவ உறுதி தோன்றவில்லையென்றால் குறைந்தது சங்க நிஷ்டை அல்லது சங்க உறுதியும் உண்டாக வேண்டும். ஒரு மனிதனிடம் இருந்து வந்த மரியாதையும் மதிப்பும் பத்து, பதினைந்து பேரிடத்திலும் இருக்க வேண்டும். சங்கத்தினிடம் பொதுவான அன்பில்லாத பொழுது ஒருவருக் கொருவர் மனஸ்தாபங்களும் சண்டை சச்சரவுகளும் ஆரம்பித்து விடும். தனி மனிதனை அண்டியிருந்தது போய்ச் சங்கத்தை அண்டி இருக்கத் தொடங்க வேண்டும். அதன் பிறகு தத்துவத்தை அண்டியிருத்தல் வேண்டும். இதனாலேயே புத்த மதத்தில் 'முச்சரணம்' கூறப்பட்டிருக்கிறது.

" बुद्धं शरणं गच्छामि । संघं शरणं गच्छामि ।
धम्मं शरणं गच्छामि । "

(புத்தம் ශரணம் கச்சாமி । ஸங்கம் ශரணம் கச்சாமி ।
தம்மம் ශரணம் கச்சாமி । )

முதலில் தனி நபரிடம் பற்று, பிறகு சங்கப் பற்று. இவ்விரண்டு பற்றுகளும் வலுவில்லாதவையே. ஆனால் இறுதியில் தத்துவப்பற்று தோன்றும் பொழுது

தான் ஸ்தாபனம் நிலைத்துப் பயன் அளிப்பதாகும். ஊக்கத்தின் அருவி ஸகுணத்தில் தோன்றிய போதிலும் நிர்குணக் கடலில் போய்க் கலக்க வேண்டும். நிர்குணம் இல்லாத பொழுது ஸகுணம் குறைபாடுள்ளதாய் விடுகிறது. நிர்குணத்தின் வரம்பு ஸகுணத்தை ஒழுங்கு கெடாமல் பார்த்துக் கொள்ளுவதால் ஸகுணம் நிர்குணத்திடம் நன்றிகாட்ட வேண்டும்.

இந்து மதம், கிறிஸ்தவ மதம், இஸ்லாம் மதம் முதலிய எல்லா மதங்களிலும் ஏதோ ஒரு வகையில் விக்கிரக ஆராதனை நடந்துதான் வருகிறது. மட்டமானதென்று கருதப்பட்டபோதிலும் அது நிச்சயமாய் ஒப்புக்கொள்ளப் பட்டிருப்பதோடு அதற்கு மதிப்பும் அளிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் விக்கிரக ஆராதனை நிர்குணத்தின் வரம்பிற்குள் இருக்கும் வரையில்தான் அது குறைபாடு அற்றதாயிருக்கும். இந்த வரம்பை மீறியதும் ஸகுணத்தில் குறைபாடுகள் தோன்றிவிடுகின்றன. எந்த மதமுமே, ஸகுணம் நிர்குணம் என்ற இவைகளுக்கு வரம்புகள் இல்லாது போகும்பொழுது, வீழ்ச்சியுற்றிருக்கிறது. முதலில் யாகங்களில் மிருகபலி கொடுக்கப்பட்டு வந்தது. இன்றும் சக்தி பூஜை செய்கிறவர்கள் பலியிடுகிறார்கள். இதில் விக்கிரக வழிபாடு ஒரு அந்நியாயமாய் மாறிவிட்டது. விக்கிரக வழிபாடு இங்கு தன் எல்லையைக் கடந்து தவறான பாதையில் செல்லத் தொடங்கியுள்ளது. ஆனால் நிர்குணப் பற்றின் வரம்பு இருக்குமானால் இந்த அபாயம் நேராது.

## (63) ஒன்றுக்கொன்று உதவுபவை : இராம சரித்திரம்

ஸகுணம் சுலபமானதோடு ஆபத்தில்லாதது. ஆனால் ஸகுணத்திற்கு நிர்குணம் தேவையாகும். ஸகுணம் வளர அதில் நிர்குண தத்துவப் பூ மலர்ந்து பரிமளம் வீசவேண்டும். நிர்குணமும் ஸகுணமும் பரஸ்பரம் உதவுபவை, விரோதமானவையல்ல. ஸகுணத்திலிருந்து கிளம்பி நிர்குணத்தைப் போய் பிடிக்க வேண்டும் ; நிர்குணத்திற்கும் சித்தத்தின் நுணுக்கமான அழுக்கைக் கழுவ ஸகுண நீர் தேவையாகிறது. இவை இரண்டுமே ஒன்றினால் ஒன்று அழகுபெறும். இந்த இருவகை பக்தி இராமாயணத்தில்

மிகச் சிறந்த முறையில் காட்டப்பட்டிருக்கிறது. அயோத்தியா காண்டத்தில் இருவகை பக்தியும் வந்திருக்கிறது. இந்த இருவகை பக்தியே இராமாயணத்தில் விவரிக்கப்பட்டிருக்கிறது. பரதனுடைய பக்தி முதல் வகையைச் சேர்ந்ததாயிருக்க லக்ஷ்மணனுடையது இரண்டாம் வகையினதாகும். இவர்களுடைய உதாரணத்திலிருந்து நிர்குணபக்தி, ஸகுண பக்தி ஆகியவற்றின் தன்மைகள் நமக்குத் தெளிவாகும்.

இராமர் வனவாசத்திற்குப் போகத் தொடங்கிய பொழுது லக்ஷ்மணனை உடன் அழைத்துப் போவதாயில்லை. இராமருக்கு அவனை உடன் அழைத்துப்போக அவசியமெதுவுமே தோன்றவில்லை. அவர் லக்ஷ்மணனிடம், "லக்ஷ்மணா, நான் காட்டிற்குப் போகிறேன்; எனக்கு தந்தை இவ்வாறு கட்டளை இட்டிருக்கிறார். நீ வீட்டிலேயே இரு. என்னுடன் வந்து ஏற்கெனவே வருந்தும் தாய்மாரையும் தந்தையையும் மேலும் துன்பத்திற்குள்ளாக்காதே. பெற்றோருக்கும், குடிமக்களுக்கும் பணி புரி. நீ அவர்களுடன் இருந்து வருவாயானால் எனக்குக் கவலையில்லாதிருக்கும். எனக்கு பதிலாக, என் பிரதிநிதிபோல் நீ இருந்துவா. நான் காட்டிற்குப் போவதால் எனக்கு ஏதோ ஆபத்து வந்து விட்டது என்று அர்த்தமில்லை. நான் ரிஷிகளின் ஆசிரமத்திற்கே போகிறேன்" என்று கூறி இராமர் லக்ஷ்மணனை சமாதானப்படுத்திக் கொண்டிருந்தார். ஆனால் லக்ஷ்மணன் இராமர் கூறியது அனைத்தையும் ஒரு நொடியில் ஒரே சொல்லில் தூக்கி எறிந்துவிட்டான்; வெட்டு ஒன்று துண்டு இரண்டாய்ச் செய்துவிட்டான். துளசிதாஸர் இந்தக் கட்டத்தை வெகு அழகாய் சித்திரித்திருக்கிறார். லக்ஷ்மணன் சொன்னதாவது:— "நீங்கள் எனக்கு தலை சிறந்த வேதமார்க்கத்தைச் சொல்லியிருக்கிறீர்கள். உண்மையில் நான் அதை நிறைவேற்றவும் வேண்டியது தான். ஆனால் இந்த அரசாட்சியின், அரசியலின் சுமையை என்னால் தாங்க முடியாது. உங்களுக்குப் பிரதிநிதியாய் இருக்கும் சக்தி எனக்கில்லை. நான் ஒன்றுமறியாப் பிள்ளையல்லவா?"

"दीन्हि मोहि सिख नीकि गोसांई ।
लागि अगम अपनी कदराई ॥

नरवर धीर धरम-धुर-धारी ।
निगम-नीति केते अधिकारी ॥
मैं सिसु प्रभु-सनेह-प्रतिपाला ।
मंदरु मेरु कि लेहिं मराला ॥ ”

*தீன்ஹி மோஹி ஸிக நீகி கோஸாயீ ।*
*லாகி அகம அபனீ கதராயீ ॥*
*நரவர தீர தரம துர தாரீ ।*
*நிகம நீதி கேதே அதிகாரீ ॥*
*மை ஸிஸு ப்ரபுஸநேஹ ப்ரதிபாலா ।*
*மந்தரு மேரு கி லேஹி மராலா ॥*

“ அன்னபட்சி மேருமலையைத் தூக்கமுடியுமா? அண்ணு, நானே இன்று வரையில் உங்கள் அன்பிலேயே, ஆதரவிலேயே வளர்ந்தவன். நீங்கள் இந்த ராஜநீதியை, அரசியல் முறையை வேறு எவருக்கேனும் போதியுங்கள். நான் சிறுபிள்ளையாகையால் எனக்கு அது புரியாது ” என்று சொல்லி லக்ஷ்மணன் மேலே பேச்சு வளராமல் முற்றுப்புள்ளி வைத்துவிட்டான்.

நீரை விட்டு எப்படி மீனினால் இருக்க முடியாதோ அப்படியே தான் லக்ஷ்மணனுடைய நிலைமையும். இராமரை விட்டுப் பிரிந்து இருப்பதற்கு வேண்டிய பலம் அவனிடம் இல்லை. அவன் உடல் முழுமையும் அன்பு நிரம்பியிருந்தது. இராமர் தூங்கும் பொழுதும் தான் விழித்திருந்து அவருக்குப் பணி புரிவதிலேயே அவனுக்கு இன்பம். நம் கண்ணில் கல் ஒன்று வந்து தாக்க இருக்கும் பொழுது கை உடனே எப்படிக் கண்ணை வந்து பொத்திக் கல்லின் தாக்குதலைத் தான் ஏற்றுக்கொள்ளுகிறதோ அவ்வாறே லக்ஷ்மணன் இராமருக்குக் கையாகிவிட்டான். இராமரை எவரேனும் அடிக்க வந்தால் லக்ஷ்மணன் முன் சென்று அடியைத் தான் ஏற்று வந்தான். துளசிதாஸர் லக்ஷ்மணனுக்கு ஒரு மிகவும் சிறந்த உவமை கூறியிருக்கிறார். கொடி மேலே பறந்து கொண்டிருக்கிறது; வணக்கம், வழிபாடு, பாட்டு எல்லாம் கொடிக்கே செய்கிறோம். அதன் நிறம், அதன் உருவம் ஆகியவற்றை விவரிக்கும் பாட்டுகள் பாடப்படுகின்றன. ஆனால் அதன் ஒரு பகுதியாய் நெடிது நிற்கும் அந்தக் கம்பத்தை யார் கவ

னிக்கிறார்கள்? இராமருடைய கீர்த்தி என்ற ஆல வட்டக் கொடி பறந்து கொண்டிருக்கிறதே, அதைத் தாங்கி நிற்கும் கம்பம் லக்ஷ்மணனே. அவன் நிமிர்ந்து நேரே நிற்கிறான். கொடியின் கம்பம் ஒரு பொழுதும் வளையவோ கோணவோ கூடாது; அவ்வாறே இராமர் புகழைப் பரப்பும் லக்ஷ் மணன் என்ற கம்பம் என்றும் வளைந்ததில்லை. கீர்த்தி யாருக்கு? இராமருக்குத்தான். உலகத்தின் கண்ணில் கொடி தெரிகிறது; கம்பத்தை எவரும் கவனிப்பதில்லை. சிகரம் தெரிகிறது; அதன் அஸ்திவாரம் எவருக்கும் தெரிகிறதில்லை. இராமருடைய கீர்த்தி உலகில் பரவிக் கொண்டிருக்கிறது; ஆனால் லக்ஷ்மணனைப்பற்றிய பேச் சையே காணோம். பதினான்கு வருஷம் இந்தக் கம்பம் நிமிர்ந்து நின்ற வண்ணமேயிருந்தது. சிறிதும் தொய்ந்த தில்லை. அவன் பின்னால் நகர்ந்து நின்று இராமருடைய பெருமையைப் பரப்பிக் கொண்டிருந்தான். இராமர் பெரிய பெரிய கடினமான காரியங்களை லக்ஷ்மணனைக் கொண்டே செய்வித்து வந்தார். சீதையைக் காட்டில் கொண்டு விடும் வேலையும் கடைசியில் லக்ஷ்மணனிடமே ஒப்புவிக்கப்பட்டது. பாவம், லக்ஷ்மணன் சீதையைக் கொண்டு போய் விட்டு வந்தான். லக்ஷ்மணனுக்கு தனக்குச் சொந்தமான வாழ்க்கையென்ற ஒன்று இல்லா மலே போய்விட்டது. அவன் இராமருடைய கண்களாக வும், இராமருடைய கை-கால்களாகவும், இராமருடைய மனமாகவுமே ஆய்விட்டான். ஆறு கடலில் கலப்பதைப் போல லக்ஷ்மணனுடைய பணிகள் இராமனுள் கலந்து விட்டன. அவன் இராமருடைய நிழலாய் விட்டான். லக்ஷ்மணனுடைய இந்த பக்தி ஸகுணமானது.

பரதன் நிர்குண பக்தி புரிந்தவன். அவனுடைய சித்திரத்தையும் துளசிதாஸர் வெகு நன்றாய்த் தீட்டியிருக் கிறார். இராமர் காட்டுக்குப் போன பொழுது பரதன் அயோத்தியில் இல்லை. அவன் வந்த பொழுது தசரதர் காலமாயிருந்தார். குரு வசிஷ்டர், "நீ அரசாட்சியை நடத்து" என்று அவனுக்குப் புத்தி சொன்னார். ஆனால் பரதன், "நான் இராமரைப் பார்க்க வேண்டும்" என் றான். இராமரைக்காணவேண்டுமென்று அவன் துடித்துக் கொண்டிருந்தான். ஆனால் அதோடு கூடவே ராஜ்யத்தின் ஏற்பாடுகளையும் அவன் செய்து வந்தான். இந்த ராஜ்யம் இராமருடையது; அதன் நிர்வாகக் காரியங்களைச் செய்

வது இராமருடைய காரியத்தைச் செய்வதேயாகும் என்பது அவனுடைய பாவனை. சொத்தெல்லாம் யஜமானனுடையது; அதை நிர்வகித்து நடத்துவது மட்டும் தன் கடமை என்று அவனுக்குத் தோன்றிக் கொண்டிருந்தது. லக்ஷ்மணனைப் போல் பரதனால் விட்டேத்தியாய் இருக்க முடியவில்லை. பரதனுடைய சுபாவம் இத்தகையது. இராமரிடம் பக்தியென்றால் இராமர் காரியத்தைச் செய்ய வேண்டும்; இல்லையேல் அந்த பக்தியினால் பயனென்ன? ராஜ்ய நிர்வாகத்திற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளும் செய்துவிட்டு பரதன் இராமரைச் சந்திக்கக் காட்டிற்கு வந்திருக்கிறான். "அண்ணா, இது உங்கள் ராஜ்யம். நீங்களே—" என்று அவன் சொல்லியாவதற்குள் இராமர் அவனிடம், "பரதா, நீயே ராஜ்யத்தை ஆளுவாய்" என்று சொல்லுகிறார். பரதன் சங்கோசத்தால் அப்படியே நின்று விடுகிறான். அவன், "உங்கள் கட்டளையை தலையால் தாங்குகிறேன்" என்கிறான். இராமர் எதைச் சொன்னாலும் ஏற்றாக வேண்டியதே. அவன் தனது என்பவை அனைத்தையும் இராமரிடம் அர்ப்பணம் செய்திருந்தான். போய் ஆட்சிக் காரியங்களை நடத்தலானான். ஆனால் அதிலும் விசேஷமென்னவென்றால், அயோத்தியிலிருந்து இரண்டு மைல் தொலைவில் தங்கித் தவம் செய்து கொண்டிருந்தான்; தவம் இயற்றிக் கொண்டே அரசாட்சியை நடத்தினான். இறுதியில் இராமர் பரதனைச் சந்தித்த பொழுது இவ்விருவரில் காட்டிலிருந்து தவம் புரிந்த உண்மை தபஸ்வி யார் என்று சொல்லுவது சிரமமாய்விடுகிறது! இருவர் முகங்களும் ஒன்று போன்றவை. வயதில் தான் சிறிது வேற்றுமையே தவிர இருவர் முகத்திலும் தவத்தின் ஒளி ஒரே வகையில் வீசிக்கொண்டிருந்ததால் இருவரையும் பார்த்து இவர்களில் இராமர் யார், பரதன் யார் என்பதை அறியவே முடியாமலிருந்தது. ஒரு சைத்திரிகன் இந்தக் காட்சியை ஒரு சித்திரமாய் வரைவானாயின் அது எவ்வளவு புனிதமான சித்திரமாயிருக்கும்! இவ்வாறு பரதன் உடலைப் பற்றிய வரையில் இராமரிடமிருந்து தொலைவிலிருந்தபோதிலும் மனதில் அவன் ஒரு கணமும் விலகி இருக்கவில்லை. ராஜ்ய நிர்வாகத்தை அவன் ஒருபுறம் நடத்திக் கொண்டிருந்தபோதிலும் அவன் மனம் இராமரிடமே இருந்து வந்தது. நிர்குணத்தில் ஸகுணபக்தி இண்டு இடுக்கில்லாமல் திணிக்கப்

பட்டேயிருக்கிறது. ஆகையால் அங்கே பிரிவு என்ற பேச்சையே நாம் எப்படி எடுக்கலாம்? ஆகையால் பரதனுக்கு இராமருடைய பிரிவே தோன்றவில்லை. அவன் தன் எஜமானனின், தலைவனின் வேலையைச் செய்து வந்தான்.

இக்கால வாலிபர்கள், "ராமநாமம், ராமபக்தி, இராமன் வழிபாடு என்ற இவையெல்லாம் எங்களுக்குப் புரியவில்லை. நாங்கள் பகவானுடைய பணியைச் செய்வோம்" என்கிறார்கள். ஆனால் பகவானுடைய காரியத்தை எப்படிச் செய்யவேண்டும் என்பதற்கு ஒரு முன் மாதிரியை பரதன் காட்டிவிட்டான். அவன் பகவானுடைய வேலையைச் செய்து பிரிவை தன்னுள் அடக்கிக்கொண்டான். பகவானுடைய காரியத்தைச் செய்துகொண்டே அவருடைய பிரிவை உணருவதற்குக்கூட நேரமில்லாதிருப்பது வேறு விஷயம்; எவனுக்கு பகவானிடம் தொடர்பெதுவுமே இல்லையோ அவன் பேசாதிருப்பது வேறு விஷயம். பகவானுடைய காரியத்தைச் செய்துகொண்டே புலனடக்கத்துடன் வாழ்க்கை நடத்துதல் அரிதாகும். பரதனுடைய இந்தப் போக்கு, இந்த வாழ்க்கைமுறை நிர்குண வழியில் நடப்பதாயிருந்த போதிலும் அங்கும் ஸகுணத்தின் அடிப்படை இல்லாமற் போய்விடவில்லை. "ஏ ராமப்பிரபு, உங்கள் கட்டளையை நான் சிரசால் தாங்குகிறேன். நீங்கள் எதைச் சொன்னாலும் எனக்கு அதில் சந்தேகம் தோன்றாது" என்று சொல்லிவிட்டு பரதன் திரும்பியபொழுது அவன் மீண்டும் பின்னால் திரும்பி இராமரைப் பார்த்து, "பகவானே, மனதிற்கென்னவோ சமாதானமாயில்லை. எதையோ பறிகொடுத்தது போல் தோன்றுகிறதே!' என்றான். இராமர் உடனே அவன் மனதைப் புரிந்துகொண்டு, "இந்தப் பாதுகையைக் கொண்டு போ" என்றார். கடைசியில் ஸகுணத்தினிடத்தில் மரியாதை ஏற்படவே செய்தது. நிர்குணத்தை ஸகுணமானது இறுதியில் நைப்புள்ளதாய்ச் செய்தேவிட்டது. லக்ஷ்மணனுக்கு பாதுகை பெறுவதனால் சமாதானம் ஏற்பட்டிராது; அவன் அபிப்பிராயத்தில் பாலை வேண்டுகிறவனுக்கு மோர் கொடுத்தால் எப்படி திருப்தியாகாதோ அப்படியேதான் இது இருந்திருக்கும். பரதன் தன்மை இதிலிருந்து மாறுபட்டது. அவன் புறத்தே தொலைவிலிருந்துகொண்டு காரியம் செய்துகொண்டிருந்த

போதிலும் அவன் மனம் ராம மயமாயிருந்தது. பரதன் தன் கடமையை நிறைவேற்றுவதையே ராமபக்தி என்று கொண்டிருந்தபோதிலும், பாதுகை அவசியமென்று உணர்ந்தான்; அவையின்றி அவனால் அரசாட்சி நடத்த முடியாமலிருந்தது. அந்தப் பாதுகையின் கட்டளை என்று கொண்டே அவன் தன் கடமையைச் செய்துவந்தான். லக்ஷ்மணன் எப்படி இராமனுடைய பக்தனோ அப்படியேதான் பரதனும். இருவருடைய தன்மைகளும் வெளிப் பார்வைக்கு வேறாயிருந்தன. பரதன் கடமையிலும் தத்துவத்திலும் உறுதி கொண்டிருந்த போதிலும் அவனுடைய தத்துவப் பற்றிற்கும் பாதுகையினால் விளையும் நைப்பு தேவையாகவே இருந்தது.

## (64) ஒன்றுக்கொன்று உதவுபவை: கிருஷ்ண சரித்திரம்

ஹரிபக்தி என்ற நைப்பு கட்டாயம் இருக்கவேண்டும். இதனாலேயே பகவான் அடிக்கடி அர்ஜுனனிடம், “मय्यासक्तमना: पार्थ” (மய்யாஸக்தமனா: பார்த்த) ‘அர்ஜுனா, என்னிடம் பற்றுடன் என் பக்தி ரசத்தைத் துணையாய்க்கொண்டு பணிபுரிந்து கொண்டேயிரு’ என்று சொல்லுகிறார். எந்த பகவத் கீதைக்கு ‘ஆஸக்தி’ (பற்று) என்ற சொல் தோன்றுவதில்லை, பிடிப்பதுமில்லையோ, எது மீண்டும் மீண்டும் பற்றற்றவனாய்ப் பணி புரிய வேண்டும், விருப்பு வெறுப்பற்றுப் பணி புரியவேண்டும், பயனைக் கருதாது பணியாற்ற வேண்டும் என்று வற்புறுத்தியிருக்கிறதோ ‘அனாஸக்தி’ ‘நிஸ்ஸங்கதா’ என்ற சொற்கள் எதற்கு பல்லவியைப் போலிருக்கிறதோ அந்த பகவத் கீதையே, “அர்ஜுனா, என்னிடம் ஆஸக்தி வை” என்று சொல்லுகிறது. ஆனால் பகவானிடம் ஆஸக்தி கொள்ளுதல் என்பது மிகவும் உயர்ந்த விஷயம் என்பதை இங்கே நினைவில் கொள்ளவேண்டும். அது உலகிலுள்ள எந்தப் பொருள் அல்லது விஷயத்தினிடத்திலும் கொள்ளும் ஆஸக்தி அல்ல. ஸகுணமும் நிர்குணமும் ஒன்றுடன் ஒன்று பின்னிக்கொண்டிருக்கின்றன. ஸகுணம், நிர்குணத்தின் அடிப்படையை அறவே அகற்ற முடியாது; நிர்குணத்திற்கு ஸகுணத்தின் ரசம் தேவையாகிறது. எவன்

எப்பொழுதும் தன் கடமையாயுள்ள காரியத்தையே செய்து கொண்டிருக்கிறானோ அவன் அந்தக் காரியத்தின் மூலமாய் கடவுள் வழிபாடே செய்துகொண்டிருக்கிறான். ஆனால் பூஜையோடுகூட ரசமும் நைப்பும் வேண்டும். 'मामनुस्मर युद्ध्य च' (மாமனுஸ்மர யுத்ய ச) 'என்னை நினைத்துக் கொண்டே கர்மம் புரி.' கர்மமே ஒரு பூஜைதான், வழிபாடு தான். ஆனால் மனதில் உயிருள்ள பாவனை இருந்துவர வேண்டும். பூவை அள்ளி அள்ளிப் போடுவதே பூஜை யாகாது. அதில் பாவனையிருக்க வேண்டும். பூக்களை அர்ச்சித்தல் பூஜையின் ஒருவகை. நல்ல காரியங்களின் மூலமாய் பூஜைசெய்தல் பிறிதொரு வகையாகும். ஆனால் இரண்டிலுமே பாவனையென்ற ரசம் இன்றியமையாதது. புஷ்பங்களால் அர்ச்சித்தோம்; ஆனால் மனதில் பாவனை யில்லையென்றால் நாம் அர்ச்சித்த அந்த புஷ்பங்கள் வெறும் கல்லின்மீது போட்டவையே ஆகும். ஆகையால் உண்மை யான விஷயம் பாவனையே. ஸகுணமும் நிர்குணமும், கர்மமும் பிரீதியும், ஞானமும் பக்தியும்—என்ற இவையெல் லாம் ஒரே தன்மையுள்ளவையே. இவை இரண்டினாலும் இறுதியிலேற்படும் அனுபவம் ஒன்றேயாம்.

உத்தவன், அர்ஜுனன் என்றவர்களைப் பாருங்கள். இராமாயணத்திலிருந்து ஒரே மூச்சில் மகாபாரதத்திற் குத் தாவிவிட்டேன். இவ்வாறு செய்ய எனக்கு உரிமை யுண்டு. ஏனெனில் இராமரும் கிருஷ்ணரும் ஒருவரே. பரதனும் லக்ஷ்மணனும் எப்படியோ அப்படியேதான் உத்தவனும் அர்ஜுனனும். கிருஷ்ணர் இருக்குமிடத்தில் உத்தவன் இருக்கவே செய்கிறான். உத்தவனால் கிருஷ் ணரைவிட்டு ஒரு கணமும் பிரிந்திருக்க முடிவதில்லை. அவன் எப்பொழுதும் கிருஷ்ணர் பணி விடையிலேயே மூழ்கியிருப்பவன். கிருஷ்ணர் இல்லாதபொழுது அவ னுக்கு உலகமே ரசமற்றதாய், சாரமில்லாததாய்த் தோன் றும். அர்ஜுனனும் கிருஷ்ணருக்குத் தோழன். அவன் தொலைவில் அஸ்தினபுரத்தில் இருந்துவந்தான். அர்ஜு னன் கிருஷ்ணருடைய காரியத்தைச் செய்பவனே. ஆனால் கிருஷ்ணர் துவாரகையிலிருக்க அர்ஜுனன் அஸ்தின புரத்திலிருந்தான். இருவரின் சம்பந்தம் இப்படி இருந்தது. கிருஷ்ணருக்கு தன் உடலைத் துறக்கவேண்டியது அவசிய மென்று தோன்றிய பொழுது அவர் உத்தவனிடம், "ஊதோ, நான் போகிறேன்" என்றார். அதற்கு உத்த

வன், "என்னை உடன் அழைத்துப் போகமாட்டீரா? நாம் இருவரும் சேர்ந்தே போவோமே" என்கிறன். ஆனால் கிருஷ்ணர், "எனக்கு இது பிடித்தமில்லை சூரியன் தன் ஒளியை தீயினிடம் வைத்துவிட்டுப் போவதுபோல் நான் என் ஒளியை உன்னிடம் விட்டுப் போகிறேன்" என்கிறர். இவ்வாறு பகவான் இறுதிக்கால ஏற்பாட்டைச் செய்து அவனுக்கு ஞானத்தை அளித்து அனுப்பினர். பிறகு யாத்திரையில் உத்தவனுக்கு மைத்திரேய ரிஷியின் மூலமாய் பகவான் தம் ஊருக்கு (வைகுண்டத்திற்கு)ப் போய் விட்டாரென்று தெரியவருகிறது. ஆனால் அதனால் அவன் மனம் சிறிதும் பாதிக்கப்படவில்லை; விசேஷமாக எதுவும் நடந்ததாகவே அவனுக்குத் தோன்றவில்லை. 'குரு இறந்து விட்டாரென்று சீடன் அழுதான். இருவரும் கற்ற வித்தை பாழாயிற்று' என்று சொல்லுவதுண்டே, அந்த நிலையில் உத்தவன் இல்லை. பிரிவு ஏதோ நேர்ந்ததாகவே அவன் நினைக்கவில்லை. அவன் தன் ஆயுள் முழுவதும் ஸகுண உபாசனை செய்தவன்; ஆண்டவன் அருகிலேயே இருந்து வந்தவன். ஆனால் இப்பொழுது அவனுக்கு நிர்குணத்தி லேயே ஆனந்தம் உண்டாகத் தொடங்கிவிட்டது. இவ்வாறு அவன் நிர்குணத்தின் வழியைக் கடக்க வேண்டியதாயிற்று. ஸகுணம் முதலில்; ஆனால் அதை அடுத்தாற்போல் நிர் குணத்தின் படி ஏறியே ஆகவேண்டும். இல்லையேல் பூர்ணத்துவம் ஏற்படாது.

அர்ஜுனனுடைய நிலையோ இதற்கு நேர்மாறானது. ஸ்ரீ கிருஷ்ணர் அவனை என்ன செய்யச் சொல்லி யிருந்தார்? தமக்குப் பிறகு எல்லா ஸ்திரீகளையும் பாதுகாக்கும் பொறுப்பை அவர் அர்ஜுனனிடம் ஒப்புவித்திருந்தார். அர்ஜுனன் அஸ்தினபுரத்திலிருந்து வந்து துவாரகையி லிருந்து ஸ்ரீ கிருஷ்ணரின் ஸ்திரீகளை அழைத்துக் கொண்டு போனன். வழியில் ஹிஸாருக்கருகே பஞ்சாபிலிருந்து வந்த திருடர்கள் அவனை வழிப்பறி செய்து விட்டார்கள். எந்த அர்ஜுனன் அந்தக் காலத்தில் அவன் ஒருவனே தான் (ஆண்மகன்) என்று சொல்லப் பட்டானே, தலை சிறந்த வீரனென்று புகழ் பெற்றிருந்தானே, தோல்வி என்பதையே அறியாதிருந்தது காரணமாய 'ஜயன்' என்ற பெயரில் பிரசித்தி பெற்றிருந்தானே, எவன் சிவனையே நேருக்கு நேராய் நின்று எதிர்த்துப் பணியச் செய்தானே, அவன் ஆஜ்மீருக்கருகில் ஓட்டமாய் ஓடித்

தப்பினுன். கிருஷ்ணர் போய்விட்டதனுல் அவன் மனம் பெரிதும் பாதிக்கப்பட்டு விட்டது; உயிரேபோய் விட்டது போலும், உயிரும் ஆதரவுமற்ற வெற்றுடலைப் போலும் அவன் ஆய்விட்டான். அதாவது இடையருது கர்மம் புரிந்து கொண்டு கிருஷ்ணரிட மிருந்து விலகியே இருந்துவந்த நிர்குண உபாசகனை அர்ஜுனனுக்கு இறுதி யில் இந்தப்பிரிவு சகிக்க முடியாததாய், தாள முடியாததாய் விட்டது. அவனுடைய நிர்குணம் இறுதியில் பிரிவின் மூலமாய் பீரிட்டுக் கொண்டு வெளிவந்தது; அவனுடைய கர்மம் அனைத்துமே முடிந்து விட்டது போலாயிற்று. அவனுடைய நிர்குணத்திற்கு இறுதியில் ஸகுணத்தின் அனுபவம் ஏற்பட்டது. கருத்தென்ன வென்ருல், ஸகுணம் நிர்குணத்திற்குப் போகவும் நிர்குணம் ஸகுணத்திற்கு வரவும் வேண்டியிருக்கிறது. இவ்வாறு இரண்டுமே ஒன்று மற்றதினுல் நிறைவுறுகின்றன.

## (65) இரண்டும் ஒன்றே—சொந்த அனுபவம்

ஆகையால் ஸகுண உபாசகன், நிர்குண உபாசகன் ஆகிய இருவரிடையில் உள்ள வேற்றுமை என்ன வெனச் சொல்ல முயலும் பொழுது அதைச் சொல்லுவதே சிரம மாய்விடுகிறது. ஸகுணமும் நிர்குணமும் இறுதியில் ஒன்ருய் விடுகின்றன. பக்தியின் அருவி முதலில் ஸகுணத்திலிருந்து தோன்றிய போதிலும் இறுதியில் அது நிர்குணம் வரையில் ஓடுகிறது. பழைய காலத்தில் நடந்த விஷயம் ஒன்று. நான் வைக்கம் சத்தியாக்ரஹம் பார்க்கப் போயிருந்தேன். மலையாளத்தின் ஓரத்தில் சங்கரா சாரியார் பிறந்த ஊர் இருக்கிறது. பூகோளம் பற்றிய இவ்விஷயம் என் நினைவிலிருந்தது. நான் எந்த வழியாய்ப் போய்க் கொண்டிருந்தேனே அங்கேயே பக்கத்தில் எங்கோ சங்கராசாரியாருடைய காலடி என்ற கிராமம் இருக்கு மென்று எனக்குத் தோன்றியதால் நான் என்னுடன் வந்த மலையாளியைக் கேட்டேன். அவன், “இங்கிருந்து 10, 12 மைல் தொலைவில் இருக்கிறது. நீங்கள் அங்கே போக வேண்டுமா?” என்று கேட்டான். நான் வேண்டாம் என்று சொல்லிவிட்டேன். நான் சத்தியாக்ரஹம் பார்க்கப் போய்க் கொண்டிருந்ததால் எனக்கு வேறு எங்கும் போவது உசிதமென்று தோன்றவில்லை. ஆகவே அப்பொழுது

நான் அந்தக் கிராமத்தைப் பார்க்கப் போகவில்லை. நான் அவ்வாறு செய்தது நல்லதே என்று எனக்கு இப்பொழுதும் தோன்றுகிறது. ஆனால் இரவில் நான் தூங்கத் தொடங்கியபொழுது அந்தக் காலடிக் கிராமமும் சங்கராசாரியாருடைய அந்த உருவும் மீண்டும் மீண்டும் என்னெதிரில் வந்து கொண்டிருந்ததால் தூக்கம் கலைந்து போயிற்று. அந்த அனுபவம் எனக்கு இன்றும் அப்படியே இருந்து கொண்டிருக்கிறது. சங்கராசாரியாருடைய அந்த ஞானத்தின் சிறப்பும், அவரது அந்த, தெய்வீக நிஷ்டையும், எதிரில் வியாபித்துள்ள சம்சாரம் அனைத்தும் பொய் என்று முடிவுகட்டும் அவரது அசாதாரணமான ஒளிபொருந்திய வைராக்கியமும், அவருடைய கம்பீரமான பாஷையும், அவரிடமிருந்து நான் பெற்றுள்ள அளவிலடங் காத உதவியும் எனக்கு அடிக்கடி நினைவுக்கு வந்து கொண்டிருந்தன. இரவில் இந்த பாவனை களெல்லாம் எதிரில் வந்து நிற்கும். அப்பொழுது என் இந்த நிர் குணத்தில் ஸகுணம் எப்படி நிரம்பி வழிந்து கொண்டிருக் கிறது என்பதை உணர்ந்தேன். நேருக்கு நேராய் சந்தித்தி ருந்தாலும் அவ்வளவு நேசம் இருந்திராது. நிர்குணத் திலும் ஸகுணம் பூரணமாய் நிரம்பியே இருக்கிறது. நான் பெரும்பாலும் நண்பர்களுக்கு க்ஷேமங்களை விசாரித்துக் கடிதம் எழுதுவதில்லை. ஆனால் எந்த நண்பருக்கும் கடிதம் எழுதாவிட்டாலும் உள்ளுக்குள் அவருடைய நினைவு எப்பொழுதும் இருந்து கொண்டே தானிருக்கிறது. கடிதம் எழுதாதிருந்த போதிலும் அவர் நினைவு உள்ளே பூரணமாய் நிரம்பியிருக்கிறது. நிர்குணத்தில் இவ்வாறு ஸகுணம் மறைந்து நிற்கிறது. ஸகுணம், நிர்குணம் ஆகிய இரண்டும் ஒன்றே. விக்கிரகத்தை எதிரில் வைத்துக் கொண்டு பூஜை செய்தல்—வெளிப்படையாய் சேவை செய்தல், உள்ளுக்குள் இடையறாது உலகின் நன்மை யைக் கோரிக்கொண்டே புறத்தே தெரியும்படி எதையும் செய்யாதிருத்தல்—ஆகிய இந்த இரண்டிற்கும் உள்ள மதிப்பும் சிறப்பும் ஒன்றே.

## (66) பக்தலக்ஷணம் பெறுக

இறுதியில் ஸகுணம் எது நிர்குணம் எது என்பதைத் தீர்மானிப்பதும் சுலபமல்ல என்பதைச் சொல்ல வேண்டும்.

ஒருவகையில் ஸகுணமாயிருப்பது வேறொருவகையில் பார்க்கும் பொழுது நிர்குணமாகக்கூடும். ஸகுணத்தின் சேவை ஒருகல்லை வைத்துக் கொண்டு செய்யப்படுகிறது ; அந்தக் கல்லில் பகவான் இருப்பதாக எண்ணிக் கொள்கிறோம். நம் தாயினிடமும் மகான்களிடமும் சைதன்யம் நிதரிசனமாய் வெளியாயிருக்கிறது. அவர்களிடம் ஞானமும், அன்பும், உள்ளமும் தெளிவாய் வெளியா யிருக்கின்றன. ஆனால் அவர்களைப் பரம்பொருளென்று கொண்டு நாம் வழிபடு வதில்லை. இந்த சைதன்யமயமான உலகம் எல்லோருக்கும் காணப் படுகிறது ; ஆகையால் அதற்கு சேவை செய்ய வேண்டும். அதனுள் ஸகுணமான பரம்பொருளைக் காணவேண்டும். ஆனால் மக்கள் இவ்வாறு செய்யாமல் கல்லில் ஆண்டவனைக் காண்கிறார்கள். கல்லில் ஆண்டவனைக் காணுதல் ஒரு வகையில் நிர்குணத்தின் எல்லையை எட்டிப் பிடித்தலாகும். மகான்கள், பெற்றோர், அண்டை அயலார் ஆகியோரிடம் அறிவும் அன்பும் உதவியுணர்ச்சியும் வெளியாகி யிருக்கின்றன. அவர்களிடம் ஆண்டவனை பாவித்தல் சுலபம். ஆனால் ஒரு கல்லில் ஆண்டவனை பாவித்தல் சிரமம். நர்மதை யாற்றில் கிடைக்கும் கல்லை நாம் சிவனென்று மதிக்கிறோம். இது நிர்குண பூஜை அல்லவா? ஆனால் இதற்குமாறாக கல்லில் ஆண்டவனை பாவித்துக் கொள்ளவில்லை என்றால் வேறெங்கு தான் பாவிப்பது என்று தோன்றுகிறது. பகவானுடைய மூர்த்தியாவதற்குத் தகுதியுள்ளது அந்தக்கல்லே. அது விகாரமற்றது; அமைதி பொருந்தியது ; இருளோ ஒளியோ, வெயிலோ குளிரோ, எப்பொழுதும் அந்தக்கல் அப்படியே கிடக்கிறது. இத் தகைய இந்த விகாரமற்ற கல்தான் ஆண்டவனுடைய சின்னமாவதற்குத் தகுதியுள்ளது. தாய், தந்தை, மக்கள், அண்டை அயலார் ஆகிய இவரனைவரும் விகாரம் பொருந்தியவர்களே ; அதாவது இவர்களிடம் ஏதேனும் விகாரம் இருக்கவேதான் செய்கிறது. ஆகையால் கல்லை வழிபடுவதைவிட இவர்களை வழிபடுதல் ஒருவகையில் சிரமமானதே.

கருத்தென்ன வென்றால், ஸகுணமும் நிர்குணமும் பரஸ்பரம் உதவுபவை. ஸகுணம் சுலபமானது, நிர்குணம் சிரமமானது. ஆனால் பிரிதொரு வகையில் ஸகுணம் சிரமமானதாயிருக்க, நிர்குணம் சுளுவாகிறது. இரண்டின்

மூலமாயும் கைகூடுவது ஒரு இலட்சியமே. ஐந்தாம் அத்தியாயத்தில் இருபத்திநான்கு மணி நேரமும் கர்மம் புரிந்து கொண்டே ஒரு சிறிதும் கர்மம் செய்யாத யோகியும் இருபத்து நான்கு மணி நேரமும் சிறிதும் கர்மம் செய்யாது எல்லாக் கர்மங்களையும் செய்யும் சந்நியாசியும் ஒரே தன்மையர் என்று சொல்லியதைப் போலவேதான் இங்கும். ஸகுணகர்ம நிலை நிர்குண சந்நியாசயோகம் ஆகிய இரண்டும் ஒன்றே. சந்நியாசம் சிறந்ததா, யோகம் சிறந்ததா என்பதற்கு விடை கூறுவதில் பகவானுக்கு ஏற்பட்ட அதே சிரமம் இங்கும் ஏற்பட்டிருக்கிறது. இறுதியில் எது சுலபம், எது சிரமமானது என்று இரண்டிற்குமுள்ள ஏற்றத்தாழ்வையே கூறவேண்டியதாயிருக்கிறது. இல்லையேல், யோகமாவது சந்நியாசமாவது, ஸகுணமாவது நிர்குணமாவது—இரண்டும் ஒன்றே. இறுதியில் பகவான், “அர்ஜுனா, நீ ஸகுணனாயிருந்தாலும் சரி, நிர்குணனாயினும் சரி, பக்தனாய் மட்டும் கட்டாயம் இரு. வெறும் கருங்கல்லாய் இராதே” என்கிறார். இவ்வாறு சொல்லி விட்டு இறுதியில் பக்தனுடைய இலட்சணங்களைக் கூறியிருக்கிறார். அமுதம் இனிப்பாயிருக்கலாம்; ஆனால் அதைச் சுவைத்துப் பார்ப்பதற்கு நமக்கு சந்தர்ப்பம் கிடைத்ததில்லை. ஆனால் இந்த இலட்சணங்களோ நமக்கு நிதரிசனமாய் இனிமையாயிருக்கின்றன. இதில் கற்பனை எதுவும் தேவையில்லை. இந்த இலட்சணங்களை நாம் அனுபவிப்போம். பன்னிரண்டாம் அத்தியாயத்திலுள்ள இந்த பக்த இலட்சணங்களை ஸ்திதப்ரக்ஞனுடைய இலட்சணங்களைப் போலவே ஒவ்வொரு நாளும் ஓதவேண்டும், சிந்திக்க வேண்டும். அவைகளைச் சிறிது சிறிதாக நம் வாழ்க்கையில் கொணர்ந்து வலுப்பெற வேண்டும். இவ்வாறு நம் வாழ்க்கையை மெல்லமெல்ல ஆண்டவனிடம் கொண்டு போக வேண்டும்.

ஞாயிறு, 8–5–’32.

பதின்மூன்றும் அத்தியாயம்

# ஆத்ம-அனாத்ம விவேகம்

*

## (67) கர்மயோகத்திற்குதவும் உடல்-ஆன்மப் பாகுபாடு

வியாசதேவர் தம் வாழ்க்கையின் சாரத்தை பகவத் கீதையில் அமைத்திருக்கிறார். அவர் விஸ்தாரமாக இன்னும் என்னவெல்லாமோ எழுதியிருக்கிறார். மகாபாரதம் ஒன்றுமட்டுமே ஒன்று, ஒன்றேகால் இலட்சம் சுலோகங்கள் கொண்டது. ஸம்ஸ்கிருதத்தில் 'வியாஸ' என்ற சொல்லுக்கே விஸ்தாரமென்ற பொருள் ஏற்பட்டுவிட்டது. ஆனால் பகவத்கீதையிலோ அவருடைய மனம் விஸ்தாரத்தில் செல்லவில்லை. ஜியோமிதியில் யூக்லிட் சித்தாந்தங்களைச் சொல்லியிருப்பதுபோல வாழ்க்கைக்கு உபயோகமான தத்துவங்களை கீதையில் வியாசதேவர் ஒன்றின் பின் ஒன்றாய் எழுதிக்கொண்டே போகிறார். பகவத் கீதையில் விசேஷமான சர்ச்சைகளுமில்லை, விஸ்தாரமாக எதுவுமில்லை. இதற்கு முக்கிய காரணம், கீதையில் சொல்லப்பட்ட எல்லா விஷயங்களையும் ஒவ்வொரு மனிதனும் தன் வாழ்க்கையில் பரிசோதிக்கலாம் என்பதே; பரிசோதிக்க வேண்டும் என்பதற்காக அவைகள் சொல்லப்பட்டிருக்கின்றன. வாழ்க்கைக்கு எந்த விஷயங்கள் உபயோகமானவையோ அவையே கீதையில் சொல்லப்பட்டிருக்கின்றன. அவர் சொன்னதன் நோக்கமும் இதுவே ஆகையால் தத்துவங்களைச் சுருக்கமாய்ச் சொல்லியதோடு திருப்தியடைந்துவிட்டார். அவருடைய இந்தப் போதுமென்ற மனம் அல்லது திருப்தியில் அவருக்கு சத்தியத்திலும் ஆன்மானுபவத்திலும் உள்ள பெரிய நம்பிக்கை நமக்குத் தெரியவருகிறது. எது உண்மையோ அதை வலியுறுத்துவதற்கு அதிக யுக்திகளை உபயோகிக்கத் தேவை இல்லை.

நாம் கீதையிலேயே கண்ணாயிருப்பதில் நாம் முக்கியமாய்க் கொண்டுள்ள நோக்கம் நமக்கு வாழ்க்கையில் எவ்வெப்பொழுது உதவி தேவையாயிருக்கிறதோ அப்பொழுதெல்லாம் அது நமக்கு கீதையினிடமிருந்து கிடைக்கும்

என்ற எண்ணமே; அது எப்பொழுதும் நமக்குக் கிடைக்கிறது. கீதை வாழ்க்கைக்கு உபயோகமான சாஸ்திரமாயிருப்பதால் அதில் சுதர்மம் இவ்வளவு வற்புறுத்தப்பட்டிருக்கிறது. மனிதனுடைய வாழ்க்கையைத் தாங்கும் கால் ஒன்று உண்டென்றால் அது சுதர்மத்தைச் செய்தலே; அதன் மேல் கட்டுக்கோப்பனைத்தையும் இந்த சுதர்மத்தின் மீது நிறுத்தவேண்டும். இந்தக்கால் எவ்வளவு உறுதியாயிருக்கிறதோ அவ்வளவு மேலே எழும்பும் கட்டடமும் நிலைத்து நிற்கும். இந்த சுதர்மம் புரிவதையே கீதையில் கர்மமென்று சொல்லியிருக்கிறது. இந்த சுதர்மா சரணமென்ற கர்மத்தைச் சூழ கீதையில் அநேக விஷயங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. இதைக் காக்கும் பொருட்டு பல விகர்மங்கள் உருவாக்கப்பட்டிருக்கின்றன. சுதர்மா சரணத்தை ஜோடிப்பதற்கு, அழகுபடுத்துவதற்கு, அதை வெற்றியுள்ள தாக்குவதற்கு எந்தெந்த ஆதாரங்களும் உதவிகளும் தேவையோ அவற்றையெல்லாம் அதற்குக் கொடுத்தல் அவசியம். ஆகையால் இதுவரையில் இத்தகைய பல விஷயங்களைப் பார்த்தோம். அவற்றுள் பல பக்தியினுருவில் இருந்தன. இன்று பதின்மூன்றும் அத்தியாயத்தில் நாம் பார்க்கப் போவதும் சுதர்மாசரணத்திற்கு மிகவும் உபயோகமானதே; அது சிந்தனையுடன் தொடர்புள்ளது.

கீதையில் சுதர்மத்தை பயனில் பற்றில்லாது செய்ய வேண்டுமென்ற விஷயம் முக்கியமாய் எல்லாவிடங்களிலுமே சொல்லப்பட்டிருக்கிறது. கர்மத்தைச் செய்ய வேண்டியது தான், ஆனால் அதன் பயனை விட்டுவிட வேண்டும். மரத்திற்கு நீர் ஊற்று, அதைக் கவனித்துப் பாதுகாத்துவா; ஆனால் அதன் நிழலோ, பூவோ, பழமோ தனக்கு வேண்டுமென்ற ஆசை வையாதே. இதுவே சுதர்மாசரணமென்ற கர்மயோகம். கர்மத்தைச் செய்து கொண்டே யிருப்பது என்பது மட்டுமே கர்மயோகம் என்பதன் பொருளல்ல. கர்மம் இந்த சிருஷ்டியில் எங்கும் நடந்து கொண்டேதானிருக்கிறது. அதைச் சொல்லத் தேவையில்லை. ஆனால் சுதர்மா சரணமென்ற கர்மத்தை—வெறும் கர்மத்தையல்ல—நன்றாய்ச் செய்து அதன் பயனைத் துறந்துவிடுதல் என்பது சொல்லுவதற்கு, புரிந்து கொள்ளுவதற்கு மிகவும் சுளுவாய்த் தோன்றிய போதிலும் நிறைவேற்றுவது மிகவும் சிரமம். ஏனெனில் எந்தக் காரியத்தையும் செய்வதற்குத்

தூண்டு கோலாயிருக்கும் சக்தி பயனில் உள்ள ஆசையே என்று ஒப்பப்பட்டிருக்கிறது. பயனில் உள்ள ஆசையை விட்டு விட்டு கர்மம் செய்தல் என்பது தலைகீழ் விவகார மாகும். உலக நடை, உலகப் போக்கு ஆகியவற்றிற்கு, இது நேர்மாருனது. ஒருவன் ஓயாது காரியம் செய்து கொண்டிருந்தால் அவன் வாழ்க்கையில் கீதையின் கர்ம யோகம் அமைந்து விட்டதாய் நாம் சொல்லுவதுண்டு. மிகுந்த காரியம் செய்வோனுடைய வாழ்க்கையை கர்மயோக மயமானது என்கிறோம். ஆனல் இவ்வாறு சொல்லும் பொழுது நாம் உண்மையைச் சொல்லுவதாகாது. கீதை யின் விளக்கத்திற்கொப்ப அது கர்மயோகமல்ல. இலட்சக் கணக்கான கர்மம் செய்கிறவர்களுள், வெறும் கர்மம் மட்டு மல்ல, சுதர்மாசரணமென்ற கர்மத்தைச் செய்பவர்களுள் ளும் கீதையின் கர்மயோகத்தைச் செய்கிறவர் கிடைத்த லரிது. கீதையின் நுணுக்கமான, உண்மையான பொருளைக் கொண்டு பார்த்தால் இத்தகைய பூரண கர்மயோகி கிடைப் பது அருமையிலும் அருமை. கர்மத்தைச் செய்ய வேண்டும்; ஆனல் அதன் பயனை விட்டுவிட வேண்டும் என்பது முற்றிலும் அசாதாரணமான விஷயமாகும். இது வரையில் கீதையில் இந்தப் பாகுபாடே செய்யப்பட்டது.

இந்தப் பாகுபாட்டிற்கு உபயோகமான வேருெரு பாகு பாடு இந்தப் பதின்மூன்றும் அத்தியாயத்தில் சொல்லப் பட்டிருக்கிறது. ‘கர்மத்தைச் செய்யவேண்டும் ஆனல் அதன் பயனில் பற்றை விட்டுவிட வேண்டும்’ என்ற இந்தப் பாகுபாட்டிற்கு உதவக்கூடிய பெரிய பாகுபாடே ‘உடல், ஆன்மா’ என்ற பாகுபாடு. இதுவே பதின்மூன்றும் அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ளது. கண்களினல் நாம் எந்த உருவைப் பார்க்கிறேமோ அதை நாம் உருவம், ஆகிருதி, உடல் என்கிறோம். நம் கண்களுக்கு வெளி உருவம் புலனுய் விட்டபோதிலும் நாம் பொருளின் உள்ளே புகவேண்டி யிருக்கிறது. பழத்தின் வெளி மூடியை—தோலை—உரித்தெறிந்து விட்டு அதன் உள்ளேயுள்ள சுளையை, கதுப்பைச் சாப்பிடவேண்டி யிருக்கிறது. தேங்காயையும் உடைத்தே உள்ளே பார்க்க வேண்டியிருக் கிறது. பலாப் பழத்தின் மீது முட்கள் இருந்த போதிலும் உள்ளே சிறந்த இனிய சுளைகள் நிறைந்திருக்கின்றன. நாம் நம்மையே பார்த்தாலும் சரி, பிறரைப் பார்த்தாலும் சரி உள்ளும் புறமும் வெவ்வேருய்ப் பிரித்துப்பார்க்க வேண்

டியது அவசியமாய் விடுகிறது. அப்படியானால் தோலை உரிப்பதன் அர்த்தமென்ன? இதன் பொருள், ஒவ்வொரு வஸ்துவிலும் உள் சுளையையும் மேல் தோலையும் வெவ்வேறாய்ப் பிரித்தல் என்பதே. புற உடல், அகத்திலுள்ள ஆன்மா என்று ஒவ்வொரு வஸ்துவுக்கும் இரு உருவங்கள் இருக்கின்றன. கர்மத்திலுள்ளதும் இதுவே. புறத்திலுள்ள பயன் கர்மத்தின் உடல். கர்மம் காரணமாக விளையும் சித்த சுத்தியே அந்தக்கர்மத்தின் ஆன்மாவாகும். சுதர்மாசரணமென்ற வெளியிலுள்ள பயனை உடலைவிட்டு உள்ளேயுள்ள சித்தசுத்தி யென்ற சாரமான ஆன்மாவை ஏற்க வேண்டும், உள்ளத்தில் நிரப்பிக் கொண்டுவிட வேண்டும். இவ்வாறு பார்க்கும் பழக்கத்தை, உடலை அகற்றி ஒவ்வொரு வஸ்துவின் சாரத்தை ஏற்கும், ரசத்தை உறிஞ்சும் நோக்கை நாம் பெற வேண்டும். கண்களுக்கும் மனதிற்கும் கருத்துகளுக்கும் இந்தப் பழக்கத்தை, பயிற்சியை அளிக்க வேண்டும். ஒவ்வொரு விஷயத்திலும் உடலை ஒதுக்கி விட்டு ஆன்மாவை வழிபட வேண்டும். இந்தப் பாகுபாடு நமது சிந்தனையின் பொருட்டு பதின்மூன்றும் அத்தியாயத்தில் கொடுக்கப்பட்டிருக்கிறது.

## (68) திருத்தத்தின் அஸ்திவாரம்

இந்த சாரத்தை கிரகிக்கும் நோக்குக் கொள்வது பற்றிய கருத்து மிகவும் மகத்துவம் வாய்ந்தது. நாம் சிறு பிராயம் முதலே இதைப் பழக்கம் பண்ணிக் கொண்டால் எவ்வளவு நன்றாய் இருக்கும்! இந்த விஷயம் தமதாக்கிக் கொள்ளத் தகுந்தது, இந்த நோக்கு ஏற்கத் தக்கது. அத்யாத்ம வித்தைக்கும் வாழ்க்கைக்கும் ஒரு சம்பந்தமும் இல்லையென்று பலருக்குத் தோன்றுகிறது! இத்தகைய சம்பந்தம் இருக்குமானாலும் அது ஒன்றும் கூடாது என்றும் சிலர் அபிப்பிராயப்படுகிறார்கள். உடலை ஆன்மாவிலிருந்து வேறாகப் பிரித்துணரும் பயிற்சி பிள்ளைப் பிராயம் முதலே அளிப்பதற்குத் திட்டம் செய்ய முடியுமானால் அது மிகவும் மகிழ்ச்சிக்குரிய விஷயமாயிருக்கும். இது போதனா சாஸ்திரம் பற்றிய விஷயம். தற்காலத்தில் பிழைபட்ட கல்வியின் விளைவாக மிகவும் தீய ஸம்ஸ்காரங்கள் குழந்தைகளின் மனதில் ஏற்பட்டுக் கொண்டிருக்கின்றன. ‘நான் வெறும் உடலே’ என்பதற்கு வெளியே

இந்தக் கல்வி நம்மை இட்டுப் போவதே இல்லே. எல்லாம் உடலேப் பற்றிய விவகாரங்களே நடந்து வருகின்றன. ஆனுல் இவ்வாறிருந்தும் உடலுக்கு எந்தத் தன்மை ஏற்பட வேண்டுமோ, அதற்கு எந்த உருவை அளிக்க வேண்டுமோ அது எங்குமே காணப்படவில்லே. இவ்வாறு இந்த உடலுக்கு வீண் பூஜை நடந்து கொண்டிருக்கிறது ; ஆன்மாவின் இனிமையில் கவனமே போகக்காணோம். தற்காலத்திய கல்வி முறையினுல் இந்த நிலே ஏற்பட்டுள்ளது. இவ்வாறு உடல் வழி பாட்டில் அல்லும் பகலும் பயிற்சி அளிக்கப் பட்டு வருகிறது.

ஆனுல் மிகச்சிறு பிராயம் முதலே நமக்கு இந்த உடலென்ற தெய்வத்தின் பூஜை, அர்ச்சனே செய்வதற்குக் கற்பிக்கப்படுகிறது. காலில் சிறிது இடறிப் புண்ணுயிருந்தால் கொஞ்சம் களி மண்ணேத் தடவினுல் போதும். குழந்தைக்கு இதுவே போதுமென்றே மண்கூடத் தேவையில்லே என்றே தான் தோன்றும். சிறு காயம், சிராய்ப்பு முதலியவைகளே அவன் பொருட்படுத்தவே மாட்டான். ஆனுல் அந்தக் குழந்தையின் பெற்றோர், பாதுகாப்பாளர் ஆகியோருக்கு இது போதுமானதாய் இருப்பதில்லே. அவர் குழந்தையைப் பக்கத்தில் அழைத்துக் கொஞ்சிக் குலாவி, “ஐயோ, காயமா பட்டது? எப்படி பட்டது? எங்கே பட்டது? அடே, பெரிய காயம் போலிருக்கிறதே! அடேடே! ரத்தம் வந்திருக்கிறதே!” என்பார். இவ்வாறெல்லாம் சொல்லி குழந்தை அழா விட்டாலும் அழவைத்து விடுவார். அழாதிருக்கும் குழந்தையை அழ வைக்கும் இந்த இலட்சணத்தை என்னென்பது! அவர்களுக்கு ‘ஓடிக்குதிக்காதே, விளேயாடப் போகாதே, போனுல் கீழே விழுந்து விடுவாய், காயம் பட்டுவிடும்’ என்பது போன்ற உடலேயே குறிக்கும் ஒருமுகமான போதனே அளிக்கப்படுகிறது.

குழந்தையின் விளேயாட்டிலும் கூட அதன் உடலே முக்கியமாய் கவனிக்கப்படுகிறது. உடலேக் கருதியே குழந்தை கண்டிக்கவும் படுகிறது. ‘எவ்வளவு அழுக்கடா!’ என்கிருர்கள். இதனுல் குழந்தையின் மனம் எவ்வளவு நோகிறது! இந்தக் குற்றச்சாட்டு எவ்வளவு தவறு! அழுக்கு இருக்கிறதென்பதும் அதைக் கழுவ வேண்டும் என்பதும் உண்மையே. ஆனுல் இந்த அழுக்கை சிரமமின்றிக் கழுவி விடுவதை விட்டு அந்தக் குழந்தை எப்படித்

தாக்கப்படுகிறது! குழந்தையினால் அதைத் தாங்க முடியாது. அவன் மிகவும் துன்புறுகிறான்; மிகவும் வருந்த முறுகிறான். அவன் அகத்தில், ஆன்மாவில் துப்புரவும், தூய்மையும் நிரம்பியிருந்த போதிலும் அசுத்த மாயிருப்பதாக இது என்ன வீண் குற்றச்சாட்டு? உண்மை யில் அந்தக் குழந்தை அசுத்தமாய் இல்லை. எது மிகவும் அழகாயும், இனிமையாயும், புனிதமாயும், பிரியமாயுமுள்ள பரம்பொருளோ அதுவேதான் அந்தக் குழந்தையும். அதன் அம்சம் தான் இவனிடமும் இருக்கிறது. ஆனால் நாம் இவனை அசுத்தன் என்கிறோம். அசுத்தத்திற்கும் இவனுக் கும் என்ன சம்பந்தம்? குழந்தைக்கு இது தெரியவே செய்யாதாகையால் அவனால் இந்தத் தாக்குதலைப் பொறுக்க முடிவதில்லை. அவன் சித்தத்தில் துன்பம் தோன்றுகிறது. துன்பம் தோன்றிய பிறகு திருத்தம் தோன்றுவதற்கில்லை. ஆகையால் அவனுக்கு விஷயத்தை நன்றாய் விளக்கித் துப்புரவாய் வைக்க வேண்டும்.

இதற்கு மாறான காரியத்தைச் செய்து அவன் உடலே என்ற விஷயத்தை அவன் மனதில் பதியச் செய்கிறோம். போதனா சாஸ்திரத்தில் இதை ஒரு மகத்துவம் பொருந்திய தத்துவம் எனக் கொள்ள வேண்டும். தான் எவனுக்கு போதிக்கிறானோ அவன் சர்வாங்க சுந்தரன் என்ற பாவனை குருவுக்கு இருக்கவேண்டும். கணக்கிலோ வேறு கேள்விக்கு விடை சொல்லுகையிலோ பிழை நேர்ந்து விட்டால் கன்னத்தில் அறைகிறார்கள். விடை தவறியதற்கும் கன் னத்தில் அறைவதற்கும் என்ன சம்பந்தம்? பள்ளிக்கூடத் திற்குத் தாமதமாய் வந்தால் கொடுக்கிறார்கள் அடி. அவன் முகம் இரத்தம் போல் சிவந்து போகுமே யல்லாமல் இதனால் அவன் சீக்கிரம் வந்துவிடுவானா? இந்த வேகமான ரத்த ஓட்டம் இப்பொழுது மணி எவ்வளவு என்பதைத் தெரிவிக்க உதவுமா? ஆனால் உண்மையில் இவ்வாறு அடித்துப் புடைத்து நாம் அவனுடைய மிருகத் தனத்தையே வளர்க்கிறோம்; 'நீ இந்த உடலே' என்ற பாவனையை உறுதிப் படுத்துகிறோம்; அவனுடைய வாழ்க்கையை அச்சத்தின் அடிப்படையில் அமைக்கிறோம். உண்மையில் நாம் திருத்தம் செய்ய வேண்டுமானால் இவ்வாறு நிர்ப்பந்தப்படுத்தி உடற்பற்றை வளர்ப்பதனால் அதைச் செய்ய முடியாது. நான் வேறு, என் உடல்

வேறு என்பதை நான் புரிந்து கொள்ளும் பொழுது தான் நான் திருந்த முடியும்.

உடலிலோ, மனதிலோ உள்ள குறைபாட்டை உணருதல் தவறல்ல. இதனால் அந்தக் குறையைப் போக்குவதற்கு உதவி ஏற்படும். ஆனால் 'நான் இந்த உடல் அல்ல' என்ற விஷயம் நமக்குத் தெளிவாய்ப் புரிந்திருக்க வேண்டும். 'நான்' என்பது இந்த உடலிலிருந்து வேறானது, தனித்திருப்பது, மிகவும் அழகியது, ஒளிபொருந்தியது, குறைபாடற்றது. தன் குறைபாடுகளை அகற்றிக் கொள்ளும்பொருட்டு ஆன்ம சோதனை செய்ய வேண்டும். தன்னைத் தன் உடலிலிருந்து வேறாய்ப் பிரித்து அவ்வாறு செய்கிறான் ஆகையால் எவரேனும் அவனுக்கு அவன் குறையைச் சுட்டிக் காட்டினால் அவன் அதைத் தவறாய் நினைப்பதில்லை, கோபம் கொள்வதில்லை. இந்த சரீரம் என்ற, மனமென்ற எந்திரத்தில் என்ன குற்றம் இருக்கிறதென்று சிந்தித்துப் பார்த்து அதை அகற்று கிறான். இதற்கு மாறாக தான் வேறு தன் உடல் வேறு என்று கருதாதவன் தன்னைத் திருத்திக்கொள்ளவே முடியாது. இந்த உடல் இந்தப் பிண்டம் இந்த மண்ணால் பிடித்துவைத்த விம்பம், இதுவே நான் என்று எண்ணு வோன் தன்னை எப்படித் திருத்திக்கொள்வான்? இந்த உடல் எனக்கு ஒரு சாதனமாய், கருவியாய்க் கிடைத் திருக்கிறது என்று நாம் எண்ணும்பொழுது திருத்தம் செய்வது சாத்தியமாகும். ராட்டையில் ஏதேனும் குறை யையோ குற்றத்தையோ ஒருவர் சுட்டிக் காட்டுவாரானால் எனக்குக் கோபமா வருகிறது? குற்றம் ஏதேனும் இருக்கு மானால் அதை நான் போக்கவே செய்கிறேன். உடலின் விஷயத்திலும் இப்படியே எண்ணிக்கொள்ளுங்கள். விவ சாயத்தின் கருவிகள் எப்படியோ அப்படியேதான் இவ்வுடலுமென்று கொள். இந்த உடல் ஆண்டவனுடைய புலத்தைப் பண்படுத்திப் பயிரிடுவதற்கு ஏற்பட்ட ஒரு கருவியே. இது கெட்டுவிடுமானால் இதைக் கட்டாயம் செப்பம் செய்யவேண்டும், ஒழுங்குபடுத்திக் கொள்ள வேண்டும். இவ்வுடல் ஒரு கருவியாய் அமைந்துள்ளது. ஆகையால் இந்த உடலிலிருந்து தம்மை வேறாக வைத்துக் கொண்டு குற்றங் குறைகளிலிருந்து விடுதலை பெற நாம் முயலவேண்டும். இந்த உடலென்ற கருவியிலிருந்து நான் வேறுபட்டவன் தலைவன், யஜமானன், இந்த

உடலிடம் வேலை வாங்குவோன்! இதன் மூலமாய்ச் சிறந்த பணிகள் இயற்றுவோன். பிள்ளைப் பிராயம் முதலே இவ்வாறு உடலிலிருந்து பிரிந்த, வேறுபட்ட பாவனை இருந்துவரச் செய்யவேண்டும்.

ஆடாமல் வெளியே இருந்து வேடிக்கை பார்ப்பவன் ஆட்டத்தின் குணதோஷங்களை நன்றாய் உணர முடிவதைப் போல நாமும் உடல், மனம், புத்தி ஆகியவற்றிலிருந்து நம்மை வேறுபடுத்திக் கொள்ளும்பொழுது அவற்றின் குணதோஷங்களை உணர முடியும். சிலர் "இப்பொழுது என் ஞாபக சக்தி சிறிது குறைந்துவிட்டது; இதற்கு ஏதேனும் உபாயம் சொல்லுங்களேன்!" என்று சொல்லுகிறார்கள். மனிதன் இவ்வாறு சொல்லும்பொழுது அவன் வேறு, அவனுடைய ஞாபக சக்தி வேறு என்பது தெளிவாகிறது. "என் ஞாபக சக்தி கெட்டுப் போய் விட்டது" என்று அவன் சொல்லுகிறான். இதற்கு அவனிடமுள்ள ஒரு சாதனம் அல்லது கருவி கெட்டு விட்டது என்றே பொருளாயிற்று. ஒருவனுடைய பிள்ளை கெட்டுப்போகலாம், புத்தகம் கெட்டுப்போகலாம், ஆனால் எவனும் தானே இழந்து போவதில்லை. இறுதியில் இறக்கும்பொழுது அவன் உடலே எல்லாவகையிலும் கெடுகிறது, வீணாகிறது. அவனோ உள்ளுக்குள் எப்பொழுதும் போல் இருந்துவருகிறான். அவன் குறையற்று, நோயற்று இருந்துவருகிறான். இந்த விஷயம் புரிந்துகொள்ள வேண்டியதொன்று. இது புரிந்துவிடுமானால் இதனால் அநேக சங்கடங்கள், சிக்கல்களிலிருந்து நாம் விடுபடுவோம்.

## (69) வாழ்வைத் தடுக்கும் உடற் பற்று

உடலேதான் 'நான்' என்ற எந்த பாவனை எங்கும் பரவியிருக்கிறதோ அதன் விளைவாய் மனிதன் சிந்தனையின்றி உடலை வளம்பெறச் செய்வதற்காகப் பல்வேறு ஸ்தாபனங்களை அமைத்துக் கொண்டிருக்கிறான். அவைகளைப் பார்த்தாலே மிக்க பீதியுண்டாகிறது. இந்த உடல் பழையதாய்விட்டது, இளைத்து வற்றிவிட்டது; ஆயினும் இதை எவ்வாறேனும் நிலைத்திருக்குமாறு செய்யவேண்டும் என்ற எண்ணம் எப்பொழுதும் இருந்துவருகிறது. ஆனால் இந்த உடலை, இந்த மேல் ஓட்டை உங்களால்

எதுவரையில் நிலைத்திருக்கச் செய்ய முடியும்? சாகும் வரையில்தானே! யமனிடமிருந்து வாரண்ட் வந்தபிறகு ஒரு கணமும் உடல் நிலைத்திருக்க முடியாது. மரணத்தி னெதிரில் மமதையெல்லாம் மறைந்துபோகிறது. ஆயினும் இந்த இழிந்த உடலுக்காக மனிதன் பல்வேறு சாதனங்க ளைச் சேர்க்கிறான். அல்லும் பகலும் இவ்வுடலைப்பற்றியே கவலையுறுகிறான். உடலைக் காக்கும்பொருட்டு மாமிசம் தின்றால் குற்றமில்லை என்று சொல்லுகிறான். மனிதனுடல் அவ்வளவு மதிப்புள்ளதா? அதைக்காக்க மாமிசமும் தின்ன வேண்டுமா? மிருகத்தின் உடலின் மதிப்பு குறைவாம்! ஏன்? மனிதன் உடலுக்குமட்டும் ஏன் மதிப்பதிகம்? அதற்கு என்ன காரணம்? மிருகம் எதை வேண்டுமானா லும் தின்னும்; சுயநலத்தைத் தவிர, தன் வயிற்றைத் தவிர அதற்கு வேறு எண்ணமே இருப்பதில்லை. மனித னுடைய விஷயம் இப்படியல்ல. மனிதன் தன் அக்கம் பக்கத்திலுள்ள சிருஷ்டியைப் பாதுகாக்கிறான்; ஆகையால் மனித உடலுக்கு மதிப்பிருக்கிறது, பெருமையிருக்கிறது. ஆனால் எதனால் மனித உடல் மதிப்புள்ளதாயிற்றோ அதை நாம் மாமிசம் தின்று அழித்துவிடுகிறோம். நீ புலனடக்கத் துடன் வாழ்கிறாய்; பிற உயிர்களின் நன்மைக்கும் பாது காப்பிற்கும் பாடுபடுகிறாய்; தன் நன்மை, தீமைகளை கவனிக்கிறாய் என்பதனால் அல்லவா உனக்குப் பெருமை யெல்லாம்? பிராணிகளிடம் இல்லாமல் மனிதனிடம் மட்டு முள்ள இந்த விசேஷ அம்சங்களினால் அல்லவா அவன் சிறந்தவன் என்று கருதப்படுவது? இதனாலேயே 'அரிதி லும் அரிது மானிடராதலரிது' என்று சொல்லப்பட்டிருக் கிறது. எந்த அஸ்திவாரத்தின்மீது மனிதன் பெரியவனாய், சிறந்தவனா யிருக்கிறானோ அதையே அவன் களையத் தொடங்குவானானால் அவனுடைய பெருமை என்ற கட்டடம் எவ்வாறு நிலைக்கும்? பிற பிராணிகளின் மாமி சத்தைத் தின்று ஜீவிக்கும் சாதாரணப் பிராணிகளைப்போல் மனிதன் சிறிதும் தயக்கமின்றி நடந்துவருவானானால் அவனுடைய பெருமையின் அடிப்படையையே அகற்றுவது போலாகும். இது நான் எந்த மரக்கிளையின்மீது உட்கார்ந் திருக்கிறேனோ அதையே வெட்டுவது போலாகும்!

தற்காலத்தில் வைத்திய சாஸ்திரம் பலவகையான அற்புதங்களைச் செய்து காட்டிக்கொண் டிருக்கிறது. பிராணிக்கு ஊசி ஏற்றி அதன் உடலில்—அந்த உயிருள்ள

பிராணியின் உடலில்—நோய்க் கிருமிகளை உண்டாக்கி, அந்த நோய்களினால் அது எவ்வாறு பாதிக்கப்படுகிற தென்று பார்க்கிறார்கள்! உயிருள்ள ஒரு பிராணிக்கு இத்தகைய பெருத்த கஷ்டத்தைக் கொடுப்பதனால் கிடைக் கும் வைத்திய அறிவு இந்த இழிந்த மானிட உடலைப் பாதுகாக்கப் பயன்படுத்தப் படுகிறது! இதெல்லாம் ஜீவகாருண்யம் என்ற பெயரில் நடந்துவருகிறது. பிராணி யின் உடலில் கிருமியை உண்டாக்கி, அதன் கிருமி திரவத்தை எடுத்து மனிதன் உடலில் ஏற்றுகிறார்கள்! இப்படிப்பட்ட பல்வேறு பயங்கரமான காரியங்கள் நடந்து வருகின்றன. எந்த உடலுக்காக நாம் இவற்றையெல்லாம் செய்கிறோமோ, அது ஒரு கணத்தில் உடைந்துபோகும் கண்ணாடியைப் போன்றிருக்கிறது. அது எதுவரையி லிருக்கும், எப்பொழுது உடையும் என்பதொன்றுமே நிச்சயமில்லை. மனித உடலின் பாதுகாப்பின் பொருட்டு இந்த முயற்சிகளெல்லாம் நடந்துவந்த போதிலும் கடைசி யில் நாம் அனுபவத்தில் பார்ப்பதென்ன? இந்த நுட்ப மான உடலை பத்திரப்படுத்த நாம் முயற்சி செய்யச் செய்ய அது அதிகம் அழிந்துகொண்டிருக்கிறது. இதை நாம் உணர்ந்துகொண்டுதான் வருகிறோம்; ஆயினும் இதைக் கொழுத்துப் பருக்கச் செய்யவும், இதன் பெருமையை வளர்க்கவும் முயற்சி நடந்துகொண்டே இருக்கிறது.

எத்தகைய உணவு கொள்வதனால் நம் அறிவு ஸாத் விகத் தன்மை பொருந்தியதாய் இருக்கும் என்னும் விஷயத்தில் நம் கவனம் செல்லுவதே இல்லை. மனிதன் மனதை ஒழுங்காக்க, அறிவை நிர்மலமாக்க என்ன செய்யவேண்டும், எதன் உதவி பெறவேண்டும் என்பதை அறவே கவனிப்பதில்லை. அவன் கவனிப்பதெல்லாம் உடலின் எடை எப்படி ஏறும் என்பதையே. தரையிலுள்ள மண் எப்படி அவன் உடலில் வந்து ஒட்டிக்கொள்ளும், மண் உருண்டைகள் போல் எப்படி அவன் கையும் காலும் பருக்கும் என்பதையே அவன் சிந்தித்துக்கொண்டிருக் கிறான். ஆனால் சுவற்றில் தட்டிய சாணமுட்டை உலர்ந்து சுருங்கியதும் தானே கீழே விழுவதைப்போல உடலில் ஏறியுள்ள இந்த மண் பூச்சும், இந்தச் சதையும் இறுதியில் உருகிப்போக உடல் மீண்டும் பழைய நிலைக்கே வந்து விடுகிறது. அதனால் தூக்கவே முடியாதிருக்கும் அள

வுக்கு நாம் உடலில் இவ்வளவு மண்ணைப் பூசுகிறோமே, இவ்வளவு எடையை ஏற்றுகிறோமே இதன் பொருள்தான் என்ன? ஆம், இவ்வுடல் நமக்கு ஒரு கருவியே. இதை ஒழுங்காக வைத்துக்கொள்வதற்குத் தேவையானவைகளை யெல்லாம் நாம் செய்யவேண்டியதே. எந்திரத்தைக் கையாளவேண்டும், பயன்படுத்தவேண்டும். 'எந்திர அபி மான' மென்று ஒன்று இருக்க முடியுமா? அப்படியானால் இந்த உடலென்ற எந்திரத்தின் விஷயத்திலும் நாம் இதே வகையில் ஏன் எண்ணலாகாது?

கருத்தென்னவெனில், இவ்வுடல் சாத்யம் அல்லது குறிக்கோளல்ல; சாதனம் அல்லது கருவியே. நமக்கு இந்த எண்ணம் உறுதியாகுமானால் உடலைப்பற்றி இவ் வளவு அமளி துமளி ஆர்ப்பாட்டம் நடக்கிறதே, அது இராது; வாழ்க்கை நமக்கு வேறு வகையிலேயே காட்சி யளிக்கத் தொடங்கும். பிறகு இந்த உடலை அலங்கரிப்பதில், ஜோடிப்பதில் மதிப்பு எதுவும் தோன்றாது. உண்மையில் இவ்வுடலுக்கு ஒரு சாதாரணத் துணியே போது மானது. ஆனால் நாம் அது கூடாதென்று மிருதுவான வழ வழ வென்ற துணியை விரும்புகிறோம். அது நல்ல நிறமுள்ளதாய், நல்ல கரையுள்ளதாய், சித்திர வேலைப் பாடுகள் அமைந்ததாய் இருக்கவேண்டும் என்றெல்லாம் நினைக்கிறோம். அதன் பொருட்டு நாம் பலரைக்கொண்டு விதவிதமாக வேலைகள் செய்விக்கிறோம். இதெல்லாம் எதற்கு? அந்த பகவானுக்கு அறிவில்லையா? இந்த உட லுக்கு அழகிய சித்திர வேலைப்பாடுகள் தேவையாயிருக்கு மானால் அவர் புலியின் உடலில் தன் கைத்திறனைக் காட்டி யிருப்பது போல உன் உடலிலும், என் உடலிலும் காட்டியிருக்க மாட்டாரா? அவருக்கு இது முடியாத தொன்றா? மயிலைப்போல் ஒரு அழகிய தோகையை வேண்டுமானாலும் நமக்குச் செருகியிருப்பார். ஆனால் ஆண்டவன் மனிதனுக்கு ஒரே நிறத்தைத் தந்திருக்கிறார். அதில் ஏதேனும் கறை பட்டுவிட்டால் அதன் அழகுகெட்டுப் போகிறது. மனிதன் இயற்கையிலேயே அழகாய்த் தானிருக் கிறான். மனித உடலை அலங்கரிக்கவேண்டும் என்பது ஆண்டவன் நோக்கமே அல்ல. சிருஷ்டியில் உள்ள அழகு சாதாரணமானதா? தன் கண்களால் இதைப் பார்த்துக் கொண்டே யிருப்பது தான் மனிதனுடைய வேலை. ஆனால் அவன் வழி தவறி விட்டான். ஜெர்மனி நம் சாயத்தொழிலை

அழித்துவிட்டது என்று சொல்லுகிறுர்கள், தம்பீ! உன் மனதிலுள்ள சாயம், மனதின் இயற்கைப் பண்பு முன்னமேயே மடிந்துபோயிற்று. அதன் பிறகே உனக்கு இந்தச் செயற்கைச் சாயத்தில் ஆசை தோன்றி யிருக்கிறது! அதன் காரணமாகவே நீ பிறரை அண்டினவனுய்விட்டாய். காரணமெதுவுமின்றி நீ இந்த உடலலங்காரச் சுழலிற் சிக்கிவிட்டாய். இதனுல் மனதை அழகு படுத்துதல், அறிவை வளர்த்தல், உள்ளத்தை நேர்த்தியாக்குதல் ஆகியவற்றில் உன் கவனமே செல்லக் காணும்.

## (70) தத்துவமஸி

ஆகையால் இந்தப் பதின்மூன்றும் அத்தியாயத்தில் பகவான் நமக்கு அளித்துள்ள கருத்து மிகவும் மதித்தற்குரியது. 'நீ உடலல்ல, ஆன்மா' "तत् त्वमसि—அந்த ஆன்ம உருவம் நீயே" இது மிகவும் உயர்ந்த, புனிதமான, தூய, கருத்தாகும், மொழியாகும். ஸம்ஸ்கிருத இலக்கியத்தில், "இந்த மேலுறை, தோல் மூடி, நீ அல்ல. அந்த உண்மையான அழிவற்ற பழம் அல்லது சுளேயே நீ" என்ற உயர்ந்த கருத்து அடங்கியிருக்கிறது. எந்தக் கணத்தில் மனிதனுடைய உள்ளத்தில் 'அதுவே நீ,' 'இந்த உடல் நானல்ல, அந்தப் பரம்பொருளே நான்' என்ற இந்தக் கருத்து பதியுமோ, அதே கணத்தில் அவன் மனதில் இதற்கு முன் என்றுமே அறியாத ஒரு புதிய இன்பம் அலே வீசி எழும். 'என் அந்த உருவை அழிக்கும், தகர்க்கும் திறமை உலகில் எந்தப் பொருளுக்கும் இல்லே; எவருக்கும் அந்த சக்தி இல்லே.' இந்த சூக்குமமான கருத்து இந்த உள்ளத்திலிருந்து எழுந்த மொழியில் அடங்கியுள்ளது.

இவ்வுடலிலிருந்து வேறுபட்டதாய், அழிவற்றதாய், களங்கமற்றதாய் உள்ள எந்த ஆன்ம தத்துவமுண்டோ அதுவே நான். அந்த ஆன்ம தத்துவத்தின் பொருட்டு எனக்கு இவ்வுடல் கிடைத்திருக்கிறது. எவ்வெப்பொழுது அந்த பரமதத்துவம் கேடுறுவதற்கு சந்தர்ப்பங்கள் தோன்றுகின்றனவோ அவ்வப்பொழுது நான் அதைக் காக்கும் பொருட்டு இவ் வுடலே வீசி எறிந்து விடுவேன். பரமதத்துவத்தைப் பழுதுபடாமற் பாதுகாக்கும் பொருட்டு இவ்வுடலே அவியாய் அளிப்பதற்கு நான் எப்பொழுதும் சித்தமாயிருப்பேன். நான் இந்த உடலில் ஆரோகணித்து

வந்திருப்பது என்னையே தோல்வியுறச் செய்யும் பொருட்டா? உடலின்மீது என் அதிகாரம் செல்லவேண்டும். நான் இவ்வுடலை உபயோகிப்பேன். இதன் மூலமாய் எனக்கும் பிறருக்கும் நன்மையை வளர்ப்பேன். மூவுலகிலும் மங்களம் பொங்கச் செய்வேன். பெரிய தத்துவங்களின் பொருட்டு இவ்வுடலை வீசி எறிந்துவிட்டு 'ஆண்டனுக்கு வெற்றி!' என்று கூவுவேன். பணம் படைத்தவன் ஒரு துணி அழுக்கானதும் அதைக் கழற்றி எறிந்துவிட்டு வேறொன்றை உடுத்துகிறான்; நானும் இவ்வுடலை அப்படியே செய்வேன். வேலைக்கு இந்த உடல் தேவையாயிருக்கிறது. இது வேலைக்குத் தகுதியற்றதாய் விடும்பொழுது இதை வீசி எறிவதில் எனக்கு என்ன தயக்கம் ஏற்படப் போகிறது?

சத்தியாக்ரஹத்தின் மூலம் நமக்குக் கிடைக்கும் படிப்பினை இதுவே. உடல், ஆன்மா ஆகிய இவை இரண்டும் வெவ்வேறு வஸ்துக்கள். மனிதன் இந்த மர்மத்தை என்று உணருவானோ அன்றே அவனுடைய உண்மைக் கல்வி, உண்மையான வளர்ச்சி ஆரம்பமாகும். அப்பொழுதே சத்தியாக்ரஹமும் நமக்குக் கை வரும். ஆகையால் நாம் ஒவ்வொருவரும் இந்த பாவனையை நம் உள்ளத்தில் பதித்துக்கொள்ளுதல் அவசியமாகும். உடல் ஒரு வெறும் சாதனமே, நிமித்தமே; ஆண்டவனால் அளிக்கப்பட்ட ஒரு கருவியே. அதன் தேவை என்று முடிந்து போகிறதோ அன்றே அதை எறிந்துவிடவேண்டும். குளிர் காலத்திற்குதவும் உஷ்ணம் தரும் ஆடைகளை நாம் கோடையில் ஒதுக்கி வைத்து விடுகிறோம்; இரவில் போர்த்துக்கொள்ளும் கம்பளியை காலையில் மடித்துவைத்து விடுகிறோம். காலையில் அணிந்ததை மாலையில் கழற்றி வைத்து விடுகிறோம். இவ்வுடலையும் இவ்வாறேதான் எண்ண வேண்டும். பயன்படும் வரையில் வைத்துக்கொண்டு என்று இதனால் பயனில்லாமற் போகிறதோ அன்றே உடலென்ற இவ்வாடையைக் களைந்து விடுவோம். ஆன்மாவின் வளர்ச்சியின் பொருட்டு பகவான் நமக்கு இந்த யுக்தியை அருளுகிறார்.

## (71) கொடியோரின் ஆட்சிக்குச் சாவுமணி

'உடலிலிருந்து நான் வேறுபட்டவன்' என்பதை நாம் புரிந்துகொள்ளாதிருக்கும் வரையில் துஷ்டர்கள் நமக்குக் கொடுமை புரிந்துகொண்டே யிருப்பார்கள்; நம்மை அடிமைப்படுத்திக்கொண்டே யிருப்பார்கள்; நமக்கு என்னென்ன தீமைகள் புரிவார்களென்று ஒன்றும் சொல்லுவதற்கில்லை. அச்சத்தினுலேயே கொடுமைகள் விளைவிப்பது சாத்தியமாகிறது. ஒரு இராட்சசன் ஒரு மனிதனைப் பிடித்துக்கொண்டான். இராட்சசன் அவனிடம் ஓயாது வேலை வாங்கிக்கொண்டே யிருந்தான். அவன் சிறிது ஓய்ந்திருப்பானுனல் இராட்சசன் அவனிடம் "உன்னைத் தின்று விடுவேன்! உன்னைத் தொலைத்து விடுவேன்!" என்பான். முதலில் அந்த மனிதன் பயந்துகொண்டிருந்தான். ஆனல் இராட்சசனுடைய பயமுறுத்தல்கள் அவனுக்குச் சகிக்கமுடியாமற் போகவே அவன், "வா, தின்னு! தின்பதானல் தின்று விடு!" என்ருன். ஆனல் இராட்சசன் தின்னவா அவனை வைத்துக்கொண்டிருந்தான்? அவனுக்கொரு பணியாள், அடிமை வேண்டியிருந்தது. தின்றுவிட்டால் அவன் வேலையை எவன் செய்வான்? அவன் செய்து வந்தது வெறும் அதட்டல், புரட்டலே அன்றி வேறல்ல. ஆனல், "இந்தா என்னைச் சாப்பிடு" என்று பதில் வந்ததும் அவனுடைய கொடுமையும் நின்றுவிட்டது. துஷ்டர்களுக்கு தம் கொடுமைக்குள்ளாயிருப்பவர்கள் உடலிடம் கெட்டியாய் ஒட்டிக்கொண்டிருப்பவர்கள் என்பது தெரியும். உடலுக்குத் துன்பம் ஏற்பட்டதும் இவர்கள் அடிமைகளாய், அடங்கியிருந்து விடுவார்கள் என்று அவர்கள் அறிவார்கள். ஆனல் உடற்பற்றைத் துறந்ததும் நீங்கள் சக்கரவர்த்திகளாய் விடுவீர்கள், சுதந்திரம் பெற்றுவிடுவீர்கள்; எல்லாத் திறனும் உங்கள் கைக்கு வந்துவிடும்; எவனும் உங்கள்மீது அதிகாரம் செலுத்த முடியாது. அப்பொழுது கொடுமை செய்வதற்கு ஆதாரமே இல்லாமற் போய்விடும். 'நான் உடல்' என்ற இந்த பாவனையே அதற்கு அடிப்படையாய் அமைந்திருப்பது. இவர்கள் உடலை வதைத்தால் உடனே நம் வசப்பட்டுவிடுவார்களென்று அவர்கள் தெரிந்துகொண்டிருப்பதால் அவர்கள் பயமுறுத்தும் முறையில் பேசுகிருர்கள்.

'நான் உடலே' என்ற இந்த பாவனையினுலேயே

பிறருக்குக் கொடுமை செய்ய, துன்புறுத்த விருப்ப முண்டாகிறது. ஆனால் இங்கிலாந்தின் கர்மவீரனை கிரான்மர் சொன்னதென்ன? "என்னைக் கொளுத்துகிறாயா? சரி, கொளுத்து. இந்தா, முதலில் இந்த வலதுகையைக் கொளுத்து!" என்றான். இவ்வாறே ரட்லேயும் லாட்டிமரும் சொன்னார்கள்: "எங்களைக் கொளுத்த விரும்புகிறீர்களா? எங்களை யார் கொளுத்த முடியும்? நாங்கள் எவராலும் அவிக்க முடியாத தர்மத் தீயை மூட்டியிருக்கிறோம். உடலென்ற இந்த மெழுகுவர்த்தியை, இந்தக் கொழுப்பைக் கொளுத்தி உண்மைத் தத்துவங்களின் ஒளியை எங்கும் பரப்புவதே எங்கள் பணி. உடல் அழிந்தால் அழியட்டுமே! அது ஒருநாள் அழியவேண்டியதுதானே?" என்றார்கள். சோக்ரத்தருக்கு விஷம் கொடுத்துக் கொல்வதென்ற தண்டனை விதிக்கப்பட்டது. அப்பொழுது அவர், "எனக்கோ வயதாய்விட்டது. நான்குநாள்போனால் இந்த உடல் அழியத்தான் போகிறது. அழியப்போவதை அழிப்பதில் உங்கள் வீரம் எங்கே வெளியாகிறது? இவ்வுடல் ஒருநாள் நிச்சயமாய் அழியவே போகிறதல்லவா? அழியப்போவதை அழிப்பதில் உங்களுக்கு வரப்போகும் பெருமை என்ன?" என்று கேட்டார். என்று சோக்ரத்தருக்கு விஷம் அருத்தப்படுவதாயிருந்ததோ அதற்கு முதல்நாள் இரவில் அவர் சீடர்களுக்கு ஆன்மாவின் அழியாத் தன்மையைப்பற்றி போதித்துக் கொண்டிருந்தார்; உடலில் விஷம் புகுந்ததும் அதற்கு என்னென்ன வேதனைகள் ஏற்படும் என்பதை அவர் உற்சாகமாய் விவரித்துக் கொண்டிருந்தார். அவருக்குச் சிறிதும் கவலையே தோன்றவில்லை. ஆன்மாவின் அமரத் தன்மையைப் பற்றிய இந்தப் பேச்சு முடிந்ததும் அவருடைய சீடனொருவன், "இறந்தபின் உங்கள் ஈமச் சடங்குகளை எப்படிச் செய்வது" என்று கேட்டான். அதற்கு அவர், "பேஷ்! கொல்லுவதற்கு அவர்கள், புதைப்பதற்கு நீயா? அப்படியானால் கொல்லும் அவர்கள் எனக்கு விரோதிகளாக, புதைக்கும் நீ எனக்கு மிகவும் வேண்டியவனோ? அவர்கள் புத்திசாலித்தனமாய் என்னைக் கொல்ல, நீ சாமர்த்தியமாய் என்னைப் புதைக்கப் போகிறாயோ? என்னைப் புதைப்பதற்கு நீ யார்? நான் உங்கள் எல்லோருக்கும் ஈடு கொடுப்பேன். நீ என்னை எதில் புதைப்பாய்? மண்ணிலா, கல்லறையிலா? என்னை

எவனும் கொல்லவும் இயலாது, புதைக்கவும் எவனாலும் ஆகாது. நான் இதுவரையில் உங்களுக்குப் போதித்த தெல்லாம் வீணா? ஆன்மா அமரத்தன்மையுள்ளது. அதை எவனும் கொல்லவோ, புதைக்கவோ முடியாது'' என்றார். உண்மையில் கடந்த இரண்டாயிரத்தைந்நூறு வருஷங்களாக அந்த சோக்ரத்தர் என்ற பெரியார் எல்லோரையும் புதைத்துவிட்டு தாம் மேலோங்கி நிற்கிறார்!

## (72) பரம்பொருளின் சக்தியில் உறுதி

கருத்தென்னவென்றால், உடற்பற்று இருக்கும்வரையில், பயம் இருக்கும்வரையில், உண்மைப் பாதுகாப்புக்கு இடமில்லை; அதுவரையில் அச்ச மிருந்துகொண்டே தானிருக்கும். சிறிது கண் மூடியதும் பாம்பு வந்து கடித்துவிடுமோ, திருடர் வந்து தாக்குவரோ என்ற அச்ச மிருந்துவரும். மனிதன் தலைமாட்டில் ஒரு தடியை வைத்துக்கொண்டு தூங்குகிறான். எதற்காக என்று கேட்டால், ''பக்கத்திலிருப்பது நல்லது; திருடன், திருடன் வந்தால்...'' என்கிறான். அடே அப்பாவி! திருடன் அந்தத் தடியையே எடுத்து உன் தலையில் போட்டாலோ? திருடன் தடி கொண்டுவர மறந்துபோயிருந்தால் நீ அவனுக்காக முன்கூட்டியே சித்தமாய் வைத்திருக்கிறாயா? நீ யாருடைய தென்பில் தூங்குகிறாய்? இந்த சமயத்தில் நீ உலகின் கையில் அல்லவா இருக்கிறாய்? நீ விழித்திருந்தால் அல்லவா உன்னைப் பாதுகாத்துக் கொள்வாய்? உறக்கத்தில் உன்னைக் காப்பவர் யார்?

நான் ஏதோ ஒரு சக்தியை நம்பித் தூங்குகிறேன். எந்த சக்தியின் நம்பிக்கையினால் சிங்கம் பசு முதலிய பிராணிகள் உறங்குகின்றனவோ அதை நம்பியே நானும் தூங்குகிறேன். சிங்கத்திற்கும் உறக்கம் வருகிறது. உலகத்தினிடமே பகைமை பூண்டுள்ளமையால் ஒவ்வொரு கணமும் பின்னால் திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டிருக்கும் சிங்கமும் தூங்கவே செய்கிறது. அந்த சக்தியினிடம் நம்பிக்கையில்லையானால் சில சிங்கங்கள் தூங்கவும் வேறு சில விழித்துப் பாரா செய்யவும் அவை ஏற்பாடு செய்துகொள்ள வேண்டியிருக்கும். எந்த சக்தியை நம்பி சிங்கம், புலி, ஓநாய் முதலிய துஷ்டஜந்துக்களும் உறங்குகின்றனவோ அதே சிருஷ்டி யெங்கும் வியாபித்துள்ள

சக்தியின் மடியில் நானும் தூங்கிக்கொண் டிருக்கிறேன். தாயின் மடியில் குழந்தை கவலையற்றுத் தூங்குகிறது. அப்பொழுது உலகின் சக்கரவர்த்தியே தூங்குவதுபோல் தான் அது தூங்குகிறது. நீங்களும் நானும் அந்த சிருஷ்டி எங்கும் வியாபித்துள்ள தாயின் மடியில் இதே வகையில் அன்பும் நம்பிக்கையும் அறிவுங்கொண்டு உறங்கும் பயிற்சியைப் பெறவேண்டும். எந்த சக்தியின் அடிப்படையில் என் இந்த வாழ்க்கை முழுமையும் நடந்து கொண்டிருக்கிறதோ, அதை நான் மேன்மேலும் நன்கு புரிந்துகொள்ள வேண்டும். அந்த சக்தி எனக்கு மேன் மேலும் நன்கு விளங்கவேண்டும். இந்த சக்தியில் எனக்கு எவ்வளவு அதிக நம்பிக்கை தோன்றுமோ அவ்வளவு அதிகப் பாதுகாப்பு எனக்கு ஏற்படும். எனக்கு இந்த சக்தியின் அனுபவம் எந்த அளவுக்கு அதிகமாகுமோ அவ்வளவுக்கு நான் வளர்ச்சியுறுவேன். இந்தப் பதின்மூன் ரும் அத்தியாயத்தில் இதன் வரிசைக் கிரமமும் சிறிது காட்டப்பட்டிருக்கிறது.

## (73) பரம்பொருளின் சக்தியை மேன்மேலும் உணர்தல்

உடலில் வீற்றிருக்கும் ஆன்மாவைப்பற்றிய நினைவு மனதில் எழாதிருக்கும்வரையில் மனிதன் சாதாரணக் காரியங்களிலேயே ஆழ்ந்திருக்கிருன். பசி எடுத்தால் சாப்பிடுவதும் தாகம் தோன்றிஞல் நீர் அருந்துவதும் தூக்கம் வந்தால் தூங்குவதுமாய், இதற்குமேல் எதுவும் செய்ய அறியாதிருந்துவருகிருன். இவைகளுக்காகவே அவன் சண்டையிட்டு, இவைகளைப் பெறும் ஆசையே மனதில் கொண்டிருக்கிருன். இவ்வாறு இந்த உடலைப் பற்றிய காரியங்களிலேயே அவன் மூழ்கிக் கிடக்கிருன். வளர்ச்சியோ இதற்குப் பிறகுதான் தொடங்குகிறது. இது வரையில் ஆன்மா பார்த்துக்கொண்டே இருந்துவருகிறது. கிணற்றின் பக்கம் தவழ்ந்து செல்லும் குழந்தையின் பின் தாய் மிகுந்த எச்சரிக்கையுடன் நின்றுகொண் டிருப்பதைப்போல ஆன்மா நம்மை உன்னிப்புடன் கவனித்துக் கொண்டிருக்கிறது. அது எல்லாக் காரியங் களையும் அமைதியாய்ப் பார்த்துக்கொண்டே இருக்கிறது.

இது சாட்சியாய் நின்று (उपद्रष्टा உபத்ரஷ்டா) பார்க்கும் நிலையென்று சொல்லப்பட்டிருக்கிறது.

இந்நிலையில் ஆன்மா பார்க்கிறதேயன்றி அது தன் சம்மதம், ஒப்பம் அளிப்பதில்லை. ஆனால் இதுவரையில் தன்னை உடலென்றே கருதி எல்லாக் காரியங்களையும், எல்லா விவகாரங்களையும் செய்துவந்த இந்த ஜீவன் பிறகு விழித்துக் கொள்ளுகிறது. நான் மிருகத்தைப் போலல் லவோ வாழ்க்கை நடத்திவருகிறேன் என்ற அறிவு அதற்கு உதிக்கிறது. ஜீவன் இவ்வாறு சிந்திக்கத் தொடங்கும் பொழுது நீதியின் அடிப்படை தொடங்குகிறது. அப் பொழுது அது ஒவ்வொரு விஷயத்தையும் இது சரியா, தவறு என்று ஆராய்கிறது ; விவேகத்தைப் பயன்படுத்தத் தொடங்குகிறது ; அதன் பகுத்துணரும் சக்தி தலையெடுக் கிறது ; மனம் போனவாறு காரியம் செய்துவந்தது நிற்கிறது. இஷ்டம்போல் இருந்துவந்த இயக்கம்போய் இப்பொழுது அடக்கம் ஏற்படுகிறது. ஜீவன் இவ்வாறு நீதியின் புலத்தில் புகும்பொழுது ஆன்மா தனித்து நின்று பார்த்துக் கொண்டிராது. அது உள்ளுக்குள் ஆதரவைத் தெரிவிக்கிறது. 'நல்லது!' 'பேஷ்!' என்ற துவனி உள்ளே எழும்புகிறது. இப்பொழுது அது வெறும் உபத்ரஷ்டாவாய் இருந்தது போய் (अनुमन्ता - அநுமந்தா) ஆதரவாளன் ஆய்விட்டது.

பசித்த பரதேசி யொருவன் வாயிலில் வந்து கூவ நீங்கள் தாம் சாப்பிடுவதற்கு எடுத்து வைத்திருந்த சோற்றை அவனுக்கு எடுத்துப் போட்டுவிட்ட பிறகு இரவில் உங்கள் செயலின் நினைவு வரும்பொழுது மன திற்கு எவ்வளவு இன்பம் ஏற்படுகிறது என்பதைப் பாருங்கள். உள்ளுக்குள்ளிருந்து ஆன்மாவின் 'நல்ல காரியம் செய்தாய்!' என்று எழும் துவனி காதுகளில் ஒலித்துக்கொண்டே யிருக்கும். தாய் குழந்தையின் முதுகைத் தடவிக்கொடுத்து, "நல்ல காரியம் செய்தாய், குழந்தாய்!" என்று சொல்லும்பொழுது அவனுக்கு உலகத் தையே தனக்கு வெகுமானம் அளித்துவிட்டதுபோன்ற இன்பம் ஏற்படுகிறது. அவ்வாறே நம் உள்ளத்தில் எழுந் தருளியுள்ள பரம்பொருளின், 'பேஷ் குழந்தாய்!' என்ற இந்தச் சொற்கள் நமக்கு ஊக்கமளிக்கின்றன. இத்தகைய

சமயத்தில் ஜீவன் போக வாழ்க்கையை விட்டு நீதி வாழ்க்கையில் காலே ஊன்றி நிற்கிறது.

இதற்கடுத்தபடியில் மனிதன் நீதிவாழ்க்கையின் கடமையைப் புரிவதன் மூலமாய் தன் மனதின் அழுக்கு அனைத்தையும் கழுவ முயலுகிறான். ஆனால் இதைச் செய்துகொண்டே வருகையில் இதனால் அலுப்புறும் சமயமொன்று வருகிறது. அப்பொழுது ஜீவன், "ஏ பகவானே, என் முயற்சிகள், என் சக்திகள் இப்பொழுது எல்லையைத் தொட்டுவிட்டன. எனக்கு அதிக பலம் கொடுங்கள்!" என்று வேண்டத் தொடங்குகிறான். மனிதன் தான் எவ்வளவுதான் முயற்சி செய்தபோதிலும் தான் ஒருவனாலேயே வெற்றி பெற்றுவிட முடியாது என்பதை உணரும்வரையில் பிரார்த்தனையின் இரகசியம் அவனுக்குப் புரிவதற்கில்லை. தன் சக்தியனைத்தையும் உபயோகித்தும் பற்றாமல் போகும்பொழுது விசனம் தோய்ந்த மனதுடன் திரௌபதியைப்போல பரம் பொருளைக் கூவி அழைக்கவேண்டும். ஆண்டவன் கிருபையின், உதவியின் அருவி இடையறாது பெருகிக் கொண்டே யிருக்கிறது. தாகம் எடுத்த எவரும் உரிமை யுணர்ச்சியுடன் அந்தக் கருணைவெள்ளத்தைப் பருகலாம். குறையுள்ளவர் கேட்டுக்கொள்ளலாம். இத்தகைய உறவு இந்த மூன்றும் கட்டத்திலுள்ளது; இப்பொழுது பரம் பொருள் மேலும் அண்மையில் வருகிறது. அது வெறும் புகமுரை கூறாமல் கைகொடுத்துதவ வருகிறது.

முதலில் ஆண்டவன் தொலைவில் நின்றிருந்தான். ஆசிரியன் "கேள்விக்கு விடை எழுது" என்று சொல்லி விட்டு விலகி நிற்பதைப் போல ஜீவன் போகமயமான வாழ்க்கையில் ஆழ்ந்துகிடக்கும் வரையில் பரம்பொருள் எட்டி நின்றுகொண்டு, "சரிதான் உன் ஆட்டத்தை நடத்து" என்று சொல்லுகிறது. பிறகு ஜீவன் நீதிப் புலத்தில் புகுகிறது. அப்பொழுது பரம்பொருளால் வெறும் நடுவு நிலைமை வகிப்பதோடு நிற்க முடியவில்லை. ஜீவனின் மூலமாய் நல்ல காரியம் நடைபெறுகிறது என்பதைக் கண்டதும் பகவான் மெல்ல எட்டிப் பார்த்து "பேஷ்!" என்று சொல்லுகிறார். இவ்வாறு நல்ல காரியங்கள் நடந்து கொண்டே வருவதனால் சித்தத்தின் மேலே படிந்திருந்த புழுதிநீங்கி உள்ளழுக்கைக்கழுவ வேண்டிய சமயம்

வருகையில் அவனுடைய முயற்சியெல்லாம் சேர அவன் பரம்பொருளை உதவிக்கு அழைக்கையில் அது, "இதோ வந்தேனென்று" ஓடோடியும் வருகிறது. பக்தனுடைய உற்சாகம் குறைந்ததும் ஆண்டவன் அங்கே வந்து நின்று விடுகிறான். உலகத்தின் ஊழியனான சூரிய நாராயணன் உங்கள் வாயிலில் எப்பொழுதும் நின்று கொண்டிருக்கிறான். கதவு மூடியிருந்தால் அதை உடைத்துக்கொண்டு அவன் உள்ளே புகமாட்டான். ஏனெனில், அவனொரு ஊழியன், வேலையாள். அவன் எஜமானனின் மரியாதையை உணர்ந்து நடப்பவன்; அவன் கதவைத் தட்ட மாட்டான். உள்ளே எஜமானன் தூங்கிக் கொண்டிருந்தாலும் சூரியனென்ற பணியாள் வாயிற்படிக்கு வெளியே இருப்பான். கதவைச் சிறிது திறந்தால் போதும், தன் முழு ஒளியுடன் உள்ளே புகுந்து இருளை அகற்றிவிடுவான். பரம்பொருளின் நிலையும் இப்படிப்பட்டதே என்று உணருங்கள். அதனிடம் உதவியைக் கோருவீர்களானால் அது இருகைகளையும் விரித்துக் கொண்டு கட்டாயம் வருமென்று நம்புங்கள். பீமாநதியின் கரையில் (பண்டரிபுரத்தில்) இடையில் ஊன்றிய கைகளுடன் அவன் எப்பொழுதும் வரச் சித்தமாயிருக்கிறான்.

"கையை மேலே எழுப்பி, பிரபுவே, வாவென்றழை"*

என்று துகாராம் முதலியவர்கள் வர்ணித்திருக்கிறார்கள். மூக்கைத் திறந்ததும் காற்று உள்ளே புகுந்து விடுகிறது. கதவைத் திறக்க வேண்டியது தான், ஒளி உள்ளே நுழைந்து விடுகிறது. காற்று, ஒளி ஆகியவற்றை உதாரணமாய்க் கூறுவதும் எனக்குப் போதுமானதென்று தோன்றவில்லை. அவைகளைவிட ஆண்டவன் அதிக அண்மையில் அதிக ஆவலுள்ளவனாயிருக்கிறான். அவன் பார்வையாளனாய் ஆதரவாளனாய் இல்லாது எல்லா வகையிலும் (भर्ता-பர்த்தா) தாங்குபவனாயிருக்கிறான். மனதின் அழுக்கைப் போக்கும் பொருட்டு வேறு புகலின்றி நாம், 'என் உயிர் உன் கையிலிருக்கிறது, ஆண்டவனே! காப்பாய்' என்றும், 'நீயே எனக்கு உதவுவோன். உன் ஆதரவு எனக்குத் தேவை' என்றும் வேண்டும்பொழுது அந்தக் கருணையே உருவானவன் எவ்வாறு விலகிநிற்பான்?

* "उभारूनि बाहे । विठो पालवीत आहे"

பக்தனுக்கு உதவும் அந்த பகவான், நம் குறையைப் பூர்த்தி செய்யும் அந்தப் பிரபு ஓடி வருகிறன். அப்பொழுது ரயிதாஸின் தோலைக் கழுவுகிறன், ஸஜன் சக்கிலியின் மாமிசத்தை விற்கிறன், கபீருடைய துணியை நெய்கிறன், ஜனபாயுடன் இயந்திரத்தில் மாவு அரைக்கிறன்!

இதற்கடுத்தபடி, பரம்பொருளின் கிருபையைப் பெற்றதனல் கர்மத்திலிருந்து கிட்டிய பயனையும் தானே ஏற்றுக் கொள்ளாது, அதற்கே அளித்துவிடலாகும். இந்த நிலையில் ஜீவன் பரம்பொருளிடம் 'உன் பயனை நீயே அனுபவி' என்று சொல்லுகிறது. நாமதேவர் கல்லுளி மங்கனைப்போல், "பிரபுவே, நீர் பாலைக் குடித்தால் தான் ஆயிற்று" என்று சொல்லிக் கொண்டே உட்கார்ந்து விட்டார். எவ்வளவு இனிய சந்தர்ப்பம்! அவர் கர்மங்களனைத்தின் பயனை பாலைப் பகவானுக்கு அர்ப்பணம் செய்கிறர். இவ்வாறு வாழ்க்கையின் சொத்துக்களெல்லாம், சம்பாத்தியமெல்லாம் எந்தப் பரம்பொருளின் கிருபையினல் கிடைத்ததோ அதற்கே அர்ப்பணம் செய்து விடுகிறர். தர்மபுத்திரர் சுவர்க்கத்தில் அடியெடுத்து வைக்க இருந்த பொழுது அவருடன் வந்த நாய் உள்ளே அனுமதிக்கப்படவில்லை. அப்பொழுது அவர் தம் வாழ்க்கையின் புண்ணியப் பயன்களனைத்தையும், சுவர்க்கத்தையும் ஒரு கணத்தில் விட்டுவிட்டார். உபத்ரஷ்டா, அனுமந்தா, பர்த்தா—பார்வையாளர், ஆதரவாளர், தாங்குபவர் என்ற வகைகளிருந்துவந்த பரம்பொருள் இப்பொழுது भोक्ता (போக்தா—நுகர்வோர்) ஆய்விடுகிறது. ஜீவன் இப்பொழுது எய்தியிருக்கும் நிலையில் பரம்பொருளே இவ்வுடல் இன்பங்களை நுகர்வதாய் விடுகிறது.

இதன் பிறகு இனி சங்கல்பம் அல்லது தீர்மானம் செய்வதையே விட்டுவிட வேண்டும். கர்மத்தில் மூன்று படிகள் வருகின்றன. முதலில் நாம் சங்கல்பம் செய்கிறேம். பிறகு காரியம் செய்கிறேம். அதன் பிறகு பயன்கிட்டுகிறது. கர்மத்திற்கு கடவுளின் உதவியால் எந்தப் பயன் கிட்டிற்றே அதையும் அவருக்கே அர்ப்பணம் செய்தாய் விட்டது. கர்மம் செய்பவரும் கடவுள், பயனை நுகர்வோரும் கடவுளே! இப்பொழுது அந்தக் கர்மத்தைச் சங்கல்பம் செய்பவர் அல்லது தீர்மானிப்பவரும் கடவு

ளாகவே இருக்கட்டுமே ! இவ்வாறு கர்மத்தின் தொடக்கம், இடைநிலை, இறுதி ஆகிய எல்லாம் கடவுள் மயமாய் விடட்டும். ஞானதேவர் சொல்லியிருக்கிறார் :

" தோட்டக்காரன் திருப்பிவிட்ட பக்கங்களில் சென்றேன் ;
வாய்க்காலின் நீரைப்போல, நாம் ஆக வேண்டும் " *

தோட்டக்காரன் நீரை எந்தப் பக்கம் பாய்ச்ச விரும்புகிறானோ அந்தப் பக்கம் அது பதில் பேசாமல் ஓடுகிறது. தோட்டக்காரன் இஷ்டம்போல் புஷ்பச் செடி அல்லது பழ மரத்திற்கு நீரைப் பாய்ச்சி வளர்க்கிறான் ; இவ்வாறே என் கையினால் நடைபெற வேண்டிய காரியங்களையும் கடவுளே முடிவு செய்து கொள்ளட்டும். என் சித்தத்தின் சங்கல்பங்களனைத்தின் பொறுப்பையும் நான் அவனிடமே ஒப்புவித்து விட்டேன். நான் எல்லாச் சுமைகளையும் குதிரையின் மீது ஏற்றிவிட்ட பிறகு சிலவற்றை மட்டும் எதற்காகத் தலையில் சுமந்து கொண்டிருக்க வேண்டும்? அவைகளையும் குதிரையின் மீது ஏன் ஏற்றக்கூடாது? என் தலையில் மூட்டையை வைத்துக்கொண்ட போதிலும் நான் குதிரையின்மீது அமரும்பொழுது என் தலைச்சுமையின் பாரமும் குதிரையைத்தானே பொறுக்கும்? ஆகையால் எல்லாச் சுமையையுமே அதன் முதுகில் ஏற்றிவிட்டாலென்ன? இவ்வாறு வாழ்க்கையின் எல்லா அமளி துமளிகளும், மேன்மை தாழ்வுகளும், வளர்ச்சியும் எல்லாம் கடவுள் மயமாகவே இறுதியில் ஆய்விடுகின்றன. என் வாழ்க்கையில் அவர் மஹேச்வரன் பெருங்கடவுள் ஆய்விடுகிறார். இவ்வாறு வளர்ந்து கொண்டே சென்ற வாழ்க்கை முழுதும் பரம்பொருள் மயமாய் விடுகிறது. உடலின் திரை மட்டும் எஞ்சி நிற்கிறது. அது அகலும் பொழுது ஜீவனும், சிவனும், ஆன்மாவும் பரமாத்மாவும் ஒன்றாகிவிடுகின்றன.

" उपद्रष्टानुमंता च भर्ता भोक्ता महेश्वरः। "
(உபத்ரஷ்டானுமந்தா ச பர்த்தா போக்தா மஹேச்வர:)
இவ்வுருவில் நாம் பரம்பொருளை மேன்மேலும் அதிகமாய்

* " मालियें जेउतें नेलें। तेउतें निवांत चि गेलें
तया पाणिया ऐसें केलें। होआवें गा "

அனுபவிக்க வேண்டும். ஆண்டவன் முதலில் நடுவு நிலை யிலிருந்துகொண்டு பார்க்கிறான். பிறகு நீதி மயமான வாழ்க்கை தொடங்கியதும், நம்மால் நல்ல காரியங்கள் நடைபெறத் தொடங்கும் பொழுது அவன் நமக்கு உற்சாக மூட்டுகிறான். பிறகு சித்தத்தின் நுண்ணிய அழுக்கைக் கழுவிவிடும்பொருட்டு தன் முயற்சிகள் போதாதிருப் பதைக் கண்ட பக்தன் அழைக்கும் பொழுது அந்த அறைதை நாதனை ஆண்டவன் உதவ ஓடி வருகிறான். அதன் பிறகு பயனையும் பகவானுக்கே அர்ப்பணம் செய்து அவனையே நுகர்வோனாகவும் இறுதியில் சங்கல்பங்கள் அனைத்தையும் அவனுக்கே அர்ப்பணம் செய்து வாழ்க்கை முழுவதையும் ஆண்டவன் மயமாகச் செய்து விடவும் வேண்டும். இதுவே மனிதன் இறுதியில் எய்த வேண் டியது. கர்மயோகம், பக்தியோகம் என்ற இரண்டு சிறகு களைக் கொண்டு பறக்கும் சாதகன் இந்த இறுதி இலட்சி யத்திற் போய்ச் சேரவேண்டும்.

## (74) பணிவு, அஞ்சாமை முதலியவற்றைப் பேணுதல்

இவைகளையெல்லாம் சாதிப்பதற்கு நீதிமயமான சாதனையென்ற உறுதியுள்ள அஸ்திவாரம் இன்றியமையாத தாகும். சத்திய, அசத்தியங்களைப் பகுத்துணர்ந்து சத்தியத்தையே எப்பொழுதும் ஏற்றுக்கொள்ள வேண்டும். சார, அசாரங்களை ஆராய்ந்துணர்ந்து சாரத்தையே ஏற்க வேண்டும். சிப்பியின் ஓட்டை எறிந்துவிட்டு அத னுள்ளேயுள்ள முத்தைக்கொள்ள வேண்டும். இவ்வாறு வாழ்க்கையை ஆரம்பிக்க வேண்டியது. பிறகு சொந்த முயற்சி, ஆண்டவனின் கருணை ஆகிய வற்றின் உதவியால் மேலே ஏறிச் செல்ல வேண்டும். இந்த சாதனைகளனைத்திலும் நாம் உடலிலிருந்து ஆன் மாவை வேறாய் உணரும் பயிற்சி பெற்றிருப்போமானால் நமக்கு அதனால் பெருத்த உதவி ஏற்படும். இத்தகைய சமயத்தில் எனக்கு ஏசுநாதரின் தியாகம் நினைவுக்கு வருவ துண்டு. அவரை ஆணியை அடித்துக் கொன்றுகொண் டிருந்தார்கள். அப்பொழுது அவர் வாயிலிருந்து,

"கடவுளே, இவ்வளவு வேதனைகள் எதற்காக அளிக்கிறீர்?" என்ற வார்த்தைகள் வெளிவந்தனவாம். ஆனால் உடனே ஏசுநாதர் தம் மனத்தராசை நிறுத்திப் பிடித்துக் கொண்டு, "சரி, உம் இஷ்டம், விருப்பம் எதுவோ நடக்கட்டும்; இவர்களை மன்னித்துவிடும்! இவர் தாம் செய்வது என்னவென்றே அறியவில்லை" என்றாராம். ஏசுநாதருடைய இச்செயலில் பெரிய இரகசியம் அடங்கியிருக்கிறது. உடலிலிருந்து ஆன்மாவை எந்த அளவுக்குப் பிரிக்க வேண்டும் என்பதை இது நன்கு காட்டுகிறது. எவ்வளவு தூரம் நாம் வழி நடந்தாக வேண்டும், எவ்வளவு தூரம் நடக்க முடியும் என்பது ஏசுநாதரின் வாழ்க்கையிலிருந்து தெரிந்துவிடுகிறது. உடல் ஒரு உறையைப்போல, பழத்தின் தோலைப்போலப் பிரியும் அளவுக்கு நம் வழி போகிறது. ஆன்மாவை உடலிலிருந்து வேறாக்கும் எண்ணம் என் மனதிலெழும்போதெல்லாம் ஏசுநாதரின் இவ்வாழ்க்கை, இந்தக் காட்சி என் கண்ணெதிரில் வந்து நிற்கிறது. உடல் வேறு, நான் வேறு என்று இரண்டிற்கும் இடையேயுள்ள தொடர்பை அறவே இறும்படி செய்வதற்கு ஏசுநாதரின் வாழ்க்கை ஓர் உதாரணமாகும்.

சத்தியத்தையும், அசத்தியத்தையும் பகுத்துணரும் விவேகம் நமக்கு ஏற்படும் வரையில் உடலையும் ஆன்மாவையும் வேறாயுணர்தல் சாத்தியமல்ல. இந்த விவேகம், இந்த ஞானம் நம் நரம்பு ஒவ்வொன்றிலும் வியாபித்துவிட வேண்டும். ஞானம் என்பதற்கு நாம் அறிவு என்று பொருள் கொள்கிறோம். ஆனால் அறிவினால் உணருதல் ஞானமாகாது. வாய்க்குள் சோற்றை இட்டுக்கொள்ளுதல் உணவு அருந்தியதாகாது. வாயில்போன சோறு மெல்லப்பட்டு தொண்டையின் வழியாய் வயிற்றுக்குச் சென்று ஜீரணமாகி அதன் இரசமான இரத்தம் உடலெங்கும் பரவி புஷ்டி ஏற்படவேண்டும். அப்பொழுதுதான் அது உண்மை உணவாகும். அவ்வாறே வெறும் அறிவினால் இயக்கப்பட்ட ஞானத்தினால் பயனெதுவுமில்லை. அந்த ஞானம், அந்த அறிவு வாழ்க்கை முழுவதிலும் பரவி உள்ளத்தையும் ஊடுருவிப் பாயவேண்டும். நம் கைகள், கால்கள், கண்கள் ஆகிய புலன்களின் மூலமாய் அந்த ஞானம் வெளியாகவேண்டும். எல்லா ஞானேந்திரியங்களும் கர்மேந்திரியங்களும் எல்லாக் காரியங்களையும் சிந்தனையுடனேயே செய்யும் நிலை தோன்றவேண்டும். ஆகை

யால் இந்தப் பதின்மூன்றும் அத்தியாயத்தில் பகவான் ஞானம் என்பதை மிகவும் சிறந்த முறையில் விளக்கி யிருக்கிருர். ஸ்திதப்ரக்ஞனுடைய இலட்சணங்களைப் போன்றே இந்த ஞானத்தின் இலட்சணங்களும் இருக் கின்றன.

"பணிவு, கர்வமின்மை, அஹிம்சை, நேர்மை, சகிப்பு"

முதலிய இருபது குணங்களை பகவான் கூறியிருக் கிருர். இந்த குணங்கள் ஞானமெனப்படும் என்று சொல்லுவதோடு அமையாது இவைகளுக்கு மாருயுள்ளவை அஞ்ஞானமாகுமென்றும் தெளிவாய்ச் சொல்லப்பட்டிருக் கிறது. ஞானத்திற்கு சாதனங்களென்று எவை கூறப்பட் டிருக்கின்றனவோ அவற்றிற்கே ஞானமென்று பெயர். "நற்குணங்களையே நான் ஞானமெனக் கருதுகிறேன்" என்று சோக்ரத்தர் சொல்லுகிருர். சாதனையும், சாத்தியமும் கருவியும், குறிக்கோளும் ஒன்றே.

கீதையின் இந்த இருபது சாதனங்களை ஞானதேவர் பதினெட்டாக்கிவிட்டார். அவர் இவைகளை மிகுந்த உற் சாகத்தோடு மனப்பூர்வமாய் வர்ணித்திருக்கிருர். இந்த குணங்களுடன் தொடர்புள்ள சுலோகங்கள் ஐந்தே பகவத்கீதையிலுள்ளன. ஆனல் ஞானதேவரோ தம் 'ஞானேச்வரி'யில் எழுநூறு ஓவிகள் எழுதியிருக்கிருர். சமூகத்தில் நற்குணங்கள் வளரவேண்டும், சத்தியரூபியான பரம்பொருளின் மகிமை பரவவேண்டும் என்று அவர் பேராவல் கொண்டிருந்தார். இந்த குணங்களை வர்ணிக்கும் முகத்தான் அவர் தம் அனுபவங்கள் அனைத்தையுமே அந்த ஓவிகளில் நிரப்பிவிட்டார். மராத்தி பாஷைக்காரர் களுக்கு அவர் இவ்வகையில் செய்துள்ள உபகாரத்தை மதிப்பிடமுடியாது. ஞானதேவருடைய ஒவ்வொரு ரோமத் திலும் இந்த குணங்கள் பரவியிருந்தன. எருமையை எவனே சவுக்கினல் அடிக்க ஞானதேவருடைய முதுகு புடைத்துவிட்டதாம்! எல்லா உயிர்களிடத்திலும் அவருக்கு இவ்வளவு ஒருமைப்பாடிருந்தது. ஞானதேவருடைய இத்தகைய கருணைமயமான உள்ளத்திலிருந்து 'ஞானேச் வரி' தோன்றியிருக்கிறது. இக்குணங்களை அவர் அலசி ஆராய்ந்திருக்கிருர். அவர் விவரித்திருக்கும் குணங்கள் நாம் படித்து, சிந்தித்து, உள்ளத்தில் பதித்துக்கொள்ளத் தக்கவை. ஞானதேவருடைய இந்த இனிய மொழியைச்

சுவைக்க முடிந்ததற்காக நான் என்னை பாக்கியவானென்று கருதுகிறேன். அவருடைய இனிய மொழி என் வாக்கில் வந்து அமரும்பொருட்டு நான் மீண்டும் பிறவி எடுக்க நேரிடினும் அதை நான் செய்த பெரும் பேறென்றே கருது வேன். நிற்க. கருத்தென்னவென்ருல், மேன்மேலும் தம்மை வளர்ச்சியுறச் செய்து கொண்டே ஆன்மாவை உடலிலிருந்து வேருய் உணர்ந்துகொண்டே எல்லோரும் தம் வாழ்க்கையை கடவுள் மயமாக்க முயல வேண்டும்.

ஞாயிறு, 15-5-'32.

## பதின்மூன்காம் அத்தியாயம்

# குண எழுச்சியும் குணச் சிதைவும்

*

## (75) இயற்கையைப் பகுத்துணர்தல்

சகோதரர்களே! இன்றைய பதின்மூன்காம் அத்தியாயம் ஒரு வகையில் பிந்திய அத்தியாயத்தின் பூர்த்தியே ஆகும். உண்மையில் ஆன்மாவுக்கு எதையும் செய்யவேண்டிய அவசியமே இல்லை. அது சுயம் பூர்ணமானது. ஆன்மாவின் போக்கு இயற்கையில் மேல் நோக்குள்ளது. ஆனால் ஏதேனும் ஒரு பொருளுடன் பளுவான பொருளொன்றைச் சேர்த்துக் கட்டுவதனால் அந்த முதல் பொருள் கீழே வலிக்கப்பட்டு இழிந்து போவதைப்போல உடலின் இந்த பளு ஆன்மாவைக் கீழே இழுத்துக் கொண்டுபோகிறது. பிந்திய அத்தியாயத்தில் ஏதேனும் ஒரு உபாயத்தினால் உடலையும் ஆன்மாவையும் பிரிக்கக் கூடுமானால் நாம் முன்னேற முடியும் என்பதைக் கண்டோம். இந்த விஷயம் சிரமமாயிருந்தபோதிலும் இதிலிருந்து பெரிய பயன் விளையும். ஆன்மாவின் காலில் பூட்டப்பட்டுள்ள உடலென்ற இந்த விலங்கை நாம் உடைத்துவிட முடிந்தால் மிகுந்த இன்பம் பெறுவோம். பிறகு மனிதன் உடலின் துக்கத்தினால் துன்புறமாட்டான். அவன் சுதந்திரனாய்விடுவான். இந்த உடலென்ற பொருள்மீது மனிதன் வெற்றிகொண்டு விடுவானாயின் உலகில் அவன் மீது யார் அதிகாரம் செலுத்தமுடியும்? தன்னை ஆளுவோன் உலகின் சக்கரவர்த்தியாய்விடுகிறான். ஆகையால் ஆன்மாவின்மீது உடலுக்கு ஏற்பட்டுள்ள அதிகாரத்தை அகற்றிவிடு. லைப்பற்றிய இந்த இன்பதுன்பங்களெல்லாம் வெளியிலிருந்து வந்தவை. நமக்கும் அவைகளுக்கும் உறவு கிடையாது. ஆன்மாவுக்கும் அவைகளுக்கும் எள்ளளவு சம்பந்தமும் இல்லை.

இந்த எல்லா துக்கங்களையும் எந்த அளவுக்கு உடலிலிருந்து வேறுக்க வேண்டும் என்ற கருத்தை நான் ஏசுநாதரின் உதாரணத்தின் மூலம் தெரிவித்தேன். உடல் தகர்ந்து போகும்பொழுதும் எவ்வாறு மனதை அமைதியாய், ஆனந்தமயமாய் வைத்துக்கொள்ளக் கூடும்

என்பதை அவர் காட்டிவிட்டார். ஆனால் இவ்வாறு உடலை ஆன்மாவிலிருந்து பிரித்தல் விவேகத்தின் காரியமாயிருப்பதைப்போல, அது புலனடக்கத்தின் காரியமும் ஆகிறது.

"விவேகத்துடன் வைக்ராயத்தின் பலம்"*

என்று துகாராம் கூறியிருக்கிறார். விவேகம் வைராக்கியம் ஆகிய இரண்டும் தேவை. வைராக்கியமே ஒரு வகை திதிக்ஷை அல்லது புலனடக்கம் ஆகும். இந்தப் பதினைன்காம் அத்தியாயத்தில் புலனடக்கத்தை எதில் செய்ய வேண்டும் என்பது சொல்லப்பட்டிருக்கிறது. படகைச் செலுத்தும் செயலை துடுப்புகள் செய்கின்றன. ஆனால் திசையைப் படகோட்டி காட்டுகிறான். துடுப்புகள், படகோட்டி ஆகிய இரண்டும் தேவையாகின்றன. அவ்வாறே உடலின் இன்ப துன்பங்களிலிருந்து ஆன்மாவைப் பிரிப்பதற்கு விவேகம், புலனடக்கம் ஆகிய இரண்டுமே தேவையாகின்றன.

வைத்தியன் மனிதனுடைய இயற்கைத் தன்மையைப் பார்த்து மருந்து விதிப்பதைப்போல பகவான் பதினைன்காம் அத்தியாயத்தில் இயற்கை முழுவதையும் பரிசோதித்து வெவ்வேறாய்க் கூறிட்டு இன்னின்ன நோய்களிருக்கின்றனவென்று சொல்லியிருக்கிறார். இதில் இயற்கை மிகவும் சரியாய்ப் பாகுபாடு செய்யப்பட்டிருக்கிறது. அரசியல் சாஸ்திரத்தில் பாகுபாடு செய்தல் அல்லது கூறிடுதலைப் பற்றிய ஒரு பெரிய சூத்திரம் உண்டு. எதிரிலுள்ள விரோதியின் கூட்டத்தைக் கூறிட்டுப் பகுத்துவிட முடியுமானால் அதை விரைவில் வெற்றி கொண்டு விடலாம். பகவான் இங்கே இவ்வாறே செய்திருக்கிறார். நான், நீங்கள், எல்லா உயிர்கள், அகில சராசரங்கள் ஆகிய அனைத்தின் இயற்கையிலும் மூன்று குணங்களிருக்கின்றன. ஆயுர் வேதத்தில் கபம், பித்தம், வாதம் என்பவை சொல்லப்படுவதைப் போல ஸத்வம், ரஜம், தமம் என்ற முக்குணங்கள் பிரகிருதியில் நிறைந்திருக்கின்றன. எல்லா விடங்களிலும் இந்த மூன்று குணங்களென்ற சரக்கே நிரம்பியிருக்கிறது. ஒரு இடத்தில் குறைவாயிருந்தால் வேறொரு இடத்தில் அதிகமாயிருக்கும்; இவ்வளவுதான் வித்தியாசம். இம்மூன்றிலிருந்தும் ஆன்மாவைப் பிரித்துவிடுவோமானால் உடலிலிருந்து ஆன்மாவைப் பிரிக்க முடியும்.

* "विवेकासहित वैराग्याचें बळ"

உடலிலிருந்து ஆன்மாவைப் பிரிப்பதற்குள்ள முறையே இம் முக்குணங்களைச் சோதித்து இவற்றை வெற்றி கொள்வதற்கும். புலனடக்கத்தின் மூலம் ஒவ்வொரு வஸ்துவையும் ஜயித்து இறுதியில் முக்கிய வஸ்துவை அணுகவேண்டும்.

## (76) தமோகுணத்திற்கு மருந்து உடலுழைப்பு

முதலில் நாம் தமோ குணத்தை எடுத்துக்கொள்வோம். தற்கால சமூக நிலையில் தமோ குணத்தின் பயங்கரமான விளைவுகளைக் காண்கிறோம். இதன் முக்கியமான விளைவு சோம்பேறித்தனமாகும். இதிலிருந்தே தூக்கமும் மெய்ம் மறதியும் தோன்றுகின்றன. இம் மூன்றையும் ஜயித்து விடுவோமாயின் தமோகுணத்தை ஜயித்துவிட்டதாகவே கொள்ளலாம். இவற்றில் சோம்பல் மிகவும் பயங்கரமானது. மிகமிகச் சிறந்த மனிதரும் சோம்பலினால் வீணாய்விடுகின்றனர். சமூகத்தின் சுகம், சாந்தி ஆகிய அனைத்தையும் அழித்துத் துடைத்துவிடும் சத்துரு இது. இது சிறியோர் முதல் பெரியோர் வரை எல்லோரையுமே கெடுத்துவிடுகிறது. இந்த சத்துரு எல்லோரையும் பற்றிக் கொண்டிருக்கிறது. இது நம்மைத் தன் வசப்படுத்துவதற்காகச் சமயம் பார்த்துக்கொண்டே யிருக்கிறது. சிறிது சந்தர்ப்பம் கிடைக்க வேண்டியதுதான், உடனே உள்ளே நுழைந்துவிடுகிறது. உணவைச் சிறிது அதிகமாய்க் கொண்டதும் உடனே நம்மைப் படுக்கும்படி நிர்ப்பந்திக்கிறது. சிறிது அதிகம் படுத்துவிட்டோமானால் கண்களில் சோம்பல் நிரம்பி வழியத் தொடங்குகிறது. இதை முறியடிக்காத வரையில் மற்ற முயற்சிகளனைத்தும் வீணே. ஆனால் நாமோ சோம்பியிருக்கும் விஷயத்தில் ஊக்கமே காட்டுகிறோம்; சிறிது காலம் இரவும் பகலும் உழைத்து வேலை செய்து பணம் சம்பாதித்துக்கொண்டு பிறகு சௌக்கியமாய் வாழ்க்கையை நடத்த வேண்டுமென்று விரும்புகிறோம். ஏராளமாய்ப் பணம் சம்பாதித்தல் என்பதற்கு பிற்காலத்திய சோம்பல் வாழ்க்கைக்கு ஆயத்தம் என்பதே பொருள். நாம் சாதாரணமாய் முதுமையில் ஓய்வு தேவையென்று நம்புகிறோம். ஆனால் இந்த எண்ணம் தவறு. நாம் சரியான முறையில் வாழ்க்கையை நடத்தி வருவோமானால் முதுமையிலும்

வேலை செய்து கொண்டேயிருப்போம்; அதிக அனுபவம் ஏற்பட்டிருப்பதனால் முதுமையில் அதிக உபயோகமுள்ள வர்களாகவே இருப்போம். ஆனால் அப்பொழுது போய் ஓய்வு பெறுவோம் என்கிறார்கள்!

சோம்பலுக்குச் சந்தர்ப்பம் சிறிதும் வாய்க்காதவாறு நாம் எச்சரிக்கையாயிருந்து வரவேண்டும். நள ராஜன் எவ்வளவோ பெரியவனாயிருந்தும் காலைக் கழுவும் போது ஒரு சிறிய பகுதியில் நீர் படாதிருந்துவிடவே அங்கே கலி வந்து புகுந்ததென்று சொல்லுகிறார்கள். நளன் மிகவும் சுத்தமானவன்; எல்லா வகையிலும் தூய் மையாயிருந்தவன். ஆனால் உடலின் சிறு பகுதி நனையா திருந்துவிட்டது. இச்சிறு சோம்பலிருக்கவே, கலி உடனே அவனுள் புகுந்துவிட்டது. நம்முடலோ முழுமை யுமே திறந்து கிடக்கிறது. சோம்பல் எந்தப் பக்கத்திலிருந்து வேண்டுமாயினும் நம்முள் புகலாம். உடல் சோம்பிய வுடன் மனமும் அறிவும் சோம்பிவிடுகின்றன. இன்றைய சமூகம் இந்தச் சோம்பலின்மீதே அமைந்துள்ளது. இதி லிருந்து எண்ணிலடங்காத துன்பங்கள் தோன்றியுள்ளன. நாம் இந்தச் சோம்பலை அகற்ற முடியுமானால், எல்லாவற் றையும் இல்லை எனினும், பெரும்பாலான துன்பங்களைப் போக்க முடியும்.

தற்காலத்தில் எங்கும் சமூகச் சீர்திருத்தம் பற்றிய பேச்சாகவே இருக்கிறது. சாதாரண மனிதனுக்கும் குறைந்தது இவ்வளவு சுகம் வேண்டும், இதற்காக சமூக அமைப்பு இவ்வாறிருக்க வேண்டும் என்ற பேச்சுகள் நடக்கின்றன. ஒரு புறம் மிகவும் அதிகமான இன்பமென்றால் மறுபுறம் மிகவும் அதிகத் துன்பமாயிருக்கிறது. ஒரு புறம் செல்வம் குவிந்துகிடக்க, மறுபுறம் ஏழைமையின் அகழி ஆழந் தெரியாது காணப்படுகிறது! சமூகத்திலுள்ள இந்த வேறுபாடு எவ்வாறு விலகும்? இன்றியமையாத எல்லா இன்பங்களும் சுலபமாய்க் கிட்டுவதற்கு ஒரே வழிதான் உண்டு; அது சோம்பலை விட்டு அனைவரும் உழைக்கச் சித்தமாவதே. முக்கியமான துன்பம் நம் சோம்பலினா லேயே தோன்றுகிறது. எல்லோரும் உடலால் உழைக்க உறுதி செய்துகொள்வார்களானால் இந்தத் துன்பம் விலகிப் போகும்.

ஆனால் நாம் இன்று சமூகத்தில் பார்ப்பதென்ன?

ஒருபுறம் துரு ஏறி ஏறி உபயோகமற்றவராய் உள்ள மனிதர்கள்; தனவந்தர்களின் பொறிகளில் துரு ஏறிக்கிடக்கிறது; அவர்கள் தம் உடலை உபயோகிப்பதே இல்லை. மறுபுறத்தில் உழைத்து உழைத்துத் தேய்ந்து உருகி உடல் துரும்பாய்ப் போகிறது. சமூகம் முழுவதிலும் அனைவரும் உடலுழைப்பிலிருந்து தப்பவே பார்க்கிறார்கள். உயிரைக் கொடுத்து உழைப்பவர்களும் சந்தோஷமாய் அவ்வாறு செய்யவில்லை; வேறு வழியில்லையே என்றுதான் செய்கிறார்கள். படித்து அறிவுள்ளவராய் இருப்பவர்கள் உழைப்பிலிருந்து தப்புவதற்கு என்னென்னவோ காரணங்கள் கண்டுபிடிக்கிறார்கள். ஒருவர், "ஏன் வீணில் உடலுழைப்பில் காலத்தைப் பாழாக்கவேண்டும்?" என்கிறார். ஆனால் எவரும் எதற்காக இந்த வீண் தூக்கம் தூங்க வேண்டுமென்றோ, சாப்பாட்டில் பொழுதை ஏன் பாழாக்க வேண்டுமென்றோ சொல்லுவதில்லை. பசியெடுத்தால் சாப்பிடுகிறோம்; தூக்கம் வரும்பொழுது தூங்கிப் போகிறோம். ஆனால் உடலுழைப்பைப்பற்றிய பிரச்னை வரும்பொழுது, "எதற்காக வீணில் இதில் பொழுதைப் பாழாக்க வேண்டும்? நம் உடலுக்கு எதற்காக இவ்வளவு சிரமம் தரவேண்டும்? நாம்தான் மனதினால் நன்கு உழைக்கிறோமே!" என்று சொல்லுகிறோம். அப்படியானால், ஐயா! மனதினால் உழைக்கிறோம் என்கிறீர்களே, சாப்பாடும் மனதினாலேயே சாப்பிட்டு, தூக்கமும் மனதினாலேயே தூங்கிக்கொள்ளுங்களேன்! மானசிகத் தூக்கம், மானசிக உணவு ஆகியவற்றைச் செய்ய ஒரு உபாயம் கண்டுபிடித்துக் கொள்ளுங்களேன்!

இவ்வாறு சமூகத்தில் இருவகை மனிதர்கள் ஏற்பட்டு விட்டார்கள். ஒருவரோ அல்லும் பகலும் உழைத்து உழைத்துச் சாகிறவர்கள்; மற்றவரோ தம் கையை அசைத்து ஒரு துரும்பையும் எடுத்து இங்கிருந்து அங்கு போடாதவர்கள். என் நண்பரொருவர், "சில ருண்டங்கள், சில முண்டங்கள்" என்று சொன்னார். ஒருபுறம் வெறும் (தலையில்லாத) உடல்கள், மறுபுறம் (உடலில்லாத) வெறும் தலைகள். உடல் உழைத்துக்கொண்டேயிருக்க தலை வெறும் சிந்தனை மட்டும் செய்துகொண்டிருக்கிறது. இவ்வாறு சமூகத்தில் இந்த இராகு கேதுக்கள் இருவகையாய் இருக்கிறார்கள். ஆனால் இவர்கள் உண்மையிலேயே தலையும் உடலுமாய் இருப்பார்களானால் அதிலும்

சிரமமிராது. அப்பொழுது குருடனும், முடவனும் என்ற கதையைப்போல ஏதேனும் ஒரு ஏற்பாடு செய்து கொள்ள லாம். குருடனுக்கு முடவன் வழிகாட்ட, முடவனை குரு டன் தோளில் ஏற்றிக்கொண்டு நடக்கலாம். ஆனால் இந்தத் தலைகளும் உடல்களும் வெவ்வேறு குழுக்களாய் இல்லை; ஒவ்வொரு குழுவிலும் இவை இரண்டுமே இருந்து வருகின்றன. இந்த இணைந்த தலைகளும், உடல்களும் எல்லாவிடங்களிலும் காணப்படுகின்றன. இதனால் சிரமம் மேலும் அதிகமாய் விட்டது. ஆகையால் ஒவ்வொருவரும் சோம்பலை அகற்ற வேண்டும்.

சோம்பலை அகற்றுவதற்கு உடலுழைப்புச் செய்ய வேண்டும். சோம்பலை ஜயிப்பதற்கு இது ஒன்றே வழி. இதைச் செய்யாவிட்டால் இதற்குரிய தண்டனை இயற்கை யினிடமிருந்து நமக்குக் கிடைக்காமலிராது. நோய் நொடிகளின் மூலமாயும் பிற சிரமங்களாகவும் வரும் அந்த தண்டனையை அனுபவித்தே தீர வேண்டியிருக் கும். நமக்கு உடல் கிடைத்திருப்பதால் நாம் உழைத்து வேலை செய்யத்தான் வேண்டும். உடலுழைப்பில் கழியும் நேரம் வீணாவதில்லை. நிச்சயமாய் இதற்குப் பயன் ஏற் படுகிறது. நல்ல ஆரோக்கியம் கிட்டுகிறது, அறிவு ஒளி பெற்று, கூர்மையுற்று, தூய்மை பெறுகிறது. எத்தனையோ அறிவாளிகளின் கருத்துகளில் அவர்களின் வயிற்று வலி, தலை நோவு ஆகியவற்றின் சாயை தென்படுகிறது. அறிவாளிகள் வெயிலில், திறந்த வெளியில், இயற்கையின் மடியில் இருந்து வேலை செய்வார்களானால் அவர்களின் கருத்துகளும் ஒளிபெற்றுத் திகழும். உடற் கோளாறு களால் மனம் பாதிக்கப்படுவதைப் போல உடலின் ஆரோக் கியத்தினாலும் மனம் செழிக்கிறது என்பது நாம் அனுபவத் தில் உணர்ந்த விஷயமாகும். பிற்காலத்தில் காசம் வந்த பிறகு பூவாலி அல்லது வேறு மலையின் ஆரோக்கிய வாசஸ்தலங்களுக்கு நல்ல காற்று வாங்கவும் சூரியகிரண சிகிச்சை பெறவும் போவதற்குமுன் வெளியில் போய் மண் வெட்டிக்கொண்டு கொத்துதல், தோட்டத்திற்குத் தண்ணீர் பாய்ச்சுதல், விறகு உடைத்தல் முதலியவற்றைச் செய்தால் என்ன கெட்டுப் போகும்?

## (77) தமோ குணத்திற்கு இன்னொரு மருந்து

சோம்பலை ஜயித்தல் என்பது ஒன்று. இரண்டாவதோ தூக்கத்தை ஜயிப்பதாகும். தூக்கம் உண்மையில் புனிதமானதே. பணிபுரிந்து களைத்துத் தூங்கும் சாது-மகாத்மாக்களின் உறக்கம் ஒரு யோகமே. இத்தகைய அமைதியான ஆழ்ந்த நித்திரை பெரிய அதிர்ஷ்டசாலிகளுக்கே கிடைக்கும். தூக்கம் ஆழ்ந்ததாய் கலக்கமற்றதாயிருக்க வேண்டும். தூக்கத்தின் சிறப்பு அதில் கழியும் நேரத்தைப் பொறுத்ததல்ல; படுக்கை எவ்வளவு நீளமிருந்தது, மனிதன் அதன்மீது எவ்வளவு நேரம் கிடந்தான் என்பவைகளைப் பொறுத்ததல்ல. கிணற்றின் ஆழம் அதிகமாக ஆக அதன் நீர் அதிக இனிப்பும் சுத்தமும் பொருந்தியிருக்கும். அவ்வாறே சிறிது நேரம் தூங்கினாலும் ஆழ்ந்து தூங்கினால் அதற்கு நல்ல பயனுண்டு. மனதைச் செலுத்தி அரை மணி நேரம் படித்தல் மனதை நாற்புறமும் சுற்றவிட்டுக் கொண்டே மூன்று மணிநேரம் படிப்பதை விடச்சிறந்ததாகும். தூக்கமும் இப்படியேதான். நீண்ட உறக்கம் இறுதியில் நன்மையே பயக்குமென்று சொல்வதற்கில்லை. நோயாளி இருபத்து நான்கு மணி நேரமும் படுக்கையில் படுத்திருக்கிறான். அவன் படுக்கையை விடாமல் பற்றிக் கொண்டிருந்தபோதிலும் உறக்கம் அவனை அணுகுவதே இல்லை. ஆழ்ந்ததாய், கனவற்றதாய் உள்ள உறக்கமே உண்மையான உறக்கம். இறந்த பிறகு தண்டனைகள், நரக வேதனைகள் என்கிறார்களே, அவை எப்படியிருக்குமோ தெரியாது; ஆனால் நல்ல தூக்கம் வராமல் கெட்ட கனவுகள் எவனுக்கு வந்துகொண்டே யிருக்கின்றனவோ, அவன் அனுபவிக்கும் யமயாதனையின் கோரத்தைச் சொல்லவே முடியாது! வேதத்தில் ரிஷி பேரச்சமுற்று,

"परा दुःस्वप्न्यं सुव"—பரா துஸ்வப்ந்யம் ஸுவ

'இத்தகைய கெட்ட கனவுகள் எனக்கு வேண்டாம்!' என்கிறார். தூக்கம் இளைப்பாறுவதற்காக ஏற்பட்டது. ஆனால் அதிலும் விதவிதமான கவலைகள் நம்மை விடாது அலட்டுமானால் நம் களைப்பும், இளைப்பும் தீருவ தெப்படி?

அப்படியானால் ஆழ்ந்த குழப்பமற்ற தூக்கம் எப்படி வரும்? சோம்பலை அகற்றுவதற்குக் கூறப்பட்ட உபாயமே தூக்கத்திற்கும் பொருந்தும். உடலிடம் இடையறாது

வேலை வாங்கிக்கொண்டே யிருக்கவேண்டும். அப்பொழுது படுக்கையில் வீழ்ந்ததும் மனிதன் அடித்துப் போட்டதைப் போல் உறங்குவான். உறக்கமென்பது ஒரு சிறிய மரணமே. இத்தகைய அழகிய இனிய மரணம் வருவதற்காக பகலில் நல்ல முன்ஏற்பாடு செய்துகொள்ள வேண்டும். உடல் உழைத்து உழைத்து ஒடிந்து போகவேண்டும். ஆங்கிலக்கவி ஷேக்ஸ்பியர், "அரசன் தலையின்மேல் கிரீடமிருந்தபோதிலும் அதனுள் கவலை பொதிந்திருக்கிறது!" என்று சொல்லியிருக்கிறார். அந்த அரசனுக்கு உறக்கம் வருவதில்லை. அதற்கு ஒரு காரணம் அவன் உடலால் உழையாமை. விழிப்பில் எவன் உறங்குகிறானோ அவன் உறங்கும் நேரத்தில் விழித்துக் கொண்டிருப்பான். பகலில் அறிவையும் உடலையும் பயன்படுத்தாதிருத்தல் உறக்கமின்றி வேறென்ன? பிறகு உறங்கவேண்டிய நேரத்தில் அறிவு எதை எதையோ, எண்ணி உழன்றுகொண்டிருக்க, உடலுக்கு உண்மை உறக்கத்தினால் விளையும் இன்பமில்லாமற் போகிறது. பிறகு நீண்ட நேரம் உறக்கத்தில் கிடக்கிறான். எந்த வாழ்க்கையில் பெரும் பேற்றைப்பெற வேண்டுமோ அதை உறக்கமே உண்டு தீர்த்துவிடுமானால் பேற்றைப் பெறுவதற்கு எப்பொழுது சந்தர்ப்பம் ஏற்படும்? வாழ்வில் பாதி உறக்கத்தில் கழிந்துவிடுமானால் நாம் எதைப் பெறப் போகிறோம்?

உறக்கத்திலேயே அதிக காலம் கழிந்து போய்விடும் பொழுது தமோகுணத்தின் மூன்றும் தோஷமான மயக்கம் தானே ஏற்படத் தொடங்குகிறது. தூங்கிவழியும் மனிதனுடைய சித்தம் திறமையும், விழிப்பும் கொண்டதாய் இருக்கமுடியாது. அதிலிருந்து கவனக்குறைவு தோன்றுகிறது. அதிக உறக்கத்தினால் சோம்பல் வளர, சோம்பலிலிருந்து மறதி தோன்றுகிறது. மறதி பரமார்த்தத்தை அழிக்கக்கூடியது. உலக வியவகாரத்திலும் மறதியினால் தீங்கே ஏற்படுகிறது. ஆனால் நம் சமூகத்திலோ மறதி ஒரு சாதாரண விஷயமாய்விட்டது; மறதி ஒரு பெரிய குற்றமென்றே எவருக்கும் தோன்றுவதில்லை. ஒருவரைப் போய்ப்பார்ப்பதாக ஏற்பாடுசெய்து கொள்ளுகிறோம். ஆனால் பிறகு போவதில்லை. ஏனென்று கேட்டால், "ஐயோ, மறந்தே போய்விட்டேனே!" என்கிறோம். இவ்வாறு சொல்லுவோருக்கே தாம் பெரிய குற்றம் ஏதுவும் செய்துவிட்டதாய்த் தோன்றுவதில்லை; கேட்பவருக்கும்

சமாதானமாய்விடுகிறது. மறதிக்கு மருந்தே கிடையாது என்று ஜனங்கள் நினைப்பதாய்த் தோன்றுகிறது. ஆனால் இந்த மறதியினால் இகத்திற்கும் சரி, பரத்திற்கும் சரி தீமையே விளைகிறது. உண்மையில் மறதி என்பது ஒரு பெரிய நோய். அதனால் அறிவில் புரை ஓடிவிடுகிறது; வாழ்க்கையே சோடையாய்ப் போகிறது.

மறதிக்குக் காரணம் மனதின் சோம்பலே. மனம் விழிப்புடனிருக்குமானால் அதற்கு மறதி ஏற்படாது. படுத்தே கிடக்கும் மனதை மறதியென்றநோய் பற்றும லிராது. இதனாலேயே புத்த பகவான்—

"पमादो मच्चुनो पदं" (பமாதோ மச்சுனோ பதம்)

என்கிறார். பிரமாதம் அல்லது மறதி என்பது மரணமே. இந்த மறதியை ஜயிப்பதற்கு சோம்பலையும் உறக்கத்தை யும் வசப்படுத்தவேண்டும். உடலுழைப்பைச் செய்யுங்கள்; எப்பொழுதும் விழிப்புடனிருங்கள். எந்தக் காரியத்தையும் சிந்தித்து புத்தி பூர்வமாய்ச் செய்யுங்கள். ஆலோசியாது எந்தக் காரியத்தையும் செய்யக்கூடாது. ஒரு காரியத்தைச் செய்வதற்கு முன்னும், செய்த பிறகும் சிந்திக்க வேண்டும். முன்னும் பின்னும் எங்கும் சிந்தனை என்ற ஆண்டவன் இருந்து வரவேண்டும். இவ்வாறு பழக்கம் செய்துகொண்டு விட்டால் மறதி என்ற நோய் நீங்கிவிடும். நேரம் முழு வதையும் சரியாய் முறைப்படுத்தி வைத்துக்கொள்ளுங்கள். ஒவ்வொரு கணப்பொழுதிற்கும் கணக்கு இருக்குமானால் சோம்பல் புகுவதற்கே இடமிராது. இம்முறையில் தமோ குணமனைத்தையும் ஜயிப்பதற்கு முயலவேண்டும்.

## (78) ரஜோகுணம்—அதற்கு மருந்து ஸ்வதர்ம வரம்பு

ரஜோ குணத்தை அடக்கவேண்டும். ரஜோகுணமும் ஒரு கொடிய சத்துருவே. இது தமோகுணத்தின் மற்றொரு வகையே. இவ்வாறு சொல்லாது இரண்டும் ஒன்றையே குறிக்கும் இரண்டு சொற்கள் என்பது அதிகப் பொருத்த மானது. உடல் வெகுநேரம் தூங்கிவிட்டதானால் அது அமளிசெய்யத் தொடங்குவதுபோல் ஓடியாடி அமளிசெய்த உடலும் படுக்கையில் விழ விரும்புகிறது. தமோ குணத்தி லிருந்து ரஜோகுணமும் ரஜோகுணத்திலிருந்து தமோ

குணமும் தோன்றுகிறது. ஒன்றிருக்குமாஞல் மற்றதும் வரும் என்றே கொள்ளலாம். ரொட்டியின் ஒரு புறம் தீயும் மறுபுறம் கல்லும் இருக்க அவற்றினிடையில் ரொட்டி சிக்கி இருப்பதைப் போல மனிதனுக்கு முன்னும் பின்னும் இந்த ரஜோ, தமோ குணங்கள் இருந்து வருகின்றன. ரஜோ குணம், "இங்கே வா, உன்னை தமோ குணத்தினிடம் தள்ளிவிடுகிறேன்" என்று சொல்ல, தமோ குணமோ, "என்னிடம் வந்தாயாஞல் ரஜோ குணத்தினிடம் தள்ளி விடுகிறேன்" என்கிறது. இவ்வாறு இந்த ரஜோ குணமும் தமோ குணமும் ஒன்றுக்கொன்று உதவுபவையாய் மனிதனைக் கெடுத்துக் குட்டிச்சுவராக்குகின்றன. கால்பந்து பலரிடமும் உதை வாங்குவதற்கே ஏற்பட்டதைப் போல மனிதனுடைய வாழ்வும் ரஜோகுண தமோகுணங்களிடம் மொத்துறுவதிலேயே கழிகிறது.

ரஜோ குணத்தின் முக்கியமான இலட்சணம் பல்வேறு வகையான காரியங்களைச் செய்வதில் ஆவலும், அமானுஷக் காரியங்களைப் புரிவதில் அபாரமான ஆசையுமாகும். ரஜோ குணத்தின் மூலமாய் அபூர்வமான காரியங்களின் தொடர்பு ஏற்படுகிறது; பேராசை மயமான கர்மப்பற்று உண்டாகிறது; பிறகு வாசனைகள், விகாரங்கள் ஆகியவற்றின் வேகத்தை அடக்க இயலாமற் போகிறது. இங்குள்ள மலையை உடைத்தெடுத்து அங்குள்ள அகழியைத் தூர்க்கும் விருப்பம் உண்டாகிறது. இங்கேயுள்ள கடலில் மண்ணைக் கொட்டி நிரப்பவேண்டும், அங்கேயுள்ள சகாராப் பாலைவனத்தில் நீரைப் பாய்ச்சி அதைக் கடலாக்க வேண்டும் என்ற வேகம் எழுகிறது. இங்கே சூயஸ் கால்வாயைத் தோண்டுவோம், அங்கே பஞமா காவாயை வெட்டுவோம் என்றெல்லாம் சிரமங்களில் ஈடுபடத் தொடங்குகிருேம். உடைத்துத் தகர்த்துக் கொண்டிராத வரை சமாதானம் ஏற்படுவதில்லை. சிறிய குழந்தை ஒரு காகிதத் துண்டையெடுத்துக் கிழித்துவிட்டு, பிறகு அதைக்கொண்டு எதையேனும் செய்வதைப் போலவே இந்தக் காரியமிருக்கிறது. இதில் இதைச் சேர்ப்போம், அதில் அதை ஆழ்த்துவோம், அதை அப்படிப் பறக்கவிடுவோம், இதை இப்படி அமைப்போம் என்று இவ்வாறே முடிவிலா விளையாட்டுகள் ரஜோ குணத்திஞல் தோன்றுகின்றன. பட்சி வானத்தில் பறக்கும்பொழுது நாமும் வானத்தில் ஏன் பறக்கக்கூடாது? மீன் நீரில் வசிக்கும்பொழுது நாமும் நீர்மூழ்கி ஒன்றை

அமைத்துக்கொண்டு நீரிலேயே வாழ்ந்தாலென்ன? இவ்வாறு மானிட உடலைப் பெற்றிருந்தும் பட்சிகள், மிருகங்கள் ஆகியவற்றுடன் போட்டியிடுவதிலேயே நமக்குத் திருப்தியுண்டாகிறது. கூண்டுவிட்டுக் கூண்டு பாய்வதிலும் பிற உடல்களின் ஆச்சரியங்களை அனுபவிப்பதிலும் மானிட உடலைத் தாங்கியிருக்கும் அவனுக்கு ஆவலுண்டாகிறது. ஒருவன், ''வா, செவ்வாய் கிரகத்திற்குப் போய் அவ்விடத்திய வாழ்க்கை எப்படியிருக்கிறதென்றும் அவ்விடத்திய ஜனங்களையும் பார்த்துவரலாம்'' என்கிறான். சித்தம் சதா சுற்றிக்கொண்டே இருக்கிறது. பல்வேறு வாசனைகளென்ற பூதங்கள் நம்மைப் பற்றிக்கொண்டது போல் நாம் நடக்க ஆரம்பிக்கிறோம். அதது இருக்குமிடத்தில் இருப்பதைப் பார்க்க நமக்குச் சகிப்பதேயில்லை. கொந்தளிப்பும் குழப்பமுமாய் இருக்கவேண்டும். 'நான் இவ்வளவு பெரிய மனிதன் இருக்கும்பொழுது இந்த சிருஷ்டி எப்பொழுதும்போல் எப்படி யிருக்கலாம்?' என்று அவனுக்குத் தோன்றுகிறது. உடலின் ஒவ்வொரு பகுதியிலிருந்தும் மயிர்க் காம்பிலிருந்தும் சக்தி ததும்பி வழிந்துகொண்டிருக்கும் ஒரு மல்லன் அதைப் பயன்படுத்துவதற்காக சுவற்றில் போய் மோதுவதையும் மரத்தைப் பிடித்துக் குலுக்குவதையும் போன்று இருக்கின்றன அவன் செயல்கள். ரஜோ குணத்திலிருந்து இம்மாதிரியான உத்வேகமான செயல்கள் எழும். அதனால் ஆட்கொள்ளப்பட்ட மனிதன் பூமியைக் குடைந்து கொண்டேபோய் அதனடியிலிருந்து சில கற்களையெடுத்து அவற்றை வைரமென்றும் மாணிக்கமென்றும் வைடூரியமென்றும் அழைக்கிறான். இதேவகை உற்சாகத்தில் அவன் கடலில் மூழ்கி அதனடியிலுள்ள குப்பை கூளங்களை மேலே கொணர்ந்து அதற்கு முத்து என்று பெயர் அளிக்கிறான்; ஆனால் முத்தில் துளை இல்லையே என்று அதில் துளையிடுகிறான். இனி அந்த முத்துகளை அணிவதெங்கே? அவற்றை அணிவதற்காகத் தட்டானை அழைத்து காதையும் மூக்கையும் துளைக்கச் செய்கிறான். மனிதன் இந்த அமளி துமளியெல்லாம் செய்வது ஏன்? இவை அனைத்தும் ரஜோ குணத்தின் விளைவுகள்.

ரஜோகுணத்தின் மற்றொரு விளைவு மனிதனிடம் ஸ்திரத்தன்மை இல்லாது போவது. ரஜோகுணம் உடனுக்குடன் பயனை விரும்புகிறது. ஆகையால் சிறிது தடை

ஏற்பட்டதும் அவன் தான் ஏற்ற வழியை விட்டுவிடுகிறுன். ரஜோகுணமுள்ள மனிதன் எப்பொழுதும் இதை ஏற்பதும் அதைத் துறப்பதும் என்று செய்துகொண்டே யிருப்பான். அவன் ஏற்கும் விஷயங்கள் ஒவ்வொரு நாளும் மாறிக் கொண்டே யிருக்கும். இதன் விளைவு இறுதியில் அவன் கையில் எதுவும் மிஞ்சாமற்போவது தான்.

"राजसं चलमध्रुवम्"—ராஜஸம் சலமத்ருவம்.

ரஜோகுணத்தின் எல்லாக்காரியங்களும் சஞ்சலமாய் உறுதி யற்றே இருக்கும். சிறு குழந்தைகள் பாத்தியில் ஒரு விதையை நட்டுவிட்டு உடனே அது முளைத்துவிட்டதா என்று நோண்டிப் பார்ப்பார்களே, அதேநிலை தான் ரஜோ குணமுள்ள மனிதனுடையதும். எல்லாம் உடனுக்குடன் அவன் கைக்கு வந்துவிட வேண்டும். அவனுக்கு எப்பொழு தும் ஒரே அவசரம் தான். அடக்கம் என்பதையே அவன் இழந்துவிடுகிறுன். ஒரு இடத்தில் காலை ஊன்றி நிற்ப தென்பது அவனுக்குத் தெரியாது. இங்கே சிறிதுவேலை செய்வான்; அங்கே போனல் சிறிது பெயர் ஏற்படும்; அவன் இங்குமில்லாமல் அங்குமில்லாமல் மூன்றும் இடம் ஒன்றுக்குப் புறப்பட்டுவிடுவான்! இன்று சென்னையில் வரவேற்பு, நாளை கல்கத்தாவில், மறுநாள் பம்பாய்—நாகபுரியில்! நாட்டில் எவ்வளவு நகரசபைகளுண்டோ அவை அத்தனையும் தனக்கு வரவேற்புப்பத்திரம் அளிக்க வேண்டுமென்று ஆவல் கொள்வான்! எங்கு சென்றுலும் தனக்குச் சிறப்பே என்று அவனுக்குத் தோன்றும். ஓரிடத்தில் நிலைத்து வேலைசெய்யும் பழக்கமே அவனுக் கிராது. இதனல் ரஜோகுணமுள்ளவனுடைய நிலை மிகவும் பயங்கரமானதாய்விடுகிறது.

ரஜோகுணத்தின் வயப்பட்ட மனிதன் பல்வேறு தொழில்களிலும் காரியங்களிலும் காலை இட்டுக்கொண்டே யிருப்பான். சுதர்மம் எனத்தக்கதொன்று அவனுக்குக் கிடையாது. உண்மையான சுதர்மம் என்பதற்கு பிற காரியங்களனைத்தையும் விட்டுவிடுதல் என்பது பொருள். கீதையின் கர்மயோகம் ரஜோகுணத்திற்கு ராமபாண மாற்றும். ரஜோகுணத்தில் எல்லாமே சஞ்சலமானவை தான். மலையின் உச்சியில் பொழியும் நீர் பல்வேறு திசை களிலும் ஓடத் தொடங்குமானல் அது போனஇடமே தெரியாமற் போய்விடும்; எல்லா நீரும் சிதறிப் பாழாய்

விடும். ஆனால் அதுவே ஒரு திசையில் ஓடும்பொழுது நதியாகிவிடும்; அதிலிருந்து ஒரு சக்தி தோன்றும்; நாட்டிற்கு அதனால் நன்மை உண்டாகும். அவ்வாறே மனிதன் தன்சக்தி அனைத்தையும் வெவ்வேறு தொழில்களில் ஈடுபடுத்தாது அவற்றை ஒன்றுசேர்த்து ஒரே காரியத்தில் முறைப்படி செலுத்துவானாயின் அவன்மூலமாக ஏதேனும் காரியம் உருவாகும். ஆகையால் சுதர்மத்திற்கு மிகுந்த சிறப்புண்டு.

சுதர்மத்தைப்பற்றி இடையறாது சிந்தித்து அதிலேயே சக்தி அனைத்தையும் செலவிடவேண்டும்; மற்ற விஷயங்களில் கவனமே செலுத்தக்கூடாது. சுதர்மத்தின் உரைகல் இதுவே. கர்மயோகம் என்பது மிகவும்பெரியதோ உயர்ந்ததோ ஆன காரியம் என்பதல்ல. அளவை மீறிச் செய்யப்படும் காரியத்திற்கு கர்மயோகம் என்ற பெயரில்லை. கீதையின் கர்மயோகம் என்பதே வேறுவிஷயம். அதிலுள்ள சிறப்பு, பயனில் கருத்தைச் செலுத்தாது இயற்கையாய் தவிர்க்கமுடியாது கிடைத்துள்ள சுதர்மத்தைச் செய்து அதன்மூலமாய் சித்தசுத்தி பெற்றுக்கொண்டே யிருத்தல் என்பது. இல்லையேல் சிருஷ்டியில் சாதாரணமாகவே ஒரேவகையில் காரியங்களெல்லாம் நடந்து கொண்டே தானிருக்கின்றன. கர்மயோகம் என்பதற்கு விசேஷமான ஒரு மனப்போக்குடன் எல்லாக் காரியங்களையும் செய்தல் என்பது பொருள். வயலில் விதைவிதைப்பதும் ஒருபிடி தானியத்தை எடுத்து எங்கேனும் வீசி எறிவதும் முற்றிலும் வேறுபட்ட காரியங்களாகும். இவை இரண்டிற்கும் பெருத்த வேற்றுமையுண்டு. தானியம் விதைப்பதனால் எவ்வளவு பயன் ஏற்படுகிறது, அதை வீணில் வீசி எறிவதனால் எவ்வளவு நஷ்டம் விளைகிறது என்பதை நாம் அறிவோம். கீதை போதிக்கும் கர்மம் விதைவிதைப்பது போன்றது. இத்தகைய சுதர்மமென்ற கடமையில் அளவிலடங்காத சக்தி இருக்கிறது. அங்கே எவ்வளவு பாடுபட்டாலும் போதாது. ஆகையால் அங்கே அதிக ஓட்டத்திற்கும் பாட்டுக்கும் சந்தர்ப்பமே இல்லை.

## (79) சுதர்மத்தை நிர்ணயிப்பது எப்படி?

அப்படியானால் "இந்த சுதர்மத்தைத் தீர்மானிப்பதெப்படி?" என்று எவரேனும் கேட்பாரானால் அதற்குள்ள

சுலபமான பதில் "அது இயற்கையாகவே அமைவது" என்பதே. சுதர்மம் நம்முடன் இயற்கையில் தோன்றுவது. அதைத்தேடிக் கண்டுபிடித்தல் என்பதே விசித்திரமாய்த் தோன்றுகிறது. மனிதன் பிறக்கும் பொழுதே அவனுடைய சுதர்மமும் பிறந்துவிடுகிறது. குழந்தைக்குத் தன் தாயைத் தேடிக் கண்டுபிடிக்க எப்படி நேருவதில்லையோ அப்படியே சுதர்மத்தையும் எவரும் தேடவேண்டி யிருப்ப தில்லை. அது முன்னரே நம் கையில் வந்திருப்பது. நாம் பிறப்பதற்கு முன்பும் உலகம் இருந்தது; நமக்குப் பிறகும் அது இருக்கும். நமக்கு முன்னும் அந்தப் பெரிய வெள்ளம் ஓடிற்று; நமக்குப் பின்னும் அது ஓடும். இந்த வெள்ளத்தினிடையில் நாம் பிறந்திருக்கிறோம். எந்தப் பெற்றோருக்கு நான் பிறந்திருக்கிறேனோ அவர்களுக்கும் எந்த அண்டை அயலார்களினிடையில் நான் வாழ்கிறேனோ அவர்களுக்கும் சேவை செய்தலென்ற இந்த இரண்டு காரியங்களும் எனக்கு இயற்கையிலேயே கிடைத்திருப் பவை. பிறகு என் போக்குகளோ நான் ஒவ்வொரு நாளும் அனுபவிப்பவை தாமே. எனக்குப் பசியெடுக்கிறது, தாகம் தோன்றுகிறது. ஆகையால் பசித்தவருக்கு உணவு அளித்தலும் தாகம் என்பவர்களுக்கு நீர் அருத்தலும் எனக்கு இயற்கையிலேயே ஏற்பட்டுள்ள கடமைகளா கின்றன. இவ்வாறு இந்த சேவை, பிற உயிர்களிடம் தயை என்ற சுதர்மத்தை நான் தேடிப்போக வேண்டியிருப்ப தில்லை. சுதர்மத்தை எவரேனும் தேடிக் கொண்டிருப்ப தாய்த் தெரிந்தால் அவர் ஏதோ பரதர்மத்தையோ, அதர் மத்தையோ செய்கிறார் என்று உறுதியாய்க் கொள்ளலாம்.

ஊழியர் தாம் செய்யவேண்டிய சேவையை எங்கும் தேட வேண்டியிருப்பதில்லை; அது தானே அவரிடம் வந்து சேருகிறது. ஆனால் ஒரு விஷயத்தை கவனத்தில் கொள்ளவேண்டும். அதாவது, சிரமமின்றி தானே கிடைப்ப தெதுவும் சுதர்மமே என்று நினைக்கக்கூடாது. ஒரு விவசாயி இரவில் என்னிடம்வந்து, "வாருங்கள், நாம் அந்த அணையை நான்கைந்து முழம் அப்பால் தள்ளிவிட்டு வருவோம். அதனால் என் வயலுக்கு தண்ணீர் நன்றாய்ப் பாயும். இப்பொழுது அங்கே ஒருவருமில்லை. சந்தடி எதுவுமின்றி எல்லாம் ஆய்விடும்" என்று சொன்னார். இந்தக்காரியத்தை எனக்கு என் அயலார் சொல்லிய போதிலும், இது நான் தேடிப்போகாது தானே ஏற்பட்ட

தாயினும் இதில் அசத்தியம் கலப்பதால் இது என் கடமை யாகாது.

நான்கு வர்ணங்களின் ஏற்பாடு எனக்கு இனியதாய்த் தோன்றுவதற்குக் காரணம் அதில் இயற்கை, தர்மம் ஆகிய இரண்டும் கலந்திருப்பதே. இந்த சுதர்மத்தை விடுவதனுல் காரியம் நடைபெருது. எனக்கு எந்தப் பெற்ருேர் ஏற்பட்டிருக்கிருர்களோ அவர்களேதான் என் பெற்ருேரா யிருப்பர். எனக்கு அவர்களைப் பிடிக்கவில்லை என்று நான் சொன்னுல் எப்படி ஆகும்? பெற்ருேரின் தொழில் இயற்கை யாகவே பிள்ளைக்குப் பரம்பரை சொத்தாய்க் கிடைப்பது. தலைமுறை தலைமுறையாய் நடந்துவரும் தொழில் அது; நியாயத்திற்கு மாருக இல்லாதிருக்குமானுல் அதையே செய்தல், அதையே·தொடர்ந்து நடத்திவருதல் வர்ண ஏற்பாட்டிலுள்ள ஒரு சிறப்பாகும். இந்த வர்ண ஏற்பாடு இன்று பெரிதும் குழம்பிப் போய்க் கிடக்கிறது. அதை அனுஷ்டித்தல் இன்று மிகவும் சிரமமாய்விட்டது. ஆனுல் அதைச் சரிப்படுத்த முடியுமானுல் மிகவும் நன்ருயிருக்கும். இல்லையேல் இன்று தொடக்கத்தின் இருபத்தைந்து முப்பது வருஷங்கள் புதிய வேலையை, புதிய தொழிலொன்றைக் கற்பதிலேயே கழிந்து போகின்றன. தொழிலைக் கற்றுக் கொண்டான பிறகும் மனிதன் தனக்கென வேலை செய்வதற்கு ஒரு இடத்தைத் தேடுகிருன். இவ்வாறு ஆரம்பத்தின் இருபத்தைந்து வருஷகாலம் அவன் ஏதோ கற்றுக் கொண்டே யிருக்கிருன். இந்தக் கல்விக்கும் அவனுடைய வாழ்க்கைக்கும் சம்பந்தமே இருப்பதில்லை. எதிர்கால வாழ்க்கைக்கு ஏதோ ஆயத்தம் செய்வதாகச் சொல்லுகிருர்கள். கல்வி பெறும்பொழுது அவன் உயிர் வாழாதது போலும், பிறகே வாழப்போவதைப் போலும் இருக்கிறது அவர்களுடைய கூற்று! முதலில் எல்லாவற்றையும் கற்றுக் கொள்ளவேண்டும், பிறகு வாழவேண்டும் என்கிருர்கள். வாழ்வும், கல்வியும் வெவ்வேறென இவர்கள் பிரித்துவைத்திருப்பதுபோல் தோன்றுகிறது. வாழ்வுடன் எங்கே சம்பந்தமில்லையோ அதைச் சாவென்று தானே சொல்ல வேண்டும்? இந்தியனின் சராசரி ஆயுளின் அளவு இருபத்துமூன்று வருஷமாயிருக்கையில் இருபத்தைந்து வருஷத்திற்கு இந்த ஆயத்தத்தையே அவன் செய்து கொண்டிருக்கிருன். இவ்வாறு புதிய தொழில்களை, வேலைகளைக் கற்பதிலேயே ஆயுட்காலம் போய் விடுகிறது. அதன்

பிறகு தொழில் செய்தல் ஆரம்பமாகிறது. இதனால் ஊக்கம் நிறைந்த, உற்சாகம் நிறைந்த, மகத்துவம் பொருந்திய வருஷங்கள் வீணில் கழிந்து போகின்றன. எந்த உற்சாகத்தையும் ஊக்கத்தையும் ஜன சேவையில் செலவுசெய்து வாழ்க்கையைப் பயனுள்ளதாய்ச் செய்து கொண்டிருக்கலாமோ அவை வீணில் கழிந்து பாழாகின்றன. வாழ்க்கை என்பது ஒரு வெறும் கேலிக்கூத்தோ, விளையாட்டோ அல்ல. ஆனால் வாழ்க்கையின் மதிப்பிட முடியாத ஆரம்பப் பகுதி ஜீவனத்திற்கு வேண்டிய தொழிலைத் தேடுவதிலேயே கழிந்து போவதை எண்ண வருத்தமாயிருக்கிறது. இந்து மதமானது இதனாலேயே வர்ண தர்மமென்ற வழியைக் கண்டுபிடித்திருக்கிறது.

ஆனால் நான்கு வர்ண ஏற்பாட்டை ஒரு பக்கத்தில் ஒதுக்கி வைத்துவிட்ட போதிலும், எல்லா நாடுகளிலுமே, இந்த ஏற்பாடு இல்லாத எல்லா இடங்களிலுமே சுதர்மமென்பது எல்லோருக்கும் ஏற்பட்டுத்தானிருக்கிறது. நாம் அனைவரும் இந்த வெள்ளத்தில் ஏதோ ஒரு விசேஷ நிலையை உடன் கொண்டே பிறந்திருக்கிறோம். ஆகையினால் சுதர்மமென்ற கடமை நமக்கு இயற்கையாகவே ஏற்பட்டிருக்கிறது. ஆகையால் தொலைவிலுள்ள கடமைகள்—அவைகளைக் கடமைகள் என்று அழைப்பதே சரியல்ல —எவ்வளவு தான் சிறந்தவையாய்த் தோன்றிய போதிலும் அவற்றை ஏற்கக் கூடாது. பல சமயங்களில் தூரத்துப் பச்சை கண்ணுக்குக் குளுமையாயும், தொலைவில் அடிக்கப் படும் தம்பட்டம் காதுக்கு இனிமையாயும் இருப்பதுண்டு. மனிதன் தொலைவிலுள்ளதைக் கண்டு மோகமடைந்து விடுகிறான். மனிதன் நிற்குமிடத்தில் பனி அடர்ந்து சூழ்ந்திருக்கிறது. ஆனால் அவனுக்கு அது கண்ணுக்குப் புலனாகாது போக, அவன் தொலைவைச் சுட்டிக்காட்டி "அங்கே நல்ல பனி பெய்கிறது" என்கிறான். ஆனால் அங்கேயுள்ளவனோ இங்கே சுட்டிக்காட்டி, "அங்கே நல்ல பனி" என்கிறான். எல்லா இடங்களிலும் பனி இருந்த போதிலும் பக்கத்திலிருப்பது தெரிவதில்லை. மனிதனை தொலைவிலுள்ளவையே வசீகரிக்கின்றன. பக்கத்திலுள்ளது கவனமின்றி மூலையில் தள்ளப்பட்டுக் கிடக்க, தொலைவிலுள்ளதைப் பற்றிக் கனவு காண்கிறான். ஆனால் இது மோகமாகும். இதை விட்டே தீரவேண்டும்.

கிடைத்துள்ள சுதர்மம் சாதாரணமாயிருந்த போதிலும், போதுமானதாய்த் தோன்ருத போதிலும் ரசமற்றதாய்க் காணப்படினும், எனக்குக் கிடைத்திருப்பதே சிறந்தது; அதுவே எனக்கு அழகியது. கடலில் மூழ்கிக் கொண்டிருக்கும் மனிதனுக்கு ஒரு கோணல் மாணலான, கரடு முரடான மரத்துண்டு கிடைக்குமானுல்—இழைத்துப் பள பளவென்று அழகியதாய் இல்லாவிட்டாலும்—அதுவே அவனைக் காக்கும். தச்சன் பட்டறையில் எவ்வளவோ சிறந்த வழவழப்பான சித்திர வேலைப்பாடுகளமைந்த மரத் துண்டுகளிருக்கின்றன. ஆனுல் அவை பட்டறையிலிருக்க இவன் இங்கே கடலில் மூழ்கித் தவித்துக் கொண்டிருக் கிருன்! ஆகையால் இந்தக் கோணல் மாணலான மரத் துண்டே இவனைக் காக்குமாகையால் இதையே இவன் பற்றிக்கொள்ள வேண்டும். அவ்வாறே எனக் கேற்பட் டுள்ள சேவை குறைந்த தரத்ததாய்த் தோன்றிய போதிலும் அதுவே எனக்கு உபயோகமானது. அதில் ஆழ்ந்திருத் தலே எனக்கு அழகாகும். அதுதான் என்னைக் கடைத் தேற்றும். அதை விட்டு நான் வேருெரு சேவையைத் தேடித் திரிவேனுயின் முதலிலிருந்ததும் என்னை விட்டுப் போய்விட புதியதும் எனக்குக் கிட்டப் போவதில்லை. இதனுல் மனிதன் சேவை செய்வதையே மறந்து உழலத் தொடங்குகிருன். ஆகையால் சுதர்மமென்ற கடமையி லேயே நாம் ஆழ்ந்து நிற்க வேண்டும்.

நாம் சுதர்மத்தில் ஆழ்ந்து போய் விடும்பொழுது ரஜோ குணம் ரசமற்றுப் போகிறது; ஏனெனில், அப் பொழுது நம் சித்தம் ஏகாக்ரமாய் விடுகிறது. அது சுதர் மத்தை விட்டு எங்கும் போவதில்லையாகையால் சஞ்சல மான ரஜோ குணத்தின் வலுபெரிதும் குறைந்து போகிறது. ஆறு ஆழமாய் அமைதியாயிருக்கையில் அதில் எவ்வளவுதான் வெள்ளம் பெருகிய போதிலும் அது அதையெல்லாம் தன்னுள் அடக்கிக் கொள்கிறது. இவ்வாறே சுதர்ம மென்ற ஆறு மனிதனுடைய எல்லா பலத்தையும், எல்லா வேகத்தையும், எல்லா சக்தியையும் சமாளிக்கக் கூடும். சுதர்மத்தில் நாம் எவ்வளவு சக்தியை வேண்டுமானுலும் செலவழிக்கலாம்; அதில் தவறில்லை. சுதர்மத்தில் நாம் எல்லா சக்தியையும் செலவிட்டோமானுல் ரஜோ குணத்தின் ஆட்டம் பாட்டங்களுக்கு இடமே இல்லாமற் போகும்; நம் சஞ்சலத் தன்மையே மிதிபட்டு

மடிந்து போகும். ரஜோ குணத்தை வசப்படுத்துவதற் குள்ள முறை இதுவே.

## (80) ஸத்வ குணமும் அதற்கு உபாயமும்

இனி ஸத்வ குணம் எஞ்சியிருக்கிறது. இதனிடம் மிகவும் கவனமாய் இருந்துவர வேண்டும். இதனிட மிருந்து ஆன்மாவை எப்படிப் பிரிப்பது? இது மிகவும் நுணுக்கமான, கருத்தைப் பற்றிய விஷயம். ஸத்வ குணத்தை அறவே ஒழித்துவிடக் கூடாது. ரஜ-தமோ குணங்களை முற்றிலும் அழிக்க வேண்டியிருக்க, ஸத்வ குணத்தின் விஷயமே, தன்மையே வேறுரும். பெரிய கும்பல் கூடியிருக்கையில் அதைக் கலைக்க வேண்டி வரும் போது "கூட்டத்தில் முழங்காலுக்கு மேலே யில்லாமல் கீழே பார்த்துச் சுடுங்கள்!" என்று போலீஸுக்கு உத்தரவு கொடுக்கப்படுகிறது. இதனுல் மனிதன் சாவதில்லை, காய மடைகிருன். இவ்வாறே ஸத்வ குணத்தையும் காயப் படுத்த வேண்டுமேயன்றி கொல்ல வேண்டியதில்லை. ரஜோ குணமும் தமோ குணமும் போய்விட்ட பிறகு சுத்த ஸத்வ குணம் எஞ்சி நிற்கிறது. நம் உடல் இருக்கும் வரை யில் நாம் ஏதோ ஒரு ஆதாரத்தின்மீதே இருந்து வர வேண்டியிருக்கும். ஆகவே ரஜ-தமோ குணங்கள் போன பிறகு எஞ்சியிருக்கும் ஸத்வ குணத்திலிருந்தும் விலகி இருப்பது என்பதற்குப் பொருள் தான் என்ன? ஸத்வ குணம் பற்றிய அபிமானம் ஏற்பட்டு விடும்பொழுது அது ஆன்மாவை அதன் தூய தன்மையிலிருந்து கீழே இழுத்து விடுகிறது. லாந்தரின் வெளிச்சத்தை அதன் சுத்தத் தன்மையுடன் வெளியில் பரவச் செய்ய வேண்டு மாகுல் கண்ணுடியில் படிந்துள்ள புகையை நன்கு அகற்ற வேண்டியிருக்கிறது; கண்ணுடியில் தூசு படிந் திருந்தால் அதையும் கழுவ வேண்டியிருக்கிறது. இவ்வாறே ஆன்மாவின் ஒளியின் பக்கத்தில் சேர்ந்துள்ள தமோ குண மென்ற புகைக் கரியை நன்ருய்த் துடைத்து அகற்ற வேண்டும்; அதன் பிறகு ரஜோ குணமென்ற தூசியையும் அகற்ற வேண்டும். இவ்வாறு தமோ குணத்தையும் ரஜோ குணத்தையும் அகற்றித் துப்புரவாக்கிய பிறகு ஸத்வ குணமென்ற கண்ணுடி பாக்கி யிருக்கிறது. இந்த ஸத்வ குணத்தையும் அகற்ற வேண்டும் என்

பதற்கு அந்தக் கண்ணுடியையும் உடைத்துவிட வேண்டி யது என்று பொருள் கொள்ளலாமா? கூடாது. கண்ணுடியையே உடைத்து விட்டால் லாந்தர் உப யோகமில்லாமற் போகும். விளக்கு ஒளியைப் பரப்பு வதற்கு கண்ணுடி தேவையே. ஆகையால் இந்த சுத்த மான பளபள வென்றிருக்கும் கண்ணுடியை உடைக்கக் கூடாது. ஆனல் அதன் ஒளி பட்டுக் கண் கூசாமலிருப் பதற்காக அதன் மீது ஒரு காகிதத் துண்டைச் செருகிவிட வேண்டும். ஸத்வ குணத்தின் மீது வெற்றி கொள்வது என்பதற்கு அதுபற்றி நாம் கொள்ளும் கர்வத்தை, அதனிடம் நமக்குள்ள பாசத்தை அகற்ற வேண்டும் என் பதே பொருள். ஸத்வ குணத்தைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டியதே; ஆனல் அதை கிரமமாய் முறைப்படி செய்ய வேண்டும். ஸத்வ குணத்தை அகங் காரமற்றதாய், கர்வமற்றதாய் ஆக்கிவிட வேண்டும்.

அப்படியானல் இந்த ஸத்வ குணத்தின் கர்வத்தின் மீது வெற்றி கொள்வ தெப்படி? இதற்கொரு வழியிருக் கிறது. ஸத்வ குணத்தை நம்முள் நிலைக்கச் செய்துவிட வேண்டும். எப்பொழுதும் உடன் இருப்பதனல் அதன் கர்வம் போய் விடும். ஸத்வகுண மயமான காரியங் களையே நாம் எப்பொழுதும் செய்து கொண்டிருக்க வேண்டும். அதை நம் சுபாவமாகவே ஆக்கிக் கொண்டு விடவேண்டும். ஸத்வ குணம் நம்மிடம் சிறிது நேரம் இருந்துவிட்டுப் போகும் விருந்தாளியா யில்லாது நம் வீட்டு ஆளாய்விடவேண்டும். நாம் எப்பொழுதேனும் ஆடிக்கொரு தரம், தைக்கொரு தரம் என்று செய்யும் காரி யத்தைக் குறித்து நமக்கு கர்வம் ஏற்படும். நாம் தினமும் தூங்குகிறோம்; ஆனல் அதைப் பற்றிப் பிறரிடம் பேசுவ தில்லை. ஆனல் ஒரு நோயாளிக்கு, பதினைந்து நாள் தூக்கமே வராதிருந்து பிறகு சிறிது தூக்கம் வந்ததானல் அவன் எல்லோரிடமும், "நேற்று சிறிது கண் அயர்ந் தேன்" என்கிருன். அவனுக்கு அது முக்கியத்துவம் வாய்ந்ததாய்த் தோன்றுகிறது. இதைவிடச் சிறந்த உதாரணமான நாம் சுவாசம் விட்டு சுவாசம் இழுப்பதைக் கொள்ளலாம். நாம் இருபத்து நான்கு மணி நேரமும் மூச்சு விடுகிறோம்; ஆனல் அதைப் பற்றி எவரிடமும் பேசுவதில்லை. எவரேனும் யாரிடத்திலாவது பெருமையாக "நான் ஒரு மூச்சு விடும் பிராணி" என்று சொல்லிக்

கொள்வதுண்டா? அரித்துவாரத்தில் எறியப்பட்ட ஒரு துரும்பு கங்கையில் மிதந்து கொண்டே 1500 மைல் தொலேவைக் கடந்து கல்கத்தா போய்ச் சேர்ந்ததானல் அது அதைக் குறித்து கர்வங் கொள்ளுமா? அது நீரோட்டத்துடன் தானே மிதந்து வந்துவிட்டது. ஆனல் வெள்ளத்தின் எதிர்த் திசையில் ஒருவன் பத்து இருபது முழதூரம் நீந்தி விட்டானயின் அவன் அதைப்பற்றி எவ்வளவு பீத்திக் கொள்ளமாட்டான்? கருத்தென்ன வென்றல், நமக்கு இயற்கையாயுள்ள எந்தக் காரியத்தை யும் பற்றி கர்வம் தோன்றுவதில்லே.

நாம் ஒரு நல்ல காரியம் செய்துவிடும் பொழுது நமக்கு அதுபற்றி கர்வம் தோன்றுகிறது. ஏன்? ஏனென்றல், அது இயற்கையாய்ச் செய்யப்படாமையா லேயே. குழந்தை ஒரு நல்ல காரியம் செய்திருந்தால் தாய் அதன் முதுகில் தட்டிக் கொடுக்கிருள். இல்லேயேல் சாதாரணமாய் தாய் கொம்பினலேயே குழந்தையின் முதுகை எப்பொழுதும் தொடுவாள். இரவின் பேரிருளில் ஒருசில மின் மினிகள் வெளிக்கிளம்பும் பொழுது அவை களின் விறைப்பைப் பார்க்க வேண்டுமே! அவை தம் ஒளி முழுமையும் தொடர்ந்து காட்டுவதில்லே; இடையிடையே ஒளியை மறைப்பதும் பிறகு திறப்பதுமாய் ஆட்டங் காட்டுகின்றன. ஆனல் அதன் ஒளி தொடர்ந் திருக்குமானல் அதன் விறைப்பு போய்விடும். ஒரு விஷயம் சதா நடைபெறும் பொழுது அதில் சிறப் பிருப்பதாகவே தோன்றுவதில்லே. இவ்வாறு நம் காரியங் களில் ஸத்வ குணம் இடையருது வெளிப்பட்டுக் கொண் டிருக்குமானல் அது நம் சுபாவமாய் விடும். சிங்கத்திற்கு தன் சௌரியத்தைப்பற்றிக் கர்வமில்லாதது மட்டுமல்ல, தன் சௌரியம் அதற்கு நினேவே இருப்பதில்லே. இவ் வாறே அதன் நினேவே நமக்கில்லாது போகும்படி ஸாத் விகப் போக்கை நாம் நம் இயற்கையாய், சுபாவமாய்ச் செய்து கொண்டுவிட வேண்டும். ஒளி தருதல் சூரிய னுக்கு இயற்கையான காரியம். அதைப்பற்றி சூரியனுக்கு கர்வம் ஏற்படுவதில்லே. அதன் பொருட்டு எவரேனும் சூரியனுக்கு அத்தாட்சிப் பத்திரம் கொடுக்கப் புகுவார்களா ல் அது, "இதில் விசேஷம் என்ன இருக்கிறது? நான் ஒளி அளிப்பதைத் தவிர அதிகமாய் என்ன செய்து விடுகிறேன்? என் வாழ்க்கையே ஒளி அளிப்பது தானே?

ஒளி அளியாவிடில் நான் அவிந்தல்லவா போவேன்! எனக்கு வேறெதுவுமே செய்யத் தெரியாதே!'' என்று சொல்லும். ஸாத்விக மனிதனுடைய நிலை இவ்வாறாய்விட வேண்டும். ஸாத்விக குணம் அவனுடைய ஒவ்வொரு மயிர்க் காம்பிலும் ஊறிப் போய்விட வேண்டும். இவ்வாறு நம் சுபாவமே ஸத்வகுண மயமாய் விடும்பொழுது நமக்கு அதுபற்றிய கர்வமே இராது. ஸத்வகுணத்தைத் தீமையற்றதாக்க, அதன்மீது வெற்றி காண இது ஒரு வழியாகும்.

மற்றொரு வழி, ஸத்வ குணத்தின் பற்றையும் ஆசையையும் விட்டுவிடுதல். அகங்காரம், ஆசை என்ற இரண்டும் வெவ்வேறானவை. இவற்றினிடையேயுள்ள வேற்றுமை சிறிது நுணுக்கமானது. ஆகையால் உதாரணம் சொன்னால் அது விரைவில் புரிந்துவிடும். ஸத்வ குணத்தின் கர்வம் நீங்கிய பிறகும் அதனிடமுள்ள ஆசை இருந்து வரும். மூச்சுவிட்டு இழுப்பதையே உதாரணமாய்க் கொள்ளலாம்: மூச்சு இழுப்பதைப்பற்றிய கர்வமிருப்பதில்லையாயினும் அதில் பெரிய ஆசை மட்டும் இருந்து வருகிறது. 'ஐந்து நிமிஷம் மூச்சை அடக்கிக் கொண்டிரு' என்றால் முடிவதில்லை. மூக்குக்கு மூச்சுவிட்டு இழுப்பதைப்பற்றி கர்வமில்லையாயினும் அது காற்றை மட்டும் இழுத்துக்கொண்டே தானிருக்கிறது. சோக்ரத்தரைப்பற்றி ஒரு விநோதமான கதை உண்டு. அவருடைய மூக்கு சப்பையாயிருந்ததால் அவரைப் பார்ப்பவர்கள் சிரிப்பது வழக்கம். ஆனால் விநோதியான சோக்ரத்தர், "என் மூக்கே மூக்குகளில் சிறந்தது. மூக்கின் துவாரங்கள் அகன்றிருந்தால் அதிகக் காற்றை இழுக்கமுடியுமாகையால் என் மூக்கே எல்லா மூக்கையும்விட அழகானது'' என்று சொல்லுவார். கருத்தென்னவென்றால், மூக்குக்கு சுவாசம் விட்டு இழுப்பதுபற்றிய கர்வமில்லையாயினும் ஆசை மட்டும் இருந்து வருகிறது. ஸத்வ குணங்களினிடத்திலும் இதே வகையில் ஆசை ஏற்பட்டுவிடுகிறது. உதாரணமாக, உயிர்களிடத்து அன்பைச் சொல்லலாம். இந்த குணம் மிகவும் உபயோகமானதாயிருந்தபோதிலும் அதன் ஆசையையும் அகற்றிக்கொள்ள முடிய வேண்டும். உயிர்களிடத்து அன்பு தேவையாயினும் அதனிடம் ஆசை கூடாது.

மகான்கள் இந்த ஸத்வ குணம் காரணமாகவே பிற

ருக்கு வழி துலக்குவோராகின்றனர். அவர்களுடைய உடல் உயிர்களிடத்து அன்பு காரணமாக எல்லோருக்கும் சொந்தமாய், பொதுவாகி விடுகிறது. ஈக்கள் வெல்லம் உள்ள பாண்டத்தைப்போய் மொய்த்துக் கொள்வதைப் போல அகில உலகமும் மகான்களின் மீது அன்புப் போர்வையைப் போர்த்துகிறது. மகான்களினுள்ளத்தில் அன்பு பெருக்கெடுத்து ஓடுவதால் அகில உலகமும் அவர்களிடம் அன்பு பாராட்டத் தொடங்குகிறது. மகான்கள் தம் உடற்பற்றைத் துறந்துவிடுவதால் அகில உலகமும் அவர்களைப்பற்றி, அவர்களுடைய உடலைக் குறித்துக் கவலை கொள்ளத் தொடங்குகிறது. ஆனால் இந்தப் பற்றையும் மகான்கள் அகற்றிக்கொள்ளவேண்டும். இந்த உலகப் பற்றிருக்கிறதே, இந்தப் பெரும் பயனிருக்கிறதே, இதிலும் ஆன்மாவை வேறாய்ப் பிரித்துவிடவேண்டும். தான் ஒரு சிறந்த மனிதன், தனிப்பட்டவனென்று அவர்களுக்கு ஒருபொழுதும் தோன்றக் கூடாது. இவ்வாறு ஸத்வ குணத்தை உடலிலேயே ஜரித்துப்போகச் செய்ய வேண்டும்.

முதலில் அகங்காரத்தின் மீதும் பிறகு ஆஸக்தியின் மீதும் வெற்றி காண். எப்பொழுதும் உடனிருப்பதனால் அகங்காரம் வெல்லப்பட, பயனில் பற்றைத் துறந்து ஸத்வ குணத்தினால் கிட்டும் பயனைக்கூட ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்வதனால் ஆஸக்தி அல்லது ஆசையும் வெல்லப்படும். வாழ்க்கையில் ஸத்வ குணம் நிலைத்துவிடும்பொழுது ஒரு சமயம் சித்தியினுருவிலும் இன்னொரு சமயம் கீர்த்தியினுருவிலும் பயன் நம் எதிரில் வரும். ஆனால் அந்தப் பயனையும் துச்சமாய், இழிந்ததாய்க் கருதுங்கள். மாமரம் தன் பழம் ஒன்றைக்கூடத் தான் தின்பதில்லை; பழம் எவ்வளவு சிறந்ததாயிருப்பினும் எவ்வளவு இனிப்பாயிருந்த போதிலும் எவ்வளவு ருசியாயிருந்தபோதிலும் அதை அருந்துவதைவிட அருந்தாயிருப்பதே அதற்கு அதிக இன்பமளிக்கிறது. அனுபவிப்பதைவிட தியாகம் அதிக இன்பம் தருவது. தர்மபுத்திரர் வாழ்க்கை முழுதும் செய்த புண்ணியத்தின் விளைவாய்க் கிடைத்த சுவர்க்கவாசமென்ற பயனையும் இறுதியில் உதறித் தள்ளினர்; வாழ்க்கை முழுதும்செய்த தியாக மென்ற கோபுரத்தின் மீது ஸ்தூபியைப் பொருத்தினர். அந்த இனிய பயனை நுகர்வதற்கு அவருக்கு உரிமையிருந்தது. ஆனால் அவர் அதை

நுகர்ந்திருந்தாராகுல் அது முடிந்துபோயிருக்கும். "क्षीणे पुण्ये मर्त्य लोकं विशन्ति ।" (க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விஶந்தி) என்ற இந்தச் சக்கரம் அவரைச் சுழற்றத் தொடங்கி யிருக்கும். தர்மபுத்திரர் செய்த இந்தத் தியாகம் எவ்வளவு சிறந்தது? இது எப்பொழுதும் என் கண்களின் முன் நின்றுகொண்டே யிருக்கிறது. இவ்வாறு ஸத்வ குணத்தை இடையருது இயற்றி வருவதன் மூலமாய் அதன் அகங்காரத்தை வெற்றிகொள்ளவேண்டும். நடுவு நிலையில் நின்று எல்லாப் பயன்களையும் ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்துவிட்டு அதன் ஆசையினின்று விடுபடவேண்டும். அப்பொழுது ஸத்வகுணத்தையும் ஜயித்துவிட்டோமென்று சொல்லலாம்.

## (81) ஆன்ம ஞானமும் பக்தியின் சார்பும்

இனி கடைசி விஷயம். நீங்கள் ஸத்வ குணமயமாய் விட்டபோதிலும், அகங்காரத்தை வென்றுவிட்ட போதிலும் பயனிடத்திலுள்ள பற்றைத் துறந்துவிட்ட போதிலும் இவ் வுடல் இருந்து வரும் வரையில் இடையிடையே ரஜ-தமோ குணங்கள் தாக்கிக்கொண்டே தானிருக்கும். சிறிது நேரம் நாம் இக் குணங்களை வென்று விட்டதாய்த் தோன் றியபோதிலும் இவை மீண்டும் மீண்டும் வந்து தம் கை வரிசையைக் காட்டவே செய்யும். ஆகையால் எப் பொழுதும் விழிப்புடனிருக்க வேண்டும். கடலின் நீர் வேகமாய் உள்ளே பாய்ந்து பாய்ந்து பூமியைக் குடைந்து விடுவதைப் போல ரஜ—தமோ குணங்களின் பெருக்கு நம் மனதிற் புகுந்து பெரும் துளைகளை உண்டாக்கி விடு கிறது. ஆகையால் சிறு துளையும் தோன்ருது பார்த் துக்கொள்ளவேண்டும்; வெகு கவனமாய் நன்கு கண் காணித்து வரவேண்டும். எவ்வளவுதான் எச்சரிக்கையும் திறமையும் கொண்டிருந்த போதிலும் ஆன்ம ஞானம், ஆன்ம தரிசனம் ஏற்படாதிருக்கும் வரையில் ஆபத்து உண்டு என்று உணருங்கள். ஆகையால் எல்லா வகை யிலும் முயன்று ஆன்ம ஞானத்தைப் பெறுங்கள்.

ஆன்ம ஞானம் வெறும் விழிப்பின் பயற்சிகளிளுல் ஏற்படாது. பின் எப்படி ஏற்படும்? அப்பியாசத்திளுலா? இல்லை. அதற்கு ஒரே வழி தானுண்டு. அது உண்மை உள்ளத்துடன், மனப்பூர்வமான உள்ளக் கனிவுடன்,

வேதனையுடன் பகவானிடம் பக்தி புரிதலே. நீங்கள் ரஜ-தமோ குணங்களை ஜயித்து விடுகிறீர்கள்; ஸத்வ குணத்தை உறுதியாக்கிக்கொண்டு அதன் பயனிடத்திலும் பற்றை விட்டுவிடுவீர்களாயினும் உங்கள் காரியம் பூர்த்தி யாய்விடாது; ஆன்ம ஞானம் ஏற்படும் வரையில் காரியம் நிறைவேறாது. ஆகையால் இறுதியில் ஆண்டவனுடைய கருணை ஏற்பட்டாக வேண்டும். உண்மையான, மனப் பூர்வமான பக்தியினால் அவனுடைய கிருபைக்குப் பாத்திர மாகவேண்டும். இதைத் தவிர எனக்கு வேறு உபாயம் இருப்பதாய்த் தெரியவில்லை இந்த அத்தியாயத்தினி றுதியில் அர்ஜுனன் இதே கேள்வியைக் கேட்க, பகவான் விடையளித்திருக்கிறார்: "மிகவும் ஏகாக்ர மனதுடன் பயனை விரும்பாது என்னிடம் பக்தி செய். எனக்கு சேவை புரி. எனக்கு இவ்வாறு சேவை புரிபவன் மாயை யைக் கடந்து விடுகிறான். இல்லையேல் இந்த அடர்ந்த மாயையைக் கடத்தல் சுலபவல்ல" இது சுலபமான பக்தி வழி. இந்த ஒரே வழிதான் அதற்குண்டு.

ஞாயிறு, 22-5-'32.

பதினைந்தாம் அத்தியாயம்

# பூர்ணயோகம்–யாங்கணும் புருஷோத்தம தரிசனம்

## (82) பிரயத்தன மார்க்கம் வேறு பக்தி வேறல்ல

இன்று ஒரு முறையில் பார்க்கையில் நாம் கீதையின் அக்கரைக்குப் போய்ச் சேர்ந்துவிட்டோம் எனலாம். பதினைந்தாம் அத்தியாயத்தில் எல்லாக் கருத்துக்களும் தம் பூரண நிலையை அடைந்துவிடுகின்றன. பதினாறு, பதினேழாம் அத்தியாயங்கள் அநுபந்தங்களைப்போலிருக்க, பதினெட்டாம் அத்தியாயம் முடிவுரை ஆகிறது. இதனாலேயே பகவான் இந்த அத்தியாயத்தினிறுதியில் இதற்கு 'சாஸ்திரம்' என்ற பெயர் அளித்திருக்கிறார்.

" நான் மிக்க இரகசியமான குற்றமற்ற
சாஸ்திரத்தைச் சொல்லியிருக்கிறேன் "

என்று பகவான் இறுதியில் கூறியிருக்கிறார். இவ்வாறு சொல்லியது இது கடைசி அத்தியாயம் என்பதனால் அல்ல; இதுவரையில் வாழ்க்கையின் எந்த சாஸ்திரத்தை, எந்த தத்துவத்தைச் சொல்லிவந்தாரோ அவைகள் இந்த அத்தியாயத்தில் பூர்த்தி செய்யப்பட்டிருப்பதனாலேயே. இவ்வத்தியாயத்தில் பரமார்த்தம் பூர்த்தியாய்விட்டது. வேதங்களின் சாரமனைத்தும் இதில் வந்துவிட்டது. பரமார்த்தத்தைக் குறித்து மனிதனிடம் விழிப்பை உண்டாக்குவது வேதங்களின் காரியம். அது இந்த அத்தியாயத்தில் செய்யப்பட்டிருப்பதால் இதற்கு 'வேத சாரம்' என்ற கௌரவமான பதவி கிடைத்திருக்கிறது.

பதின்மூன்றும் அத்தியாயத்தில் உடலிலிருந்து ஆன்மாவைப் பிரிப்பதன் அவசியத்தைப் பார்த்தோம். பதினான்காவதில் அதுபற்றிய பிரயத்தன வாதங்களை அலசி ஆராய்ந்தோம். ரஜோகுணத்தையும் தமோகுணத்தையும் புலனடக்கத்தின்மூலமாய் ஒழிக்கவேண்டும். ஸத்வ குணத்தை வளர்த்து அதனிடமுள்ள ஆஸக்தி அல்லது

ஆசையையும் வெற்றிகொள்ள வேண்டும் ; அதன் பயனைத் துறக்க வேண்டும். இவ்வாறு இம்முயற்சியைச் செய்ய வேண்டியது. இறுதியில் இம்முயற்சிகளில் பூரண வெற்றி ஏற்படுவதற்கு ஆன்மஞானம் இன்றிமையாதது என்றும் பக்தியின்றேல் ஆன்மஞானம் கிட்டாதென்றும் சொல்லப் பட்டது.

ஆனல் பக்திமார்க்கம் பிரயத்தன மார்க்கத்திலிருந்து வேறல்ல. இதைத் தெரிவிப்பதற்கு இந்தப் பதினைந்தாம் அத்தியாயத்தின் ஆரம்பத்திலேயே உலகத்தை ஒரு பெரிய மரத்துடன் உவமிக்கப்பட்டிருக்கிறது. முக்குணங்களினுல் வளர்க்கப்படும் கிளைகள் இம்மரத்திற்கு இருக்கின்றன. ஆரம்பத்திலேயே பற்றின்மை (அஸக்தி), வைராக்யம் என்ற ஆயுதங்களைக் கொண்டு இம்மரத்தை வெட்ட வேண்டுமென்று சொல்லிவிட்டார். பிந்திய அத்தியா யத்தில் கூறப்பட்ட சாதனை மார்க்கமே இங்கே ஆரம் பத்தில் திரும்பச் சொல்லப்பட்டிருக்கிறது என்பது தெளிவு. ரஜ—தமோ குணங்களைப் போக்கி ஸத்வகுணத் தின் உரமிட்டுத் தன்னை வளர்த்துக்கொள்ள வேண்டும். ஒன்று அழித்தல் பணி, மற்றது ஆக்கல் பணி; இரண் டையும் சேர்க்கையில் வழி ஒன்றேதான் அமைகிறது. புல் பூண்டுகளைக் களைவதும் விதை விதைப்பதும் ஒரே காரி யத்தின் வெவ்வேறு பகுதிகளே. இவ்விஷயமும் அத் தகையதே. இராமாயணத்தில் இராவணன், கும்பகர்ணன் விபீஷணன் என்ற மூன்று சகோதரர்கள் இருக் கிறுர்கள். கும்பகர்ணன் தமோகுணி, இராவணன் ரஜோ குணி, விபீஷணன் ஸத்வகுணி. நம் உடலில் இம் மூன்றின் இராமாயணம் இயற்றப்பட்டுவருகிறது. இந்த இராமாய ணத்தின் இராவண-கும்பகர்ணர்களை அழிக்க வேண்டியதே. விபீஷண தத்துவம் என்ற ஒன்று ஆண்டவனிடம் அடைக் கலம் புகுந்துவிடுமானுல் அது முன்னேற்றத்திற்கு உதவு வதாய், வளர்ப்பதாய் அமையக் கூடுமாகையால் அது ஏற்கத்தக்கது. பதினுன்காம் அத்தியாயத்தில் இவ்விஷ யத்தைப் புரிந்துகொண்டுவிட்டோம். இந்தப் பதினைந் தாம் அத்தியாயத்தின் ஆரம்பத்தில் மீண்டும் இதே விஷயம் வந்திருக்கிறது. ஸத்வ-ரஜ-தமம் நிறைந்துள்ள உலகத்தை அஸங்கமென்ற ஆயுதத்தினுல் களைந்தெறி. ரஜ-தமங்களை அடக்கு. ஸத்வகுணத்தை வளர்த்துப் புனிதமாகு. அதன் ஆசையை வென்று பற்றற்று விலகி

இரு. தாமரை மலரின் இந்த ஆதரிசத்தை பகவத்கீதை நம்முன் இடுகிறது. இந்தியப் பண்பாட்டில் வாழ்க்கையின் தலைசிறந்த பொருள்களுக்கு தாமரை உவமையாகக் கூறப்பட்டிருக்கிறது. தாமரை இந்தியப் பண்பாட்டின் சின்னமாகும்; தலைசிறந்த கருத்துகளை வெளியிட உதவும் சின்னம் தாமரையே. தாமரை சுத்தமாயும் புனிதமாயும் இருந்தும் தொடர்பற்றிருக்கிறது. புனிதம், தொடர்பின்மை என்ற இருவகைச் சக்திகள் தாமரையினிடம் இருக்கின்றன. பகவானுடைய பல்வேறு அவயவங்களுக்கும் தாமரையை உவமையாகக் கூறுகிறோம். கண், பாதங்கள், கைகள், முகம், நாபி, இதயம், தலை ஆகிய இவற்றையெல்லாம் தாமரையுடன் ஒப்பிட்டு இவைகளின் மூலமாய் எல்லா இடங்களிலுமே அழகு, புனிதத்தன்மை ஆகியவற்றுடன் தொடர்பின்மையும் இருக்கிறது என்பது நம் உள்ளத்தில் பதிக்கப்பட்டிருக்கிறது.

பிந்திய அத்தியாயத்தில் கூறப்பட்ட சாதனையைப் பூர்த்தி செய்யும் பொருட்டு இவ்வத்தியாயம் எழுதப்பட்டிருக்கிறது. முயற்சியில் ஆன்மஞானமும் பக்தியும் சேர்ந்துவிடுமானுல் பூரணத்துவம் ஏற்பட்டுவிடும். பக்தி பிரயத்தன மார்க்கத்தின் ஒரு பகுதியே. ஆன்ம ஞானம், பக்தி ஆகிய இவை அந்தச் சாதனையின் அங்கங்களே. வேதங்களில்,

"यो जागार तं ऋच: कामयन्ते
यो जागार तमु सामानि यान्ति।"

(யோ ஜாகார தம் ரிச: காமயந்தே
யோ ஜாகார தமு ஸாமானி யாந்தி)

"விழித்திருப்பவர்களை வேதங்கள் விரும்புகின்றன; அவர்களைக் காண அவை தாமே வருகின்றன" அதாவது விழித்திருப்பவனிடம் வேத நாராயணர் வருகிறார். அவனிடம் ஞானம் வருகிறது, பக்தி வருகிறது. பிரயத்தன மார்க்கத்திலிருந்து ஞானமும் பக்தியும் வேறல்ல. இவ்விரு தத்துவங்களும் பிரயத்தனத்தில் இனிமை பயப்பவை என்பதையே இவ்வத்தியாயத்தில் காட்டவேண்டும். ஆகையால் ஏகாக்ர சித்தத்துடன் பக்தி ஞானம் ஆகியவற்றின் இந்த சொரூபத்தைக் கேளுங்கள்.

## (83) பக்தியால் பிரயத்தனம் சுளுவாகிறது

வாழ்க்கையைத் துண்டாடமுடியாது. கர்மம், ஞானம், பக்தி ஆகியவைகளை நாம் வெவ்வேறாய்க் கூறிடமுடியாது; இவை வெவ்வேறானவையுமல்ல. உதாரணமாக இந்தச் சிறையில் சமையல் செய்யும் வேலையையே பாருங்கள். அறுநூறு, எழுநூறு பேருக்கு உணவு தயாரிக்கும் வேலையை நம்முள் சிலர் செய்கிறார்கள். இவர்களுள் சமையல் செய்வதெப்படி என்று சரியாய்த் தெரியாத ஒருவர் இருப்பாரானால் அவர் சமையலைக் கெடுத்துவிடுவார்; ரொட்டிகள் வேகாமலோ, கருகியோ போய்விடும். ஆனால் நன்றாய்ச் சமையல் செய்யத் தெரியும் என்றே நாம் இங்கே கொண்டு பேசுவோம். ஆயினும் அவருடைய உள்ளத்தில் அந்தக் காரியத்தினிடம் அன்பும், பக்தியும் இல்லாவிட்டால், 'இந்த ரொட்டிகள் என் சகோதரர்களுக்கு, அதாவது நாராயணனுக்குக் கொடுக்கப்படவிருப்பவை. இவைகளை நன்றாய்ச் சுட்டுக் காய்ச்ச வேண்டும். இது ஆண்டவன் பணி' என்ற எண்ணம் அவர் உள்ளத்தில் இல்லையாயின் மேலே கூறியபடி சமையலறிவு இருந்தும் அவர் இந்தக் காரியத்திற்குத் தகுதியுள்ளவராகார். இந்தச் சமையல் வேலைக்கு ஞானம் எவ்வாறு தேவையோ அவ்வாறு அன்பும் தேவையே. பக்தி தத்துவத்தின் இரகசியம் உள்ளத்தில் ஊறுதவரையில் சமையல் ருசியுள்ளதாய் அமையாது. இதனாலேயே தாயில்லாதபோது சமையல் ருசிப்பதில்லை. தாயைத்தவிர வேறு யார் இந்தக் காரியத்தை இவ்வளவு ஆசையுடன், அன்புடன் செய்வார்? மேலும் இதற்குத் தவமும் தேவை. தீயைச் சகியாது, கஷ்டத்தை ஏற்காது இதைச் செய்வதெப்படி? இதிலிருந்து எந்தக் காரியத்தையும் வெற்றி பெறச் செய்வதற்கு அன்பு, அறிவு, செயல் ஆகிய மூன்றும் தேவையென்ற முடிவேற்படுகிறது. வாழ்க்கையில் எல்லாக் காரியங்களும் இம்மூன்று குணங்களின் மீது நிற்கின்றன. முக்காலியில் ஒரு கால் ஒடிந்துபோனால் அது நிற்க முடியாது; மூன்று கால்களும் இருக்கவேண்டும். முக்காலி என்ற அதன் பெயரிலேயே அதன் உருவம் அடங்கியிருக்கிறது. வாழ்க்கையின் நிலையும் இதுவே. ஞானம், பக்தி, கர்மம் அல்லது இடையறாத உழைப்பு என்ற இவை வாழ்க்கையின் மூன்று கால்கள். இந்த மூன்று கம்பங்களின் மீது வாழ்க்கையென்ற துவாரகையை

நிறுத்தவேண்டும். இந்த மூன்று கால்களும் சேர்ந்து அமைப்பது ஒரே பொருளையே. முக்காலியின் உதாரணம் இதற்கு முற்றிலும் பொருந்துவதாகும். தர்க்கத்தின் மூலம் நீங்கள் பக்தி, ஞானம், கர்மம் ஆகியவற்றை வெவ்வேறென்று கருதிய போதிலும் இவைகளை வேறுபடுத்த முடியாது. மூன்றும் சேர்ந்து ஒரே விசாலமான பொருளாகிறது.

இவ்வாறிருந்த போதிலும் பக்தியில் விசேஷமான குணம் எதுவுமில்லை என்பதல்ல. எந்தக் காரியத்திலும் பக்தி தத்துவம் சேரும்பொழுதுதான் அது சுலபமாய்த் தோன்றும். 'சுலபமாய்த் தோன்றும்' என்பதற்கு கஷ்டமே இராது என்பதல்ல பொருள்; கஷ்டம் கஷ்டமாய்த் தோன்றுவதற்கு மாறாக இன்பமாய்த் தோன்றும். முள்ளாய் இருந்து குத்தியது பூவாய் மாறிவிடும். சரி, பக்திமார்க்கம் சுலபமென்பதற்குப் பொருள்தானென்ன? பக்தி பாவனை காரணமாக காரியத்தின் பளு தோன்றுவதில்லை; காரியத்திலுள்ள சிரமம் போய்விடுகிறது. எவ்வளவு காரியம் செய்தபோதிலும் எதையுமே செய்யாததுபோல் தோன்றுகிறது. ஏசுநாதர் ஒரு இடத்தில், "நீ உபவாசம் செய்கிறாய் என்றால் உன்முகத்தில் உபவாசத்தின் களைப்புத் தோன்றக்கூடாது. உன் கன்னங்களிலும் முகத்திலும் சுகந்தம் பூசப்பட்டது போன்ற மகிழ்ச்சி மலரவேண்டும். உபவாசத்தினால் வருந்துவதாய்த் தோன்றக்கூடாது" என்கிறார். கருத்தென்னவென்றால், கஷ்டமே மறந்து போகும்படி நம் போக்கு பக்திமயமாய்விடவேண்டும். தேச பக்த வீரன் ஒருவன் சிரித்துக்கொண்டே தூக்கு மேடையில் ஏறினான் என்று நாம் சொல்லுவதில்லையா? சுதன்வா எண்ணெய்க் கொப்பறையில் சிரித்துக்கொண்டிருந்தான். வாயிலிருந்து கிருஷ்ணன், விஷ்ணு, ஹரி, கோவிந்தன் என்ற நாமங்கள் வெளிவந்து கொண்டிருந்தன. இதன் பொருள், எல்லையற்ற கஷ்டம் ஏற்பட்ட போதிலும் பக்தியின் மகிமையினால் அது சிறிதும் தோன்றவில்லை என்பதே. நீரின் மீது கிடக்கும் ஓடத்தைத் தள்ளுதல் சிரமமல்ல. ஆனால் அதையே தரையின்மீது, பாறையின் மீது இழுத்துப் போவதென்றால் எவ்வளவு சிரமமாயிருக்கும்? ஓடத்தினடியில் நீர் இருக்குமானால் நாம் சுலபமாய் ஆற்றைக் கடந்துவிடுவோம், சுளுவாய்க் கரையேறிவிடுவோம். இவ்வாறே நம் வாழ்க்கையாம் ஓடத்தின்

அடியில் பக்திநீர் இருக்குமானால் அதை ஆனந்தமாய் ஓட்டிக்கொண்டு செல்லலாம். ஆனால் வாழ்க்கை வறண்டிருக்குமாயின், வழியெல்லாம் மணலும் கற்களும் பாறைகளும் மேடுபள்ளங்களுமாய் இருப்பின் இவ்வோடத்தைச் செலுத்திக்கொண்டு போதல் மிகவும் சிரமமான காரியமாய் விடும். பக்திதத்துவம் நம் வாழ்க்கை ஓடத்தின் போக்கை தண்ணீரைப் போல் சுளுவாக்கிவிடுகிறது.

பக்தி மார்க்கத்தினால் சாதனை புரிதல் சுலபம்; ஆனால் ஆன்மஞானம் இல்லாதபொழுது முக்குணங்களைக் கடந்து அக்கரை சேருவோமென்று ஒருபொழுதும் எண்ணுவதற்கில்லை. அப்படியானால் ஆன்ம ஞானம் பெறுவதற்கு உதவக்கூடியது என்ன? ஸத்வ குணத்தை எப்பொழுதும் பற்றிநின்று அதைத் தனதாக்கிக் கொண்டு அதன் அகங்காரத்தையும் ஆசையையும் பக்தியின் மூலமாய் வெல்லுவதற்கு முயலுவதே. இந்தச் சாதனையின் மூலமாய் இடையறாது முயன்று கொண்டேவந்தால் ஒரு நாள் ஆன்ம தரிசனம் ஏற்படும். அதுவரை நம் முயற்சி நிற்கவேகூடாது. இது பரம புருஷார்த்தம் பற்றிய விஷயம். ஆன்ம தரிசனம் என்பது வெறும் விளையாட்டல்ல. வழி நடந்து கொண்டிருக்கும்பொழுதே ஆன்ம தரிசனம் ஏற்பட்டுவிடும் என்று சொல்ல முடியாது. அதன் பொருட்டு இடையறாது முயற்சி வெள்ளத்தைப் பெருக்கவேண்டும். பரமார்த்த வழிக்குள்ள ஒரு நிபந்தனையே, "நான் ஏமாற்றத்திற்குச் சிறிதும் இடமளிக்க மாட்டேன். ஒரு கணமும் நம்பிக்கையை இழந்து அமர மாட்டேன்" என்பது. இதைத் தவிர பரமார்த்தத்திற்கு வேறு சாதனமில்லை, உபாயமில்லை. சில சமயங்களில் சாதகன் களைப்புற்று,

"உனக்காகத் தவமும் புலனடக்கமும் புரிந்தேன்;
எவ்வளவு காலம் இவற்றைச் செய்யவேண்டும்?"

என்று கேட்கத் தொடங்குகிறான். ஆனால் இவ்வாறு சொல்லுவது முக்கியமல்ல. தவத்தையும் புலனடக்கத்தையும், அவை நம் இயற்கையாகவே அமைந்து விடும்படி, பயின்றுவிட வேண்டும். 'எவ்வளவு காலம் சாதனைபுரிவது?' என்ற வகையில் பேசுவது பக்திமார்க்கத்திற்கு அழகல்ல. அதைரியத்தை, நம்பிக்கையின்மையை பக்தி ஒருபொழுதும் தோற்றுவியாது. அலுப்புத்தட்டுதல்

என்பதே அதில் ஏற்படக்கூடாது. பக்தியில் மேன்மேலும் உல்லாசமும் உற்சாகமும் தோன்றுவதற்கு வேண்டிய சிறந்த கருத்துக்கள் இவ்வத்தியாயத்தில் வெளியிடப்பட்டிருக்கின்றன.

## (84) சேவையின் மூன்று அங்கங்கள்— எஜமானர், ஊழியன், சேவைக்கருவி

இவ்வுலகத்தில் நமக்கு அளவிலடங்காத பொருள்கள் காணப்படுகின்றன. இவைகளை மூன்று பாகங்களாய்ப் பிரிக்கலாம். ஒரு பக்தன் காலையில் எழும்பொழுது மூன்றே பொருள்கள் தான் அவன் கண்முன் வருகின்றன. முதலில் அவன் மனம் பகவானிடம் போகிறது ; அப்பொழுது அவன் அவருடைய வழிபாட்டிற்கு ஏற்பாடு செய்கிறன். 'நான் ஊழியனை பக்தன், அவர் என் ஊழியத்தைப் பெறும் எஜமானர்.' இவை இரண்டும் அவனிடம் எப்பொழுதும் சித்தமாயிருக்கின்றன. இப்பொழுது எஞ்சியுள்ள சிருஷ்டியிருக்கிறதே, அதுவே அவருடைய பூஜைக்கு வேண்டிய சாதனம். புஷ்பம், சந்தனம், தூபம், தீபம் ஆகியவற்றிற்காக இந்த சிருஷ்டி அனைத்தும் ஏற்பட்டுள்ளது. மூன்றே வஸ்துக்கள்தான் இருப்பவை : சேவகனை பக்தன், சேவிக்கப் பெறும் பரம் பொருள், சேவைக்கு வேண்டிய சாதனங்களென்ற இந்த சிருஷ்டி. இப் போதனையே இவ்வத்தியாயத்தில் அளிக்கப்பட்டிருக்கிறது. ஆனல் ஒரு சேவகன் ஏதேனும் ஒரு மூர்த்தியைப் பூஜிக்கிறனெனில் அவனுக்குச் சிருஷ்டியின் எல்லாப் பொருள்களும் பூஜைப் பொருள்களாகத் தோன்றுவதில்லை. அவன் தோட்டத்திலிருந்து நான்கு புஷ்பங்களைப் பறித்துக் கொணர்ந்து எங்கிருந்தேனும் ஊதுவத்தி வாங்கிவந்து ஏதேனும் நைவேத்தியம் தயாரித்துப் படைக்கிறன். அவன் பார்த்துப் பொறுக்கிப் பொருள்களை வாங்க விரும்புகிறன். ஆனல் பதினைந்தாம் அத்தியாயத்தின் பரந்த போதனையின்படி இந்தத் தேர்வு அவசியமில்லை. தவத்திற்கும் கர்மத்திற்கும் எவை சாதனங்களோ அவையெல்லாம் ஆண்டவனுடைய சேவைக்கும் சாதனங்களே. அவைகளில் சிலவற்றை நாம் புஷ்பமென்றும் சிலவற்றைச் சந்தனமென்றும் சிலவற்றை நைவேத்தியமென்றும் சொல்லுவோம். இவ்வாறு எவ்வளவு கர்மங்க

ளுண்டோ அவை அத்தனையையும் பூஜைப் பொருள் களாக்கிவிட வேண்டும். இந்த நோக்கு இத்தகையது. அதாவது உலகத்தில் இந்த மூன்று பொருள்களேயுள்ளன. கீதை எந்த வைராக்கியமயமான சாதனை மார்க்கத்தை நம் மனதில் பதிக்க விரும்புகிறதோ அதற்கே அது பக்திமயமான உருவத்தை அளித்துக்கொண்டிருக்கிறது. அதிலிருந்து உழைப்பை அகற்றிச் சுளுவாக்கிக் கொடுக்கிறது.

ஆசிரமத்தில் ஒருவர் அதிக வேலை செய்ய வேண்டி வரும்பொழுது, 'நான் மட்டும் எதற்காக அதிக வேலைசெய்ய வேண்டும்?' என்ற எண்ணமே அவர் மனதில் உதிப்பதில்லை. இதில் மிகுந்த சாரம் அடங்கியிருக்கிறது. வழிபடுகிற வனுக்கு இரண்டு மணி நேரத்திற்கு பதிலாக நான்கு மணி நேரம் கிடைத்தால் அவன், "அட ராமா, இன்று நான்கு மணி நேரம் வழிபடவேண்டி வந்ததே!" என்று அலுத் துக் கொண்டு சொல்லுவானா? அதனால் அவனுக்கு அதிக இன்பமே தோன்றும். ஆசிரமத்தில் இத்தகைய அனு பவம் ஏற்படுகிறது. இதே அனுபவம் நமக்கு வாழ்க்கை யில் எங்கும் ஏற்பட வேண்டும். வாழ்க்கை சேவை மய மாய்விட வேண்டும். அவன் சேவை பெறும் புருஷோத்த மன். அவனுடைய சேவைக்கு எப்பொழுதும் சித்தமா யிருக்கும் நான் அக்ஷரபுருஷன். அக்ஷரபுருஷன் என் பதற்கு என்றும் களைப்புறுது சிருஷ்டியின் ஆரம்ப முதல் சேவை புரிந்து வரும் சநாதனனை (அழிவில்லாதவன்) சேவகன் என்பது பொருள்; அனுமார் இராமர் எதிரில் எப்பொழுதும் கைகூப்பி நிற்பதைப்போல; அவருக்கு சோம்பல் என்பதே சிறிதும் கிடையாது. அனுமாரைப் போலவே சிரஞ்சீவியான இந்த சேவகன் சேவையிலேயே கண்ணுங் கருத்துமாய் நிற்கிறுன்.

இவ்வாறு ஆயுள் முழுதும் சேவை புரிந்து வரும் கிறவனுக்கே அக்ஷர புருஷன் என்று பெயர். பரம் பொருள் என்ற இந்த ஸ்தாபனம் இருந்து வருகிறது; அதனுடைய சேவகனை நானும் எப்பொழுதும் இருந்து வருகிறேன். எஜமானன் இருக்கிறுனென்றுல் நானும் இருந்து வருகிறேன். சேவை பெற்றுப் பெற்று அவன் சளைக்கிறுனு, சேவை செய்து செய்து நான்தான் களைக்

கிறேனு பார்ப்போம். அவன் பத்து அவதாரங்கள் எடுத்தான் எனின் எனக்கும் தான் பத்து அவதாரங்கள் ஆயிருக்கின்றன. அவன் இராமனுனுல் நான் அனுமான்; அவன் கிருஷ்ணனுனுல் நான் உத்தவன். அவனுக்கு எத்தனை அவதாரங்களோ அத்தனை எனக்கும். இனிய போட்டா போட்டியே ஏற்பட்டிருக்கிறது! ஆண்டவனுக்கு இவ்வாறு யுக யுகாந்தரங்களிலெல்லாம் சேவை செய்து கொண்டு என்றும் அழிவுறுதுள்ள இந்த ஜீவனே அக்ஷர புருஷன் என்பது. அவன் புருஷோத்தமனுன ஆண்டான்; நான் அவன் அடிமை, சேவகன். இந்த பாவனையை ஒரே வகையில் உள்ளத்தில் வைத்திருக்க வேண்டும். இந்த ஒவ்வொரு கணமும் மாறும், அளவிலடங்காத உருவங்களைத் தாங்கி விளங்கும் சிருஷ்டியை பூஜைச் சாமாஞக, சேவைக் கருவியாகச் செய்துகொள்ள வேண்டும். செய்யும் ஒவ்வெரரு காரியமும் புருஷோத்தமனுக்குச் செய்யும் வழிபாடு போன்றதே.

சேவை பெறும் பரம்பொருள் புருஷோத்தமன்; சேவகனுன ஜீவன் (அழிவில்லாத) அக்ஷர புருஷன்; ஆனுல் சாதனமாயுள்ள இந்த சிருஷ்டி க்ஷரம் (அழிவது). இந்த 'க்ஷரம்' இருப்பதில் மிக்க பொருள் அடங்கியிருக்கிறது. இது சிருஷ்டியிலுள்ள குறைபாடல்ல, ஒரு சிறப்பே. இதனுல் சிருஷ்டியில் ஒவ்வொரு நாளும் எப்பொழுதும் புதுமை தோன்றிக் கொண்டேயிருக்கிறது. நேற்றைய பூக்கள், இன்று உதவா. அவை அகற்ற வேண்டியவை (நிர்மால்யம்) ஆய்விட்டன. சிருஷ்டி அழியக் கூடியதாயிருப்பதைப் பாக்கியமென்றே கருத வேண்டும். இது சேவையிலுள்ள சிறப்பாகும். ஒவ்வொரு நாளும் புதிய புஷ்பம் சேவைக்குச் சித்தமாய்க் கிடைக்கிறது. அவ்வாறே நான் இந்த உடலையும் புத்தம் புதிதாய் ஏற்று ஆண்டவனுக்குப் பணிபுரிவேன். நான் என் சாதனங்களுக்கு அன்றுடம் புதிய உருவளித்து அவைகளைக் கொண்டே அவனை வழிபடுவேன். இந்த அழியும் தன்மையினுலேயே இவ்வழகு ஏற்பட்டிருக்கிறது. சந்திரனுடைய கலை இன்றுள்ளது நேற்றிருக்கவில்லை. சந்திரனிடம் ஒவ்வொரு நாளும் புதிய வனப்புக் காண்கிறது. திருதியை அல்லது மூன்றும் பிறையில் அந்த வளரும் சந்திரனைக் காண எவ்வளவு இன்பமாயிருக்கிறது! சங்கரனுடைய நெற்றியில் அந்தப் பிறைச் சந்திரன் எப்

படி மின்னுகிறது ! அஷ்டமி சந்திரனுடைய அழகு வேறு வகையானதே. அன்று வானத்தில் பொறுக்கியெடுத்த சில முத்துக்களே காண்கின்றன. பூர்ணிமையன்று சந்திரனுடைய ஒளி காரணமாக நக்ஷத்திரங்களே தென்படுவதில்லை. பூர்ணிமை அன்று கடவுளுடைய முகசந்திரன் காணப்படுகிறது. அமாவாசையின் இன்பம் மிகவும் கம்பீரமானது. அன்றைய இரவில் எத்தகைய அமைதி, கலக்கமற்ற அமைதி பரவியிருக்கிறது ! சந்திரனுடைய மாய ஒளி அகன்று விடுவதனால் சிறிதும் பெரிதுமான எண்ணிலடங்காத நட்சத்திரங்கள் மிகுந்த சுதந்திரத்துடன் இஷ்டம்போல் ஒளி வீசிக்கொண்டிருக்கின்றன. அமாவாசையன்று சுதந்திரம் தன் பூர்ண உருவில் விளையாடுகிறது. தன் ஒளியைப் பெருமையாய்க் காட்டிக் கொள்ளும் சந்திரன் இன்று அங்கே இல்லை ; தனக்கு ஒளியளிக்கும் சூரியனுடன் அது ஒன்றிப் போய்விட்டது. அது ஆண்டவனுடன் கலந்து விட்டது. அன்று ஜீவன் தன்னையே அர்ப்பணம் செய்வதனால் எவ்வாறு உலகத்திற்குச் சிறிதும் துன்பம் விளைவியாது என்பதை அது காட்டுவது போலிருக்கிறது. சந்திரனுடைய சொரூபம் க்ஷரம், மாறக்கூடியது. ஆனால் அது வெவ்வேறு உருவங்களில் இன்பமளிக்கிறது.

சிருஷ்டியின் அழியும் தன்மை, நிலையாமை எதுவோ அதுவேதான் அதன் அழியாத் தன்மையும். சிருஷ்டியின் உருவம் கலகலவென்று (அருவியைப் போல்) ஓடிக்கொண்டேயிருக்கிறது. அந்த உருவமென்ற கங்கை ஓடிக்கொண்டேயிராவிடில் அது ஒரு தேக்கமாய்விடும். ஆற்றின் வெள்ளம் இடையறாது ஓடிக்கொண்டேயிருக்கும். அது தொடர்ந்து மாறிக்கொண்டேயிருக்கும். ஒரு துளி போவதும் மற்றொன்று வருவதுமாயிருக்கும். ஆகையால் அந்த நீர் உயிருடன் விளங்குகிறது. பொருளில் காணும் இன்பத்திற்குக் காரணம் அதன் புதுமையே. கோடையில் பரம்பொருளுக்கு வேறுவகைப் புஷ்பங்கள் சாத்தப்படுகின்றன ; மாரிக்காலத்திலோ பசிய அருகம்புல் அணிவிக்கப்படுகிறது ; சரத் காலத்தில் அழகிய தாமரை மலர்கள். அந்தந்தக் காலத்தில், ருதுவில் தோன்றும் பழங்கள், புஷ்பங்களினால் பகவானுக்கு பூஜை செய்யப்படுகிறது. இதனாலேயே அந்த பூஜை ஒளிபொருந்தியதாய் ஒவ்வொரு நாளும் புதிதாய்த் தோன்றுகிறது. அத

ஞல் மனதிற்கு அலுப்புத் தோன்றுவதில்லை. சிறிய குழந்தைக்கு 'க' என்ற எழுத்தை எழுதிக் கொடுத்து, "இதன் மீதே எழுதிக்கொண்டிரு. இதை இன்னும் பருமனுக்கு" என்று சொன்னேமானல் இதைச் செய்து செய்து அவனுக்கு அலுத்துப் போகிறது. இதை எதற்காகப் பருமனுக்குவதென்றே அவனுக்குப் புரிவதில்லை. அவன் பென்சிலை தடிமனுகச் செய்துகொண்டு எழுத்தை விரைவில் எழுதிவிடுகிருன். ஆனல் பிறகு புதிய எழுத்துகளை, அவைகளின் தொகுதியைப் பார்க்கிருன்; வித விதமான புத்தகங்களைப் படிக்கத் தொடங்குகிருன்; பல விதமான இலக்கிய மலர்களின் அனுபவம் அவனுக்கு ஏற்படுகிறது. அப்பொழுது அவனுக்கு எல்லையற்ற இன்பம் தோன்றுகிறது. இதுவேதான் சேவையிலும். சாதனங்கள் ஒவ்வொரு நாளும் புதிதாய் இருப்பதனுல் சேவையில் உற்சாகம் பெருகிறது.

சிருஷ்டியின் இந்த அழியும் தன்மை ஒவ்வொரு நாளும் புதிய புஷ்பங்களை மலரச் செய்கிறது. கிராமத்தினருகில் மயானமிருக்கிறது; இதனுல் கிராமம் அழகாய்த் தோன்றுகிறது. பழையவர்கள் போய்க் கொண்டிருக்க புதிய குழந்தைகள் பிறந்து கொண்டிருக்கிருர்கள். சிருஷ்டி நவநூதனமாய் தினமும் போய்க்கொண்டேயிருக்கிறது. புறத்தேயுள்ள அந்த மயானத்தை அகற்றிவிடுவாயானல் அது வீட்டினுள் வந்து அமர்ந்து விடும். அதே மனிதர்களை ஒவ்வொரு நாளும் தொடர்ந்து பார்த்துப் பார்த்து உனக்கு அலுப்புத் தட்டிவிடும். கோடையில் வெய்யில் காய்கிறது; பூமி கொதித்துப் போகிறது. ஆனல் நீ இதைக் கண்டு அஞ்சாதே. இந்த நிலை மாறி விடும். மழையின் இன்பத்தை அனுபவிப்பதற்கு இந்த எரிச்சல் தேவையாகும். பூமி நன்கு காய்ந்து கொதித்துக் கொண்டிராவிட்டால் மழை பொழிந்ததும் சேருய்விடும். பிறகு அதில் புல்லும் தானியமும் முளைக்கமாட்டா. நான் ஒரு சமயம் வெயிலில் சுற்றிக் கொண்டிருந்தேன். தலை கொதித்துக் கொண்டிருந்தது; மிக்க இன்பமாயிருந்தது. என்னிடம் ஒரு நண்பர் "தலை கொதித்துப் போகும். பிறகு சிரமமேற்படும்" என்ருர். நான், "கீழே மண்ணும் கொதித்துக் கொண்டு தானே இருக்கிறது; மண்ணுலான இந்த உடலும் சிறிது கொதிக்கட்டுமே!" என்றேன். ஆஹா! தலைகொதித்துக் கொண்டிருக்கும்

பொழுது அதில் நீர் வந்து பொழியுமாறுல் எவ்வளவு இன்பமாயிருக்கும்! ஆறுல் கோடை வெயிலில் காயாதவன் மழை பெய்யும் பொழுதும் தன் புத்தகங்களில் தலையை நுழைத்துக்கொண்டுதான் அமர்ந்திருப்பான்; தன் அறையில், அந்தச் சவக்குழியில் புகுந்து கொண்டிருப்பான். வெளியிலுள்ள இந்த விசாலமான அபிஷேக பாத்திரத்தின் கீழே ஆனந்தமாய் நின்றுகொண்டு ஆடமாட்டான். ஆறுல் நமது அந்த மனு மகரிஷி பெரிய ரசிகர், சிருஷ்டியில் பற்றுள்ளவர். அவர் தம் ஸ்மிருதியில், "மழை பொழிகையில் விடுமுறை யளித்துவிடு" என்று எழுதுகிருர். மழை பெய்து கொண்டிருக்கையில் ஆசிரமத்துள் அமர்ந்து 'ஸந்தை' *சொல்லிக் கொண்டிருப்பதா? மழையில் ஆடவும் பாடவுமல்லவோ வேண்டும்? சிருஷ்டியுடன் கலந்துவிட வேண்டும். மழையில் மண்ணும் விண்ணும் கலக்கின்றுன. இந்த அழகிய காட்சி எவ்வளவு இன்பம் பயப்பது! இந்த சிருஷ்டியே நமக்குப் போதனை யளிக்கிறது.

கருத்தென்னவென்றுல், சிருஷ்டியின் மாறும் தன்மை, அழியும் தன்மையின் பொருள் சாதனங்களின் புதுமையாகும். இவ்வாறு புதிது புதிதாய் சாதனப் பொருள்களை உண்டாக்கித் தரும் சிருஷ்டியும், வரிந்து கட்டிக்கொண்டு சேவைக்கென நிற்கும் என்றென்றுமுள்ள சேவகனும், சேவை பெறும் பரம்பொருளும். இனி வேடிக்கை நடக்கட்டும்! அந்த பரமபுருஷனை புருஷோத்தமன் புதிது புதிதான சேவா சாதனங்களை அளித்து என்னிடம் அன்பில் உதிக்கும் சேவைகளைப் பெற்றுக்கொண் டிருக்கிருன்; பல்வேறு சாதனங்களை யளித்து அவன் என்னைப் போஷித்துக் கொண்டிருக்கிருன்; விதவிதமான பிரயோகங்களை அவன் என்மூலம் செய்விக்கிருன். நமக்கு வாழ்க்கையில் இத்தகைய நோக்கு ஏற்பட்டுவிடுமாறுல் எவ்வளவு இன்பம் ஏற்படும்!

## (85) ஆணவமற்ற சேவையே பக்தி

நம் செயல் ஒவ்வொன்றும் பக்தி மயமாய் இருக்க வேண்டும் என்று கீதை விரும்புகிறது. நான் அரை,

* வேதம் ஓதுகையில் ஆசிரியர் ஒருமுறை சொல்லுவதை சீடர்கள் இருமுறை திரும்பச் சொல்லுதல்.

அல்லது ஒருமணிநேரம் கடவுளை பூஜிப்பது சரியே. காலையிலும் மாலையிலும் அழகிய சூரிய ஒளி தன் வர்ண விசித்திரங்களைப் பரப்புகையில் சித்தத்தை ஸ்திர மாய் நிறுத்திச் சிறிது நேரம் உலகை மறந்து அனந் தத்தைச் சிந்தித்தல் என்பது உயர்ந்த கருத்தே. இந்த அனுஷ்டானத்தை என்றும் விடக்கூடாது. ஆனால் கீதை இத்துடன் திருப்தியடையவில்லை. காலையிலிருந்து மாலை வரை நடைபெறும் எல்லாக் காரியங்களுமே கடவுள் வழிபாட்டிற்கென அமையவேண்டும். குளிக்கும் பொழு தும், உணவருந்தும் பொழுதும், நடக்கும்பொழுதும், கூட்டும்பொழுதும் அவன் நினைவிருக்கவேண்டும். கூட் டும்பொழுது நான் என் பிரபுவின், என் வாழ்க்கையின் தேவனின் வீட்டைக் கூட்டுகிறேனென்ற பாவனை இருக்க வேண்டும். நம் காரியங்களனைத்தும் இவ்வாறு பூஜைக் காரியங்களாய்விடவேண்டும். இந்நோக்கு ஏற்பட்டுவிடும் பொழுது உங்கள் விவகாரங்கள் எவ்வளவு தூரம் மாறிப் போகின்றன என்பதைப் பாருங்கள். நாம் எவ்வளவு கவனமாய் பூஜைக்குப் புஷ்பம் எடுக்கிறோம், அவை களை ஜாக்கிரதையாய் தட்டில் வைக்கிறோம், அவை அழுங்கிப் போகக்கூடாதே, நசுங்கக்கூடாதே, வாடக் கூடாதே என்று எவ்வளவு கவனமாய் இருக்கிறோம்! அவை அழுக்காகி விடக் கூடாதென்பதற்காக நாம் அவை களை மூக்கினருகில் கொண்டுபோவதில்லை. இதே நோக்கம், இதே பாவனை நம் வாழ்க்கையின் ஒவ்வொரு காரியத் திலும் இருந்துவரவேண்டும். என் இந்த கிராமத்தில் என் அயலானின் உருவில் என் நாராயணன், என் பிரபு வல்லவா விளங்கிக் கொண்டிருக்கிறன்? ஆகையால் இந்த கிராமத்தை நான் சுத்தமாய், துப்புரவாய் வைத்துக்கொள் வேன். கீதை நமக்கு இந்த நோக்கைத் தர விரும்புகிறது. நம் காரியங்களனைத்தும் கடவுள் வழிபாடாகவே ஆய்விட வேண்டும் என்பது கீதையின் பெருத்த ஆசை. கீதையைப் போன்ற கிரந்தராஜனுக்கு, அரைமணி, ஒருமணிநேரம் செய்யும் பூஜையில் திருப்தியில்லை. வாழ்க்கை முழுவதுமே ஆண்டவன் மயமாய்விடவேண்டும், வழிபாடுமயமாய்விட வேண்டும் என்பது கீதையின் தீவிர விருப்பம்.

கீதை புருஷோத்தம யோகத்தை விளம்பி கர்ம மயமான வாழ்க்கையை பூரண நிலையில் கொண்டு சேர்க் கிறது. அவன் சேவைபெறும் புருஷோத்தமன்; நான்

அவனுடைய சேவகன்; சேவைக்கு சாதனமாயிருப்பது இந்த சிருஷ்டி அனைத்தும் என்ற இவ்விஷயம் நமக்கு ஒருமுறை புலனாகிவிடுமானால் வேறு என்ன வேண்டும்? துகாராம்,

"தரிசனம் கிட்டிவிடுமானால் சேவை செய்வேன்
பிரபுவே! நான் வேறெதையும் கோரேன்"*

என்கிறார்.

பிறகோ நாம் இடையறாது சேவையே செய்துகொண்டிருப்போம். அப்பொழுது 'நான்' என்பதொன்றே இராது. 'நான்' 'எனது' என்ற எல்லாவற்றையும் துடைத்துவிடுவேன். எஞ்சியிருப்பவை அனைத்தும் பரம்பொருளுக்காகவே இருந்துவரும். பிறர் நன்மையின் பொருட்டு வாழ்வதைத் தவிர வேறெதுவுமே இராது. கீதை மீண்டும் மீண்டும் கூறுவது: நான் என்னிடமிருந்து அகங்காரத்தை, ஆணவத்தை அகற்றி என் வாழ்க்கையை ஆண்டவனிடம் ஆழ்ந்ததாய் பக்தி மயமாக்குவேன். சேவைபெறும் பரம்பொருள், நான் சேவகன், சாதனமான இந்த சிருஷ்டி; வௌவுதல் என்ற பேச்சு எங்கே யிருக்கிறது? வாழ்க்கையில் இனி எந்த விஷயத்திற்கும் கவலையே இல்லை!

## (86) ஞானலக்ஷணம்

இவ்வாறு நாம் இதுவரையில் கர்மத்தில் பக்தியை இணைக்கவேண்டும் என்பதைப் பார்த்தோம். அதில் ஞானத்தின் அம்சமும் இருந்தாக வேண்டும். இல்லையேல் கீதைக்கு திருப்தி தோன்றாது. ஆனால் இவை மூன்றும் வெவ்வேறென்பது இதன் பொருளல்ல. புரிவதற்காக நாம் இவைகளை வேறுபடுத்திப் பேசுகிறோம். கர்மம் என்பதன் பொருளே பக்திதான். பக்தியைத் தனியாய்க் கொணர்ந்து கர்மத்துடன் சேர்க்கவேண்டி யிருப்பதில்லை. ஞானமும் அப்படியேதான். இந்த ஞானம் எவ்வாறு கிடைக்கும்? "எங்கும் புருஷனைக் காண்பதனால்" என்று கீதை சொல்லுகிறது. நீ சேவைபுரியும் என்றென்றுமுள்ள

---

* "झालिया दर्शन करीन मी सेवा
आणिक कांहीं देवा न लगे दुजें"

சேவகன்; அந்த புருஷோத்தமன் சேவைபெறும் புருஷன். பல்வேறு உருவங்களைத் தாங்கும், எப்பொழுதும் பெருகிக் கொண்டேயிருக்கும், பல்வேறு சாதனங்களையளிக்கும் இந்த சிருஷ்டியும் புருஷனே. இத்தகைய நோக்கைக் கொண் டிருப்பதன் பொருளென்ன? எல்லாவிடங்களிலும் குற்ற மற்ற தூய சேவாபாவம் கொள்ளவேண்டும். உன் காலின் செருப்பு சர்...சூ...வென்று சத்தமிடுகிறது; அதற்குக் கொஞ்சம் எண்ணெய் போடு. அதிலும் பரம்பொருளின் அம்சமே யிருப்பதால் அதை கவனித்து நல்ல நிலையில் வைத்திருக்கவேண்டும். சேவைக் கருவியாயுள்ள இந்த ராட்டைக்கும் எண்ணெய் போடு. இது சப்தம் போடு கிறதே, இதைக் கவனி. नेति-नेति (நேதி நேதி) "நூல் நூற்க மாட்டேன்" என்கிறது. இந்த ராட்டை, சேவைக்குதவும் இந்தக்கருவி—இதுவும் புருஷனே. இதன் மாலை, இதன் இந்தப் பூணூலை நன்ருய் வைத்துக்கொள். சிருஷ்டி யனைத்தையும் சைதன்ய மயமாய்க் கருது; இதை ஜடமென்று எண்ணுதே. இனிய ஓங்கார கானம் செய்யும் இந்த ராட்டை ஜடப்பொருளா? இது பரம்பொருளின் உருவமே. சிராவண அமாவாசையன்று அகங்காரத்தைத் துறந்து நாம் எருதைப் பூஜை செய்கிருேம். * இது ஒரு பெரிய விஷயமாகும். இந்தப் பண்டிகையை தினமும் கருத் தில் கொண்டு எருதுகளை நன்ருய்ப் பாதுகாத்து அவை களிடம் உசிதமான வேலை வாங்கவேண்டும். பண்டிகை யன்று உண்டாகும் பக்தி அன்ருேடு சரியென்று எண்ணிக்கொண்டுவிடக் கூடாது. எருதும் பரம்பொரு ளின் உருவமே. அந்த ஏரையும் விவசாயக் கருவிகள் எல்லாவற்றையும் நன்ருய் கவனித்து வைத்திருப்பீர். சேவைக்குதவும் எல்லாக் கருவிகளும் புனிதமானவை. இந்த நோக்கு எவ்வளவு விசாலமானது! பூஜை செய்தல் என்பதற்கு புஷ்பமும் சந்தனமும் சாத்தி பன்னீர் தெளித்தல் என்பதல்ல பொருள். அந்தப் பாத்திரங்களை கண்ணுடிபோன்று தேய்த்துத் துப்புரவாய் வைத்துக் கொள்ளுதல் பாத்திரங்களின் பூஜையாகும். விளக்கைத் துடைத்து வைத்தல் விளக்கைப் பூஜிப்பதாகும். அரி வாளைத் தீட்டிப் புல்லறுப்பதற்கு அதைச் சித்தமாய் வைத்

* இது மஹாராஷ்டிரத்தில் வழங்கும் ஒரு பண்டிகை. இதை அங்கே போலா என்று சொல்லுகிருர்கள்.

திருத்தல் அதைப் பூஜிப்பதாகும். கதவின் கீலில் துரு ஏறி விடுமாதலால் அதற்கு எண்ணெய் இட்டுத் திருப்திசெய்தல் அதைப் பூஜிப்பதாகும். வாழ்க்கையில் எங்கும் இந்நோக்குடன் காரியம் செய்யவேண்டும். சேவைக் கருவிகளைச் சிறந்தவையாயும் துப்புரவாயும் வைத்திருக்கவேண்டும். கருத்தென்னவென்றால், நானும், அக்ஷர புருஷனும் அந்த புருஷோத்தமனும், சாதனமாயுள்ள இந்த சிருஷ்டியும்; அதுவும் புருஷனே, பரம்பொருளே. எங்கும் ஒரே சைதன்யமே விளங்கிக்கொண் டிருக்கிறது. இந்த நோக்கு வந்துவிட்டதென்றால் நம் கர்மத்தில் ஞானமும் வந்துவிட்டதென்று எண்ணிவிடலாம்.

முதலில் கர்மத்தில் பக்தியின் அம்சத்தைச் சேரு. இப்பொழுது ஞானத்தையும் இணைத்துவிட்டோமானால் இவற்றினால் ஒரு அபூர்வமான வாழ்க்கை ரசாயனம் (மருந்து) அமைந்துவிடும். கீதை நம்மை இறுதியில் அத்வைத மயமான சேவா மார்க்கத்தில் கொணர்ந்து விட்டுவிட்டது. இந்த சிருஷ்டியில் எங்கு பார்த்தாலும் மூன்று புருஷர்கள் விளங்குகிறார்கள். ஒரே புருஷோத்தமன் இந்த மூன்று உருவங்களைத் தாங்கி நிற்கிறான். உண்மையில் மூன்று புருஷர்களும் சேர்ந்து ஆவது ஒரே புருஷனே, அத்வைதம் ஒன்றே. இங்கே கீதை நம்மை மிகமிக உயர்ந்த சிகரத்தின்மீது ஏற்றி அமர்த்திவிட்டது. கர்மம், பக்தி, ஞானம் எல்லாம் ஒன்றாய்விட்டன. ஜீவன், சிவன், சிருஷ்டி எல்லாம் ஓருருவாய், ஓருயிராய்விட்டன. கர்மம், பக்தி, ஞானம் ஆகியவற்றினிடையே விரோதம் நீங்கிவிட்டது. ஞானதேவர் அமிர்தானுபவத்தில் தமக்குப் பிரியமான உதாரணத்தைத் தந்திருக்கிறார்:

> **“ மலையை வெட்டிக் கோயிலும் குடும்பமும் அமைத்தேன். பக்தி ஏன் இவ்வாறு அமைதலாகாது?” ***

ஒரே கல்லைக் குடைந்து கோயிலமைத்து அக்கோயிலுள் கல்லினாலேயே பகவான் சிலையமைத்து அதனெதிரில் கல்லினாலேயே ஒரு பக்தனும் அவனருகில் கல்லிலேயே செய்த பழங்களும் குடைந்து செதுக்கி அமைக்கிறோம். ஒரே பெரும் பாறையை இங்கே அநேக

---

* “ देव देऊळ परिवारु। कीजे कोरूनि डोंगरु
तैसा भक्तीचा व्यवहारु। का न होआवा ॥

உருவங்களாய் அமைத்திருப்பதைப்போல பக்தியின் விவகாரங்களிலும் ஏன் நடைபெறக்கூடாது? எஜமானன், ஊழியன் என்ற உறவிலும் ஏன் ஒற்றுமை இருத்தலாகாது? இந்த வெளி சிருஷ்டி, இந்த வழிபாட்டுப் பொருள்கள் வெவ்வேறாயிருந்தும் அவை ஏன் ஆன்ம உருவாகக் கூடாது? மூன்று புருஷர்களும் ஒன்றுதானே? ஞானம், கர்மம், பக்தி என்ற இம்மூன்றையும் சேர்த்து ஒரு வாழ்க்கைப் பெருவெள்ள மாக்கவேண்டும். இத்தகையது இந்த பரிபூரணமான புருஷோத்தம யோகம் என்பது. தலைவன், ஊழியன், சேவைப்பொருள் என்ற எல்லாம் ஒரே உருவைச் சேர்ந்தவையே—பக்தி, அன்பு என்ற விளையாட்டு விளையாடலாமே!

இவ்வாறு இந்த புருஷோத்தம யோகம் எவனுடைய உள்ளத்தில் பதிந்துவிடுகிறதோ அவனே உண்மையான பக்தி புரிகிறான்.

“स सर्वविद् भजति मां सर्व भावेन भारत”

(ஸ ஸர்வவித் பஜதி மாம் ஸ்ர்வ பாவேன பாரத)

இத்தகைய புருஷன் ஞானியாயிருந்தும் பூரண பக்தனுயிருக்கிறான். எவனிடம் ஞானமிருக்கிறதோ அவனிடம் பக்தி இருக்கவே செய்கிறது. ஆண்டவனைப் பற்றிய ஞானமும் ஆண்டவனிடம் அன்பும் வெவ்வேறானவையல்ல. பாகற்காய் கசப்பு என்று தெரிந்ததும் அதனிடம் விருப்பம் தோன்றாது; ஒன்றிரண்டு விதிவிலக்குகளும் இருக்கலாம். ஆனால் கைப்பை உணர்ந்ததும் வெறுப்புண்டாய்விடுகிறது. ஆனால் கற்கண்டு என்று தெரிந்ததும் நாக்கில் ஜலம் ஊறுகிறது, ஆசை தோன்றிவிடுகிறது. ஆண்டவனைப்பற்றியோ ஞானம் உதயமாதல், அன்பு தோன்றுதல் என்ற இரண்டும் ஒன்றே. ஆண்டவன் உருவத்தின் இனிமையை இந்த சாதாரணச் சர்க்கரையுடன் ஒப்பிடுவதா? அந்த இனிய ஆண்டவனுடைய ஞான மேற்படும் அதே கணத்தில் அவனிடம் அன்பும் தோன்றி விடும். ஞானமுண்டாதல், பக்தி தோன்றுதல் என்ற இவை இரண்டும் வெவ்வேறு காரியங்கள் அல்ல என்றே கொள்ளுங்கள். அத்வைதத்தில் பக்திக்கு இடமுண்டா இல்லையா என்ற இந்த வாதத்தில் சாரமே இல்லை. ஞானதேவர்,

“அதுவே பக்தி அதுவே ஞானம்; இரண்டும் அந்த விட்டலனே”*

என்கிறார். பக்தி, ஞானம் என்ற இரண்டும் ஒரே பொருளின் இரு பெயர்களே.

வாழ்க்கையில் பரம பக்தி பரவிவிடுமானால் அப்பொழுது நடைபெறும் கர்மம்-பக்தி, ஞானம் ஆகியவற்றிலிருந்து வேருயிராது. கர்மமும், பக்தியும், ஞானமும் சேர்ந்து ஒரே இனிய உருவாய் அமைந்துவிடும். இந்த இனிய உருவினுல் அற்புதமான அன்பு மயமான ஞானமயமான சேவை தானே தோன்றுகின்றது. தாயினிடம் அன்பிருக்கிறது. ஆனுல் இது அன்பைக் காட்டும் கர்மத்தின் மூலமாய் வெளியாக வேண்டும்; அன்பு எப்பொழுதும் தன் உயிரை அளித்துக்கொண்டு, தன் உடலைத் தேய்த்துக்கொண்டு சேவையின் உருவில் வெளிப்பட்டுக் கொண்டிருத்கிறது. அன்பின் வெளி உருவமே சேவை என்பது. அன்பு எண்ணிலடங்காத சேவைக் கரரியங்களினுல் தன்னை அலங்கரித்துக்கொண்டு நர்த்தனம் புரிகிறது. அன்பிருக்குமாயின் அங்கே ஞானமும் வந்துவிடும். நான் எவருக்கு சேவை புரியவேண்டுமோ அவருக்கு எந்த சேவை பிடிக்கும் அல்லது பிடிக்கிறது என்பது எனக்குத் தெரிந்திருக்க வேண்டும். இல்லையேல் இது சேவை செய்யாததற்கும் விபரீதமான சேவை செய்ததற்கும் சமமாய்விடும். சேவை பெறுவோரைப் பற்றி அன்புள்ளவருக்குத் தெரிந்திருக்க வேண்டும். அன்பின் சிறப்புகளை காரியத்தின் மூலமாய்ப் பரப்புவதற்கு ஞானம் தேவை. ஆனுல் அது அன்பிலிருந்து தோன்றியதாயிருக்கவேண்டும். இல்லாவிடில் ஞானம் உபயோகமற்று வீணுய்விடும். அன்பின் மூலமாய் செய்யப்படும் காரியம் சாதாராணக் காரியத்திலிருந்து வேருயிருக்கும். வயலிலிருந்து களைத்துச் சோர்ந்து வீடு திரும்பும் பிள்ளையை தாய் அன்புடன் பார்த்து, “குழந்தாய் களைப்பாயிருக்கிறதோ ?” என்கிருள். ஆனுல் இந்தச் சிறிய காரியத்தில் எவ்வளவு சக்தி பொதிந்திருக்கிறதென்று பாருங்கள் ! தம் வாழ்க்கையின் காரியங்களனைத்திலும் ஞானமும் பக்தியும் நிரம்பித் ததும்புமாறு செய்யுங்கள். இதுவே புருஷோத்தம யோகம் என்பது.

* “हें चि भक्ति हें चि ज्ञान । एक विठ्ठल चि जाण ॥”

## (87) ஸர்வவேத சாரம் என் கையில்

இவையெல்லாம் வேதங்களின் சாரம். வேதங்கள் எல்லையற்றவை. ஆனால் அந்த எல்லையற்ற வேதங்களின் சாரச்சுருக்கமே இந்த புருஷோத்தம யோகம். இந்த வேதம் எங்கே இருக்கிறது? வேதங்களின் விஷயம் விசித்திரமானது. வேதங்களின் சாரம் இருப்பதெங்கே? அத்தியாயத்தின் தொடக்கத்திலேயே, "எதன் இலைகள் வேதங்களோ" என்று சொல்லியிருக்கிறது. தம்பீ, வேதங்கள் இம்மரத்தின் ஒவ்வொரு இலையிலும் பொதிந்துள்ளன. வேதங்கள் அந்த சம்ஹிதைகளிலும் உங்கள் சுவடிகளிலும் புத்தகங்களிலும் மறைந்திருக்கவில்லை. அவை உலகில் எங்கும் பரவி வியாபித்துள்ளன. ஷேக்ஸ்பியர் சொல்லுவதென்ன?

"Books in running brooks, sermons in stones
And good in everything"

"பெருகும் அருவிகளில் நூல்கள், பாறைகளில் பேருரைகள், எங்கும் சுபம்" என்கிறார். கருத்தென்னவென்றால் வேதங்கள் ஸம்ஸ்கிருதத்திலும் இல்லை, ஸம்ஹிதைகளிலுமில்லை. அவை சிருஷ்டியில் அடங்கியிருக்கின்றன. சேவை செய்தால் அவை புலனாகும். "प्रभाते करदर्शनम्" (ப்ரபாதே கரதர்ஶனம்) காலையில் விழித்ததும் தன் உள்ளங்கையைப் பார்க்க வேண்டும். வேதங்களெல்லாம் அந்தக் கையில் நிரம்பியிருக்கின்றன. அந்த வேதம் "சேவை செய்" என்று சொல்லுகிறது. நேற்று கையினால் வேலை செய்தாயா, இல்லையா? இன்று செய்ய முடியுமா, முடியாதா? அதில் வேலை செய்ததன் அறிகுறிகள், தழும்புகள் இருக்கின்றனவா, இல்லையா என்று பாருங்கள். சேவை செய்து கை தேய்ந்து போகும் பொழுது பிரம்மா தலையிலெழுதி இருப்பது தெளிவுறும். நாம் அதைப் படிக்கலாம். प्रभाते करदर्शनम् என்பதற்குப் பொருள் இதுவே.

வேதம் எங்கே இருக்கிறதென்று கேட்கிறார்கள். தம்பீ, உன் கைகளில் தானிருக்கிறது. சங்கராசாரியாருக்கு எட்டாம் வயதிலேயே வேதங்களெல்லாம் வந்துவிட்டன வென்று சொல்லுகிறார்கள். பாவம், சங்கராசாரியார் மந்த புத்தியுள்ளவர்போலும்! அவருக்கு எட்டு வருஷம்

பிடித்திருக்கிறதே! ஆனால் உங்களுக்கும் எனக்கும் பிறவியிலேயே அவை கிடைத்துவிட்டன; எட்டு வருஷங்களெதற்கு? நான் உயிருள்ள, விழிப்புள்ள வேதமே. இது வரை சென்றுள்ள பரம்பரையனைத்தும் என்னுள் பொதிந்து கிடக்கிறது. நான் அந்தப் பரம்பரையின் விளைவாவேன். அந்த வேத வித்திலிருந்து தோன்றிய பழமே நான். என்னுள் நான் அளவிலடங்காத வேதங்களின் விதைகளைச் சேர்த்து வைத்துள்ளேன்; என் உதரத்துள் வேதங்கள் ஐந்தல்ல, ஐம்பது மடங்கு பருத்துப் போயிருக்கின்றன. கருத்தென்னவென்றால், வேதங்களின் சாரம் நம் கைகளில் அமைந்திருக்கிறது. சேவை, அன்பு, ஞானம் என்ற இவைகளை அடிப்படையாய்க் கொண்டு நாம் வாழ்க்கையை உருவாக்க வேண்டும். இதன் பொருளே வேதங்கள் கையிலிருக்கின்றன என்பது. நான் உரைக்கும் பொருள் வேதமேயன்றி வேதம் என்பது புறத்தே எங்கோ உள்ளதல்ல. சேவையே உருவெடுத்தது போன்ற மகான்கள், "வேதங்களின் பொருள் எமக்கே தெரியும்" என்கிறார்கள். பகவான், "எல்லா வேதங்களும் என்னையே அறிகின்றன. நானே வேதங்களனைத்தின் சாரமான புருஷோத்தமன்" என்று கூறுகிறார். வேதங்களின் சாரமான இந்தப் புருஷோத்தம யோகத்தை நாம் வாழ்க்கையில் செயல்படுத்த முடியுமானால், தமதாக்கிக்கொள்ள இயலுமானால் எவ்வளவு நன்றாயிருக்கும்! பிறகு இத்தகைய புருஷன் எதைச் செய்கிறானோ அதிலிருந்தும் வேதங்களே தோன்றுகின்றனவென்று கீதை தெரிவிக்கிறது. இவ்வத்தியாயத்தில் கீதையனைத்தின் சாரம் வந்துவிட்டது. கீதையின் போதனை இதில் பூரணமாய் வெளியாகியிருக்கிறது. அதைத் தம் வாழ்க்கையில் புகுத்துவதற்கு நாம் அல்லும் பகலும் முயல வேண்டும். வேறு என்ன?

ஞாயிறு, 29-5-'32.

## பதினாரும் அத்தியாயம்

# அநுபந்தம் 1–தேவ–அசுரப் போக்குகளுள் போர்

*

## (88) புருஷோத்தம யோகத்தின் முன்னொளி – தேவ சம்பத்து

கீதையின் முதல் ஐந்து அத்தியாயங்களில் வாழ்க்கையின் முழுத்திட்டம் என்ன, நம் வாழ்க்கையை எவ்வாறு வெற்றி பெறச் செய்வது என்பதைப் பார்த்தோம். அதன் பிறகு ஆறும் அத்தியாயம் முதல் பதினோராம் அத்தியாயம் வரை பக்தியை வெவ்வேறு வகையில் ஆராய்ந்தோம். பதினோராம் அத்தியாயத்தில் பக்தியைக் கண்டோம். பன்னிரண்டில் ஸகுண-நிர்குண பக்திகளை ஒப்பிட்டுப் பார்த்து பக்தனுடைய சிறந்த இலட்சணங்களைத் தெரிந்துகொண்டோம். பன்னிரண்டாம் அத்தியாயம் முடிய கர்மம், பக்தி என்ற இரு தத்துவங்களை அலசினோம். மூன்றாவதான ஞானம் என்ற பகுதி எஞ்சியிருந்தது. அதை நாம் பதின்மூன்று, பதினான்கு, பதினைந்து ஆகிய அத்தியாயங்களில் தெரிந்துகொண்டோம்– ஆன்மாவை உடலிலிருந்து வேறுய்ப்பிரித்தல், அதன் பொருட்டு முக்குணங்கள்மீது வெற்றிகொண்டு இறுதியில் எங்கும் ஆண்டவனைக் காணல். பதினைந்தாம் அத்தியாயத்தில் வாழ்க்கையின் சம்பூர்ண சாஸ்திரத்தைப் பார்த்துவிட்டோம். புருஷோத்தம யோகத்தில் வாழ்க்கை பூரணத்துவம் எய்துகிறது. அதன் பிறகு எஞ்சியிருப்பது எதுவுமில்லை.

கர்மம், ஞானம், பக்தி என்றவைகளை வெவ்வேருய்ப் பிரித்தல் எனக்கு சம்மதமல்ல; என்னால் அதை ஏற்க முடிவதில்லை. சில சாதகர்களுக்கு தம் நிஷ்டையின் காரணமாக கர்மமொன்றே தான் தோன்றுகிறது. சிலர் பக்தியை ஒரு தனி வழியாய்க் கற்பனை செய்துகொண்டு அதையே முழுவதும் வற்புறுத்துகிறார்கள். சிலருடைய போக்கோ ஞானத்தை நோக்கியதாயிருக்கிறது. வாழ்க்கையின் பொருள் வெறும் கர்மம், வெறும் பக்தி, வெறும்

ஞானம் என்பலல்ல. இந்த 'வெறும்' அல்லது 'மாத்திரம்' என்பது எனக்குப் பிடிப்பதில்லை. இதற்கு மாருக கர்மம், பக்தி, ஞானம் என்பவற்றைக் கூட்டியமைப்பதையும் நான் ஒப்புக்கொள்ளவில்லை. பக்தியில் கொஞ்சம், ஞானத்தில் கொஞ்சம், கர்மத்தில் கொஞ்சம் என்று சொல்லப்படும் உபயோக வாதமும் எனக்கு சம்மதமல்ல. முதலில் கர்மம் பிறகு பக்தி, அதன் பிறகு ஞானமென்ற வரிசைக் கிரம ஏற்பாட்டையும் நான் ஒப்பமாட்டேன். மூன்றை யும் கலந்து கதம்பமாக்கவும் நான் சம்மதியேன். எனக்கோ எது கர்மமோ அதுவேதான் பக்தி, அதுவே தான் ஞானம் என்பதை உணரவே விருப்பம். ஒரு மிட் டாய்த்துண்டின் இனிப்பு, அதன் உருவம், அதனெடை என்ற இவை வெவ்வேருனவையல்ல. ஒரு மைசூர்பாகுத் துண்டை வாயில் இட்டுக்கொண்டவுடன் நாம் அத னுருவை உண்பதோடு அதன் எடையையும் அதன் இனிப் பையும் ஏககாலத்தில் உணர்ந்து உண்டுவிடுகிருேம். இந்த மூன்று அம்சங்களும் ஒருமிக்கச் சேர்ந்தே இருக் கின்றன. மைசூர் பாகில் ஒவ்வொரு துளியிலும் அதனுரு வமும், எடையும், இனிப்பும் அடங்கியே இருக்கின்றன. அதன் ஒரு துண்டில் அதனுருவமும் மற்ருென்றில் அதன் எடையும் மூன்ருவதில் அதன் இனிப்பும் இருப்பதில்லை. அவ்வாறே வாழ்க்கையின் ஒவ்வொரு காரியத்திலும் பர மார்த்தம் பொதிந்திருக்கவேண்டும்; ஒவ்வொரு காரியத் திலும் சேவை, அன்பு, அறிவு ஆகியவை நிரம்பியிருக்க வேண்டும்; வாழ்க்கையின் எல்லாப் பகுதிகளிலும் கர்ம மும் பக்தியும் ஞானமும் நிரம்பித் ததும்ப வேண்டும். இதுவே புருஷோத்தம யோகம் எனப்படுவது. சம்பூர்ண வாழ்க்கையையும் பாரமார்த்திகமாக்கிவிடவேண்டும் என்று சொல்லுவதென்னவோ சுலபந்தான். ஆனுல் இவ்வாறு சொல்லுவதில் அடங்கியுள்ள பாவத்தைச் சிந்திக்கத் தொடங்குவோமாயின் நிர்மலமான சேவை யொன்றையே செய்யும் பொருட்டு அந்தக்கரணத்தில் சுத்த ஞானத்தை யும், பக்தியையும் மனப்பூர்வமாய் ஏற்று நடக்கவேண்டிய தாயிருக்கும். ஆகையால் கர்மம், பக்தி, ஞானம் என்பவை முற்றிலும் ஒன்றே என்ற இந்த இறுதி நிலையை புரு ஷோத்தம யோகம் என்கிருர்கள். இங்கே வாழ்க்கையின் எல்லைக்கோடு வந்துவிடுகிறது.

இப்பொழுது இன்று இந்தப் பதினும் அத்தியாயத்

தில் என்ன சொல்லப்பட்டிருக்கிறது? சூரியன் உதிப்பதற்கு முன் அதனொளி பரவத் தொடங்குவதைப்போல வாழ்க்கையில் கர்மம், பக்தி, ஞானம் ஆகியவற்றினால் பூரணமான புருஷோத்தம யோகம் தோன்றுவதற்கு முன் நற்குணங்களின் ஒளி பரவத் தொடங்குகிறது. பரிபூரண வாழ்க்கையின் இந்த வரப்போகும் ஒளி இந்தப் பதினாறும் அத்தியாயத்தில் வர்ணிக்கப்பட்டுள்ளது. எந்த இருளுடன் போரிட்டுக்கொண்டு இந்த ஒளி வெளிவருகிறது என்பதும் இதில் வர்ணிக்கப்பட்டிருக்கிறது. ஒரு பொருளுக்கு ஆதாரமாக நாம் வேறுசில பொருள்களைக் கோருகிறோம். சேவை, பக்தி, ஞானம் ஆகியவை நம் வாழ்க்கையில் வந்துவிட்டன என்பதை நாம் எப்படி உணருவது? வயலில் உழைத்துப் பாடுபடுகிறோமெனில், அதன் விளைவான தானியத்தை அறுவடைசெய்து அளந்து கட்டி வீட்டில் கொணர்ந்து சேர்க்கிறோம். இவ்வாறே நாம் செய்யும் சாதனைகளினால் நமக்கென்னென்ன அனுபவங்கள் ஏற்பட்டன, எந்த நல்ல காரியங்களில் நாம் பிரவேசித்தோம், எந்தெந்த நற்குணங்கள் நம்முள் இடம் பெற்றன; உண்மையிலேயே வாழ்க்கை எந்த அளவுக்கு சேவைமயமாயிற்று என்ற விஷயம் சோதிக்கப்பட வேண்டியதை இந்த அத்தியாயம் குறிப்பிடுகிறது. வாழ்க்கைக்கலை எவ்வளவு வளர்ந்து முன்னேறிற்று என்பதை அளந்து பார்க்கும்படி இவ்வத்தியாயம் கூறுகிறது. வாழ்க்கையின் இந்தக் கலையை கீதை தேவ சம்பத் (தெய்வீகச் செல்வம்) தென்று அழைக்கிறது. இதற்கு மாறாயிருக்கும் போக்குகளை அசுர சம்பத்து என்று கூறுகிறது. பதினாறும் அத்தியாயத்தில் தேவ-அசுர சம்பத்துக்களிடையே தோன்றும் மோதல் சொல்லப்பட்டிருக்கிறது.

## (89) அஹிம்சைப்படையும் ஹிம்சைப்படையும்

முதல் அத்தியாயத்தில் ஒருபுறம் கௌரவ சேனையும் மறுபுறம் பாண்டவ சேனையுமாக ஒன்றை யொன்று எதிர்த்து நிற்பதைப்போல இங்கே நற்குணமென்ற தேவ சேனையும் துர்க்குணமென்ற அசுரசேனையும் ஒன்றை யொன்று எதிர்த்து நிறுத்தப்பட்டிருக்கின்றன. மிகவும் பழைய காலம் முதலே மானிடரின் மனதில் நற்குணங்களுக்கும் துர்க்குணங்களுக்கு மிடையில் நிகழும் போரை

உருவகப்படுத்தி வர்ணிக்கும்முறை இருந்துவருகிறது. வேதத்தில் இந்திரன் - விருத்திரன், புராணங்களில் தேவர் - அசுரர், இராமர்–இராவணன், பார்ஸிகளுடைய மத நூல்களில் அஹீர்மஜ்த் - அஹ்ரிமான், கிறிஸ்துவ மதத்தில் ஆண்டவன் - சைத்தான், இஸ்லாம் மதத்தில் அல்லாஹ் - இப்லீஸ் என்ற இவர்களுடைய போர்கள் வருகின்றன. காவியங்களில் ஸ்தூல விஷயங்கள் சூக்குமமான பொருள்களின் உருவங்களின் மூலமாய் வர்ணிக்கப்பட, மத நூல்களில் சூக்குமமான மனோபாவனைகளுக்கு கவர்ச்சிகரமான ஸ்தூல உருவங்களை அளித்து வர்ணிக்கப் படுகின்றன. காவியத்தில் ஸ்தூலமானது சூக்குமத்தின் மூலமாய் வர்ணிக்கப்பட, இங்கே சூக்குமம் ஸ்தூலத்தின் மூலமாய் விவரிக்கப்படுகிறது. இதனால் கீதையின் தொடக்கத்தில் உள்ள யுத்த வர்ணனை வெறும் கற்பனையே என்பதல்ல. அது ஒரு சரித்திர சம்பவமாகவே இருக்கலாம். ஆனால் இங்கே கவிஞர் அதை தாம் கொண்டுள்ள கருத்தை நிரூபிப்பதற்குப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறார். மனிதனுடைய மனதில் கடமையைக் குறித்து மோகம் விளையும்பொழுது அவன் செய்யவேண்டியது என்ன வென்பதை ஒரு போரின் உருவகத்தின் மூலமாய் விளக்கப்பட்டிருக்கிறது. இந்தப் பதினாறும் அத்தியாயத்தில் நன்மை, தீமை என்ற இவற்றினிடையில் நிகழும் போர் சொல்லப்பட்டிருக்கிறது. கீதையில் போரின் உருவகமும் வந்திருக்கிறது.

குருக்ஷேத்திரம் வெளியிலும் இருக்கிறது நம் உள்ளும் இருக்கிறது. நுணுக்கமாய் கவனிக்கையில் நம் அகத்தில் எந்தப்போர் நடைபெறுகிறதோ அதுவே வெளியுலகில் உருத்தாங்கி நிற்பதைக் காண்கிறோம். புறத்தே என் சத்துருவாய்க் காணப்படுவோன் என் மனதிலுள்ள விகாரம் உருப்பெற்று வெளியே வந்து நிற்பதே. கண்ணாடியில் அழகியதோ, விகாரமானதோ, என் பிரதிவிம்பமே எனக்குக் காணப்படுவதைப்போல என் மனதிலுள்ள நல்ல, கெட்ட எண்ணங்களே எனக்கு வெளியிலும் சத்துருவாயும் நண்பனாயும் காணப் படுகின்றன. நாம் விழிப்பில் சொப்பனத்தைக் காண்பதைப்போல, மனதிலுள்ளதை வெளியே பார்க்கிறோம். அகத்தில் நடக்கும் போருக்கும் புறத்தில் நடப்பதற்கும்

வேற்றுமை எதுவுமில்லை. பார்க்கப் போனால் உண்மைப் போர் நடப்பது அகத்தில் தான்.

நம் அந்தக்கரணத்தில் ஒருபுறம் நற்குணங்கள் இருந்தால் மறுபுறம் துர்க்குணங்கள் இருந்துவருகின்றன. அவை தம் அணிகளைச் சரியாய் அமைத்து வைத்திருக்கின்றன. சேனைக்கு சேனாதிபதி இன்றியமையாதவனாயிருப்பதைப்போல இங்கும் நற்குணங்கள் தமக்கு ஒரு சேனாதிபதியை அமைத்துக் கொண்டுள்ளன. அதன் பெயர் 'அபயம்' (அஞ்சாமை). இந்த அத்தியாயத்தில் அபயத்திற்கு முதலிடம் அளிக்கப்பட்டிருக்கிறது. இது ஏதோ தற்செயலாய் நிகழ்ந்த விஷயமல்ல. தீர யோசித்து வேண்டுமென்றேதான் இந்த அபயமென்ற சொல்லுக்கு முதலிடம் கொடுக்கப்பட்டிருக்கும். அபயமின்றி, அஞ்சாமை யில்லாதவிடத்து, எந்த குணமும் வளருவதற்கில்லை. உண்மையின்றேல் நற்குணங்களுக்கு மதிப்பெதுவும் இல்லாது போகிறது. ஆனால் உண்மைக்கோ அஞ்சாமை அவசியமாகும். அச்சம் மலிந்த சூழ்நிலையில் நற்குணங்கள் பரவுவதற்கில்லை. அதில் அவைகளும் துர்க்குணங்களாய் விடும்; நல்ல முயற்சிகளும் போக்குகளும் பலவீன மாய்விடும். அஞ்சாமை எல்லா நற்குணங்களுக்கும் அதிநாயகனாகும். ஆனால் சேனையை முன் பின் இருபுறமும் கவனித்துக்கொள்ள வேண்டியிருக்கிறது. நேர்தாக்குதல் எதிரிலேயே ஏற்பட்டாலும் பின்னாலிருந்து திருட்டுத் தாக்குதலும் சந்தடியின்றிச் செய்யலாம். நற்குணங்களின் முன்புறத்தில் அபயம் தொடை தட்டிக் கொண்டு சித்தமாயிருக்கிற தென்றால், பின்னால் 'பணிவு' பாதுகாப்புச் செய்து வருகிறது. இவ்வாறு சிறந்தமுறையில் இந்தப் பாதுகாப்பு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இங்கே மொத்தம் இருபத்தாறு குணங்கள் விவரிக்கப் பட்டிருக்கின்றன. இவற்றில் இந்த இருபத்தைந்து குணங்களு மிருந்து இவற்றின் அகங்காரம் அல்லது கர்வம் ஏற்பட்டு விடுமானால் பின்னாலிருந்து திடீரெனத் திருட்டுத் தாக்குதல் ஏற்பட சேர்த்த சொத்தையெல்லாம் இழக்கும் அபாயம் நேரும். ஆகையால் பின்னால் பணிவு என்ற நற்குணம் வைக்கப்பட்டிருக்கிறது. பணிவு இல்லையேல் இந்த வெற்றி எப்போது தோல்வியாய் மாறும் என்று தெரியாது போய்விடும். இவ்வாறு முதலில் அஞ்சாமையையும் பின்னால் பணிவை

யும் நியமித்துவிட்டால் மற்ற எல்லா நற்குணங்களையும் வளர்ப்பதற்கானவற்றைச் செய்ய இயலும். இவ்விரண்டு பெரிய குணங்களுக்கிடையே அமைக்கப்பட்டுள்ள இருபத்து நான்கு குணங்களும் அநேகமாய் அஹிம்சையின் பல்வேறு உருவங்களே, அஹிம்சையின் மாற்று மொழிகளே என்று சொல்லுவது தவருகாது. பூததயை, மிருதுத்தன்மை, சகிப்பு, அமைதி, வெகுளாமை, அஹிம்சை, நன்றிமறவாமை ஆகிய இவையெல்லாம் அஹிம்சையின் பல்வேறு பெயர்களே. அஹிம்சை, சத்தியம் என்ற இவ்விரு குணங்களில் எல்லா நற்குணங்களும் அடங்கிவிட்டன. குணங்கள் அனைத்தையும் சுருக்கி அவற்றின் சாரம் எடுக்கப்படுமாஞல் இறுதியில் அஹிம்சை, சத்தியமென்ற இவ்விரண்டுமே எஞ்சிநிற்கும்; மற்ற எல்லா நற்குணங்களும் இவற்றினுள் அடங்கிப்போம். ஆனல் அஞ்சாமை, பணிவு ஆகிய இரண்டின் விஷயமும் வேறு. அஞ்சாமையைக் கொண்டு முன்னேறுவது சாத்தியமாக, பணிவிஞல் பாதுகாப்பு ஏற்படுகிறது. (அஞ்சாமை சத்தியத்திற்கும், பணிவு அஹிம்சைக்கும் அறிகுறியாகும்.) சத்தியம், அஹிம்சை என்ற இவ்விரு குணங்களின் மூலதனத்துடன் அச்சமின்றி முன்னேற வேண்டும். வாழ்க்கை விசாலமானது. அதில் நாம் தங்கு தடையின்றிப் போய்க்கொண்டே இருக்கவேண்டும். காலடியைத் தவருய் எடுத்து வைத்துவிடாதிருப்பதற்காக நாம் பணிவைக் கைவிடாதிருப்போமாஞல் ஆபத்து எதுவும் நேராது. இப்பொழுது ஆனந்தமாய் சத்தியத்திலும் அஹிம்சையிலும் எல்லா இடங்களிலும் சோதனை நடத்திக் கொண்டே செல்லுங்கள். கருத்தென்னவெனில், சத்தியமும் அஹிம்சையும் அஞ்சாமை பணிவு ஆகியவற்றின் மூலமாகவே வளருகின்றன.

இவ்வாறு ஒருபுறம் நற்குணங்களின் படை நின்றுகொண்டிருக்க, மறுபுறத்தில் துர்க்குணங்களின் படையும் சித்தமாயிருக்கிறது. வீண்பெருமை, அஞ்ஞானம் (அறியாமை) ஆகிய துர்க்குணங்களைப்பற்றி அதிகம் விவரிக்கத் தேவையில்லை. இவைகளுடன்தான் நமக்கு தினமும் பழக்கம் இருந்து வருகிறதே! வீண்பெருமையிலோ நாம் ஊறியே கிடக்கிருேம். வாழ்க்கை முழுமையும் வீண்பெருமையின் அடிப்படையிலேயே அமைந்தது போலிருக்கிறது. அஞ்ஞானமோ? நமக்கு அது மிகவும் பிடித்தமான இனிய

காரணமாகி விட்டதால் நாம் எதற்கெடுத்தாலும் அதை முன்னே தள்ளி விடுகிறேம். அஞ்ஞானம் அல்லது அறியாமை ஒரு பெரிய குற்றம் என்பதை நாம் உணர்ந் திருப்பதாகவே தெரியவில்லை. ஆனல் பகவான், "அஞ் ஞானம் ஒரு பாவம்" என்கிருர். சோக்ரத்தர் இதற்கு நேர் மாருய்க் கூறினர். தம் வழக்கினிடையில், "நீங்கள் பாவமென்று கருதுவது அஞ்ஞானமே. அஞ்ஞானமோ மன்னிப்பிற்குரியது. அஞ்ஞானமின்றி பாவம் எப்படி நிகழ முடியும்? அஞ்ஞானத்தை நீங்கள் எப்படித் தண்டிப் பீர்கள்?" என்று கேட்டார். ஆனல் பகவான், "அஞ் ஞானமும் பாவமே" என்கிருர். சட்டம் அறியாமை குற்ற மின்மைக்கு ஒரு காரணமென்று ஒப்புக் கொள்ளப் படுவதில்லை. தெய்வீகச் சட்டத்தை அறிந்து கொள்ளாம லிருப்பதும் பெரிய குற்றமே. பகவான் சொல்லுவதற்கும் சோக்ரத்தர் சொன்னதற்கும் கருத்து ஒன்றே. தன் அறியாமையை எந்த நோக்குடன் கருதவேண்டு மென் பதை பகவான்கூற, பிறர்செய்யும் பாவங்களை எந்த நோக் குடன் பார்க்கவேண்டுமென்று சோக்ரத்தர் சொல்லுகிருர். பிறருடைய பாவங்களை மன்னிக்கவேண்டும்; ஆனல் தன் அஞ்ஞானத்தை மன்னிப்பதும் பாவமாகும். நம்மிடம் நாம் சிறு அஞ்ஞானத்திற்கும் இடமளித்தல் கூடாது.

## (90) அஹிம்சையின் வளர்ச்சி—நான்கு கட்டங்கள்

இவ்வாறு ஒருபுறம் தேவ சம்பத்து, மறுபுறம் அசுர சம்பத்து என இரண்டு படைகளும் நிற்கின்றன. இவற்றில் அசுர சம்பத்தை விட்டுவிட்டு தேவசம்பத்தைப் பற்றிக்கொள்ள வேண்டும். சத்தியம், அஹிம்சை முதலிய தெய்வீக குணங்கள் அனுதி காலந்தொட்டு வளர்க்கப்பட்டு வந்திருக்கின்றன. இடையில் கழிந்த காலத்திலும் பெரிய வளர்ச்சி ஏற்பட்டிருக்கிறது. ஆனல் இன்னும் எவ்வளவோ வளர்ந்தாக வேண்டும். வளர்ச்சியின் எல்லையை எட்டியாய் விட்டது என்று சொல்லுவதற்கில்லை.. நமக்கு சமூக உடல் கிட்டியிருக்கும் வரையில் வளர்ச்சிக்கு அளவில்லாத சந்தர்ப்பமும் இருந்துவரும். சொந்தத்தில் போதிய வளர்ச்சி ஏற்பட்டுவிட்ட போதிலும் சமூக வளர்ச்சியும், நாட்டின் வளர்ச்சியும், உலக வளர்ச்சிம் எஞ்சியிருக்கவே

செய்கின்றன. தனி மனிதன் தன் சொந்த முயற்சி என்ற உரமிட்டு சமூகத்தையும் நாட்டிலுள்ள இலட்சக்கணக்கான மனிதர்களையும் வளம்பெறச் செய்ய ஆரம்பித்து விட வேண்டும். மனிதன் மூலமாக அனுதிகாலந் தொட்டே அஹிம்சை வளர்க்கப்பட்டுவந்து கொண்டிருந்த போதிலும் இன்றும் அந்த வளர்ப்புவேலை நடந்துதான் வருகிறது.

அஹிம்சை எம்முறையில் வளர்ந்து வந்ததென்பது கவனிக்கத்தக்கது. அதிலிருந்து பரமார்த்த வாழ்க்கை எவ்வாறு மேன்மேலும் வளர்ந்து கொண்டிருக்கிறது என்பதும் அதற்கு இப்பொழுதும் எவ்வளவு சந்தர்ப்பம் இருக்கிறதென்பதும் தெரியவரும். முதலில் அஹிம்சையை விரும்பிய மனிதன் ஹிம்சை புரியும் மக்களின் தாக்குதலிலிருந்து தப்புவதெப்படி என்று யோசிக்கத் தொடங்கினுன். முதலில் சமூகத்தின் பாதுகாப்பிற்காக க்ஷத்திரிய வர்க்கம் அமைக்கப்பட்டது. ஆனுல் அதுவே பின்னர் சமூகத்தை பட்சிக்கத் தொடங்கிவிட்டது. அப்பொழுது இந்த மதம் பிடித்த க்ஷத்திரியர்களிடமிருந்து சமூகத்தைக் காப்பதெப்படி என்று அஹிம்சைப் பற்றுள்ள பிராமணர்கள் சிந்திக்கலானுர்கள். பரசுராமர் தாம் ஒரு அஹிசை பக்தராயிருந்தும் ஹிம்சையைக் கையாண்டு க்ஷத்திரியர்களை அழிக்கத் தலைப்பட்டார். க்ஷத்திரியர்களுடைய ஹிம்சையை அகற்றும்பொருட்டு அவரே ஹிம்சையில் இறங்கினுர். இது அஹிம்சையின் ஒரு சோதனையே ஆயினும் இது வெற்றி பெறவில்லை. அவர் இருபத்தொருமுறை க்ஷத்திரியர்களை அழித்தார்; ஆயினும் க்ஷத்திரியர்கள் தப்பி யிருந்துவந்தனர். ஏனெனில் இந்தச் சோதனையில் தொடக்கத்திலேயே பிழை புகுந்துவிட்டது ; எந்த க்ஷத்திரியர்களை அவர் அழிக்கப் புறப்பட்டாரோ அவர்களில் தாமும் ஒருவராகி அவர்களின் எண்ணிக்கையைப் பெருக்கிவிட்டார். ஆகவே அந்த க்ஷத்திரிய வர்ணம் எப்படி அழியும்? அவர்தாமே ஹிம்சை புரியும் க்ஷத்திரியராய் விட்டாரே! அந்த விதைதான் எஞ்சியிருந்ததே! ஒருவர் விதையைப் பாதுகாத்து வைத்துக்கொண்டு செடியையும் மரத்தையும் வெட்டி வீழ்த்துவாராகுல் அவர் அந்த மரம் செடிகள் மீண்டும் மீண்டும் முளைத்துத் தழைப்பதையே பார்ப்பார். பரசுராமர் என்னவோ நல்லவர்தான். ஆனுல் அவர் நடத்திய சோதனை விசித்திரமானது. தாம் க்ஷத்திரியராயிருந்துகொண்டு உலகத்தில் க்ஷத்திரியப் பூண்டே இல்லா

மற் செய்யவிரும்பினர். உண்மையில் அவர் தம்மிட மிருந்தே சோதனையைத் தொடங்கியிருக்கவேண்டும். அவர் முதலில் தம் தலையைச்சீவி எறிந்திருக்கவேண்டும். ஆனால் இங்கே நான் பரசுராமரைக் குறைகூறுவது நான் அவரை விடப் பெரிய அறிவாளி என்பதனால் அல்ல. அவருடன் ஒப்பிடும்பொழுது நானொரு சிறு குழந்தையே. ஆனால் நான் அவர் தோள்மீது ஏறி நிற்பதால் வெகு தொலைவு வரையில் சிரமமின்றிப் பார்க்க முடிகிறது. பரசுராமருடைய சோதனையின் அடிப்படையே பிழைபட்டதாகும். ஹிம்சை யில் தோய்ந்திருப்பவன் அதை அகற்றுவது சாத்திய மில்லை. இதனால் ஹிம்சை புரிவோரின் தொகையே பெருகு கிறது. ஆனால் அப்பொழுது இந்த விஷயம் கவனத்திற்கு வரவில்லை. அக்காலத்திய பெரியோர்கள், பெரிய அஹிம்சா பக்தர்கள் தமக்குத் தோன்றிய வகையில் சோதனை செய் தார்கள். பரசுராமர் அக்காலத்திய பெரிய அஹிம்சாவாதி. ஹிம்சை நோக்குடன் அவர் ஹிம்சை செய்யவில்லை; அஹிம்சையை தாபிக்கவே அவர் ஹிம்சையின் உதவியை நாடினர்.

ஆனால் அந்தச் சோதனை தோல்வியுற்றது. பிறகு இராமயுகம் வந்தது. அக்காலத்தில் பிராமணர்கள் மீண்டும் சிந்திக்கத் தொடங்கினர்கள். அவர்கள் ஹிம் சையை ஏற்கெனவே துறந்துவிட்டவர்கள். 'நாம் நம் கையால் ஹிம்சை புரிவதில்லை' என அவர்கள் முடிவுசெய் திருந்தார்கள். அப்பொழுது இராட்சசருடைய தாக்குதலி லிருந்து தப்புவதெப்படி? இந்த க்ஷத்திரியர்கள்தாம் ஹிம்சை புரிபவர்களாயிற்றே. அவர்களைக் கொண்டு இராட்சசர்களை அழித்தால் என்ன என்று அவர்கள் யோசித் தார்கள். 'முள்ளைக்கொண்டு முள்ளைநோண்டி எடுக்க வேண்டும்; நாம் விலகி நின்றுகொண்டிருப்போம்' என்று எண்ணினர்கள். ஆகவே விசுவாமித்திரர் யாகத்தைப் பாதுகாப்பதற்காக இராமலக்ஷ்மணர்களை அழைத்துப் போய் இராட்சசர்களை அழிக்கச்செய்தார். எந்த அஹிம்சை யால் தன்னைத்தானே பாதுகாத்துக்கொள்ள முடியவில் லையோ, எதற்கு நிற்கக் காலில்லையோ அந்த நொண்டி அஹிம்சை எப்படி நிலைத்து நிற்குமென்று இன்று நாம் யோசிக்கிறோம். ஆனால் வசிஷ்ட-விசவாமித்திரர் போன்ற வர்களுக்கு க்ஷத்திரியர்களின் பலத்தினால் தம்மைக் காத் துக் கொள்வதில் குற்றமோ குறைபாடோ தோன்றவில்லை.

ஆனல் இராமனைப் போன்ற க்ஷத்திரியன் கிடைத்திரா விட்டால்? விசுவாமித்திரர், " என் உயிர் போனலும் நான் ஹிம்சை புரியமாட்டேன் " என்று சொல்லியிருப்பார். ஏனெனில் தாமே ஹிம்சையில் இறங்கி ஹிம்சை செய்தல் என்ற சோதனை ஏற்கெனவே செய்து பார்த்தாய்விட்டது. அவரவர் தாம் ஏற்றுள்ள அஹிம்சையை என்னவானலும் விடுவதில்லை என்ற உறுதி இப்பொழுது ஏற்பட்டாகி விட்டது. க்ஷத்திரியன் எவனும் கிட்டாவிட்டால் அஹிம்சா வாதிகள் தம் உயிரைவிட விரும்பும் அளவுக்கு புலம் தயாராய்விட்டது. விசுவாமித்திரருடன் சென்றுகொண் டிருந்த இராமர், வழியில் எதையோ சுட்டிக்காட்டி, " இவை என்ன குவியல்கள் ?" என்று கேட்கிருர். அதற்கு விசுவா மித்திரர், " இவை பிராமணர்களின் எலும்புக் குவியல் கள். அஹிம்சா பக்தர்களான பிராமணர்கள் வந்து தாக்கிய ஹிம்சாவாதிகளான இராட்சசர்களை எதிர்க்காது தம் உயிரைவிட்டார்கள். அவர்களுடைய எலும்புக் குவி யல்களே இவை " என்று பதில் அளிக்கிருர். இந்த அஹிம் சையில் பிராமணர்களுடைய தியாகமென்னவோ இருந் தது. ஆனல் அவர்கள் பிறர் வந்து தம்மைப் பாதுகாக்க வேண்டுமென்று எதிர்பார்த்தார்கள். இத்தகைய பலவீன மிருக்குமிடத்தில் அஹிம்சை தன் பூரண நிலையை எய்து வதற்கில்லை.

பிற்காலத்தில் மகான்கள் மூன்ருவது சோதனையைச் செய்தார்கள். ' நாம் நம் பாதுகாப்புக்காகப் பிறர் உதவியை ஒருபொழுதும் நாடுவதில்லை ; நம் அஹிம்சையே நம்மைப் பாதுகாக்கும். இந்தப் பாதுகாப்பே உண்மையானதாகும் ' என்று அவர்கள் முடிவு செய்தார்கள். இவர்களுடைய இந்தச் சோதனை தனித்தனியே தனி நபர்களால் செய்யப் பட்டது. இந்தத் தனிப்பட்ட சோதனையை அவர்கள் அதன் எல்லைவரை கொண்டு போய் விட்டபோதிலும் அவை தனி நபர்களோடு நின்றுவிட்டன. சமூகத்தை ஹிம்சா வாதிகள் வந்துதாக்க சமூகம் இந்த மகான்களிடம் போய், " இப்பொழுது நாங்கள் என்ன செய்வது?" என்று கேட் டிருந்தால், மகான்களால் அதற்கு முடிவான விடையளிக்க முடிந்திருக்குமோ என்னவோ? தம் சொந்த வாழ்க்கையில் அஹிம்சையை பரிபூரணமாய் அனுஷ்டித்த இந்த மகான் கள் சமூகத்தினிடம், " அண்ணன் - தம்பிமாரே, எங்களால் ஒன்றும் செய்யமுடியாதே !" என்றே பதில் சொல்லியிருப்

பார்கள். இவ்வாறு மகான்களிடம் குறையிருப்பதாகக் கூறுவது என் சிறுபிள்ளைத்தனமே. ஆனால் அவர்களின் தோளில் அமர்ந்துள்ள நான் என் கண்ணுக்குத் தோன்று வதைச் சொல்லுகிறேன். அவர்கள் என்னை இதற்காக மன்னிப்பார்களாக! அவர்கள் மன்னித்தும் விடுவார்கள். ஏனெனில் அவர்களுடைய மன்னிப்பு மகத்தானது. அஹிம் சையைக் கருவியாய்க்கொண்டு சமூகத்தில் சோதனை செய்வதற்கே அவர்களுக்குத் தோன்றி யிராதென்று சொல்லுவதற்கில்லை. ஆனால் அக்காலத்திய நிலைமை அவர் களுக்கு ஒருக்கால் அனுகூலமாய்த் தோன்ருமலிருக்கலாம். அவர்கள் தனித்தனியாய், சொந்தத்திலேயே சோதனைகள் நடத்தினர்கள். ஆனால் இவ்வாறு தனித்தனியாய் நடை பெறும் சோதனைகளிலிருந்தே சாஸ்திரம் பிறக்கிறது. பலருடைய அனுபவங்களின் கூட்டினல் சாஸ்திரம் உரு வாகிறது.

மகான்களின் தனித்தனிச் சோதனைகளுக்குப் பிறகு இன்று நாம் நான்காவது சோதனை செய்து வருகிறோம். அதாவது, சமூகம் முழுவதுமே ஒன்றுசேர்ந்து அஹிம் சைச் சாதனங்களின் மூலமாய் ஹிம்சையை எதிர்த்தல் என்பது. இவ்வாறு இதுவரையில் நான்கு சோதனைகள் நடந்திருக்கின்றன. ஒவ்வொரு சோதனையிலும் குறை பாடு இருந்திருக்கிறது, இருக்கிறது. வளர்ச்சியின் போக்கில் இதைத் தவிர்ப்பதற்கில்லை. ஆனால் அந்தந்தக் காலத்திற்கு அந்தந்த சோதனை பூரண மானது என்றே சொல்லவேண்டும். பத்தாயிரம் வருஷங்களுக்குப் பிறகு பார்க்கிறவர்களுக்கு இன்று நாம் நடத்திவரும் அஹிம் சைப் போரிலும் எவ்வளவோ ஹிம்சை கலந்திருப்ப தாகவே தோன்றும். சுத்த அஹிம்சைச் சோதனைகள் இன்னும் எத்தனையோ நடைபெறும். ஞானம், கர்மம், பக்தி ஆகியவை மட்டுமல்ல, எல்லா நற்குணங்களுமே வளர்ந்து வருகின்றன. பூரண வஸ்து என்பது ஒன்று தான். அதுதான் பரம்பொருள். பகவத் கீதையின் புருஷோத்தம யோகம் பூரணமானது. ஆனால் தனி மனித வாழ்க்கையிலும் சமுதாய வாழ்க்கையிலும் அவை இனி மேல்தான் பூரணமாய் வளர்ந்து பரவவேண்டும். அருள் வாக்குகளும் வளர்ந்துகொண்டே போகின்றன. ரிஷிகள் மந்திரங்களைக் கண்டவர்களென்று கருதப்படுகிருர்களே யல்லாது அவற்றை இயற்றியவர்களென்று அல்ல. ஏனெ

னில் அவர்களுக்கு மந்திரங்களுக்கு எந்தப் பொருள் புலனாயிற்றோ அவைகளே அவற்றின் பொருளென்பதல்ல. அவர்களுக்கு அவற்றின் ஒரு காட்சி ஏற்பட்டது; அதன் பிறகு நமக்கு இன்னும் விரிவான பொருள் தோன்றலாம். அவர்களைவிட நாம் இன்னும் அதிகமாய்க் காணமுடிவது நம்மிடத்திலுள்ள சிறப்பினால் அல்ல. ஏனெனில் அவர்களை ஆதாரமாய்க்கொண்டே நாம் முன்னேறுகிறோம். நான் இங்கே அஹிம்சையின் வளர்ச்சியைப் பற்றியே கூறிவருவதன் காரணம் எல்லா நற்குணங்களின் சாரத்தையும் பிழிந்தெடுப்போமானால் அது இறுதியில் அஹிம்சையாகவே இருக்கும் என்பதனாலேயே. மேலும் நாம் இன்று அஹிம்சைப் போரில் இறங்கியிருப்பதால் இந்த தத்துவம் எவ்வாறு வளர்ந்துவந்திருக்கிறது என்பதைக் கூறினேன்.

## (91) புலால் மறுப்பு—ஒரு பெரிய அஹிம்சைச் சோதனை

இதுவரையில் நாம் அஹிம்சையின் ஒரு அம்சத்தைப் பார்த்தோம்; அதாவது ஹிம்சாவாதிகளின் தாக்குதல் ஏற்படுமானால் அஹிம்சாவாதி தன்னை எப்படிப் பாதுகாத்துக் கொள்வது என்பதை மனிதர்களின் சண்டைகளில் அஹிம்சை எவ்வாறு வளர்ந்து வருகிறது என்பதைக் கண்டோம். ஆனால் சண்டை மனிதனுக்கும் மிருகத்திற்குமிடையிலும்கூட நடந்து கொண்டிருக்கிறது. மனிதன் இதுவரையில் தம்மிடை உள்ள சண்டை சச்சரவுகளைப் போக்கிக்கொள்ள இயலாததோடு பிராணிகளைத் தன் வயிற்றில் திணித்துக்கொண்டு உயிர் வாழ்கிறான். அவனால் தன் இனத்தாரிடையே நிகழும் சண்டையைப் போக்கிக்கொள்ள முடியாதிருப்பதோடு தன்னிலும் இழிந்த இனத்தைச் சேர்ந்தசக்தியற்ற பிராணிகளை, உயிர்களைத் தின்னாமல் இருக்க முடியவில்லை. ஆயிரமாயிரம் ஆண்டுகளாய் வாழ்ந்து வந்திருந்தும் உயிர் வாழ்வதெப்படி என்பதை மனிதன் இதுவரையில் சிந்தித்தானில்லை. மனிதனால் மனிதனைப்போல வாழ முடியவில்லை. ஆனால் இந்த விஷயமும் வளர்ந்து வருகிறது. ஒரு காலத்தில் மற்றப் பிராணிகளைத் தின்றே மனிதன் வாழ்ந்ததுண்டு. ஆனால் மனிதர்களிடையே அறிவாளிகளாய், சிறந்தவர்களாய் இருந்தவர்களுக்கு இது பிடிக்கவில்லை. அவர்கள் புலால்

தின்றுக வேண்டுமென்றல் யாகத்தில் பலியிடப்பட்ட பிராணிகளின் புலாலைத் தின்ன வேண்டுமென்ற ஒரு விதியை வகுத்தார்கள். இதன் மூலமாய் ஹிம்சை கட்டுப் படுத்தப்படும் என்பதே இதில் அவர்கள் கொண்டிருந்த நோக்கம். எத்தனையோ பேர் புலால் கொள்வதை அறவே விட்டுவிட்டார்கள். ஆனல் முற்றிலும் விடமுடியாதவர்கள்—அவர்கள் யாகத்தில் ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்து விட்டு, சிறிது தவம் இயற்றியபின் சாப்பிடலாமென்று அனுமதிக்கப்பட்டது. அக்காலத்தில் யாகத்தில்தான் புலால் அருந்தலாமென்ற இந்த நிபந்தனையின் விளை வாக ஹிம்சை நின்றுபோய் விடுமென்று எண்ணப்பட்டது. ஆனல் பிறகு யாகம் செய்வதே ஒரு தினசரிக் காரியமாய் விட்டது. இஷ்டப்பட்டவர்களெல்லாம் யாகம் செய்து மாமிசம் தின்னத் தொடங்கினர்கள். அப்பொழுது புத்த பகவான் இன்னும் சிறிது முன்னே சென்றர். அவர், ''உங்களுக்கு மாமிசம் தின்ன வேண்டுமென்றல் தின்று தொலையுங்கள். ஆனல் பகவான் பெயரைச் சொல்லிக் கொண்டு தின்னவேண்டாம்'' என்றர். இவ்விரு வசனங் களின் நோக்கமும் ஒன்றே : அதாவது ஹிம்சை தடைப்பட வேண்டும் என்பது, வண்டி எப்படியேனும் புலனடக்கம் என்ற பாதைக்குத் திரும்பவேண்டும் என்பது. யாக யக்ஞங்கள் செய்தாலும் சரி, செய்யாவிட்டாலும் சரி நாம் அவை இரண்டிலிருந்தும் மாமிசத்தைத் தவிர்ப்பதையே கற்றேம். இவ்வாறு நாம் சிறிது சிறிதாய் மாமிசம் அருந்துவதை விடலானேம்.

உலக சரித்திரத்தில் இந்தியாவில் மட்டுமே இந்தப் பெரிய சோதனை நடந்துள்ளது. கோடிக்கணக்கானவர்கள் புலால் அருந்துவதை விட்டுவிட்டார்கள். இன்று நாம் புலால் உண்ணுதிருப்பதில் நமக்குப் பெருமை எதுவு மில்லை. நம் முன்னேர் செய்த புண்ணியத்தினல் நமக்கு இதில் பழக்கம் ஏற்பட்டுள்ளது. ஏன், பண்டைய ரிஷிகள் மாமிசம் உண்ணுவதுண்டு என்று நாம் சொன்னலும் படித்தாலும்கூட நமக்கு அது வியப்பாய்த் தோன்றுகிறது. ''என்ன பிதற்றுகிருய்? ரிஷிகளாவது புலால் தின்னுவ தாவது? எந்தக் காலத்திலும் நடந்திராது,'' என்கிறேம். ஆனல், புலால் உண்டுங்கூட அவர்கள் புலனடக்கத்தை ஏற்று அதைத் துறந்திருக்கிறர்கள். இதற்கான புகழெல் லாம் அவர்களையே சாரும். அந்தக் கஷ்டங்களின் அனுபவ

மெல்லாம் இன்று நமக்கு இல்லை. அவர்களுடைய புண்ணியங்களின் மூட்டை நமக்குக் கிடைத்துள்ளது. பவபூதியின் 'உத்தரராம சரித்திரத்தில்' ஒரு சந்தர்ப்பம் வந்திருக்கிறது. வால்மீகியின் ஆசிரமத்திற்கு வசிஷ்ட முனிவர் வரவே, அவருக்கு மரியாதை செய்வதற்காக ஒரு கன்று கொல்லப்பட்டது. அங்கிருந்த ஒரு சிறிய பையன் ஒரு பெரிய பையனிடம், "இன்று நம் ஆசிரமத்திற்கு ஒரு தாடிப் புலி வந்திருக்கிறதே, அது நம் கன்றைத் தின்றுவிட்டதல்லவா?" என்று கேட்கிறான். அதற்குப் பெரிய பையன், "போடா போ, அவர் வசிஷ்டமுனிவரல்லவா? இவ்வாறெல்லாம் பிதற்றாதே" என்கிறான். முன்காலத்தில் அவர்கள் மாமிசம் உண்டுவந்திருக்க நாம் உண்பதில்லை என்பதற்கு நாம் அவர்களைவிடப் பெரியவர்களாய்விட்டோம் என்பதல்ல பொருள். அவர்களுடைய அனுபவத்தின் பயன், இலாபம் நமக்கு சிரமமின்றிக் கிடைத்துள்ளது. அவர்களுடைய இந்த அனுபவத்தை நாம் மேலும் வளர்க்கவேண்டும். பாலை அறவே விட்டுவிடுவதற்கும் நாம் சோதனைகள் நடத்தவேண்டும். மனிதன் பிற பிராணிகளின் பாலை அருந்துவதும் தவறே. பத்தாயிரம் வருஷங்களுக்குப் பிறகு வரப்போகும் மக்கள் நம்மைக் குறித்து, "நம் முன்னோர்கள் பால் அருந்துவதில்லை என்று விரதம் ஏற்க நேர்ந்ததா? ராம, ராம! அவர்கள் எப்படித்தான் பாலை அருந்தினார்களோ? இவ்வளவு காட்டுமிராண்டிகளா அவர்கள்?" என்று சொல்லுவார்கள். கருத்தென்னவென்றால், நாம் அச்சமின்றி, ஆனால் பணிவுடன், நம் சோதனைகளை நடத்திக்கொண்டு இடையறாது முன்னேற வேண்டும். சத்திய அனுஷ்டானத்தை மேலும் வளர்க்கவேண்டும். வளர்ச்சிக்கு இன்னும் எவ்வளவோ இடமிருக்கிறது. எந்த குணமும் இன்னும் பூரணமாய் வளர்ந்துவிடவில்லை.

## (92) அசுரசம்பத்தின் மூன்று பேராசைகள்—ஆதிபத்தியம், கலாசாரம், செல்வம்

நாம் தேவ சம்பத்தை வளர்க்கவும் அசுர சம்பத்திலிருந்து விலகி யிருக்கவும் வேண்டும். அதனிடமிருந்து ஒதுங்கி இருக்க முடிய வேண்டுமென்பதற் காகவே பகவான் அசுர சம்பத்தை வர்ணித்திருக்கிறார். இதில் மூன்று விஷயங்கள் முக்கியமானவை; அசுரர்களின்

சரித்திரத்தின் சாரம், ஆதிபத்தியம், கலாசாரம், செல்வம் என்ற இவைகளில் அடங்கி யிருக்கிறது. அவர்கள், தம் கலாசாரமே தலைசிறந்ததென்று சொல்லிக்கொண்டு அதை உலகெங்கும் கொண்டுபோய்ப் புகுத்த வேண்டுமென்ற பேராவல் கொள்ளுகிறார்கள். "உங்கள் கலாசாரத்தையே ஏன் கொண்டுபோய்த் திணிக்கவேண்டு?" மென்று கேட்டால், "இதுவே மற்றெல்லாவற்றைக் காட்டிலும் சிறந்தது" என்கிறார்கள். எப்படிச் சிறந்தது? "அது எங்களுடையதாகையால்" அசுரத்தன்மையுள்ள மனிதனுக்கும் சரி, அவர்கள் அமைத்த ஏகாதிபத்தியத்திற்கும் சரி இந்த மூன்று விஷயங்கள் இன்றியமையாதவை.

பிராமணர்களும் 'எங்கள் கலாசாரமே தலைசிறந்தது' என்று இவ்வகையில்தானே எண்ணுகிறார்கள்? 'எங்கள் வேதங்களில் ஞானமனைத்தும் அடங்கியிருக்கிறது; வேதக் கலாசாரத்தின் வெற்றி உலகெங்கும் ஏற்படவேண்டும்' என்றெல்லாம் எண்ணுகிறார்கள். 'अग्रतुश्चतुरो वेदान् पृष्ठत: सशरं धनु: '—(அக்ரத: சதுரோவேதான், ப்ருஷ்டத: ஸஶரம் தனு:) என்றவாறு அமைந்த ஏற்பாட்டுடன் பூமி முழுவதும் தம் கலாசாரக் கொடி பறக்கவிடுங்கள். ஆனால் முதுகில் सशरं धनु: (அம்பு பூட்டிய வில்) இருக்குமானால், பாவம், கையில் தாங்கியுள்ள அந்த வேதம் ஒழிந்ததென்றே எண்ணுங்கள். முஸல்மான்களும் இப்படித் தானே எண்ணுகிறார்கள்? அதாவது குரானில் எழுதியிருப்பதொன்றே உண்மை என்றுதானே எண்ணுகிறார்கள்? கிறிஸ்தவர்களும் இவ்வாறுதான் நம்புகிறார்கள். அதாவது பிற மதத்தவர் ஒருவர் எவ்வளவுதான் சிறந்தவரா யிருந்தாலும் ஏசுநாதரிடம் அவர் நம்பிக்கைகொள்ளாதிருக்கும் வரையில் அவரால் சுவர்க்கத்தில் புக முடியாது. பகவானுடைய திருமாளிகையில் அவர்கள் ஒரே ஒரு வாயில்தான் அமைத்திருக்கிறார்கள்; அது ஏசுநாதர் அமைத்ததே. மக்கள் தம் வீடுகளுக்கு அநேக வாயில்களும் பலகணிகளும் அமைக்கிறார்கள். ஆனால் பாவம், இந்த பகவானுடைய கோயிலிலோ இவர்கள் அமைப்பது ஒரு வாயிலே!

"ஸ்ரீமானும் உயர் குடியிற் பிறந்தோனும்
நான் ஒருவனே, எனக்கிணை எவருமில்லை"*

---

* "आढ्योऽभिजनवानस्मि कोऽन्योऽस्ति सदृशो मया"

என்றே எல்லோரும் எண்ணுகிருர்கள். நான் யார் என்ருல், பரத்வாஜ குலத்தில் பிறந்தவன்; என்னுடைய இந்த வம்ச பரம்பரை தடையின்றி, இடையில் இருது சென்றுகொண்டிருக்கிறது என்கிருர். இதே நிலைதான் மேனுட்டவருடையதும்; 'எங்கள் நரம்புகளில் நார்மன் வீர இரத்தம் ஓடுகிறது' என்கிருர்கள். நம் நாட்டிலும் குரு பரம்பரை உண்டல்லவா? ஆதி குரு சங்கரன்; அவருக்குப் பிறகு பிரம்மதேவர் அல்லது வேருெருவர். பிறகு நாரதர், வியாசர்; பின்னர் வேறு யாரோ ஒரு ரிஷி; பிறகு இடையில் பத்து, பதினைந்து பெயர்கள்; அவற்றிற்குப் பிறகு தம் குருவின் பெயர்; அதை அடுத்து நான் என்று இம்மாதிரி பரம்பரையின் வரிசை கூறப்படு கிறது. இந்த வம்சாவளியின் மூலமாய் நாம் பெரியவர்க ளென்றும் நம் கலாசாரம் சிறந்ததென்றும் நிரூபிக்கப் படுகிறது. ஐயா, உங்கள் கலாசாரம் உண்மையாகவே சிறந்ததாயிருப்பின் அது உங்கள் நடத்தையில் வெளி யாகட்டுமே! அதன் ஒளி உங்கள் வாழ்க்கையில் பரவக் கூடாதா? ஆனுல் இவ்வாறு நடைபெறுவதில்லை. எந்த கலாசாரம் தம் வாழ்க்கையிலும் தம் வீட்டிலும் இல்லையோ அதை உலகெங்கும் பரப்ப வேண்டுமென்ற ஆவலுக்கே அசுரப் போக்கென்று பெயர்.

என் கலாசாரம் அழகியது, சிறந்தது என்று எண்ணும் மனப்பான்மை போன்றதே, 'உலகத்தின் செல்வம் அனைத் தையும் வைத்திருக்கத் தகுதியுள்ளவன் நானே' என்று எண் ணும் மனப்போக்கும். உலகத்தின் செல்வமெல்லாம் எனக்கு வேண்டும்; நான் அதைப் பெற்றே தீருவேன். இந்தச் செல்வத்தை நான் எதற்காகப் பெறுவது என்று கேட்டால், இதை எல்லோருக்கும் சமமாகப் பங்கிடுவதற்காக என்பார் கள். இதன் பொருட்டு நான் முதலில் என்னை செல்வத் துள் ஆழ்த்திக் கொள்ளுகிறேன். அக்பர் சொன்னதும் இதுதானே? அதாவது, "இந்த ராஜபுத்திரர்கள் என் ஏகாதிபத்தியத்தில் ஏன் கலந்து கொள்ள மறுக்கிருர்கள்? ஒரு பெரிய ஏகாதிபத்தியம் ஏற்பட்டு விடுமானுல் உலகில் சாந்தியும் சமாதானமும் அமைந்து விடுமே!" அவன் வாஸ்தவத்தில் உண்மை யுணர்ச்சியுடனேயே இவ்வாறு கருதி வந்தான். தற்காலத்தில் அசுரர்கள் எண்ணுவதும் இவ்வாறேதான். உலகத்தின் செல்வமனைத்தையும்

சேர்த்துக் குவிப்பது எதற்கு? பிறகு எல்லோரிடையிலும் பகிர்ந்து கொடுப்பதற்காக!

அதற்காக எனக்கு அதிகாரம் வேண்டும். அதிகார மனைத்தும் ஒருவர் கையிலேயே குவிந்திருக்க வேண்டும். உலகம் அனைத்தும் என் ஆட்சியின் கீழ் வந்துவிட வேண்டும். சுதந்திரம்—என் ஆணையின்படி எல்லாம் இயங்கவேண்டும். எனக்கடங்கி, என் ஆட்சிக்குட்பட்டு நடப்பதெதுவோ அதுதான் சுதந்திரம். இவ்வாறு கலா சாரம், ஆதிபத்தியம், செல்வம் என்ற இந்த மூன்று முக்கிய விஷயங்கள் அசுர சம்பத்தில் வற்புறுத்தப்படுகின்றன.

ஒரு காலத்தில் சமூகத்தில் பிராமணர்களின் ஆட்சி இருந்து வந்தது. அவர்கள் சாஸ்திரங்களை, சட்டங்களை இயற்றிவந்தார்கள். அரசன் அவர்களை மதித்து வந்தான். அந்த யுகம் மாறி, க்ஷத்திரியர்களின் யுகம் வந்தது. குதிரைகளை அவிழ்த்துவிட்டு திக்விஜயங்கள் நடை பெற்றன. இந்த க்ஷத்திரிய கலாசாரமும் வந்தது, பிறகு போயிற்று. பிராமணன், "நான் வித்தை யளிப்பவன். மற்றவர் என்னிடம் அதைப் பெறுவோர். என்னைத்தவிர குரு வேறு யார்?" என்று சொன்னான். பிராமணர்களுக்குத் தம் கலாசாரத்தைக் குறித்து கர்வம் இருந்தது. க்ஷத்திரியர்களோ தம் அதிகாரத்தைப் பற்றிப் பெருமைப் பட்டுக் கொண்டிருந்தார்கள். "இன்று இவனைக் கொன்றேன்! நாளை அவனைக் கொல்வேன்!" என்றே அவர்கள் சதா சொல்லிக் கொண்டிருந்தார்கள். பிறகு வைசியர்களின் யுகம் வந்தது. அவர்களுடைய தத்துவ ஞானமெல்லாம், "முதுகில் வேண்டுமானால் அடியுங்கள் வயிற்றிலடியாதீர்கள்!" என்பதே. வயிறேதான் எல்லாம். வயிற்றைத் தவிர வேறெதுவுமே இல்லை என்பதையே அவர்கள் வாழ்க்கைத் தத்துவமாய்க் கொண்டிருந்தார்கள். "இந்தப் பொருள் என்னுடையது, அதுவும் என்னுடைய தாய் விடும்" என்பதே அவர்கள் சங்கல்பமும், ஜபமும். ஆங்கிலேயர் நம்மிடம், "சுயராஜ்யம் வேண்டுமென்றால் வாங்கிக் கொள்ளுங்கள்; ஆனால் எங்களுடைய பண்டங்களை இங்கே கொண்டுவந்து விற்க வசதிகளும் சௌகரியங்களும் மட்டும் செய்து கொடுத்து விடுங்கள். பிறகு உங்கள் கலாசாரத்தை உங்களிஷ்டம் போல் ஆராய்ந்து படித்துக் கொண்டு கோவணாண்டிகளாய் நீங்க

ளுண்டு உங்கள் கலாசாரம் உண்டென்று இருங்களேன்! எங்களுக்கென்ன ஆக்ஷேபணை?'' என்கிறார்கள் அல்லவா? இந்தக் காலத்தில் யுத்தங்களெல்லாம் வியாபாரத்தின் பொருட்டே நடைபெறுகின்றன. இந்த யுகமும் போய் விடும். இது போவதற்கு மூட்டை கட்டத் தொடங்கி விட்டது. இவ்வாறு இவையெல்லாம் அசுர சம்பத்தின் பல்வேறு வகைகள், உருவங்கள்.

## (93) காம-குரோதங்களை வெல்ல புலனடக்க மென்ற சாஸ்திரீய வழி

நாம் அசுர சம்பத்தை விலக்கிக் கொண்டேயிருக்க வேண்டும். சுருங்கக் கூறுமிடத்து அசுரசம்பத்து என்ப தற்கு காமம் (அவா), குரோதம் (வெகுளி அல்லது கோபம்), லோபம் (பேராசை) என்பதே பொருள். இந்த மூன்றுமே அகில உலகையும் ஆட்டி வைத்துக் கொண்டிருக்கின்றன. இந்த ஆட்டத்தை நிறுத்து. நாம் இதிலிருந்து திரும்பியாக வேண்டும். கோபமும் பேராசையும் காமம் காரணமாய்த் தோன்றுகின்றன. காமத்திற் கனுகூலமான நிலைமை தோன்றுவதிலிருந்து பேராசையும் பிரதிகூலமான நிலையி லிருந்து கோபமும் உதிக்கின்றன. கீதையில் அடிக்கடி இம் மூன்றிலிருந்தும் தப்பி வாழும்படி சொல்லப் பட்டிருக் கிறது. பதினாறும் அத்தியாயத்தினிறுதியில் காமம், குரோதம், லோபம் என்ற இவை நரகத்தின் மூன்று பெரிய வாயில்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இவற்றுள் ஜன நடமாட்டம் அதிகம்; இவற்றில் எத்தனையோ பேர் வருவதும் போவதுமாயிருக்கிறார்கள். நரகவாயில்கள் மிக வும் விசாலமானவை. அவற்றில் மோட்டார்கள் தாராள மாய்ப் போகலாம்; வழியில் எத்தனையோ தோழர்கள் வேறு கிடைப்பார்கள். ஆனால் சத்திய மார்க்கமோ மிகவும் குறுகியது, கீக்கடமானது.

அப்படியானால் இந்த காம-குரோத-லோபங்களிட மிருந்து தப்புவது எப்படி? புலனடக்கமென்ற வழியை ஏற்பதனால். சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ள புலனடக்கப் பாதையைப் பற்றவேண்டும். மகான்களின் அனுபவமே சாஸ்திரம். சோதனைகளின் மூலமாய் மகான்கள் பெறும் அனுபவங்களிலிருந்து சாஸ்திரங்கள் உருவாகின்றன.

ஆகவே இந்தப் புலனடக்கம் என்ற தத்துவத்தைப் பற்றுங்கள். வீண் சந்தேகங்களும் சம்சயங்களும் கொள்ள வேண்டாம். தயவு செய்து, 'காம-குரோதங்கள் போய்விடுமானால் உலகத்தின் கதி என்ன ஆவது? உலகம் நடக்க வேண்டுமல்லவா? சிறிதாவது காம-குரோதங்கள் இருக்க வேண்டாமா?' என்பவை போன்ற சந்தேகங்களை எழுப்பாதீர்கள். என் சகோதரர்களே, காமமும் குரோதமும் ஏற்கெனவே ஏதேஷ்டமாய் இருக்கின்றன; உங்கள் தேவைக்கு அதிகமாகவே இருக்கின்றன. அப்படி இருக்கையில் ஏன் வீணாக அறிவைக் குழப்புகிறீர்கள்? நீங்கள் விரும்புவதற்கு மேல் ஒரு அங்குலம் அதிகமாகவேதான் உலகத்தில் காம-குரோத-லோபங்கள் இருக்கின்றன. காமம் போய்விட்டால் சந்ததி எப்படி விருத்தியாகுமென்று கவலைப்படாதீர்கள். நீங்கள் எவ்வளவுதான் சந்ததி விருத்தி செய்த போதிலும் பூமியில் மனிதன் வாழ்ந்ததற்கு அறிகுறியே இல்லாமல் ஆய் விடக்கூடிய ஒரு நாள் வரவே போகிறது. சாஸ்திரங்களை அறிந்தவர்களும் விஞ்ஞானிகளும் இப்படித்தான் சொல்லுகிறார்கள். பூமி வரவரக் குளிர்ந்துகொண்டே போய்க்கொண்டிருக்கிறதாம். ஒரு காலத்தில் பூமி மிகவும் உஷ்ணமாயிருந்தது. அப்பொழுது அதன் மீது உயிர்ப்பிராணிகள் வாழ்ந்ததில்லை; உயிரினம் தோன்றியதே இல்லை. இனி வரப் போகும் ஒரு காலத்தில் பூமி மிகவும் குளிர்ந்து போக, சிருஷ்டியிலுள்ள ஜீவன்களனைத்தும் அழிந்து அடங்கிப் போகும். இதற்கு இலட்சம் வருஷங்கள் பிடிக்கும். நீங்கள் எவ்வளவுதான் சந்தான விருத்தி செய்தபோதிலும் இறுதியில் இந்தப் பிரளயம் வரப்போவது உறுதி. ஆண்டவன் அவதாரங்கள் எடுப்பது தர்மத்தைப் பாதுகாக்கவேயன்றி ஜன சங்கியையைப் பாதுகாக்க வன்று. தர்மத்தை அனுசரிப்பவனாய் பாபத்திற் கஞ்சுபவனாய் சத்தியத்தில் உறுதிகொண்டவனாய் உள்ள ஒரே ஒரு மனிதன் இருக்கும் வரையில் கவலை இல்லை. கடவுள் அவன் மீது கருணை பாலித்துக்கொண்டிருப்பார். எவர்களுடைய தர்மம் இறந்து ஒழிந்துவிட்டதோ அவர்கள் ஆயிரக் கணக்கில் இருந்தாலென்ன, இல்லாவிட்டாலென்ன? இரண்டும் ஒன்றே.

இந்த விஷயத்தைக் கருத்தில் கொண்டு சிருஷ்டியில் முறைப்படி வாழுங்கள்; புலன்களை அடக்கிக்கொண்டு நடப்பீர். வரம்பைக் கடந்து தலை தெறிக்க ஓடவேண்டாம். உலகிற்கு நன்மை செய்தல் என்றால் மக்கள் சொல்லு

கிறபடியெல்லாம் நடத்தலென்பதல்ல. மனிதர்களுடைய கூட்டத்தைப் பெருக்கிக்கொண்டே போவதும் செல்வக் குவியல்களைச் சேர்த்துக்கொண்டே போவதும் சீர்திருத்த மாகமாட்டா. வளர்ச்சி தொகையைப் பொருத்ததல்ல. சமூகம் அளவில் அடங்காது பெருகத் தொடங்குமானல் மக்கள் ஒருவரை யொருவர் வெட்டி வீழ்த்தத் தொடங்கிவிடு வார்கள். முதலில் பசு பட்சிகளைத் தின்று கொழுக்கும் மனிதன் பிறகு தன் பிள்ளை குட்டிகளையே தின்று பிழைக்க வேண்டியதாய் விடும். காம-குரோதங்களில் சாரம் இருக் கிறதென்று ஒப்புவோமானல் இறுதியில் மனிதன் மனி தனையே கிழித்துத் தின்பான் என்பதில் எள்ளளவும் சந்தேக மில்லை. உலகிற்கு நன்மை செய்தல் என்பதற்கு அழகிய நீதிநெறியை மக்களுக்குக் காட்டுவது என்பதே பொருள். காம-குரோதங்களி லிருந்து விடுபடுவதனுல் பூமியில் மனிதப் பூண்டே அற்றுப் போய்விடுமோ வென்று நீங்கள் கவலைப்படவேண்டாம். அவன் செவ்வாய் கிரகத்தில் தோன்றி விடுவான். கண்ணுக்குப் புலனுகாத பரம்பொருள் எங்கும் பரவியிருக்கிறது. அது நம்மைக் கவனித்துக் கொள்ளும். ஆகையால் நாம் முதலில் நம்மை விடு வித்துக்கொள்வோம். பிறகு என்ன ஆகுமோவென்று தொலைவில் வரப்போவதைப் பற்றிக் கவலைப்படத் தேவை யில்லை. சிருஷ்டி அனைத்தையும், மனித சமூகத்தையும் பற்றிய கவலை உனக்கு வேண்டாம். நீ உன் நீதி சக்தியைப் பெருக்கிக்கொள். காம-குரோதங்களை உதறி எறிந்துவிடு. முதலில் சுருக்கில் சிக்கியுள்ள உன் கழுத்தை விடுவித்துக் கொள்; இதைச் செய்தாலே நீ பெரிய காரியத்தைச் சாதித்ததாகுமே.

சம்சார சாகரத்திலிருந்து தொலைவில் கரைமீது நின்று கொண்டு கடலின் கொந்தளிப்பைக் காண்பதில் இன்ப முண்டு. கடலில் மூழ்கிக்கொண்டிருக்கிறவனுக்கு, மூக் கிலும் வாயிலும் தண்ணீர் ஏறிக்கொண்டிருக்கிறவனுக்கு கடலில் என்ன இன்பம் உண்டாகும்? மகான்கள் கடற் கரையில் நின்றபடியே காட்சி இன்பம் அனுபவிக்கிறர்கள். சம்சாரத்தில் தொடர்பற்று வாழும் அந்த மகான்களின் வாழ்க்கை முறையை நாமும் நம் வாழ்வில் புகுத்தாத பொழுது நமக்கு இன்பம் ஏற்படாது. ஆகையால் தாமரை இலைத் தண்ணீரைப்போல் தொடர்பின்றி வாழ்வாய்.

புத்தர், "மகான்கள் மலை உச்சியில் நின்று கொண்டு கீழே உள்ள உலகைப் பார்ப்பதால் அவர்களுக்கு உலகம் இழிந்ததாய்த் தோன்றுகிறது" என்று சொல்லியிருக்கிறார். நீங்களும் மேலே ஏறி நின்று பார்ப்பீர்களானால் இந்த உலகப் பரப்பு மிகச் சிறியதாகவே தோன்றும். பிறகு உலக வாழ்வில் மனமே செல்லாது.

கருத்தென்னவென்றால், பகவான் இந்த அத்தியாயத்தில் அசுரசம்பத்தை அகற்றிவிட்டு தேவ சம்பத்தைப் பெறுமாறு வற்புறுத்திக் கூறியிருக்கிறார். வாரீர், நாம் எல்லாம் அதற்காக முயலுவோம்.

ஞாயிறு, 5–6–'32.

## பதினேழாம் அத்தியாயம்

# அநுபந்தம் 2—சாதகனின் வேலைத் திட்டம்

*

## (94) முறையான விவகாரங்களினால் போக்கு சுலபமாகிறது

அன்பார்ந்த சகோதரர்களே, நாம் மெள்ள மெள்ள எல்லையை நெருங்கிக் கொண்டிருக்கிறோம். பதினைந்தாம் அத்தியாயத்தில் நாம் வாழ்க்கையின் சம்பூர்ண சாஸ் திரத்தைப் பார்த்தோம். பதினாறும் அத்தியாயத்தில் ஒரு அநுபந்தத்தைக் கண்டோம். மனிதனுடைய மனதிலும் அவன் மனதின் பிரதிபிம்பம் அல்லது நிழலைப்போன்ற சமூகத்திலும் இரண்டு போக்குகள், இரண்டு கலாசாரங்கள் அல்லது சம்பத்துகளினிடையே போர் நடந்து கொண்டிருக் கிறது. இவற்றுள் நாம் தெய்வ சம்பத்தை வளர்க்க வேண்டுமென்ற படிப்பினை பதினாறும் அத்தியாயமென்ற அனுபந்தத்தில் நமக்குக் கிடைத்திருக்கிறது. இன்று பதினேழாம் அத்தியாயத்தில் இரண்டாவது அநுபந்தத் தைப் பார்க்க வேண்டும். ஒரு வகையில் பார்க்கும்பொழுது இதில் காரியக்ரமயோகம் அல்லது வேலைமுறை யோகம் சொல்லப்பட்டிருக்கிறது எனலாம். கீதை இந்த அத்தி யாயத்தில் தினசரியையை விளக்கிக் கூறுகிறது. இன்றைய அத்தியாயத்தில் நாம் நித்தியகர்மங்களைப் பற்றி ஆராய வேண்டும்.

நம் போக்கு தடையற்றதாய், மகிழ்ச்சி பொருந்திய தாய் இருக்க வேண்டுமென்றால் நாம் நம் காரியங்களை முறைப்படுத்தி, ஒழுங்கு செய்து கொள்ள வேண்டும். நமது அன்றாட வேலைகள் ஏதேனுமொரு அடிப்படையைக் கொண்டதாய் அமைய வேண்டும். நம் வாழ்க்கை அந்த அடிப்படையில் நிச்சயமான, ஒழுங்கான முறையில் நடந்து கொண்டிருக்கும் பொழுதுதான் நம் மனம் தடை யற்று சுதந்திரமாய் இருக்க இயலும். ஆறு தன் இஷ்டம் போல் ஓடுகிறது; ஆனால் அதன் வெள்ளம் இரு கரை களுள் அடங்கியிருக்கிறது. அந்தக் கரைகள் இல்லையேல்

அதன் சுதந்திரப் போக்கு பாழாய் விடும். ஞானிகளை உதாரணமாய்க் கண்முன் நிறுத்திக் கொள்ளுங்கள். சூரியன் ஞானிகளுக்கெல்லாம் ஆசிரியன். பகவான் முதன் முதலில் கர்ம யோகத்தை சூரியனுக்கு போதித்தார். பிறகு அது சூரியனிடமிருந்து மனுவுக்கு, அதாவது சிந்தனை சக்தி பெற்றுள்ள மனிதனுக்குக் கிடைத்தது. சூரியன் சுதந்திரமானவன், கட்டற்றவன், முறை தவருதவன். இந்த முறை தவருமையிலேயே அவனுடைய சுதந்திரத்தின் சாரம் அடங்கியுள்ளது. நாம் ஒரு நிச்சயமான பாதையில் உலாவப் போகும் பழக்கம் செய்து கொண்டோமானல் பாதையில் கவனம் செலுத்தாமலே மனதை வேறு விஷயங்களில் செலுத்திக் கொண்டு சுற்றிவர முடியும் என்பது நாம் அனுபவத்தில் காணும் விஷயம். நாம் ஒவ்வொரு நாளும் புதிய வழியில் உலாவப் போவோமாயின் நம் கவனம் முழுவதையும் அந்தப் பாதையிலேயே செலுத்த வேண்டியிருக்குமாகையால் மனம் விடுபடுவதற்கியலாது. கருத்தென்ன வென்றல், வாழ்க்கை பாரமாய்த் தோன்ருது இன்பமயமாய் இருப்பதற்காக நாம் நம் காரியங்களை வரையறைப்படுத்தி ஒழுங்கு செய்துகொள்ள வேண்டும்.

ஆகையால் பகவான் இந்த அத்தியாயத்தில் வேலை முறையை எடுத்துக் கூறுகிருர். நாம் பிறந்தவுடனே மூன்று ஸ்தாபனங்களை உடன் கொண்டு வருகிறோம். மனிதன் இம்மூன்று ஸ்தாபனங்களின் காரியங்களையும் நன்கு நடத்தித் தன் வாழ்க்கையை, தன் உலகை இன்பமயமாக்கும் பொருட்டு கீதை இந்த வேலை முறையை வகுக்கிறது. அந்த மூன்று ஸ்தாபனங்கள் யாவை? முதல் ஸ்தாபனம் நம்மீது சுற்றப்பட்டுள்ள இந்த உடலே. இரண்டாவது நம்மைச் சுற்றிலும் வியாபித்துள்ள விசாலமான, எல்லையற்ற எந்த சிருஷ்டியின் பிரும்மாண்டத்தின் ஒரு பகுதியாய் நாம் இருக்கிறோமோ அது. நாம் பிறந்துள்ள சமூகமும் நம் பிறவியை எதிர்நோக்கியுள்ள பெற்றோர், சகோதர சகோதரிகள், அக்கம் பக்கத்தவர் ஆகியோர் மூன்ருவது ஸ்தாபனமாகும். நாம் ஒவ்வொரு நாளும் இம்மூன்று ஸ்தாபனங்களையும் உபயோகிக்கிறோம், தேய்க்கிறோம். நம் மூலமாக இம்மூன்று ஸ்தாபனங்களுக்கும் அன்ருடம் ஏற்படும் தேய்மானத்தை ஈடு செய்வதற்கு இடையருது முயன்று வாழ்க்கையைப் பயன்பெறச்

செய்யவேண்டுமென கீதை விரும்புகிறது. இம்மூன்று ஸ்தாபனங்களிடமும் நமக்குப் பிறவியிலேயே ஏற்பட்டுள்ள கடமைகளை நாம் அகங்காரமற்று நிறைவேற்ற வேண்டும்.

இந்தக் கடமைகளை நிறைவேற்றவேண்டியதுதான்; ஆனால் இவற்றை நிறைவேற்றும் முறை யாது? யக்ஞம், தானம், தவம் என்ற இம்மூன்றின் சேர்க்கையினால் அம்முறை அமைகிறது. இந்தச் சொற்கள் நமக்குத் தெரிந்திருப்பினும் நாம் இவற்றின் பொருளை நன்கு புரிந்து கொண்டிருக்கவில்லை. இவைகளின் பொருளைப் புரிந்து கொண்டு, இவற்றை வாழ்க்கையில் சேர்த்துக் கொள்வோமானால் இந்த ஸ்தாபனங்கள் பயன்பெற நம் வாழ்க்கையும் சுதந்திரமும், சுகமும் பெற்றுத் திகழும்.

## (95) அதன் பொருட்டு மூவகைக் கிரியாயோகம்

இந்தப் பொருளைப் புரிந்து கொள்வதற்காக நாம் முதலில் யக்ஞமென்றால் என்ன என்று பாப்போம். சிருஷ்டி என்ற ஸ்தாபனத்தை நாம் ஒவ்வொரு நாளும் பயன் படுத்துகிறோம். நூறு பேர் ஒரு இடத்தில் ஒருநாள் சேர்ந்திருப்பார்களானால் சிருஷ்டியின் அந்தப் பகுதி அனைத்தும் கெட்டுப் போகிறது. அவ்விடத்திய காற்றைக் கெடுத்து இடத்தை ஆபாசம் செய்து விடுகிறோம். நாம் உணவு கொள்ளுவதன் மூலமாய் சிருஷ்டியை அந்த அளவுக்குத் தேய்த்து விடுகிறோம். சிருஷ்டி-ஸ்தாபனத்தின் இந்தத் தேய்மானத்தை நாம் ஈடுசெய்ய வேண்டும். இதனாலேயே யக்ஞ மென்ற ஸ்தாபனம் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. யக்ஞத்தின் நோக்கமென்ன? சிருஷ்டிக்கு ஏற்படும் நஷ்டத்தை ஈடுசெய்வதே. ஆயிரக்கணக்கான வருஷங்களாய் நாம் நிலத்தை உழுதுகொண்டே வருகிறோம். அதனால் நிலத்தின் சக்தி குறைந்து கொண்டே வருகிறது. யக்ஞம், "பூமிக்கு அதன் சக்தியைத் திருப்பிக் கொடுத்துவிடு. பூமியை உழு. அது வெயில் காயட்டும். அதற்கு உரமிடு" என்று சொல்லுகிறது. தேய்மானத்தை ஈடு செய்தல் என்பது யக்ஞத்திற்கு ஒரு காரணமாக, மற்றொரு காரணம் உபயோகிக்கப்படும் பொருள்களை சுத்தமாக்குதல்; நாம் கிணற்றை உபயோகிக்கிறோம். அதனால் அக்கம் பக்கமெல்லாம் அசுத்த

மாகிறது. நீர் தேங்கி விடுகிறது. கிணற்றின் அருகாமையிலுள்ள சிருஷ்டியின் பகுதி இவ்வாறு கெட்டுப் போனதைத் துப்புரவாக்க வேண்டும். அங்குள்ள அழுக்கு நீரையும் சகதியையும் அகற்றவேண்டும். தேய்மானத்தை ஈடு செய்தல், அழுக்கை அகற்றல் ஆகியவற்றுடன் அங்கே சிறிது நேரிடையான நிர்மாண வேலையும் செய்ய வேண்டும். இந்த மூன்ருவது விஷயமும் யக்ஞத்துள் அடங்கும். நாம் ஆடை அணிந்திருக்கிருேமென்ருல், ஒவ்வொரு நாளும் நூல் நூற்றுப் புதிதாய் நிர்மாணம் செய்யவும் வேண்டும். பருத்தி பயிர் செய்தல், தானியம் விளைத்தல், நூல் நூற்றல் ஆகியவையும் யக்ஞ காரியங்களே. யக்ஞத்தில் நாம் உற்பத்தி செய்பவை அனைத்தையும் சுய நலத்திற்காகவன்றி நம்மால் ஏற்பட்ட நஷ்டத்தை ஈடுசெய்யும் கடமை உணர்ச்சியுடன் செய்து வரவேண்டும். இது நாம் செய்யும் பரோபகாரமல்ல. நாம் ஏற்கெனவே கடன்பட்டவர்கள்! பிறக்கும்பொழுதே நாம் தலையில் கடன் சுமையைத் தாங்கிக் கொண்டேதான் வருகிருேம். இந்தக் கடனைத் தீர்ப்பதற்காக நாம் எதை உற்பத்தி செய்ய வேண்டுமோ அது யக்ஞம் அல்லது சேவையே அன்றி பரோபகாரமல்ல. இந்த சேவையின் மூலமாய் நாம் நம் கடனைத் தீர்த்துக் கொள்ள வேண்டும். நாம் எடுத்ததற்கெல்லாம் சிருஷ்டி என்ற ஸ்தாபனத்தை உபயோகித்து வருவதால் அந்த நஷ்டத்தை ஈடுபடுத்தவும் அதைத் துப்புரவாக்கவும் புதிய பொருளை உற்பத்தி செய்யவும் நாம் யக்ஞம் இயற்றுதல் அவசியமாகும்.

இரண்டாவது ஸ்தாபனம் நமது மனித சமூகமாகும். தாய், தந்தை, குரு, நண்பர் ஆகிய இவரனைவரும் நமக்காக உழைக்கிருர்கள். சமூகத்தின் இந்தக் கடனைத் தீர்க்கும் பொருட்டு தானம் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. தானம் என்பதற்கு சமூகத்தின் கடனைத் தீர்ப்பதற்காகச் செய்யப்படும் காரியம் என்பது பொருள்; பரோபகாரம் என்பது பொருளல்ல. சமூகத்திலிருந்து நான் அளவிலடங்காத சேவையை, உதவியைப் பெற்றிருக்கிறேன். இவ்வுலகில் வந்தபொழுது பலவீனனுய் பிறர் உதவியின்றி வாழ முடியாதவனுயிருந்தேன். இந்த சமூகம் சிறியவனுயிருந்த என்னைப் பெரியவனுக்கி யிருக்கிறது. ஆகையால் நான் சமூகத்திற்கு சேவை செய்யவேண்டும். பிறரிடமிருந்து எதையும் பெருது செய்யப்படும் சேவையே

பரோபகாரம் என்பது. ஆனால் இங்கோ நாம் சமூகத்தி லிருந்து ஏராளமாய்ப் பெற்றுக்கொண்டு விட்டோம். சமூகத்தினிடம் நாம் பட்டுள்ள இந்தக் கடனிலிருந்து விடு படும் பொருட்டு செய்யப்படும் சேவையே தானம் எனப் படுவது. மனித சமூகம் முன்னேறுவதற்கு உதவுவதே தானம். சிருஷ்டியின் தேய்மானத்தை ஈடு செய்வதற்கென செய்யப்படும் உழைப்பு யக்ஞமாக, சமூகத்தின் கடனைத் தீர்க்கும் பொருட்டு உடல், மனம், பொருள் ஆகியவற்றினு லும் பிற சாதனங்களாலும் செய்யப்படும் உதவி தான மாகிறது.

இதைத்தவிர மூன்ருவது ஸ்தாபனமொன்றிருக்கிறது. அதுவே உடல். உடலும் ஒவ்வொரு நாளும் தேய்ந்து கொண்டே போகிறது. நாம் நமது மனம், அறிவு, புலன் கள் ஆகிய அனைத்தையும் பயன்படுத்துகிறோம்; இவற் றைத் தேய்க்கிறோம். இந்த உடலென்ற ஸ்தாபனத்தில் தோன்றும் விகாரங்கள், குற்றங்கள் ஆகியவற்றைப் போக்கித் துடைப்பதற்கென தவம் கூறப்பட்டுள்ளது.

இவ்வாறு சிருஷ்டி, சமூகம், உடல் என்ற இம்மூன்று ஸ்தானங்களின் வேலைகளும் சரிவர நடந்து வருமாறு காரி யங்களைச் செய்தல் நம் கடமையாகும். நாம் எத்தனையோ ஸ்தாபனங்கள் நல்லவையாயும் தீயவையாயும் அமைக் கிறோம். ஆனால் இம்மூன்று ஸ்தாபனங்களும் நாம் அமைத்தவையல்ல. இவை தாமாகவே, இயற்கையிலேயே நமக்குக் கிடைத்திருக்கின்றன. இவை எவராலும் புனையப் பட்டவையல்ல. ஆகையால் இம்மூன்று ஸ்தாபனங்களுக் கும் ஏற்படும் நஷ்டத்தை யக்ஞம், தானம், தவம் என்ற சாதனங்களின் மூலமாய் ஈடு செய்தல் நமக்கு இயற்கை யாகவே ஏற்பட்டுள்ள தர்மமாகிறது. நாம் இவ்வாறு நடந்து வருவோமானால் நம்மிடமுள்ள சக்தி அனைத்தும் இதில் ஈடுபட்டுவிடும்; பிற விஷயங்களில் செலவிட நம்மிடம் சக்தியே எஞ்சியிராது. சிருஷ்டி, சமூகம், உடல் என்ற மூன்று ஸ்தாபனங்களையும் தகுந்த நிலையில் வைத் திருக்கும் பொருட்டு நாம் நம் சக்தி யனைத்தையும் செல விட வேண்டியிருக்கும். கபீரைப் போலவே நாமும், "ஏ பிரபுவே! நீ எனக்கு எந்தப் போர்வையை அளித் தாயோ அதையே நான் திரும்பக் கொடுக்கிறேன்; நன்ருய்ப் பிரித்துப் பார்த்துக்கொள்!" என்று சொல்ல

முடியுமானால் அது எவ்வளவு பெரிய வெற்றியாயிருக்கும்! ஆனால் இத்தகைய வெற்றி பெறுவதற்கு நாம் யக்ஞம், தானம், தவமென்ற மூவகை வேலைத்திட்டத்தை அனுஷ்டானத்தில் கொணர்ந்து நிறைவேற்றியாக வேண்டும்.

யக்ஞம், தானம், தவம் ஆகியவற்றை நாம் இங்கே வெவ்வேறென்று கொண்டிருக்கிறோம். ஆனால் உண்மையில் இவற்றினிடையே வேற்றுமையில்லை. ஏனெனில் சிருஷ்டி, சமூகம், உடல் என்ற இவை முற்றிலும் தனித் தனியான ஸ்தாபனங்களே அல்ல. இந்த சமூகம் சிருஷ்டிக்கு வெளியேயுள்ளதல்ல; இவ்வுடலும் சிருஷ்டிக்குப் புறம்பேயிருப்பதல்ல. இவை மூன்றும் சேர்ந்து அழகிய சிருஷ்டி ஸ்தாபனம் அமைகிறது. ஆகையால் நாம் செய்யும் உற்பத்திக்கான உழைப்பையும் தானத்தையும், தவத்தையும் பரந்த பொருளில் யக்ஞமென்றே அழைக்கலாம். கீதை நான்காம் அத்தியாயத்தில் 'திரவிய யக்ஞம்' 'தவ யக்ஞம்' முதலிய யக்ஞங்களைக் கூறியிருக்கிறது. கீதை யக்ஞத்தின் பொருளை விசாலமாக்கி விட்டது.

இம்மூன்று ஸ்தாபனங்களுக்காகவும் நாம் செய்யும் சேவைக் காரியங்கள் யக்ஞமாகவே அமையும். அந்த சேவையை பயன் கருதாது செய்தல் மட்டும் அவசியம்; அதில் நாம் பயனை எதிர்பார்க்கவே கூடாது. ஏனெனில் பயனை நாம் முன்னமேயே பெற்றுக்கொண்டாகி விட்டது; கடன் சுமை நம் தலைமீது முன்னமேயே இருந்துவருகிறது; நாம் ஏற்கெனவே வாங்கியுள்ளதையே இப்பொழுது திரும்பத் தரவேண்டும். யக்ஞத்தின் மூலமாக சிருஷ்டி ஸ்தாபனத்தில் சமநிலை ஏற்படுகிறது. தானத்தினால் சமூகத்தில் சமநிலை ஏற்பட, தவத்தினால் உடல் சமநிலையை எய்துகிறது. இவ்வாறு மூன்று ஸ்தாபனங்களிலும் சமநிலையைத் தோற்றுவிப்பதற்கு ஏற்பட்ட வேலைத்திட்டமாகும் இது. இதனால் சுத்தி ஏற்படும், கெட்ட எண்ணம் அழிந்து போகும்.

இவ்வாறு செய்யவேண்டிய சேவையின் பொருட்டு சிறிது போகமும் பெறவேண்டியிருக்கும். போகமும் யக்ஞத்தின் ஒரு பகுதியே. இந்த போகத்தை கீதை உணவு என்கிறது. உடலென்ற இந்த எந்திரத்திற்கு உணவு என்ற நிலக்கரி அளித்தல் அவசியமாகும். இந்த உணவே யக்ஞமாகாது எனினும் யக்ஞத்தில் இது ஒரு அங்கம்

அல்லது பகுதி என்பதில் சந்தேகமில்லை. இதனாலேயே, "வயிற்றுப்பாடல்ல; இது யக்ஞ கர்மமாகும்" என்று நாம் சொல்லுகிறோம். தோட்டத்திலிருந்து பூவைக் கொணர்ந்து தேவதையின் தலையில் இடுதல் பூஜையாகும். ஆனால் புஷ்பத்தை உண்டாக்குவதற்காகத் தோட்டத்தில் படும் பாடும் பூஜையே. யக்ஞத்தை நிறைவேற்றுவதற் காகச் செய்யப்படும் காரியம் ஒரு வகைப் பூஜையே. நாம் உடலுக்கு உணவு அளித்தால்தான் அது நம் வேலைக்கு உதவும். யக்ஞத்திற்குச் சாதனமாயுள்ள கர்மமும் யக் ஞமே. கீதை இந்த கர்மங்களை 'அதற்கான கர்மங்கள்' 'யக்ஞ கர்மங்கள்' என்று அழைக்கிறது. சேவைக்குத வும் உடல் நிலைத்திருக்கும் பொருட்டு நான் இவ்வுடலில் இடும் ஆகுதி யக்ஞமே. சேவையின் பொருட்டு ஏற்கப் படும் உணவு புனிதமானது.

இந்த எல்லா விஷயங்களின் அடிப்படையிலும் மீண் டும் சிரத்தை தேவையாகிறது. எல்லா சேவைகளையும் ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்யும் பாவம் மனதி லிருக்க வேண்டும். இது மிகவும் முக்கியமான விஷயம். சேவையுணர்ச்சியில்லையேல் ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்யும் அறிவு தோன்றாது. முக்கிய விஷயமான ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்வதை மறப்பதால் பய னெதுவும் ஏற்படாது.

## (96) சாதனையை ஸாத்விகமாக்கல்

ஆனால் நாம் நம் காரியங்கள் அனைத்தையும் ஆண்ட வனுக்கு எப்பொழுது அர்ப்பணம் செய்ய இயலும்? அவை ஸாத்விகமாகும்பொழுதே நாம் அவைகளை ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்ய முடியும். யக்ஞம், தானம், தவம் ஆகிய எல்லாம் ஸாத்விக மாகவேண்டும். காரியங்களை ஸாத்விகமாக்குவ தெப்படி என்ற தத்துவத்தை நாம் பதி னான்காம் அத்தியாயத்தில் பார்த்துவிட்டோம். இந்த அத்தியாயத்தில் அத்தத்துவத்தின் விநியோகத்தை கீதை விளக்குகிறது.

ஸாத்விகம் பற்றிய இவ்வேற்பாட்டைச் செய்வதில் கீதை இரு நோக்கங்களைக் கொண்டுளது. புறத்தே யக்ஞம், தானம், தவமென்ற எந்த சேவையை நான் செய்து கொண்டிருக்கிறேனோ அதற்கே அகத்தில் ஆத்யாத்

மிக சாதனமென்ற பெயர் அளிக்கப்படலாம். சிருஷ்டியின் சேவை, சாதனை என்ற இவை வெவ்வேறு வேலைத்திட்டங்களாக வேண்டாம். சேவை, சாதனையென்ற இவை இரண்டும் வெவ்வேறானவையே அல்ல. இரண்டின் பொருட்டும் முயற்சி ஒன்றே, காரியம் ஒன்றே. இவ்வாறு செய்யப்படும் காரியத்தையும் இறுதியில் ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்துவிடவேண்டியது. சமூகசேவை, பெருத்த சாதனை, ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்யும் மனப்போக்கு என்ற இவற்றின் சேர்க்கை ஒரே காரியத்திலிருந்து கைகூட வேண்டும்.

யக்ஞத்தை ஸாத்விகமாக்குவதற்கு இரண்டு விஷயங்கள் தேவை. பயனில செய்யாமை, பயன் கருதாமை என்ற இவ்விரண்டும் யக்ஞத்தில் அமைந்திருக்க வேண்டும். யக்ஞத்தில் பயன் எதிர்பார்க்கப்படுமானால் அது ராஜஸ யக்ஞமும் பயனற்றதாயிருப்பின் தாமச யக்ஞமும் ஆய்விடும்.

நூல் நூற்றல் என்பது ஒரு யக்ஞம். ஆனால் நூல் நூற்கும்பொழுது நாம் நம் ஆன்மாவை அதில் கலக்காவிட்டால் நம் சித்தம் ஏகாக்ரமாகாதாகையால் இந்த சூத்ர யக்ஞம் ஜீவனற்றதாய்விடும். புறத்தே கை வேலை செய்துகொண்டிருக்கையில் அகத்தில் மனம் அதில் இணையாவிட்டால் செய்யப்படும் அந்தக் காரியமனைத்தும் முறை தவறிவிடும். முறை தவறிய கர்மங்கள் ஜீவனற்றுப் போகின்றன. முறை தவறிய கர்மத்தில் தமோ குணம் சேர்ந்துவிடுகிறது; அந்தக் காரியத்தினால் சிறந்த பொருளை உருவாக்க முடியாது. அதிலிருந்து நற்பயன் விளையாது. யக்ஞத்தில் பயனெதுவும் கோரப்படாதிருக்கும்பொழுதும் அதிலிருந்து சிறந்த பயன் ஏற்பட வேண்டும். கர்மத்தை மனதுடனும், அந்தக் கரணத்துடனும் இயற்றுவிடில் அது ஒரு சுமையாகவே இருக்கும். அப்பொழுது அதிலிருந்து சிறந்த பயன் விளைவதேது? புறத்தே காரியம் கெட்டுவிட்டதென்றால் அகத்தே மனதின் இணைப்பில்லையென்பது நிச்சயம். ஆகையால் கர்மத்தில் ஆன்மாவைச் செலுத்து; அகத்திணைப்பை ஏற்படுத்து. சிருஷ்டி என்ற ஸ்தாபனத்தின் கடனைத் தீர்க்கும்பொருட்டு நாம் சிறந்த பயன்களை உண்டாக்க வேண்டும். காரியங்கள் பயனற்றுப் போகாதிருக்க, அகத்திணைப்பென்ற முறையுடன் பொருந்துதல் இன்றியமையாததாகும்.

இவ்வாறு நம்முள் பயன் கருதாமை இடம்பெற்று முறைப்படி பயனுள்ள காரியம் நடக்கும்பொழுதுதான் நமக்கு சித்த சுத்தி ஏற்படத் தொடங்கும். அப்படியானால் சித்த சுத்திக்கு உரைகல் யாது? புறத்தே நடைபெறும் காரியத்தைச் சோதித்துப் பார்த்துக்கொள். அது நிர்மல மாய், அழகாய் இல்லையெனின் சித்தத்தில் கறை படிந் திருக்கிறதென்று அறிவதில் தவறில்லை. கர்மத்தில் அழகு தோன்றுவது எப்பொழுது? சுத்த சித்தத்துடன் உழைத் துச் செய்யப்படும் வேலையின்மீது ஆண்டவன் தன் திருப்தியின், மகிழ்ச்சியின் முத்திரையை இடுகிறான்; மகிழ்ச்சிகொண்ட ஆண்டவன் கர்மத்தின் முதுகில் அன் புடன் தட்டிக்கொடுக்கும்பொழுது அங்கே அழகு தோன்று கிறது. அழகு என்பதற்கு புனிதமான உழைப்புக்குக் கிடைத்துள்ள ஆண்டவனின் அருளென்றே பொருள். சிற்பி ஒருவன் விக்கிரகத்தைச் செதுக்கும்பொழுது அதிலேயே ஆழ்ந்துபோய்விடுவதால் அவனுக்கு அந்த அழகிய விக்கிரகம் தன் கையினால் உருவானதாகவே தோன்றுவதில்லை. விக்கிரகத்தை உருவாக்கி முடிக்கும் தருணத்தில் அதில் எப்படியோ அழகு வந்து அமைந்துவிடு கிறது. சித்த சுத்தியில்லையேல் அந்தத் தெய்வீகக்கலை வெளியாகக் கூடுமா? மூர்த்தியிலுள்ள கவர்ச்சி, இனிமையெல்லாம் அந்தச் சிற்பியினுடைய அந்தக்கரணத் தின் அழகனைத்தையும் அதில் புகுத்தியதன் விளைவே. மூர்த்தி என்பதற்கு நம் சித்தத்தின் உருவம் என்பதே பொருள்; நமது காரியங்களனைத்தும் நம் மனதின் உருவங்களே. நம் மனம் அழகாயிருப்பின் நம் கர்மமய மான உருவமும் அழகாகவே அமையும். புறக் காரியங் களின் தூய்மையை மனத்தூய்மையினாலும், மனத்தூய் மையை புறக்காரியங்களினாலும் சோதித்துக் கொள்ள வேண்டும்.

இன்னும் ஒரு விஷயம் சொல்லவேண்டியது பாக்கி யிருக்கிறது. அதாவது, இந்த எல்லாக் கர்மங்களிலுமே மந்திரமும் தேவையாகும். மந்திரம் இல்லாத கர்மம் வீண். நூல் நூற்கும்பொழுது நான் இந்த நூலின் மூலமாய் எளிய மக்களுடன் இணைக்கப்படுகிறேனென்ற மந்திரத்தை உள்ளத்தில் கொள்வாயாக. இந்த மந்திரம் உள்ளத்தில் இல்லையானால் மணிக் கணக்காகச் காரியம் செய்தபோதிலும் அதெல்லாம் வீணாகும். அந்தக் காரியத்

திஞல் சித்த சுத்தி ஏற்படாது. பஞ்சுப் பட்டையிலிருந்து அவ்யக்தமான பரம்பொருள் நூலினுருவில் வெளியாகிக் கொண்டிருக்கிறது என்ற மந்திரத்தை அந்தக் காரியத்தில் சேர்த்துக்கொண்டு பிறகு அதைப் பார். அந்தக் காரியம் வெகு நேர்த்தியாய் ஸாத்விகமானதாய்விடும். அந்தக் காரியமே வழிபாடும் யக்ஞமயமான சேவையும் ஆய் விடும். அந்தச் சிறிய நூலிழையின் மூலமாய் நாம் சமூகத்துடனும் மக்களுடனும் கடவுளுடனும் பிணைக்கப்படுவோம். பாலகிருஷ்ணனுடைய சிறிய வாயில் யசோதைத் தாய்க்கு அகில சிருஷ்டியும் தென்பட்டது. மந்திரமயமான அந்த தன் நூலிலும் உனக்குப் பரந்த உலகம் தென் படத் தொடங்கும்.

## (97) ஆஹார சுத்தி

இத்தகைய சேவைக்கு ஆஹார சுத்தியும் (தூய உணவும்) அவசியமாகும். உணவு எப்படியோ அப்படியே தான் மனமும். உணவு ஒரு அளவுக்கு, வரம்புக்குள் அடங்கியதாயிருக்கவேண்டும். எத்தகைய உணவா யிருக்கவேண்டும் என்பதைவிட அது எவ்வளவு இருக்கலாம் என்பது அதிக முக்கியமான விஷயமாகும். எதனைச் சாப்பிடலாமென்று உணவுப் பொருள்களைத் தேர்ந்து தீர்மானித்தல் முக்கியமில்லை என்பதல்ல; ஆனல் நாம் கொள்ளும் உணவு சரியான அளவிலிருக்கிறதா இல்லையா என்பது அதைவிட முக்கியமானது. நாம் உட்கொள்ளும் எதற்கும் அததற்குரிய விளைவு ஏற்படவே செய்யும். நாம் உணவருந்துவது எதற்காக? சிறந்த சேவை செய்வதற் காக. உணவும் யக்ஞத்தின் ஒரு அங்கமே, பகுதியே. சேவை என்ற யக்ஞத்தை, ஊழியம் என்ற வேள்வியைப் பயனுள்ளதாக்குவதற்கு உணவு தேவையாகிறது. இந்த பாவனையுடன் உணவை நோக்கு. உணவு சுத்தமாய், துப்புரவாயிருக்கவேண்டும். மனிதன் தன் வாழ்க்கையில் தன் உணவை எந்த அளவுக்கு சுத்தமாக்கிக்கொள்ள முடியும் என்பதற்கு வரம்பெதுவும் கிடையாது. நம் சமுதாயம் உணவுத் தூய்மைக்காக எவ்வளவோ தவம் இயற்றியிருக்கிறது. ஆஹாரசுத்தியின் பொருட்டு இந்தியாவில் பெருத்த சோதனைகள் நடைபெற்றுள்ளன. அந்த சோதனைகளில் ஆயிரக்கணக்கான வருஷங்கள் கழிந்

துள்ளன. அவைகளில் எவ்வளவு தவம் செலவாயிருக்கிறது என்று சொல்லவே முடியாது. இந்த பூமண்டலத்தில் பல சமூகங்கள் புலாலை மறுத்து சைவ உணவை ஏற்றிருப்பது இந்த இந்திய நாடு ஒன்றில்தான். புலாலுண்ணும் ஜாதிகளும் அதை தம் உணவின் முக்கியப் பகுதியாய்க் கருதாது தாம் ஏதோ செய்யக்கூடாத தொன்றைச் செய்வதாகவே எண்ணுகின்றனர். அவைகளும் தம் மனதினால் புலாலைத் துறந்துவிட்டவைகளே. புலாலுண்பதைத் தடுக்கும்பொருட்டு யக்ஞம் அனுஷ்டிக்கப்பட்டு அதன் பொருட்டே அது நிறுத்தப்பட்டும்போயிற்று. கிருஷ்ணபகவானே யக்ஞமென்பதன் பொருளையே மாற்றிவிட்டார். ஸ்ரீகிருஷ்ணர் பாலின் மகிமையைப் பெருக்கினார். ஸ்ரீகிருஷ்ணர் செய்துள்ள அசாதாரணமான காரியங்களுக்கு, லீலைகளுக்குக் குறைவில்லை. ஆனால் இந்து மக்கள் எந்தக் கிருஷ்ணரிடம் பித்துப் பிடித்து அலைகிறார்கள்? இந்துக்கள் 'கோபாலகிருஷ்ணா! கோபாலகிருஷ்ணா!' என்றே சொல்லித் திரிகிறார்கள். அந்தப் பெயரே அவர்களுக்கிஷ்டமானது. எவனிடம் பசுக்கள் படுத்திருக்கின்றனவோ, எவன் உதடுகளில் குழல் வீற்றிருக்கிறதோ அந்த மாடுமேய்க்கும் கோபாலகிருஷ்ணனையே சிறு குழந்தை முதல் முதியோர் வரை அனைவரும் அறிவர். இவ்வாறு புலால் உணவை நிறுத்தியதனால் கோரக்ஷை அல்லது பசுப் பராமரிப்பு என்ற பெரிய பயன் ஏற்பட்டது. பசும்பாலின் சிறப்போங்க புலாலுண்பது குறைந்தது.

ஆயினும் பூர்ண ஆஹாரசுத்தி ஏற்பட்டுவிட்டது என்பதற்கில்லை. இப்பொழுது நாம் அம்முயற்சியை மேலே தொடர்ந்து செய்து கொண்டு போகவேண்டும். வங்காளிகள் மச்சம் உண்பதைப் பார்த்து எவ்வளவு பேருக்கு ஆச்சரியமாயிருக்கிறது? ஆனால் இதற்காக அவர்களை நாம் கண்டிப்பது சரியாகாது. வங்காளத்தில் அரிசி மட்டுமே கிடைக்கிறது. அதனால் உடலுக்குத் தேவையான போஷணை ஏற்படுவதற்கில்லை. இதன்பொருட்டு சோதனைகள் செய்தாகவேண்டும். பிறகு மீனுக்கு பதிலாக வேறு எந்தக் கறிகாய் இலையைச் சாப்பிட்டால் போதிய புஷ்டி ஏற்படுமென்று மக்கள் சிந்திக்கத் தொடங்குவார்கள். இதன் பொருட்டு அசாதாரணமான தியாகிகள் பிறப்பார்கள். அவர்கள் மூலம் இந்தச் சோதனைகள் நடைபெறும்.

இத்தகையோர் சமூகத்தை முன்னுக்குக் கொண்டுவரக் கூடியவர். சூரியன் எரித்துக்கொண்டேயிருப்பதால் உயிர் வாழ்வதற்குத் தேவையான 98° உஷ்ணம் நம் உடலுக்கு வருகிறது. சமூகத்தில் வைராக்கியத் தீப் பிழம்புகளான சூரியர்கள் தோன்றி சூழ்நிலையையும் கட்டுகளையும் அறுத் தெறிந்து சிறகில்லாமலே தம் லட்சிய வானில் எழும் பிப் பறக்கத்தொடங்கும் பொழுதே உலகிற்கு உபயோக மான அல்ப சொல்ப வைராக்கியம் நமக்கு ஏற்படுகிறது. புலாலுணவை ஒழிப்பதற்கு ரிஷிகளுக்கு எவ்வளவு தவம் இயற்றவேண்டியதாயிற்றோ, எவ்வளவு பேருக்கு தம் உயி ரையே பலியிட வேண்டியதாயிற்றோ என்ற இத்தகைய எண்ணங்கள் இம்மாதிரியான சந்தர்ப்பங்களில் என் மனதிலெழுகின்றன.

கருத்தென்னவென்றால், இன்று நம் சமூகத்தில் இந்த அளவுக்கு ஆஹார சுத்தி ஏற்பட்டிருக்கிறது. அளவிலடங் காத தியாகம் செய்து நம் முன்னோர்கள் சேமித்துள்ள இந்த சொத்தை நீ இழந்துவிடாதே. இந்தியக் கலாசாரத் தின் இந்தச் சிறப்பியல்பை அழிக்காதே. நாம் எப்படி யேனும் உயிர்வாழ்ந்தால் போதுமென்று எண்ணலாகாது. எப்படியேனும் உயிர்வாழ்தல் என்பது வெகு சுலபம். மிருகங்களும் எப்படியோ உயிர்வாழத்தான் செய்கின்றன. மிருகங்களைப் போல்தானா நாம்? மிருகங்களுக்கும் நமக் கும் வேற்றுமையுண்டு. அந்த வேற்றுமையை வளர்ப் பதையே கலாசார வளர்ச்சி என்பது. நம் நாடு புலால் மறுத்தல் என்ற விஷயத்தில் மிகப் பெரிய சோதனை நடத்தியுள்ளது. அதைத் தொடர்ந்து நடத்துங்கள். குறைந்தது நாம் இதுவரையில் வந்து சேர்ந்துள்ள இடத்தி லிருந்து பின்வாங்காமலாவது இருக்கும்படி பார்த்துக் கொள்வோம்.

இதைக் குறிப்பிடுவதற்குக் காரணம், தற்காலத்தில் எத்தனையோ பேர்களுக்கு புலால் உணவில் பற்று ஏற்படத் தொடங்கியிருப்பதே. இன்று கீழ்நாட்டு நாகரிகமும் மேல் நாட்டு நாகரிகமும் ஒன்றையொன்று மாற்றிவருகின்றன. இதனால் இறுதியில் நல்ல விளைவு ஏற்படும் என்பது என் நம்பிக்கை. மேலை நாட்டுக் கலாசாரத்தினால் நம் குருட்டு நம்பிக்கைகள் ஆட்டங்கொடுத்திருக்கின்றன. குருட்டு நம்பிக்கைகள் ஆட்டங் கொடுப்பதனால் நஷ்டமொன்று

மில்லை. நல்ல அம்சங்கள் நிலைக்கத் தீயவை எரிந்துபோம். ஆனால் குருட்டு நம்பிக்கை போனபிறகு அது இருந்த இடத்தில் குருட்டு அவநம்பிக்கை முளைத்துவிடலாகாது! நம்பிக்கை மட்டுமே குருடு என்ற அடைமொழிக்கு ஒப்பந்தம் செய்துள்ளது என்பதில்லை; அவநம்பிக்கையும் குருட்டுத்தனமாயிருக்கக்கூடும்.

புலானுணவைப் பற்றி இன்று மீண்டும் சிந்தனை தொடங்கியிருக்கிறது. எதுவாயினும் சரி, புதிய கருத் தொன்று என் முன் தோன்றும்பொழுது எனக்கு எப்பொழு துமே மகிழ்ச்சி உண்டாகும். அதனால் குறைந்தது, மக்கள் விழித்துக்கொண்டிருக்கிறார்கள் என்று தெரிகிறது. கை கால்களை குழந்தை உதைத்துக்கொண்டிருக்கிறது என் றுவது தெரிகிறதல்லவா? விழிப்பின் அறிகுறிகளைக் காண எனக்கு மகிழ்ச்சி யுண்டாகிறது. ஆனால் விழித்தலும் கண்களைக் கசக்கிய படியே நடக்கத் தொடங்கிவிட்டால் எங்கேனும் இடறி விழுவாரோ என்ற சந்தேகம் ஏற்படு கிறது. ஆகையால் நன்கு விழித்துக்கொண்டு, கண்களை நன்றாய் விழித்துபார்க்க முடியாதிருக்கும் வரையில் கை கால்களை அடக்கி வைத்துக் கொள்ளலே நலம். நன்கு சிந்தியுங்கள். சாதக பாதகங்களை நேராகவும் தலை கீழாகவும் எல்லா விதத்திலும் நன்கு சிந்தியுங்கள். தர்மத்தை சிந்தனை யென்ற கத்தரி கொண்டு நேர்த்தியாய்ச் செய்யுங்கள். சிந்தனைக் கத்தரியினால் வெட்டுண்ட தர்மம் பயனற்ற தென்று அறியுங்கள். இவ்வாறு வெட்டுண்டு விழும் துண்டு களை எறிந்துவிடுங்கள். உம் கத்தரியினால் துண்டாட முடியாமல் எது கத்தரியையே ஒரு கை பார்க்கிறதோ அதுவே உண்மையான தர்மம். கருத்துகளைக் கண்டு, சிந்தனையைக் கண்டு தர்மம் அஞ்சாது. ஆகையால் சிந்தனை செய்தபோதிலும் ஒரே மூச்சில் காரியத்திலும் இறங்கிவிடாதீர்கள். அரை விழிப்பில் ஏதேனும் வேலை செய்யத் தொடங்கினால் 'தடா'லென்று கீழே விழுவீர்கள். கருத்து பெரிதும் உந்திக்கொண்டிருந்தபோதிலும் காரியத் தைத் தொடங்காது பொறுத்திருந்து வாருங்கள். தம் காரியங்களை அடக்கி வைத்துக்கொண்டிருங்கள். ஏற் கெனவே சேர்த்துள்ள புண்ணியத்தை இழந்துவிடாதீர்கள்.

## (98) முரணற்ற வாழ்க்கைக்கு கீதையின் திட்டம்

ஆஹார சுத்தியினுல் சித்தம் சுத்தமாய் இருந்துவரும்; உடலுக்குத் தென்பு ஏற்படும்; சமூகத்திற்கு நன்கு சேவை செய்ய இயலும்; சித்தத்தில் திருப்தி இருந்து வரும்; சமூகத்திலும் திருப்தி பரவும். எந்த சமூகத்தில் யக்ஞமும், தானமும் தவமும் கிரியைகளும் விதியுடனும் மந்திரத் துடனும் நடக்கின்றனவோ அதில் முரண்பாடு தோன்ருது. இரண்டு கண்ணுடிகளே ஒன்றின் முன் ஒன்ருய் வைக்கும் பொழுது இதன் நிழல் அதிலும் அதிலுள்ள நிழல் இதிலும் தோன்றுவதைப்போல தனி மனிதனிடமும் சமூகத்திலும் திருப்தி தோன்றும். என் திருப்தி சமூகத்தின் திருப்தி யாயும், சமூகத்தினுடையது என்னுடையதாயு மிருக்கும். நாம் இவ்விரு திருப்திகளேயும் சோதிக்க இயலும். அவ் வாறு சோதிக்கையில் இரண்டும் ஒன்றே யென்ற முடிவுக்கு வருவோம்; நாற்புறமும் அத்வைதத்தை உணருவோம். துவைதமும் துரோகமும் மறைந்துபோம். இத்தகைய சிறந்த ஏற்பாடு எந்தத் திட்டத்தினுல் ஏற்படக்கூடுமோ அதையே கீதை விளக்குகிறது. நாம் நம் அன்ருட வேலேத் திட்டத்தை கீதையின் முறையில் அமைத்துக்கொள்வோ மாளுல், ஆஹா! எவ்வளவு இன்பமாயிருக்கும்!

ஆளுல் இன்றோ தனி மனிதனுக்கும் சமூகத்திற்கு மிடையில் விரோதம் தலையெடுத்துள்ளது. இவ்விரோதம் எவ்வாறு நீங்குமென்றே எங்கும் பேச்சாயிருக்கிறது. தனி மனிதனின் வரம்பெது, சமூகத்தின் வரம்பெது? தனி மனிதன் முக்கியமா, சமூகம் முக்கியமா? இவை இரண் டிலும் சிறந்ததெது? தனி மனிதனுக்குச் சிறப்பளிக்க விரும்புவோர் சமூகத்தை ஜீவனற்றதாய்க் கருதுகிருர்கள். சேளுதிபதியின் எதிரில் ஒரு சிப்பாய் வரும்பொழுது மரியாதையான வார்த்தைகளே உபயோகிப்பான். அவனே 'நீங்கள்,' என்றே சொல்லுவான். ஆளுல் சேனேயையோ அவன் தன்னிஷ்டம்போல் ஏவுவான். அவன் சேனேயை ஒரு உயிரற்ற மரத்துண்டென்று கருதுகிருன் போலும்! அதை இங்கிருந்து அங்கும், அங்கிருந்து இங்குமாக அலேப்பான். தனி மனிதன் ஜீவனுள்ளவன், சமூகம் ஜடம். இதே விஷயத்தை நாம் எங்கும் பார்த்து வரு

கிறோம். என் எதிரில் இருநூறு, முன்னூறு பேர் இருக்கிறார்கள். அவர்களுக்குப் பிடிக்கிறதோ பிடிக்கவில்லையோ நான் பேசிக்கொண்டே போகிறேன். எனக்குத் தோன்றும் கருத்துகளை நான் சொல்லிக்கொண்டே போகிறேன். நீங்கள் ஜடம் என்று நான் எண்ணுவதுபோல் இது இருக்கிறதல்லவா? ஆனால் ஒரு மனிதன் என்னிடம் வருவானானால் நான் அவன் சொல்லுவதைக்கேட்கவும், அவைகளுக்கு நன்கு ஆலோசித்து விடை கூறவும் வேண்டி வரும். ஆனால் இங்கோ நான் உங்களை மணிக்கணக்காக வீணில் உட்கார வைத்திருக்கிறேன்!

"சமூகம் ஜடம், உயிரற்றது; தனி மனிதன் ஜீவனுள்ளவன்" என்று கூறி சிலர் தனி மனிதனுடைய சிறப்பை வற்புறுத்த, வேறு சிலர் சமூகத்திற்குச் சிறப்பளிக்கிறார்கள். என் ரோமங்கள் உதிர்ந்துவிட்டன, பார்வை மங்கிவிட்டது, கை முடமாய்விட்டது, பற்கள் விழுந்துவிட்டன; இது மட்டுமல்ல, ஒரு நுரையீரலும் பாழாய்விட்டது. ஆயினும் நான் உயிர் வாழ்வதற்குக் காரணம் தனித்தனியாய்ப் பார்க்கையில் ஒவ்வொரு அவயவமும் ஜடமாயிருப்பதே. இவற்றுள் ஏதேனும் ஒன்று கெடுவதனால் எல்லாம் கெட்டுப்போவதில்லை. சமூகமென்ற உடல் இயங்கிக்கொண்டே தானிருக்கிறது. இவ்வாறு ஒன்றுக்கொன்று முரணான இரண்டு கருத்துக்களாகும் இவை. நீங்கள் எந்த நோக்கத்துடன் பார்க்கிறீர்களோ அதை யொட்டி அனுமானங்கள் செய்துகொள்கிறீர்கள். அணியும் கண்ணாடியின் நிறமே சிருஷ்டியிலும் தோன்றும்.

ஒருவர் தனி மனிதனுக்குச் சிறப்பளிக்க, வேறொருவர் சமூகத்திற் களிக்கிறார். இதற்குக் காரணம், சமூகத்தில் வாழ்க்கைப் போர் என்ற ஒரு கற்பனை தோன்றியிருப்பதே. ஆனால் வாழ்க்கை போருக்காகவா ஏற்பட்டது? அப்படியானால் நாம் ஏன் இறந்து போவதில்லை. போரென்பது மரணத்தின் பொருட்டல்லவா? இது காரணமாகவே நாம் சுவார்த்தம் (சுயநலம்) பரமார்த்தம் ஆகிய இரண்டையும் வெவ்வேறாய்ப் பிரிக்கிறோம். எவன் முதன் முதலில் சுவார்த்தம், பரமார்த்தம் இரண்டிற்கும் வேற்றுமையைக் கற்பித்தானோ அவனை விசித்திரப் பிராணியென்றே சொல்ல வேண்டும். எந்தப் பொருள் உண்மையில் இல்லையோ அது

இருப்பது போன்ற ஒரு பிரமையை உண்டாக்கும் சக்தி எவனுடைய மூளையிலிருக்கிறதோ அவனை கௌரவிக்க வேண்டுமென்றே தோன்றுகிறது! இல்லாத வேற்றுமை யொன்றை உண்டாக்கி அதை ஏற்கும்படி மக்களுக்கும் போதித்துவிட்டானே! இதை நினைக்க நினைக்க வியப்புண் டாகிறது. இது சீனத்துச் சுவர் போன்றதே. வானத் திற்கு எல்லை யொன்று வகுத்து அதற்கப்பால் ஒன்றுமே இல்லை யென்று கொள்வதுபோலுள்ளது இது. இவை அனைத்திற்கும் காரணம் இன்று யக்ஞ மயமான வாழ்க்கை அற்றுப்போனதே! இதனாலேயே தனி மனிதனுக்கும் சமூ கத்திற்கு மிடையில் வேற்றுமை தோன்றியுள்ளது.

ஆனால் தனி மனிதனையும் சமூகத்தையும் உண்மை யில் வேருய்ப் பிரிக்க முடியாது. ஒரு அறையை இரண்டு பாகங்களாக்க அதன் நடுவில் ஒரு திரையைக் கட்டித் தொங்கவிடுகிறோம்; அத்திரை காற்றில் இங்குமங்கும் அசை யும் பொழுது ஒரு சமயம் ஒரு பகுதி பெரியதாயும் இன் னொரு சமயம் மறு பகுதி பெரியதாயும் தோன்றுகிறது. பகுதிகளின் அளவுகள் காற்றின் போக்கைப் பொருத்திருக் கின்றன; ஸ்திரமாயில்லை. கீதை இந்தப் பூசல்களுக்கு அப்பாற்பட்டது. இந்தப் பூசல்களெல்லாம் கற்பித மானவை. கீதையோ அகச் சுத்தியின் சட்டத்தை அனு சரித்து நடப்பீர்களானால் தனி மனிதனின் நன்மைக்கும் சமூகத்தின் நன்மைக்கும் இடையில் வேற்றுமையே எழா தென்று சொல்லுகிறது. ஒன்றினால் மற்றொன்றின் நன் மைக்குத் தடை ஏற்படாது. இந்தத் தடையை, இந்த வேற்றுமையை அகற்றுவதே கீதையிலுள்ள சிறப் பாகும். கீதையின் இந்த விதியை அனுஷ்டிக்கும் ஒரே ஒரு மனிதன் கிடைத்தாலும் அவன் ஒருவன் மூலமாகவே நாடு முழுவதும் சிறப்பெய்தும். ஒரு நாடென்பது அந்த நாட்டிலுள்ள மனிதர்களே. எந்த நாட்டில் இத்தகைய ஞானமும் ஆசாரமும் கொண்ட மனிதர்கள் இல்லையோ அதை நாடென்று எப்படிக் கொள்வது? இந்தியாவென்பது என்ன? இந்தியா என்பது ரவீந்திரநாதர், இந்தியா என்பது காந்தி அல்லது இவரைப்போன்ற ஒரு சில பெயர் களே. வெளியுலகம் இந்த ஒரு சிலரைக் கொண்டே இந்தியாவைக் கற்பனை செய்துகொள்ளுகிறது. பண்டைக் காலத்திய மூன்று நான்கு பேர், இடைக்காலத்தியவர் நான் கைந்துபேர், தற்காலத்தவர் எட்டு பத்துபேர் இவர்களுடன்

இமயம், கங்கை ஆகியவற்றையும் இணைத்துவிட்டால் இந்திய நாடு ஆய்விட்டது. இந்தியா என்பதற்கு விளக்கம் இதுவே. மற்றவை அனைத்தும் இந்த விளக்கத்தின் விரிவுரையே. விரிவுரையென்பது சூத்திரத்தின் விஸ்தார மான விளக்கமாகும். பாலிலிருந்து தயிரும் தயிரிலிருந்து வெண்ணெயும் மோரும்! பால்-தயிருக்கும், மோர்-வெண் ணெய்க்கும் சண்டையில்லை. பாலின் தரம் பார்ப்பதற்காக அதில் எவ்வளவு வெண்ணெய் இருக்கிறதென்று பார்க்கப் படுகிறது. இவ்வாறு சமூகத்தின் தரம், உயர்வு, தாழ்வு, யோக்கியதை, அதிலுள்ள மனிதர்களைக்கொண்டு நிர்ணயிக் கப்படுகிறது. தனி மனிதனுக்கும் சமூகத்திற்கும் முரண்பாடெதுவுமில்லை. முரண்பாடெப்படி இருக்கக் கூடும்? ஒரு மனிதனுக்கும் இன்னொருவனுக்கும்கூட முரணிருக்கக் கூடாது. ஒரு மனிதனைவிட இன்னொருவ னிடம் அதிகச் செல்வம் இருந்ததானால் அதனால் என்ன நஷ்டம் வந்தது? ஆம். எவரும் சிரமநிலையில் எளிமை யில் இருத்தல் கூடாது. செல்வர்களின் செல்வம் சமூகத் திற்குப் பயன்பட்டுவருமானால் அதுவே போதும். என் சட்டையின் வலது பையில் பண மிருந்தாலென்ன, இடது பையிலிருந்தால்தானென்ன? பார்க்கப் போனால் இரு பைகளும் என்னுடையவை தானே? யாரேனும் ஒருவர் சீமானானால் அதனால் நானே சீமானாகிறேன், நாடே செல் வம் பெறுகிறது என்று நாம் ருஜுப்பிக்க முடியும்.

ஆனால் நாமோ வேற்றுமைகளை எழுப்புகிறோம். உடலும் தலையும் வெவ்வேறாய்விடுமானால் இரண்டுமே இறந்துவிடும். ஆகையால் தனி மனிதனையும் சமூகத் தையும் வேறுபடுத்தாதே. ஒரே காரியம் சுவார்த்தம், பரமார்த்தம் ஆகிய இரண்டையும் எவ்வாறு வேற்றுமை யற்றதாய்ச் செய்துவிடுகிற தென்பதையே கீதை போதிக் கிறது. என் இந்த அறையின் காற்றுக்கும் வெளியேயுள்ள தடையற்ற காற்றுக்கும் வேற்றுமையில்லை, விரோதமில்லை. நான் இவற்றினிடையே விரோத மிருப்பதாய்க் கொண்டு அறையை மூடிக்கொள்வேனாயின் எனக்கு மூச்சு முட்டி உயிர் போய்விடும். விரோதமில்லை என்ற எண்ணத்துடன் நான் அறையைத் திறந்துவிடுவேனாயின் அந்தத் தடை யற்ற காற்று உள்ளே வந்துவிடும். நான் என் நிலத்தை யும் வீட்டையும் மற்றவர்களிடமிருந்து துண்டாடி வேறு படுத்தும் அதேகணத்தில் நான் அளவிலடங்காத செல்

வத்தை இழந்தவனுகிறேன். என் அந்தச் சிறிய வீடு எரிந்தோ இடிந்தோ விழுந்தோபோகுமாஞல் எல்லாம் போய்விட்டதாய்க் கொண்டு நான் அழுது புலம்பத் தொடங்கிவிடுகிறேன். ஆஞல் ஏன் இப்படிச் செய்ய வேண்டும்? எதற்காக அழுது புலம்பவேண்டும்? முதலில் குறுகிய கற்பனை யொன்றைச் செய்துகொண்டு பிறகு அதற்காக அழுவதா? இந்த ரூ. 500 என்னுடையதென்று சொன்னவுடனே சிருஷ்டியிலுள்ள அளவிலடங்காத செல்வத்தை நான் இழந்தவனுகிறேன். இவ்விரு சகோதரர்களும் என்னுடையவர்கள் என்று எண்ணியவுடனே உலகத்திலுள்ள எண்ணிலடங்காத சகோதரர்கள் என்னிடமிருந்து விலகிவிடுகிருர்கள். நமக்கு இது தெரிவதே இல்லை. ஐயோ, மனிதன் தன்னை எவ்வளவு தூரம் குறுக்கிக் கொண்டுவிடுகிருன்! உண்மையில் மனிதனுடைய சுவார்த்தமே பரமார்த்தமாய் இருக்கவேண்டும். தனி மனிதனுக்கும் சமூகத்திற்கு மிடையில் நல்ல கூட்டுறவை, இணைப்பை உண்டாக்கக்கூடிய இத்தகைய அழகிய வழியையே கீதை காட்டுகிறது. நாக்கிற்கும் வயிற்றுக்கும் விரோதமென்ன? வயிற்றுக்குத் தேவையான உணவை நாக்கு அளிக்கவேண்டும். வயிறு போதுமென்று சொன்னதும் நாக்கு உணவுகொள்வதை நிறுத்திவிடவேண்டும். வயிறு ஒரு ஸ்தாபனம், நாக்கு மற்ருென்று. நான் இவைகளின் அரசன். இந்த ஸ்தாபனங்களினிடையில் ஒற்றுமையே இருந்துவருகிறது. வேற்றுமையை எங்கிருந்து கொணர்ந்து புகுத்தினீர்கள்? ஒரே உடலின் இந்தப் பகுதிகளினிடையே உண்மையில் விரோதத்திற்கு மாருக ஒற்றுமையே, கூட்டுறவே இருப்பதைப் போல சமூகத்திலு மிருக்கிறது. சமூகத்தில் இந்தக் கூட்டுறவை வளர்க்கும்பொருட்டே கீதை சித்தசுத்தியுடன் யக்ஞம், தானம், தவம் என்ற ஏற்பாட்டைக் கூறுகிறது. இத்தகைய காரியங்களிஞல் தனி மனிதன், சமூகம் ஆகிய இரண்டிற்குமே நன்மையுண்டு.

எவனுடைய வாழ்க்கை யக்ஞ மயமானதோ அவன் எல்லோருக்கும் சொந்தமாய்விடுகிருன். ஒவ்வொரு பிள்ளைக்கும் தாய் தன்னிடமே அன்பு காட்டுவதாகத் தோன்றுகிறது. அவ்வாறே அந்த மனிதன் ஒவ்வொருவருக்கும் தம்மைச் சேர்ந்தவனுய்த் தோன்றுகிருன். அகில உலகத்திற்கும் பிரிய பாத்திரனுய், ஏற்கத் தகுந்தவனுய்விடுகிருன்.

அனைவருக்குமே அவன் தம் உயிருக்குயிரானவன், தம் நண்பன், தம் தோழனென்று தோன்றுகிறான்.

"இத்தகைய மனிதன் பாக்கியவான்; அவனைப் போல் எவருமில்லை என்பர் மக்கள்" *

என்று சமர்த்த ராமதாஸர் சொல்லியிருக்கிறார். இத்தகைய வாழ்க்கையை அமைக்கும் வகையை கீதை கூறியிருக்

## (99) ஸமர்ப்பண மந்திரம்

கீதை மேலும் வாழ்க்கையை யக்ஞ மயமாக்கிய பிறகு அது அனைத்தையும் ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்து விடவேண்டும் என்று வேறு சொல்லுகிறது. வாழ்க்கை சேவை மயமான பிறகு அதை ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்தல் எதன் பொருட்டு? நாம் வாழ்க்கையை சேவை மயமாக்குவதென்று என்னவோ சுளுவாய்ச் சொல்லிவிட்டோம். ஆனால் இதைச் செய்தல் மிகவும் சிரமம்; எத்தனையோ ஜன்மங்களில் செய்தபின் இறுதியில் இது கைகூடலாம். பிறகு எல்லாக் காரியங்களும் சேவை மயமாகவே, முற்றிலும் சேவை மயமாகவே ஆய்விட்ட போதிலும் பூஜைமயமாகவும் அது நிச்சயமாய் ஆய்விட்டதென்று சொல்லுவதற்கில்லை. ஆகையால் 'ஓம் தத்ஸத்' என்ற இந்த மந்திரத்துடன் காரியங்களனைத்தையும் ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்யவேண்டும்.

சாதாரணமாக சேவைக்காரியம், முழுவதும் சேவை மயமாதல் கடினம். ஏனெனில், பரமார்த்தத்திலும் சுவார்த்தம் அல்லது சுயநலம் வரவே செய்கிறது. வெறும் பரமார்த்தம் சாத்தியமே இல்லை. சுயநலம் சிறிதும் கலவாத காரியமெதுவுமே இருப்பதற்கில்லை. ஆகையால் நாளுக்குநாள் அதிகப் பற்றில்லாததும், அதிக சுயநலமில்லாததுமான சேவைகள் என் கையினால் நடக்கவேண்டுமென்ற விருப்பம் கொள்ளவேண்டும். சேவை மேன்மேலும் தூய்மையுற வேண்டுமானால் எல்லாக் காரியங்களையுமே ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்துவிட வேண்டும்.

* "ऐसा पुरुष तो पहावा। जनांस वाटे हा असावा"

யட்டும். பரம்பொருளின் இந்த 'ஸத்' என்ற பெயரை நமதாக்கிக்கொள்ளும் பொருட்டு எல்லாக் காரியங்களும் சுத்தமாயும் பக்திமயமாயும் நடைபெறச் செய்யவேண்டும். சோம ரசம் பவித்திரகர்களிடையிலிருந்து வடிகட்டப் பட்டதைப்போல நம் எல்லாக் காரியங்களையும் சாதனைகளையும் ஒவ்வொரு நாளும் சோதித்துக் குற்றமற்றவை யாக்கவேண்டும்.

'தத்' என்பது பாக்கியிருக்கிறது. 'தத்' என்பதற்கு 'அது', வேருனதொன்று, இந்த சிருஷ்டியிலிருந்து வேறு பட்டது என்பது பொருள். பரம்பொருள் இந்த சிருஷ்டியி லிருந்து வேறுபட்டது, அதாவது தொடர்பற்றதாகும். சூரியன் உதித்ததும் தாமரைகள் விரியத்தொடங்கு கின்றன; பறவைகள் பறக்கத் தொடங்குகின்றன; இருள் அகன்று விடுகிறது. ஆனால் சூரியன் தொலைவி லேயே இருக்கிருன். இந்த விளைவுகளிலிருந்து அவன் முற்றிலும் தனித்து இருப்பது போன்றே காண்கிருன். நம் காரியங்களில் பற்றின்மையைக் கொள்வோமானால், தொடர்பின்மை நமக்குக் கைவந்துவிடுமானால் நம் வாழ்க்கையில் 'தத்' புகுந்து விட்டதென்று கொள்ளலாம்.

இவ்வாறு கீதை இந்த 'ஓம் தத்ஸத்' என்ற வேதத்தில் காணும் பெயரைக் கொண்டு நம் காரியங்களனைத்தையும் ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்வதை போதித்திருக் கிறது. பிந்திய ஒன்பதாம் அத்தியாத்தில் எல்லாக் கர்மங் களையும் ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்தல் என்ற கருத்து வந்திருக்கிறது. 'யத்கரோஷி யதஶ்னஸி' என்ற சுலோகத்தில் சொல்லப்பட்டிருப்பது இதுவே. இவ்விஷ யமே பதினேழாம் அத்தியாயத்தில் விவரிக்கப்பட்டிருக் கிறது. ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்யும் காரியம் ஸாத்விகமானதாயிருக்கவேண்டும். அப்பொழுது தான் அது ஆண்டவனுக்கு அர்ப்பணம் ஆகத் தகுதிபெறும். இவ்விஷயம் இங்கே சிறப்பாகக் கூறப்பட்டிருக்கிறது.

## (100) பாவத்தைப் போக்கும் கடவுள் நாமம்

இதெல்லாம் சரிதான். இந்த 'ஓம் தத் ஸத்' என்ற பெயர் புனிதமான மனிதனுக்குத் தானே பிடித்தமா யிருக்கும்? பாவி என்ன செய்வது? பாவியின் வாயினலும் சொல்லப் படக்கூடிய பெயரொன்று உண்டா, இல்லையா

என்ற கேள்வி எழுகிறது. 'ஓம் தத்ஸத்' என்ற பெயரில் அந்த சக்தியும் இருக்கிறது. ஆண்டவனுடைய எந்தப் பெயருக்கும் அசத்தியத்திலிருந்து சத்தியத்திற்கு இட்டேகும் சக்தியுண்டு; அதனால் பாவத்தினிடமிருந்து பாவமின்மையை நோக்கி அழைத்தேக முடியும். வாழ்க்கையை மெல்லமெல்ல சுத்தமாக்கிக் கொள்ளவேண்டும். பரம்பொருள் நிச்சயமாய் உதவும். நீ வலி இழக்கும் பொழுது அது உனக்குக் கைகொடுக்கும்.

ஒருவர் என்னிடம் ஒருபுறத்தில் புண்ணியமயமான கர்வ வாழ்க்கையும் மறுபுறம் பாவ மயமானதாயினும் பணிந்த வாழ்க்கையும் இருக்கின்றன. இவைகளுள் ஒன்றைத் தேர்ந்து கொள்ளென்று சொல்லுவாரானால், நான் வாயைத் திறந்து சொல்ல முடியாவிட்டாலும் உள்ளத்தினால் எந்தப் பாவத்தின் மூலமாய் எனக்கு ஆண்டவன் நினைவு ஏற்படுமோ அதுவே கிடைக்கட்டு மென்றே சொல்லுவேன். புண்ணியமயமான வாழ்க்கையினால் பரம்பொருளை மறக்க நேருமானால் எந்தப் பாவ வாழ்க்கையினால் அவன் நினைவு வருமோ அது எனக்குக் கிடைக்கட்டும் என்றே என் மனம் சொல்லும். நான் பாவ மயமான வாழ்க்கையை ஆமோதிக்கிறேன் என்பது இதன் பொருளல்ல. புண்ணியத்தைக் குறித்து நாம் கொள்ளும் அகங்காரம் அல்லது கர்வம் எவ்வளவு கொடியதோ அவ்வளவு பாவம் கொடியதல்ல.

> "இந்த நல்லறிவைத் தடை செய்துவிடாதே, நாராயணா!"

என்று துகாரம் சொல்லியிருக்கிறார். அந்தப்பெருமை தேவையில்லை. அதைவிடப் பாவியாய்த் துக்கமுற்றிருப்பதே மேல்.

> "ஞானிகளாயுள்ள குழந்தைகளை தாயும் அகற்றுவாள்" †

ஆனால் அறியாத குழந்தைகளையோ தாய் தன் மடியில் எடுத்து வைத்துக்கொள்வாள். நான் வெளி உதவியை வேண்டாத புண்ணியசாலியாக விரும்பவில்லை. ஆண்டவனை அண்டி நிற்கும் பாவியாவதே எனக்கிஷ்டம். பரம்

---

* बहुमितों जाणपणा। आड न यो नारायणा

† जाणतें लेकरूं। माता पाहे दूर घरूं

பொருளின் தூய்மை என் பாவங்களை யெல்லாம் உள்ளடக்கிக்கொண்டு ஓங்கி நிற்கக்கூடியது. நாம் பாவங்களைத் தடுக்க முயலுவோம். அவை நில்லாவிடில் உள்ளம் அலறி அழும்; மனம் துடிக்கத் தொடங்கும். அப்பொழுது ஆண்டவன் நினைவு வரும். அவன் நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கிறான். "நான் பாவி ஆகையால் உன் வாயிலை அடைந்திருக்கிறேன்" என்று கூவி அழை. புண்ணியவானுக்கு ஆண்டவனை நினைக்கும் உரிமையுண்டு; ஏனெனில் அவன் புண்ணிய வான். பாவிக்கும் ஆண்டவனை நினைக்க உரிமையுண்டு; ஏனெனில் அவன் பாவி.

ஞாயிறு, 12–6–'32.

## பதினெட்டாம் அத்தியாயம்

# முடிவுரை : பயனைத் துறத்தலின் பூர்த்தி—ஆண்டவன் அருள்

*

## (101) அர்ஜுனன் கடைசிக் கேள்வி

எனது சகோதரர்களே, இன்று ஆண்டவன் கருணையினால் பதினெட்டாம் அத்தியாயத்திற்கு வந்து சேர்ந்து விட்டோம். ஒவ்வொரு கணமும் மாறிக்கொண்டிருக்கும் இந்த சிருஷ்டியில் எந்தத் தீர்மானமும் நிறைவேறுவது ஆண்டவன் விருப்பத்தைப் பொருத்திருக்கிறது. மேலும் சிறையிலோ எந்த விஷயத்தை எடுத்துக் கொண்டாலும் ஸ்திரமின்மையை உணரவேண்டி யிருக்கிறது. இங்கே ஒரு காரியத்தை ஆரம்பித்தோம், அது இங்கேயே முடிய வேண்டுமென்று விரும்புவோமானால், அவ்வாறு நடப்பது சிரமம். கீதை தொடங்கிய சமயத்தில் அது இங்கேயே முடிவுறுமென்று நாம் சிறிதும் நம்பவில்லை. ஆனால் ஆண்டவன் விரும்பி யிருந்ததால் இறுதி கட்டத்திற்கு வந்து சேர்ந்துவிட்டோம்.

பதினான்காம் அத்தியாயத்தில் வாழ்க்கை அல்லது கர்மம் ஸாத்விகம், ராஜஸம், தாமஸமென்று மூன்று வகையாய்ப் பிரிக்கப்பட்டது. இம்மூன்றினுள் ராஜஸத்தையும் தாமஸத்தையும் அகற்றி ஸாத்விகத்தை ஏற்கவேண்டும் என்பதையும் நாம் கண்டோம். அதன்பிறகு பதினேழாம் அத்தியாயத்தில் இதே விஷயம் வேறு முறையில் சொல்லப் பட்டது : யக்ஞம், தானம், தவம் அல்லது, ஒரே சொல்லில் குறிப்பிடுவதென்றால், யக்ஞமே வாழ்க்கையின் சாரம்; யக்ஞத்திற்கு உபயோகமான உணவு முதலிய காரியங்களுக்கு யக்ஞ உருவளித்தே ஏற்கவேண்டும்; யக்ஞ உருவிலும் ஸாத்விகத் தன்மை பொருந்தியும் உள்ளவற்றையே ஏற்கவேண்டும்; மற்றக் காரியங்களைத் துறத்தலே உசிதம் என்ற ஒரு துவனி அல்லது உட்கருத்தையும் உணர்ந்தோம். ‘ஓம் தத்ஸத்’ என்ற இந்த மந்திரத்தை ஏன் எல்லா சமயங்களில் நினைத்துக் கொண்டிருக்க வேண்டும் என்பதையும் பார்த்தோம். ‘ஓம்’ என்பதற்கு ஸாதத்யம் என்பதும், ‘தத்’ என்பதற்கு தொடர்பின்மை,

பற்றின்மை என்பதும் 'ஸத்' என்பதற்கு ஸாத்விகம் என்பதும் பொருள். நமது சாதனையில் சாதத்யமும் தொடர்பின்மையும் ஸாத்விகமும் அமையவேண்டும். அப்பொழுதுதான் அதை ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்ய இயலும். இவை அனைத்திலிருந்தும் நாம் சில காரியங்களைச் செய்யவேண்டும், சிலவற்றைத் துறக்க வேண்டும் என்று தெரிகிறது.

கீதையின் போதனை முழுவதிலும் கவனம் செலுத்து வோமானால் கர்மத்தைத் துறத்தல் கூடாது என்ற படிப் பினையே நமக்குப் பலவிடங்களிலும் கிடைக்கிறது. கீதை கர்மத்தின் பயனைத் துறப்பதற்கு வகை செய்கிறது. கீதையில் எல்லா இடங்களிலுமே 'கர்மத்தை இடையருமல் செய்; ஆனால் அதன் பயனைத் துறந்துகொண்டே இரு' என்றே போதிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் இது ஒரு அம்சமாக, மற்றொரு அம்சமோ சில கர்மங்களைச் செய்து சிலவற்றைத் துறக்கவேண்டுமென்று தோன்றுகிறது. ஆகையால் இறுதியில் பதினெட்டாம் அத்தியாயத்தின் தொடக்கத்தில் அர்ஜுனன், "எந்தக் காரியத்தையும் பயனைத்துறக்கும் கருத்துடன் செய்யவேண்டுமென்பது ஒரு கட்சியாயிருக்க, மற்றொன்று சில காரியங்கள் கட்டா யம் துறக்கவேண்டியவை; வேறு சில செய்யத்தக்கவை என்று தெரிகிறதே, இவை இரண்டிற்குமிடையில் எப்படிப் பொருத்தமேற்படும்?" என்று கேட்டான். வாழ்க்கை செல்லவேண்டிய திசையைத் தெளிவாய்.உணரும்பொருட்டு இந்தக் கேள்வி கேட்கப்பட்டது. பயனைத் துறத்தல் என்பதன் மர்மத்தை உணருவதற்காக எழுந்த கேள்வி இது எதை சாஸ்திரம், சந்நியாசமென்று அழைக்கிறதோ அதில் கர்மத்தை அதனுருவின் அளவில் விடவேண்டி யிருக்கிறது அதாவது கர்மத்தின் உருவைத் துறத்தல் வேண்டும். பயனைத் துறத்தல் என்பதிலோ கர்மத்தின் பயனைத் துறக்கவேண்டும். கீதை கூறும் பயனைத் துறத்தல் என்பதில் நேரிடையாகக் கர்மத்தைத் துறத்தல் அவசியமா என்பதே இப்பொழுது எழும் கேள்வி. பயனைத் துறத்தல் என்ற உரை கல்லினல் சந்நியாசத்திற்கு ஏதேனும் நன்மையுண்டா? சந்நியாசத்தின் வரம்பு எங்கே அமைந் துள்ளது? சந்நியாசம், பயனைத் துறத்தல் ஆகிய இவ் விரண்டின் வரம்புகள் எங்கே எவ்வளவு தூரத்தில் அமைந் துள்ளன என்பதே அர்ஜுனனுடைய கேள்வி.

## (102) பயனைத் துறத்தல்—எங்கும் செல்லும் உரைகல்

இதற்கு விடையளித்த பகவான் பயனைத் துறத்த லென்ற உரைகல் எல்லாவிடங்களுக்கும் பொருந்தும் என்பதைத் தெளிவுறுத்தி விட்டார். பயனைத் துறத்த லென்ற தத்துவம் ஒவ்வொரு இடத்திலும் பொருந்தக் கூடியது. எல்லாக் கர்மங்களின் பயனையும் துறத்தல் என்பதற்கும் ராஜஸ, தாமஸ கர்மங்களைத் துறத்தல் என்பதற்கும் முரண்பாடில்லை. சில கர்மங்களின் தன் மையே, அவற்றின் பயனைத் துறத்தலென்ற யுக்தியைப் பயன்படுத்தினேமானல் தாமே வீழ்ந்துபடக்கூடியதாயிருக் கிறது. பயனைத் துறந்து கர்மம் செய்தல் என்பதற்கே சில கர்மங்களைத் துறக்க வேண்டுமென்பது பொருளா கிறது. பயனைத் துறந்து கர்மம் செய்தல் என்பதிலேயே சில கர்மங்களை நேரிடையாய்த் துறத்தலென்பது அடங்கி விடுகிறது.

இவ்விஷயத்தைக் குறித்துச் சிறிது ஆழ்ந்து சிந்திப் போம். எவை காமிய கர்மங்களோ, எவற்றின் மூலத்தில் ஆசை பொதிந்திருக்கிறதோ அவற்றை பயனைத்துறக்கும் கருத்துடன் செய் என்று சொன்னவுடன் அவற்றின் ஆதா ரம் கலகலத்துவிடுகிறது. பயனைத் துறத்தல் என்பதன் முன் காமத்திலிருந்து எழுந்ததும் இழிந்ததுமான கர்மங் களால் நிலைக்கவே முடியாது. பயனைத் துறந்து கர்மம் செய்தலென்பது நாமாக வேண்டுமென்றே எந்திரம் போலோ கை, காலை அசைத்தோ செய்வதல்ல. எவற்றைச் செய்யலாம், எவற்றைச் செய்யக்கூடாது என்ற ஒரே கேள்வியில் இது தெளிவாய் விடுகிறது. சிலர் கீதை பயனைத் துறந்து கர்மம் செய்யென்று போதிக்கிறதே யல்லாமல் எந்தக் கர்மங்களைச் செய்ய வேண்டுமென்று சொல்லவில்லையே என்று சொல்லுகிறார்கள். இவ்வாறு தோன்றுவது என்னவோ உண்மையாயினும் உண்மையில் இப்படியில்லை. ஏனெனில், பயனைத் துறந்து கர்மம் செய் என்று சொன்னதிலிருந்து எந்தக் கர்மங்களைச் செய்ய வேண்டும் எவற்றைச் செய்யக்கூடாது என்பதும் தெரிந்து போகிறது. ஹிம்சைக் காரியத்தை, அசத்திய மயமான காரியத்தை, களவுபோன்ற காரியத்தை பயனைத் துறந்து

செய்தலென்பது சாத்தியமேயல்ல. பயனைத் துறத்தல் என்ற உரைகல்லில் உரைத்ததுமே இந்தக் காரியங்களெல்லாம் பறந்து போகின்றன. சூரியன் ஒளி பரவியதும் எல்லாப் பொருள்களும் பிரகாசமாய்த் தோன்றத் தொடங்குகின்றன. ஆனால் இருளும் பிரகாசமாய்த் தோன்றுகிறதா? அது ஒழிந்தே போகிறது. இதே கதிதான் இழிந்த அல்லது ஆசையிலிருந்து தோன்றிய காரியங்களுக்கும். நாம் எல்லாக் காரியங்களையும் பயனைத் துறத்தலென்ற உரைகல்லில் உரைத்துப் பார்க்கவேண்டும். முதலில் நான் செய்ய விரும்பும் காரியத்தைப் பற்றின்றி, சிறிதும் பயனைக் கருதாது செய்ய முடியுமா முடியாதா என்பதைப் பார்க்கவேண்டும். பயனைத் துறத்தலே கர்மம் செய்வதிலுள்ள உரைகல். இந்த உரைகல்லின் உதவி பெறும்பொழுது காம்ய அல்லது பயனைக் கருதிச் செய்யும் காரியங்கள் விடக்தக்கவை யென்று தானே தெரிந்து போகிறது. அவற்றைத் துறத்தலே உசிதம். இப்பொழுது எஞ்சி யிருப்பவை ஸாத்விக கர்மங்களே. அவற்றைப் பற்றின்றி அகங்காரமில்லாது செய்தல் வேண்டும். காம்ய கர்மங்களைத் துறத்தலும் ஒரு கர்மமே. பயனைத் துறத்தலென்ற கத்தரியைக்கொண்டு அதையும் துண்டித்தெறி. அப்பொழுது காம்ய கர்மங்களைத் துறத்தலும் சுலபமாய் விடும்.

இவ்வாறு நாம் மூன்று விஷயங்களைப் பார்த்தோம். முதலாவதோ, நாம் செய்ய வேண்டிய கர்மங்களை பயனைத் துறந்து செய்தல்; இரண்டாவது, ராஜஸ கர்மம், தாமஸ கர்மமென்ற இழிந்த காம்ய கர்மங்கள் பயனைத் துறத்தலென்ற உரைகல்லில் உரைத்ததும் அவை தாமே நீங்கிவிடுகின்றன. மூன்றுவது, இவ்வாறு செய்யப்படும் தியாகத்தையும் பயனைத்துறத்தலென்ற கத்தரி கொண்டு துண்டித்துவிட வேண்டும். 'நான் இவ்வளவு தியாகம் செய்தேன்!' என்ற கர்வம் எழவே விடக்கூடாது.

ராஜஸ, தாமஸ குணங்களைத் துறப்பது ஏன்? அவை தூயவை அல்ல; தூய்மையற்றிருப்பதனுல் அவற்றைச் செய்வோனது சித்தத்தில் அவற்றின் ஸம்ஸ்காரம் ஏற்பட்டு விடுகிறது என்பதனுலேயே. ஆனுல் மேலும் யோசித்துப் பார்க்கையில் ஸாத்விக கர்மத்திலும் குறைபாடுண்டு என்பது தெரியவருகிறது. உள்ள கர்மங்கள்

அனைத்திலும் ஏதேனும் குற்றங் குறைகள் இருக்கவேதான் செய்கின்றன. விவசாயமென்ற சுதர்மத்தையே எடுத்துக் கொள்ளுங்கள். இது ஒரு தூய ஸாத்விகமான காரியம். ஆனால் யக்ஞமயமாய், சுதர்மமாயுள்ள இந்த விவசாயத்தில் ஹிம்சை இருக்கவே செய்கிறது. உழவு முதலியவற்றில் எவ்வளவோ உயிர்கள் இறக்கின்றன. கிணற்றினடியில் சேறு ஆகாமலிருக்கும் பொருட்டு தரையை கெட்டிப்படுத்துகையிலும், கட்டடம் அமைக்கையிலும் பல உயிர்கள் இறக்கின்றன. காலையில் கதவைத் திறந்ததும் சூரிய ஒளி வீட்டினுள் நுழைகிறதே, அதிலேயே எத்தனையோ உயிர்கள் அழிகின்றன. நாம் துப்புரவு செய்தல் என்று எதைச் சொல்லுகிறோமோ, அது ஒரு கொலைச் செயலாகவே முடிகிறது. கருத்தென்னவென்றால், ஸாத்விகமான சுதர்ம கர்மத்திலும் குற்றம் இருக்குமானால் நாம் செய்வதுதானென்ன ?

எல்லா குணங்களும் நன்கு வளர்ந்தாகவில்லை யென்று நான் முதலிலேயே சொல்லி யிருக்கிறேன். ஞானம், பக்தி, சேவை, அஹிம்சைஆகிய இவற்றின் ஒரு இம்மிஅளவையே நாம் இப்பொழுது உணர்ந்திருக்கிறோம் ; எல்லாவற்றையும் தெரிந்து கொண்டு விட்டோம் என்று சொல்லுவதற்கில்லை. உலகம் விஷயங்களை உணர்ந்து கொண்டே முன்னேறிக் கொண்டிருக்கிறது. மத்திய யுகத்தில் விவசாயத்தில் ஹிம்சை ஏற்படுவதால் அஹிம்சையின் பக்தன் அதைச் செய்யக்கூடாது என்ற ஒரு கருத்து தோன்றி யிருந்தது. அவன் வியாபாரம் செய்யலாம் ; ஆனால் உணவு உற்பத்தி செய்தல் பாவம், விற்றல் பாவமல்ல என்று சொல்லப்பட்டது. ஆனால் இவ்வாறு காரியத்தைத் தட்டிக் கழிப்பதனால் நமக்கு நன்மை ஏற்படுவதற்கில்லை. மனிதன் இவ்வாறு காரியங்களைக் குறுக்கிக் கொண்டே போவானாயின் இறுதியில் ஆன்ம நாசமே ஏற்படும். கர்மத்திலிருந்து விடுபட நினைக்க நினைக்க, கர்மம் மேன் மேலும் பெருகிக் கொண்டே தான் போகும். நீங்கள் செய்ய விரும்பும் அந்த தானிய வியாபாரத்திற்கு எவரேனும் விவசாயம் செய்ய வேண்டியிராதா ? அப்பொழுது அந்த விவசாயத்தில் விளையும் ஹிம்சையில் உங்களுக்குப் பங்கில்லையா? பருத்தி விளைவித்தல் பாவமென்றால் விளைந்த பருத்தியை விற்றலும் பாவமே. பருத்தி பயிர் செய்தல் பாவம் ஆகையால் அந்தக் காரியத்தையே விட்டுவிடுதல்

அறிவீனமாகும். எல்லாக் காரியங்களையும் விடுதல், இந்தக் காரியமும் கூடாது, அந்தக் காரியமும் கூடாது, எதையும் செய்யாதே என்று கருதும் நோக்கில் உண்மை தயையில்லை, தயை அற்றுவிட்டதென்றே சொல்ல வேண்டியிருக்கும். இலையைக் கிள்ளுவதனால் மரம் படுவதில்லை. அது மேலும் தளிர்க்கவே செய்கிறது. காரியத்தைக் குறைத்துக் கொள்ளுவதால் ஆன்மாவே குறுகுகிறது.

## (103) காரியத்தினின்று விடுபட உதவும் உண்மை முறை

எல்லாக் காரியங்களிலுமே குற்றமுண்டென்றால் காரியங்களனைத்தையும் விட்டு விட்டாலென்ன என்ற கேள்வி இப்பொழுது எழுகிறது. இதற்கு விடை ஏற்கெனவே ஒரு முறை அளிக்கப்பட்டிருக்கிறது. எல்லாக் காரியங்களையும் துறத்தல் என்ற கற்பனை மிகவும் நேர்த்தியானது. இது நம்மை மயக்கும் கருத்தே. ஆனால் இந்த அளவிலடங்காத காரியங்களை விடுவது எங்ஙனம்? ராஜஸ, தாமஸ கர்மங்களைத் துறப்பதற்குள்ள முறையே ஸாத்விகக் கர்மங்களுக்கும் பயன்படுமா? தோஷ மயமான ஸாத்விக கர்மங்களிலிருந்து தப்புவது எப்படி? இதில் வேடிக்கை என்னவென்றால், 'இந்திராய தக்ஷகாய ஸ்வாஹா' என்ற கதையைப் போல் மனிதன் உலகத்தில் செய்யத் தொடங்குவானாயின் அமரனாகையால் இந்திரன் சாகாமலிருப்பது மட்டுமல்ல, தக்ஷகனும் மரணத்திற்குத் தப்பி அதிக பலம் பெற்று விடுகிறான். ஸாத்விக கர்மங்களில் புண்ணியமிருக்கிறது, சிறிது குற்றமுமிருக்கிறது. ஆனால் ஒரு சிறிது குற்றம் இருப்பதனால் அந்தக் குற்றத்துடன் நன்மையையும் துறந்துவிட விரும்பினால், வலுவுள்ளதாகையால் புண்ணியம் அழியாததோடு குற்றம் நிச்சயமாய் வளர்ந்து கொண்டே போகும். இத்தகைய கலப்படமான விவேகமற்ற தியாகத்தினால் புண்ணியமென்ற இந்திரனென்னவோ இறப்பதில்லையாயினும்,இறக்கக்கூடிய குற்றமென்ற தக்ஷகனும் சாவிலிருந்து -தப்புகிறான். ஆகையால் அவற்றைத் துறப்பதெப்படி? பூனை ஹிம்சை புரிகிறது என்பதனால் அதை விரட்டுவோமானால் எலிகளின் ஹிம்சை பெருத்து விடும். பாம்புகள் ஹிம்சை புரிகின்றன என்பதற்காக அவற்றை ஒழிப்போமானால் வேறு எத்தனையோ ஜந்துக்கள்

பயிரை அழித்துவிடும் ; வயலிலுள்ள தானியம் பாழாவ தால் ஆயிரக்கணக்கான மனிதர்கள் இறப்பார்கள். ஆகை யால் தியாகம் விவேகத்தொடு பொருந்தியிருக்க வேண்டும்.

கோரக்நாதரிடம் மச்சீந்திர நாதர், “இந்தப் பையனைக் கழுவிக் கொண்டுவா” என்று சொன்னார். கோரக்நாதர் பையனுடைய கால்களைப் பிடித்து கல்லில் மோதித் துவைத்து வேலியில் உலரப் போட்டுவிட்டார். மச்சீந்திர நாதர், “பையனைக் கழுவிக் கொணர்ந்தாயா?” என்று கேட்டார். அதற்கு கோரக் நாதர், “ஆம், அவனைக் கழுவித் துவைத்து உலரப் போட்டிருக்கிறேன்” என்றார். பையனை இப்படியா கழுவுவது? துணியைத் துவைக்கும் முறையும் மனிதனை நீராட்டும் முறையும் ஒன்றல்ல. இவை இரண்டிற்கும் மிக்க வேற்றுமையுண்டு. ஆகையால் ராஜஸ, தாமஸ கர்மங்களைத் துறப்பதற்கும் ஸாத்விக கர்மத்தைத் துறப்பதற்கும் மிகுந்த வேற்றுமையுண்டு ; ஸாத்விக கர்மத்தை வேறு வகையில் துறக்க வேண்டும்.

விவேகமின்றிக் காரியம் செய்வதனால் விபரீத விளைவு களே ஏற்படும். துகாராம்,

“ தியாகத்தினால் உள்ளே போகம் தோன்றின்
ஏ வள்ளலே, நான் என்ன செய்வேன் ?” *

என்று சொல்லியிருக்கிறார்.

சிறிய தியாக மொன்றைச் செய்தோமானால் பெரிய போகம் நம்மீது வந்து அமர்ந்து விடுகிறது. ஆகையால் அந்தச் சிறிய தியாகமும் பொய்யாய் விடுகிறது. சிறிய தியாகத்தைப் பூர்த்தி செய்யும் பொருட்டு பெரிய இந்திர மாளிகைகள் அமைக்கிறார்கள். இதைவிட அந்தக் குடிலே நன்றாயிருந்தது ; அதுவே போதுமானது. கோவண மணிந்துகொண்டு தம்மைச் சூழச் செல்வச் சிறப்பைச் சேர்த்துக் கொள்வதைவிட சட்டை தலைப்பாகையுடன் இருத்தலே நல்லது. ஆகையால் பகவான் ஸாத்விக கர் மங்களைத் துறக்கும் முறையையே தனியாய்க் கூறியிருக் கிறார். அந்த எல்லா ஸாத்விக கர்மங்களையும் செய்ய வேண்டியதே ஆயினும் அவற்றின் பயனை முறித்தெறிந்து

* त्यागें भोग माझ्या येतील अंतरा ।
मग मी दातारा काय करूं ॥

விடவேண்டும். சில காரியங்களையோ அறவே விட்டுவிட வேண்டும்; சிலவற்றின் பயனைமட்டுமே துறக்க வேண்டும். உடலில் ஏதேனும் கறைபடியுமானால் அதைக் கழுவி அகற்றிவிடலாம். ஆனால் தோலின் நிறமே கறுப்பாயிருக்கும்பொழுது அதன்மீது வெள்ளை பூசுவதனால் பயனென்ன? அந்தக் கறுப்பு நிறம் அப்படியேயிருக்க வேண்டியதுதான். அதை நீ ஏன் கவனிக்கிறாய்? அதை அமங்களமானதென்று கொள்ளாதே.

ஒரு மனிதன் இருந்தான். அவனுக்குத் தன் வீடு அசிங்கமாய்த் தோன்றவே வீட்டை விட்டு வெளியேறி ஒரு கிராமத்திற்குப் போனான். அங்கும் அவனுக்குக் குப்பையும் கூளமும் காணச் சகியாமல் காட்டிற்குப் போய் விட்டான். காட்டில் அவன் ஒரு மா மரத்தடியில் உட்கார்ந்திருக்கையில் அவன் தலையில் ஒரு பட்சி எச்சமிட்டுவிட்டது. அவன், "இந்தக் காடு மோசமாயிருக்கிறது!" என்று சொல்லிக்கொண்டு ஒரு ஆற்றில் போய் நின்றான். ஆற்றில் பெரிய மீன்கள் சிறு மீன்களைப் பிடித்துத் தின்பதைக் கண்டதும் அவனுக்கு மிகவும் அருவருப்பாய்விட்டது. "இதென்ன இந்த சிருஷ்டி அனைத்துமே மோசமாயிருக்கிறதே! எங்கும் அமங்களம்தானா? இங்கே உயிரைத் துறந்தாலன்றி தப்ப வழியில்லை" என்று முடிவு செய்துகொண்டு நீரிலிருந்து கரையேறி தீ பற்ற வைத்தான். அப்பொழுது அந்த வழியாக வந்த ஒரு கனவான், "ஐயா, ஏன் சாவதற்கு ஏற்பாடு செய்கிறீர்?" என்று வினவினர். "இந்த உலகமெங்கும் அமங்களமாயிருப்பதனால்" என்று அவன் பதில் சொன்னான். அந்த மனிதர், "உமது இந்த ஆபாசமான உடல், இந்த மாமிசம் இங்கே எரியத் தொடங்குமானால் இங்கே எவ்வளவு நாற்றம் பரவும்? நான் இங்கே பக்கத்திலேயே இருப்பவனாயிற்றே; நான் அப்பொழுது எங்கே போவது? ஒரு மயிர் பொசுங்கினாலே எவ்வளவோ நாற்றம் உண்டாகிறதே, உம் உடலின் மாமிசம் அத்தனையுமல்லவா இங்கே பொசுங்கும்? அப்பொழுது இங்கே எவ்வளவு நாற்றம் பரவுமென்பதையும் சிறிது எண்ணிப்பாரும்" என்றார். அப்பொழுது அந்த மனிதனுக்கு என்ன செய்வதென்றே தோன்றாமல், "இந்த உலகத்தில் வாழவும் வழியில்லை, சாகவும் வழியில்லையென்றால் நான் என்னதான் செய்யட்டும்?" என்று கேட்டான்.

கருத்தென்னவென்றால், எல்லாம் மோசம், அமங்களம்

என்று சொல்லி எல்லாவற்றையுமே ஒதுக்குவோமாயின் ஒன்றும் நடைபெறுது. நீ சிறிய கர்மங்களுக்குத் தப்ப விரும்பிஞல் வேறு பெரிய கர்மங்கள் உன் தோள்மீது வந்து ஏறிக்கொள்ளும். இயற்கையாகவே கர்மங்களை நாம் புறத்தே தள்ளிவிடுவதஞல் அவை நம்மை விட்டுப் போவதில்லை. எந்த கர்மங்கள் நமக்கு இயற்கையில் ஏற் பட்டிருக்கின்றனவோ, வெள்ள ஓட்டத்தை ஒக்க நம்முடன் அமைந்திருக்கின்றனவோ, அவற்றை எதிர்ப்பதில் ஒருவன் தன் சக்தியைச் செலவிடுவாஞ்ஞல், பிரவாகத்தை எதிர்த்து நீந்த விரும்புவாஞ்ஞல், அவன் இறுதியில் களைப்புற்று வெள்ளத்திஞல் அடித்துக் கொண்டு போகப்படுவான். வெள்ளத்தின் ஓட்டத்திற்கு ஒத்த காரியங்களின் மூல மாகவே அவன் கரையேற, கடைத்தேறப் பார்க்க வேண் டும். இதஞல் மனதின் மீதுள்ள பூச்சுக்குறையும். சித் தம் வரவர சுத்தமாய்க் கொண்டு வரும். பிறகு மெல்ல மெல்ல காரியங்கள் தாமே முடிவுறும். கர்மத்தைத் துற வாதிருந்தும் அவை மறைந்துபோம்; கர்மம் விலகாதாயி னும் காரியம் மறைந்துவிடும்.

கர்மம், காரியம் என்ற இரண்டிற்கும் வித்தியாசம் இதுவே. உதாரணமாக, ஓரிடத்தில் பெருத்தக் கூச்சலும் கூப்பாடுமாயிருக்கிறது. அதை நிறுத்த வேண்டும். ஒரு போலீஸ்காரன் தொண்டை கிழியக் கத்தி "சத்தம் போடா தீர்கள்!" என்று சொல்லுகிருன். அவ்விடத்திய கூச்சலை அடக்கும் பொருட்டு அவன் உரக்கக் கத்தும் தீவிரமான கர்மத்தைப் புரியவேண்டியதாயிற்று. வேருெருவன் அங்கே வந்து நின்று தன் விரலைமட்டும் காட்டிச் சைகை செய்வான். இதஞலேயே ஜனங்கள் அடங்கி விடுவார் கள். மூன்ருவது மனிதஞெருவன் அங்கே வந்தால் போதும், எல்லாம் அமைதியாய்விடும். ஒருவன் தீவிர மான காரியம் செய்யவேண்டியதாயிற்று; இரண்டாமவன் செய்த காரியம் சிறிது அடக்கமாயிருந்தது; மூன்ருமவன் செய்ததோ வெகு சூக்குமம். போகப்போகக் காரியம் குறைந்துகொண்டே போயிருக்கிறது. ஆஞல் மூவருமே அமைதியைத் தோற்றுவிக்கும் காரியத்தை ஒன்றுபோலச் செய்திருக்கிருர்கள். சித்த சுத்தி வளர வளர காரியத்தின் தீவிரம் குறைந்து கொண்டே போகிறது. தீவிரத்தி லிருந்து, அடக்கத்திற்கும், அடக்கத்திலிருந்து சூக்குமத் திற்கும், சூக்குமத்திலிருந்து சூன்யத்திற்கும் அது

போகும். கர்மமென்பது வேறு, காரியமென்பது வேறு. கர்த்தாவுக்கு எது மிக மிக இஷ்டமானதோ அதுவே கர்மமெனப்படும். கர்மத்தின் விளக்கம் இதுவே. ஸம்ஸ்கிருதத்தில் கர்மத்துடன் (செயப்படுபொருளுடன்) முதல் வேற்றுமை உருபும் இரண்டாம் வேற்றுமை உருபும் இணைந்துவர, காரியத்தைக் குறிக்கும் 'கிரியை'க்கு (பயனிலை) பிரத்யேகமான வினைச்சொல்லை உபயோகிக்க வேண்டியிருக்கிறது.

கர்மத்திற்கும் கிரியைக்குமுள்ள வேறுபாட்டைப் புரிந்து கொள்ளுங்கள். கோபம் வரும்பொழுது ஒருவன் பெருங் கூச்சலிட இன்னொருவன் வாய்திறவாது தன் கோபத்தை வெளியிடுகிறான். ஞானி சிறிதும் காரியம் செய்யாமலே அளவிலடங்காத கர்மம் புரிகிறார். அவரிருந்து வருவதனாலேயே அளவிலடங்காத நன்மைகள் உலகிற்கு விளைய முடிகிறது. ஞானி இருந்து வருவதொன்றே போதியதாயிருக்கிறது. அவருடைய கைகால் முதலிய அவயவங்கள் காரியமெதுவும் செய்யாதிருந்த போதிலும் அவர் காரியம் செய்பவராகிறார். காரியம் சூக்குமம் ஆக ஆக அங்கே கர்மம் பெருகிக் கொண்டே போகிறது. இந்தக் கருத்தை இன்னும் மேலே விவரிக்கும்பொழுது, சித்தம் பூரண சுத்தமாய் விடும்பொழுது இறுதியில் காரியம் அறவே அற்றுப் போக, கர்மம் அளவிலடங்காது வளர்ந்து கொண்டே போகுமென்று சொல்லக் கூடும். முதலில் தீவிரமாயிருந்தது பிறகு சாந்தத் தன்மையும், சாந்த மெய்தியிருந்தது சூக்குமத் தன்மையும், பிறகு சூக்குமமாயிருந்தது சூன்ய நிலையும் என்று தானே காரியத்தின் சூன்யநிலை ஏற்படும். ஆனால் அப்பொழுது அளவிலடங்காத கர்மங்கள் தாமே நடந்துகொண்டிருக்கும்.

புறச்செயல்களினால் அகற்றுவதனால் கர்மங்கள் அகல மாட்டா. பயன் கருதாது கர்மம் புரிந்துகொண்டே போவோமாயின் மெல்லமெல்ல அதை உணர்வோம். கவி ப்ரௌனிங் இயற்றியுள்ள 'வேஷதாரி போப்பாண்டவர்' என்ற கவிதை ஒன்றுண்டு. ஒரு மனிதன் போப்பாண்டவரிடம், "நீங்கள் ஏன் இவ்வளவு அலங்காரம் செய்து கொள்ளுகிறீர்கள்? இந்தச் சொக்காய் எதற்கு? இந்த வேஷமெல்லாம் ஏன்? இந்த மேல் நோக்கிய பார்வை எதன் பொருட்டு?" என்று கேட்டான். அதற்கு அவர், "நான்

இதையெல்லாம் செய்வதற்குக் காரணம் சொல்லுகிறேன் கேள். இந்த நாடகத்தை, இந்த நடிப்பைச் செய்து கொண்டேவருகையில் ஒருநாள் எனக்கும் தெரியாமலே என்னுள் உண்மை பக்தி உதித்துவிடலாமல்லவா ?'' என்று பதில் சொன்னர். ஆகையால் பயனைக் கருதாது காரியங் களைச் செய்துகொண்டே இருக்கவேண்டும். பிறகு மெல்ல மெல்ல செயலற்ற நிலைமை கைகூடும்.

## (104) சாதகனுக்கு சுதர்மமே உபாயம்

கருத்தென்னவென்ருல், தாமஸ, ராஜஸ கர்மங்களை அறவே ஒழித்துவிட்டு ஸாத்விக கர்மத்தைச் செய்ய வேண்டும். மேலும் குறைபாடுள்ளதாயினும் எந்த ஸாத் விக கர்மம் சுலபமாய் இயற்கையாய் நம்முன் வருகிறதோ அதைத் தவிர்த்தல் தவறென்ற விவேகமும் இருந்துவர வேண்டும். குற்றம் நேருகிறதே என்ருல் நேரட்டுமே; அதற்குத் தப்ப விரும்புவாயாஞல் இன்னும் அநேக குற்றங்கள் வந்து உன்னைப் பற்றிக்கொள்ளும். உன் கோணல் மூக்கு அது அமைந்துள்ளபடியே இருந்து வரட்டும்; அதை வெட்டி அழகாய்ச் செய்துகொள்ள முயலுவாயாஞல் அது இன்னும் விகாரமாய்விடும். அது இப்பொழுதுள்ளதே நன்ருய்த்தானிருக்கிறது! ஸாத்விக கர்மங்களை குறைபாடுள்ளவையாயினும் இயற்கையில் அமைந்தவை என்ற காரணத்திஞல் துறக்கக்கூடாது. அவற்றைச் செய்யவேண்டியதே. ஆஞல் அவற்றின் பயனைத் துறந்துவிட வேண்டும்.

இன்னும் ஒரு விஷயம் சொல்லவேண்டியதிருக்கிறது. எந்தக் கர்மங்கள் உனக்கு இயற்கையாய் அமைய வில்லையோ அவற்றை, உனக்கு சுலபமாய்ச் செய்யக் கூடி யவையென்று தோன்றியபோதிலும், செய்யவேண்டாம். உனக்கு இயற்கையாய், சுலபமாய் அமைந்த கர்மங்களை மட்டும் செய். ஓடியாடி அண்டத்தைப் புரட்டுதல் என்ற புதிய கர்மங்களின் சுழலில் சிக்காதே. எந்தக் கர்மங்களை முக்கியமாய் வெட்டியும் இணைத்தும் செய்ய வேண்டியிருக் கிறதோ அவை எவ்வளவுதான் சிறந்தவையாயிருப்பினும் அவற்றிலிருந்து விலகியிரு; அவற்றில் ஆசை கொள் ளாதே. சுலபமாய் இயற்கையிலேயே அமைந்துள்ள காரியங்களின் பயனையே துறக்க இயலும். மனிதன்

இந்தக் கர்மமும் நல்லது அதுவும் நல்லது என்ற ஆசையினுல் நாற்புறமும் ஓடத் தொடங்குவானுனுல் அவனுல் பயனைத் துறக்க எவ்வாறு முடியும்? இதனுல் அவன் வாழ்க்கை முழுவதுமே தோல்வியாய்விடும். பயனைக் கருதி அவன் இந்த பரதர்மமான கர்மங்களைச் செய்ய விரும்பிக்கொண்டே யிருக்க, பயனையும் நழுவவிட்டு விடுவான்; வாழ்க்கையில் எங்குமே அவனுக்கு ஸ்திரத் தன்மை கிட்டாது. சித்தத்தில் அந்தக் கர்மப்பற்று ஒட்டிக் கொண்டுவிடும். ஸாத்விகமான கர்மங்களிலும் லோபம் அல்லது பேராசை தோன்றுமானுல் அந்த ஸாத்விக கர்மங்களையும் அகற்றிவிட வேண்டியதே. அந்தப் பல்வேறு வகையான ஸாத்விக கர்மங்களைச் செய்ய விரும்புவாயானுல் அதிலும் ராஜஸ, தாமஸ அம்சங்கள் வந்து சேர்ந்துகொள்ளும். ஆகையால் உனக்கு இயற்கை யிலேயே ஏற்பட்டுள்ள சுதர்மமான ஸாத்விக கர்மத்தையே செய்.

சுதர்மத்தில் சுதேசி தர்மமும், சுஜாதி தர்மமும் தன் காலம் பற்றிய தர்மமும் அடங்கும். இவை மூன்றும் சேர்ந்தே சுதர்மங்கள் உருவாகின்றன. என் இயற்கைக்கு அனுகூலமாய், பொருத்தமாய் எனக்கு ஏற்பட்டுள்ள கடமை யாது என்பதை சுதர்மத்தை நிர்ணயிக்கும் பொழுது கவனிக்கவேண்டும். உன்னிடத்தில் உனக்கே உரிய ஏதோ ஒரு அம்சமிருப்பதனுலேயே ‘ நீ ’ ‘ நீயாய் ’ இருக்கிருய். ஒவ்வொரு மனிதனிடமும் அவனுக்கே உரிய விசேஷ அம்சமிருக்கும். ஆடு ஆடாயிருந்து வருவதன் மூலமாகத்தான் வளரமுடியும். ஆடாயிருந்து கொண்டே தான் அது தன்னை வளர்த்துக்கொள்ள வேண்டும். ஆடு பசுவாக விரும்புதல் நடக்ககூடியதல்ல. அது தனக்கு இயற்கையிலமைந்துள்ள ஆட்டுத்தன்மையைத் துறக்க முடியாது; இதற்கு அது தன் உடலைத் துறக்க வேண்டி யிருக்கும். புதிய தர்மத்தையும் புதிய பிறவியையும் அது ஏற்கவேண்டியிக்ரும். ஆனுல் இந்த ஜன்மத்திலோ அது ஆடாயிருத்தலே அதற்கு நல்லது. எருதும் பெண் தவளையும் என்ற கதை கேட்டிருக்கிருேமல்லவா? தவளை பருப்பதற்கும் ஒரு அளவுண்டு. அது எருதைப் போல் பருக்க முயலுமானுல் இறந்துதான் போகும். பிறருடைய உருவத்தைப் பார்த்து நடிப்பது சரியல்ல. இதனுலேயே

பரதர்மம் பயங்கரமானது, கொடியது என்று கூறப் பட்டிருக்கிறது.

சுதர்மத்திற்கும் இரண்டு பகுதிகள் உண்டு. ஒன்று மாறக்கூடிய அம்சம், மற்றது மாருதது. நான் இன்றிருப்பதைப்போல் நாளை இரேன். நாளை இருக்கிறபடி மறுநாள் இருக்கமாட்டேன். நான் இடையருது மாறிக் கொண்டே யிருக்கிறேன். பிள்ளைப் பிராயத்திற்கு உரிய சுதர்மம் வளர்ச்சியுறுதல்; வாலிபத்தில் என்னிடம் போதிய கர்மசக்தி யிருக்குமானுல் அதைக் கொண்டு நான் சமூகத் திற்கு சேவை செய்வேன். நடுத்தரவயதில் என் ஞானம் பிறருக்குப் பயன்படும். இவ்வாறு சில சுதர்மங்கள் மாறிக் கொண்டேயிருக்க, இன்னும் சில சிறிதும் மாறமாட்டா. இவற்றையே பழைய சாஸ்திரங்களில் வழங்கும் பெயர் களினுல் அழைப்பதென்ருல் "மனிதனுடைய வர்ண தர்மமும் ஆசிரம தர்மமும்" என்போம். வர்ணதர்மம் மாருமலிருக்க, ஆசிரம தர்மங்கள் மாறிக்கொண்டே யிருக்கும்.

ஆசிரம தர்மங்கள் மாறிக்கொண்டே யிருக்கின்றன என்பதற்கு, நான் பிரம்மசாரித் தன்மையைவிட்டு கிருகஸ்த ஆசிரமத்தில் நுழைகிறேன்; பிறகு கிருகஸ்த ஆசிரமத்தி லிருந்து வானப் பிரஸ்த ஆரசிரமத்திற்கும் அதன்பின் வானப் பிரஸ்த ஆசிரமத்திலிருந்து சந்நியாசத்திற்கும் போகிறேன் என்பது பொருள். இவ்வாறு ஆசிரம தர்மங்கள் மாறிக்கொண்டே யிருந்தபோதிலும் வர்ணதர்மத்தை மாற்றுவதற்கில்லை. எனக்கு இயற்கையாக உள்ள வரம்பை மீறமுடியாது. அம்முயற்சி வீண். உன்னிடம் உள்ள உன் தனித் தன்மையை உன்னுல் விடமுடியாது. இதுவே வர்ண தர்மத்தின் அடிப்படை. வர்ண தர்மம் பற்றிய கருத்து மிகவும் இனியது. "வர்ணதர்மம் சிறிதும் அசைக்கவே முடியாததா? ஆட்டின் ஆட்டுத் தன்மையும் பசுவின் பசுத்தன்மையும் எப்படியோ அப்படியே தான் பிராமணனுடைய பிராமணத் தன்மையும், க்ஷத்திரிய னுடைய க்ஷத்திரியத் தன்மையுமா?" என்று கேட்கிருர்கள். ஆம்; ஆனுல் வர்ணதர்மம் இவ்வளவு உறுதியானதல்ல என்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். இதன் மர்மத்தை நாம் புரிந்து கொள்ளவேண்டும். வர்ண தர்மமென்ற சொல் சமூக ஏற்பாடு பற்றிய ஒருமுறை என்ற வகையில்

கையாளப்படும் பொழுது அதற்கு விதி விலக்குகள் இருக்கத்தான் செய்யும். இத்தகைய விதி விலக்குகளை ஏற்கவே வேண்டியிருக்கும். கீதையும் இந்த விதி விலக்கிற்கு ஒப்பமளித் திருக்கிறது. கருத்தென்னவென்றால், இவற்றிற்குப் புறம்பேயுள்ள தர்மங்கள் எவ்வளவு தான் அழகாயும் அறிவை மயக்குவதாயும் இருந்தபோதிலும் அவற்றின் சுழலில் சிக்கலாகாது.

## (105) பயனைத்துறந்தால் பலமடங்கு பயன் கிட்டும்

பயனைத்துறத்தல் என்ற கருத்தை நாம் இதுவரையில் விவரித்து வந்திருப்பதிலிருந்து கீழ்க்கண்ட முடிவுகள் ஏற்படுகின்றன :—

(1) ராஜஸ, தாமஸ கர்மங்களை அறவே துறத்தல்.

(2) அந்த தியாகத்தின் பயனையும் துறந்து விடுதல்; அதுபற்றிய அகங்காரம் கொள்ளாமை.

(3) ஸாத்விக கர்மங்களைத் துறவாது அவற்றின் பயனைமட்டும் துறத்தல்.

(4) ஸாத்விக கர்மங்கள் குறைபாடுள்ளவையாயினும் பயனைத்துறக்கும் உறுதியோடு அவற்றைச் செய்தல்.

(5) இடையருது பயனைத்துறந்து கொண்டே அந்த ஸாத்விக கர்மங்களைச் செய்துகொண்டு போவோமானல் சித்தம் சுத்தியாகிக் கொண்டேவர தீவிரத்திலிருந்து சாந்தமும் சாந்தத்திலிருந்து சூக்குமமும், சூக்குமத்திலிருந்து சூன்யமும் என்ற கிரமத்தில் இறுதியில் கிரியையே அற்றுப் போகும்.

(6) கிரியை மறைந்துவிடும். ஆனல் உலகத்திற்கு நன்மையென்ற கர்மம் மட்டும் நடந்துகொண்டேயிருக்கும்.

(7) இயற்கையாக நம்மிடம் வந்து சேரும் ஸாத்விக கர்மங்களையே செய்யவேண்டும். எவ்வளவு தான் நல்லதாய்த் தோன்றியபோதிலும் இயற்கையாக நமக்கென ஏற்படாத கர்மங்களிலிருந்து விலகி இருத்தல்வேண்டும். அவைகளின் ஆசை கூடாது.

(8) இயற்கையாக ஏற்பட்ட சுதர்மத்திலும் இரண்டு வகையுண்டு. அவை மாறுபவை, மாருதவை என்பன.

வர்ணதர்மம் மாறுவதில்லை; ஆசிரம தர்மம் மாறிக் கொண்டே யிருக்கிறது. மாறும் சுதர்மத்தை மாற்ற வேண்டும். அதனால் இயற்கை அல்லது சுபாவம் தூயதா யிருந்து வரும்.

இயற்கையோ இடையறாது மாறிக்கொண்டேயிருக்க வேண்டும். அருவி ஓடிக்கொண்டேயிராவிடில் அது நாறத் தொடங்கிவிடும். இதே நிலை ஆசிரம தர்மத்திற்கும் உண்டு. மனிதனுக்கு முதலில் குடும்பம் கிடைக்கிறது. தன் வளர்ச்சியின் பொருட்டு அவன் தன்னை குடும்பத்தின் கட்டுகளில் பிணைத்துக் கொள்ளுகிறான். இங்கே அவன் பல்வேறு அனுபவங்களைப் பெறுகிறான். ஆனால் குடும்பி யான பிறகு அவன் அதிலேயே கட்டுண்டு விடுவானாயின் அழிந்து போவான். குடும்பத்தில் இருத்தல் முதலில் தர்மமாக விருந்தது இப்பொழுது அதர்மமாய்விடும். ஏனெனில் இப்பொழுது அந்த தர்மம் அவனைக் கட்டுவ தாய், அவனுக்கு விலங்காய்விட்டது. மாறவேண்டிய தர் மத்தை ஆசை காரணமாக அவன் விடாது பற்றிக்கொண் டிருப்பானாயின் அதன் விளைவு பயங்கரமானதாயிருக்கும். நல்ல பொருளினிடமும் ஆசை கொள்ளக்கூடாது. ஆசையிலிருந்து கொடிய தீங்கு விளைகிறது. க்ஷய நோயின் கிருமிகள் நம் தவறினால் நுரையீரல்களில் புகுந்து விடுமாயின் அவை அங்கே போய் நம் உயிர் முழு வதையுமே குடித்துவிடும். அவ்வாறே ஆசையின் அல்லது ஆஸக்தியின் கிருமிகள் நம் அஜாக்கிரதையினால் ஸாத்விக கர்மத்தில் புகுந்துவிடும்பொழுது அதனால் சுதர்மம் உளுக்க ஆரம்பித்துவிடும். அந்த ஸாத்விக சுதர்மத்திலும் ராஜஸ, தாமஸங்களின் துர்நாற்றம் தோன் றத் தொடங்கிவிடும். ஆகையால் குடும்பமென்ற இந்த மாறும் சுதர்மம் உரிய சமயத்தில் நம்மைவிட்டு அகன்று விடவேண்டும். இதே தான் நாட்டு தர்மத்திற்கும். நாட்டு தர்மத்திலும் ஆசை வந்து சேருவதனால் நாம் நம் நாட்டின் நலனை மட்டுமே கருதத் தொடங்குவோமானால் இந்த நாட்டுப் பற்றும் மிகவும் கொடியதாய்விடும். இத னால் ஆன்ம வளர்ச்சி தடைப்படும். சித்தத்தில் ஆசை இடம் பெற்றுவிட நாம் அத பாதளத்தில் வீழ்ந்து விடு வோம்.

## (106) சாதனையின் முடிவே சித்தி

கருத்தென்னவென்றால், வாழ்க்கையின் பயனை, குறிக் கோளைப் பெற விரும்பினாயானால் பயனைத் துறத்தலென்ற சிந்தாமணியைப் பற்றிக்கொள்; அது உனக்கு வழி துலக்கி உதவும். பயனைத் துறத்தலென்ற இத்தத்துவம் உனக்குள்ள வரம்பையும் உனக்குச் சொல்லுகிறது. இந்த விளக்கு அருகிலிருக்குமானால் எந்தக் காரியத்தைச் செய்ய வேண்டும், எதைச் செய்யக்கூடாது, எதை எப்பொழுது மாற்றவேண்டும் என்பதெல்லாம் தானாகவே தெரியவரும். ஆனால் இப்பொழுது வேறொரு விஷயத்தைக் குறித்து நாம் சிந்திக்கப் போகிறோம். கிரியைகள் அனைத்துமே மறைந்து போகும் எந்த இறுதிநிலையுண்டோ அதை சாதகன் கருத்தில்கொள்ள வேண்டுமா, வேண்டாமா? எந்த நிலையில் காரியம் செய்யாமலே ஞானியினால் அள விடமுடியாத கர்மங்கள் நடைபெறுகின்றனவோ அந்த நிலையை சாதகன் கருத்தில் கொள்ளவேண்டுமா, வேண் டாமா?

வேண்டாம். இங்கு பயனைத்துறத்தலென்ற உரை கல்லையே பயன்படுத்திக்கொள். நம் வாழ்க்கையின் தன்மை வெகு நேர்த்தியாய் அமைந்திருப்பதாகையால் நாம் கவனம் செலுத்தாதிருந்தபோதிலும் நம் தேவைகள் நமக்குக் கிடைத்துவரும். வாழ்க்கையினால் எய்த வேண் டிய மிகப்பெரிய பயன் மோட்சம். அந்த மோட்சத்திற் கும் அந்த அகர்ம நிலைக்கும் நாம் லோபம் அல்லது பேராசை கொள்ளலாகாது. அந்நிலை தானாகவே, நமக்குத் தெரியாமலே நமக்குக் கிடைத்துவிடும். சந்நியாசமென் பது இரண்டு மணி அடித்து ஐந்து நிமிஷமானதும் திடீ ரென நம்மிடம் வந்து சேருமென்று சொல்லக்கூடிய ஒரு பொருளன்று. சந்நியாசம் எந்திரத்தினால் இயங்கும் ஒரு வஸ்துவல்ல. அது உன் வாழ்க்கையில் எவ்வாறு வளர்ந்து கொண்டே போகிறது என்பதுகூட உனக்குத் தெரியாது. ஆகையால் மோட்சம் பற்றிய கவலையை விட்டுவிடு.

பக்தனோ எப்பொழுதும் ஆண்டவனிடம், “ எனக்கு உன் பக்தியே போதும். மோட்சமென்ற அந்த இறுதிப் பயன் எனக்குத் தேவையில்லை ” என்றே சொல்லுகிறான். மோட்சமும் ஒருவகை விடுதலைதானே? மோட்சமும் ஒரு

வகை போகம் அல்லது பயனேயல்லவா? இந்த மோட்ச மென்ற பயனையும் பயனைத் துறத்தலென்ற கத்தரி கொண்டு துணித்துவிடு; ஆனால் இதனால் மோட்சம் போய்விடாது. கத்தரி ஒடிந்துபோக, பயன் மேலும் உறுதிபெற்றுவிடும். மோட்சத்தின் ஆசையை நீ விடும் பொழுது உனக்குத் தெரியாமலே நீ மோட்சத்தை நோக்கிப் போவாய். சாதனையிலேயே முற்றிலும் ஆழ்ந்து போவதனால் உனக்கு மோட்சத்தின் நினைவே இல்லாமற் போய்விடும்பொழுது மோட்சம் தானே உன்னைத் தேடிக் கொண்டு வந்து உன் எதிரில் நிற்கும். சாதகன் சாதனையி லேயே மகிழ்ந்திருப்பானாகை. ‘मा ते संगोऽस्त्वकर्मणि’ (மாதே ஸங்கோஸ்த்வகர்மணி)

பகவான் முதலிலேயே அகர்ம நிலை அல்லது மோட்சத்திலும் ஆசை வையாதே என்று சொல்லியிருக் கிறார்.

இப்பொழுது மீண்டும் இறுதியில், “अहं त्वा सर्व पापेभ्यो मोक्षयिष्यामि मा शुचः” (அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மாசுச:) நான் மோட்ச மளிக்கும் சமர்த்தன் அல்லது யஜமானன்; “நீ மோட்சத் தைப்பற்றிக் கவலைப்படாதே; நீ சாதனையைப்பற்றி மட் டும் சிந்தித்தால் போதும்” என்கிறார்.

மோட்சத்தை மறப்பதனால் சாதனை சிறந்ததாகி அது தானே வலிக்கப்பட்டு மோகமுற்று உன்னிடம் வந்து சேரும். மோட்சத்தில் ஆசையின்றி சாதனையிலேயே ஆழ்ந்திருக்கும் சாதகன் கழுத்தில் மோட்சஇலட்சுமி ஜயமாலையை அணிவிக்கிறாள்.

சாதனையின் எல்லையை எட்டிப் பிடித்துவிடும்பொழுது சித்தி அங்கே கை கட்டிக்கொண்டு நிற்கும். வீடுபோய்ச் சேரவேண்டியவன் மரத்தடியில் நின்றுகொண்டு “வீடு வீடெ”ன்று ஜபித்துக்கொண் டிருப்பானாயின் அவன் வீட்டிற்குப் போவது ஒருபுறம் நிற்க, அவன் காட்டிலேயே இருக்கவேண்டிய சந்தர்ப்பம் ஏற்பட்டுவிடும். வீட்டை நினைத்துக்கொண்டே வழியில் களைப்பாறத் தொடங்கி விடுவாயானால் அந்த இறுதி ஓய்வு ஸ்தானத்திலிருந்து நீ விலகியே இருந்துவிடுவாய். நான் நடக்கும் காரியத் தைச் செய்துகொண்டே இருக்கவேண்டும். இதன் மூல

மாகவே வீடு ஒருசமயம் திடீரென எதிரில் வந்து சேரும். மோட்சத்தைப்பற்றி, சோம்பேறித்தனமாய் எண்ணுவதனுல் என் முயற்சியில், என் சாதனையில் சோர்வு சேர்ந்து கொள்ள மோட்சம் என்னிடமிருந்து விலகிப்போகும். மோட்சத்தைக் கவனியாது சாதனையில் இடையருது முயலுதலே மோட்சத்தை அருகிலழைப்பதற்கு வழி. அகர்ம நிலையில் ஓய்ந்து உட்காருவதில் ஆசைகொள்ளாதே. சாதனையிலேயே பற்றுக்கொள்வாயானுல் மோட்சம் எதிரில்வந்து நிற்கும். "பதில்! பதில்!" என்று கத்துவதனுல் கேள்விக்கு பதில் கிட்டாது. அதற்கென எனக்குக் கிடைத்துள்ள முறையின் மூலமாகவே அது படிப்படியாய் எனக்குக் கிடைக்கும்; அந்த முறை முடிவு பெறுமிடத்தில் விடை தானே வந்து நிற்கும். முடிவுக்கு முன்னுல் முடிவு எப்படி ஏற்படும்? முறையைச் செய்வதற்கு முன்னரே விடை யெப்படிக் கிடைக்கும்? சாதக நிலையில் சித்த நிலை எப்படிக் கைகூடும்? நீரில் மூழ்கிக்கொண்டிருக்கையில் அக்கரையிலுள்ள இன்பங்களில் கவனம்செல்லுமானுல் கரை சேருவதெப்படி? அந்த சமயத்தில் கையை வீசிப் போட்டு முன்னே செல்லுவதில் அல்லவா முழு கவனத்தையும், சக்தியையும் செலவிடவேண்டும்? முதலில் சாதனையைப் பூர்த்தி செய்; கடலைத் தாண்டு; மோட்சம் தானே உன்னிடம் வந்து சேரும்.

## (107) சித்தனின் மூவகை நிலை

ஞானியின் இறுதி நிலையில் எல்லாக் காரியங்களும் மறைந்துவிடுகின்றன; சூன்ய நிலையை எய்தி விடுகின்றன. ஆனுல் இறுதி நிலையில் காரியங்கள் நடைபெறுவதேயில்லை என்பது இதன் பொருளல்ல. அவன் மூலமாக காரியம் நடக்கவும் செய்யும், நடைபெருமலுமிருக்கும். இறுதி நிலை மிகவும் ரமணீயமானது, உயர்ந்தது. இந்நிலையில் எது நடந்தபோதிலும் அவனுக்கு அதைப்பற்றிக் கவலை ஏற்படுவதில்லை. நடப்பதெல்லாம் நன்மையாயும் நேர்த்தியாயுமே இருக்கும். சாதனையின் இறுதி எல்லையில் அவன் அப்பொழுது நிற்பவனுகிருன். அங்கே எல்லாவற்றையும் செய்தும் அவன் ஒன்றுமே செய்வதில்லை. சம்ஹாரம் செய்தபோதிலும் அவன்

சம்ஹாரம் செய்வதில்லை; நன்மையைச் செய்தபோதிலும் நன்மையைச் செய்வதில்லை.

இந்த இறுதி மோட்சநிலையே சாதகனுடைய சாதனையிலும் இறுதி எல்லையாகும். சாதனையின் இறுதி எல்லை என்பதற்கு சாதனை சுலபமாய் இயற்கையாய் அமைதல் என்பதே பொருள். அங்கே 'நான் ஏதோ செய்கிறேனே'ன்ற எண்ணமும் இருப்பதில்லை. அல்லது இந்த நிலையை நான் சாதகனுடைய சாதனையின் 'அநீதி' நிலை யென்று அழைப்பேன். சித்த நிலை நீதி நிலையல்ல. சிறு குழந்தை உண்மை பேசுகிறான். ஆனால் அவன் அதனால் நீதி வழுவாதவன் ஆகமாட்டான். ஏனெனில் பொய்யென்றால் என்ன என்பதையே அவன் அறியான். அசத்தியத்தை அறிந்திருந்தும் சத்தியம் பேசுதலே நீதிக்கொத்த கர்மமாகும். சித்த நிலையில் அசத்தியமென்பதே இல்லை. அங்கே இருப்பது சத்தியமே. ஆகையால் அங்கே நீதிக்கு இடமில்லை. இழிந்த பொருளினால் அங்கே நிற்கவே முடியாது. எதைக் கேட்க விரும்பவில்லையோ அது காதில் புகவே செய்யாது; பார்க்க விரும்பாதவைகளை கண்கள் பார்க்கவே மாட்டா; நடக்கவேண்டிய காரியமே கையினால் நடைபெறும். அதற்கென முயலவேண்டி யிருப்பதில்லை. தவிர்க்க வேண்டியதைத் தள்ளவேண்டி வருவதில்லை, அது தானே விலகிவிடுகிறது. இதுவே நீதி சூன்யமான நிலை எனப்படுவது. இந்த சாதனையின் எல்லைக் கோடான சகஜ இயற்கை நிலையில் நீதியற்ற அல்லது நீதியை மீறிய நிலையிலேயே நீதியின் பூர்ண வளர்ச்சியை, உயர்வைக் காண்கிறோம். இந்த நீதியை மீறிய நிலையென்ற வர்ணனை மிகவும் பொருத்தமானதாய் அமைந்துவிட்டது; அல்லது இந்த நிலையை ஸாத்விக சாதனையின் ஸத்வமற்ற நிலையென்று அழைக்கலாம்.

இந்நிலையை வர்ணிப்பது எப்படி? கிரகணம் பிடிப்பதற்கு முன் அதன் மூட்டம் ஏற்படுவதைப்போல உடல் வீழ்ந்த பிறகு வரப்போகும் மோட்சநிலையின் நிழல் உடலின் வீழ்ச்சிக்கு முன்னமேயே படரத் தொடங்கிவிடுகிறது. உடலிருக்கும்பொழுதே வரப்போகும் மோட்சநிலையின் உணர்வு ஏற்படத் தொடங்குகிறது. இந்நிலையை வர்ணிக்கையில் வாக்கு தடுமாறுகிறது. அவன் எவ்வளவுதான் ஹிம்சை புரிந்தபோதிலும் ஒன்றுமே புரியாதவனாகிறான்.

அவனுடைய செயலை எந்த அளவுகோலினால் இப்பொழுது அளப்பது? அவன் செய்யும் காரியங்களெல்லாமே ஸாத்விகமாகத்தான் இருக்கும். எல்லாக் காரியங்களும் அற்றுப் போன பின்பும் அவன் அகில உலகிற்கும் நன்மை புரிவான். இதையெல்லாம் எவ்வாறு வெளியிடுவது, எச் சொற்களினால் விளக்குவது என்பதே புரியவில்லை.

இந்த இறுதி நிலையில் மூன்று தன்மைகளிருக்கின்றன: ஒன்று வாமதேவருடைய நிலை. "இந்த சிருஷ்டியிலிருப் பவை அனைத்தும் நானே" என்ற அவருடைய வாக்கு பிரசித்தமானது. ஞானி அகங்காரமற்றவனாய் விடுகிறான். அவனுக்கு உடற்பற்று போய்விடுகிறது. காரியங்களனைத் தும் முற்றுப் பெற்றுவிடுகின்றன. இந்த சமயத்தில் அவன் ஒரு பாவ அல்லது உணர்ச்சி நிலையை எய்துகிறான். அந்த நிலை ஒரு உடலில் அடங்கக்கூடியதல்ல. பாவநிலை செயல் நிலையல்ல; பாவ நிலையென்பது மேலோங்கிய பாவனையின் நிலையாகும். இந்த பாவம் அல்லது உணர்ச்சி நிலையை நாம் ஓரளவு உணரக்கூடும். குழந்தையின் குற்றத்தினால் தாய் குற்றமுள்ளவளாகிறாள்; குணத்தினால் குணமுள்ளவ ளாய், துக்கத்தினால் தான் துக்கமுற்று அதன் மகிழ்ச்சி யினால்தான் மகிழ்கிறாள். தாயின் இந்த பாவ நிலை தன் குழந்தையோடு நின்றுவிடுகிறது. தன் குழந்தையின் குற்றங்களை அவள் தன் குற்றமாக எண்ணிக்கொள்ளு கிறாள். ஞானியும் பாவனையின் பெருக்கினால் அகில உலகின் குற்றங்களையும் தானே ஏற்றுக் கொள்ளுகிறான்.

மூன்று உலகங்களின் பாவங்களினால் அவன் பாவி யாயும் புண்ணியத்தினால் புண்ணியவானாயும் ஆன போதிலும் மூவுலகின் பாவ புண்ணியங்களில் எதுவும் அவனைத் தீண்டுவதில்லை. ருத்திர சூத்திரத்தில் ரிஷி,

"यवाश्च मे तिलाश्च मे गोधूमाश्च मे"

(யவாம்ச மே திலாம்ச மே கோதூமாம்ச மே)

"எனக்கு யவையைத் தா, எள்ளைத் தா, கோதுமை தா" என்கிறார். இவ்வாறு கேட்டுக்கொண்டேயிருக்கும் ரிஷியின் வயிறு எவ்வளவு பெரியதாயிருக்கும்! ஆனால் இவ்வாறு கோருவோர் மூன்றரை முழம் அளவுள்ள உடலைத் தாங்கி யவர். அவருடைய ஆன்மா சிருஷ்டியெங்கும் வியாபித்துப் பேசுகிறது. இதை நான் "வேதவிச்வார்த்த பாவ"மென்று

அழைக்கிறேன். வேதங்களில் இந்த பாவனையின் சிகரத்தைக் காண்கிறோம். குஜராத்தி மஹானுன நரஸிமேத்தா பாடி வருகையில் 'பாபஜி பாபமே கவண கீதா ஹமே நாம லேதா தாரும் நித்ரா ஆவே'—"ஏ ஆண்டவனே, உன் துதியைப்பாடும் சமயத்திலும் எனக்கு உறக்கம் வரும் படியாக நான் அப்படி என்ன பாவம் செய்தேன்?" என்று கேட்கிறார். நரஸிமேத்தாவுக்கா தூக்கம் வந்தது? தூக்கம் வந்தது கேட்டுக் கொண்டிருந்தவர்களுக்கே. ஆனால் தம் பஜனையைக் கேட்போர் வேறு, தாம் வேறு என்று இல்லாத ஒருமை நிலையிலிருந்துகொண்டு நரஸிமேத்தா கேட்கிறார். இது அவருடைய பாவநிலை. ஞானியினுடைய பாவநிலை இதேவகையில் தானிருக்கும். இந்த பாவநிலையில் எல்லாப் பாவ புண்ணியங்களும் அவர் மூலமாய் நடைபெறுவது போலவே உனக்குத் தோன்றும். அவரும் இப்படியேதான் சொல்லுவார். அந்த ரிஷி, "செய்யத்தகாத எத்தனையோ காரியங்களை நான் செய்திருக்கிறேன், செய்கிறேன், செய்வேன்" என்று சொல்லுகிறாரல்லவா? இந்த பாவநிலை கிட்டியதும் ஆன்மா பட்சியைப்போல் பறக்கத் தொடங்குகிறது. அது பூமிக்குரிய வரம்புகளைக் கடந்துவிடுகிறது.

இந்த பாவ நிலையைப் போன்று ஞானிக்குச் செயல் நிலை ஒன்றும் உண்டு. ஞானி இயற்கையாகவே செய்யக் கூடியதென்ன? அவன் செய்வதெல்லாம் ஸாத்விகமானதாகவேதானிருக்கும். மானிட உடலின் வரம்பினுள் அவன் இன்னும் அடங்கியிருந்த போதிலும் அவன் உடல் முழுவதும் அவனுடைய புலன்களனைத்தும் ஸாத்விகமாய் விட்டதனால் அவனது செயல்களெல்லாம் ஸாத்விகமானதாகவே இருக்கும். விவகார நோக்குடன் பார்ப்போமானால் ஸாத்விகத்தின் எல்லைக்கோடு அவனுடைய விவகாரங்களில் காணக்கிடைக்கும். ஆனால் விச்வாத்ம பாவநோக்குடன் பார்ப்போமானால் மூவுலகின் பாவ புண்ணியங்களையும் அவன் செய்துங்கூட அவன் அவற்றின் தொடர்பின்றி இருப்பது தெரியவரும். ஏனெனில் ஒட்டிக் கொண்டிருக்கும் இவ்வுடலை அவன் கழற்றி எறிந்தாகி விட்டது. இழிந்த உடலைக் கழற்றி எறியும்பொழுது தானே அவன் விச்வரூபம் பெற்றோனுவான்.

பாவ நிலை, செயல் நிலை என்ற இவற்றைத் தவிர

மூன்றும் நிலை ஒன்றும் ஞானிக்கு உண்டு. அதுவே ஞான நிலை என்பது. இந்நிலையில் அவன் பாவத்தையும் பொறுப்பதில்லை, புண்ணியத்தையும் பொறுப்பதில்லை; அவன் எல்லாவற்றையுமே உதறி எறிந்து விடுகிறான். இந்த சிருஷ்டி அனைத்திலும் தீயிட்டுப் பொசுக்கவும் அவன் சித்தமாய் விடுகிறான். எந்தக் கர்மத்தின் பொறுப்பையும் ஏற்க அவன் சித்தமாயிருப்பதில்லை; அதை அவன் தீண்டவும் ஒப்புவதில்லை. ஞானியினுடைய மோட்ச நிலையில், சாதனையின் எல்லையை எட்டிப்பிடித்த பொழுது இம் மூன்று தன்மைகள் சாத்தியமாயுள்ளன.

இந்தச் செயலற்ற நிலை, இறுதி நிலை கிடைப்பதெப்படி? நாம் எந்தெந்த கர்மங்களைப் புரிகிறோமோ அவற்றைப் புரிபவர் நாமே என்று எண்ணுதிருக்கப் பழக வேண்டும். “ நான் ஒரு நிமித்தமே, இடையில் வந்தவனே. கர்மத்தின் செயல் பொறுப்பு என்மீதில்லை ” என்று எண்ணிக் கொண்டே இருக்கவேண்டும். முதலில் செயலில் பொறுப்பை ஏற்காதிருக்கப் பழகுவதற்கு, பணிவு என்ற அடிப்படையை அமைக்க வேண்டும். ஆனால் இதனாலேயே செயல் பொறுப்பு முழுமையும் போய்விடுமென்று சொல்வதற்கில்லை. மெள்ள மெள்ள இந்த பாவனை வளர்ந்து கொண்டே வரும். முதலில் நான் மிகவும் இழிந்தவன், அவன் கையிலுள்ள பாவை, அவன் ஆட்டி வைக்க ஆடும் பொம்மை என்ற அனுபவம் ஏற்படட்டும். இதன் பிறகு செய்யப்படும் இவை எல்லாம் உடலால் நிகழ்கின்றன; எனக்கும் அதற்கும் சம்பந்தமே இல்லை என்று உணர முயற்சி செய். இந்தக் காரியங்களெல்லாம் இந்தச் சவம் செய்தவை; ஆனால் நான் சவமல்ல, சிவம் என்ற பாவனையைச் செய்து கொண்டே இரு. உடலின் தொடுகையில் ஒரு சிறிதும் சிக்காதே. இவ்வாறனதும் உடலுடன் சம்பந்தம் எதுவுமே இல்லாதது போன்ற ஞானியின் நிலை கிட்டிவிடும். அந் நிலையில், மீண்டும் மேலே அதே மூன்று நிலைகள் ஏற்படும். முதலில் அதன் செயல் நிலை; அதில் அவன் மூலமாக மிகவும் தூய, மிகச்சிறந்த காரியம் நடைபெறும். இரண்டாவது பாவநிலை; அதில் மூவுலகின் பாவ புண்ணியங்களை நான் செய்கிறேனென்ற உணர்ச்சி ஏற்பட்ட போதிலும் அவை அவனை ஒரு சிறிதும் தொடமாட்டா. மூன்றுவது அதனுடைய ஞானநிலை. அதில் அவன்

ஒரு சிறு கர்மமும் தன்னருகில் இருக்க அனுமதியான். அவன் எல்லாக் கர்மங்களையும் பொசுக்கி எறிந்துவிடு வான். இம் மூன்று நிலைகளின் மூலமாயும் ஞானியை வர்ணிக்கக்கூடும்.

## (108) “ நீயே...நீயே...நீயே ”

இப்பொழுது இவை அனைத்தையும் சொல்லியான பிறகு பகவான் அர்ஜுனனிடம், “ அர்ஜுனா, நான் உனக்குச் சொல்லி வந்தவை அனைத்தையும் கவனமாய்க் கேட்டாயல்லவா ? இப்பொழுது நன்கு சிந்தித்து உனக்குச் சரியென்று தோன்றுவதைச் செய் ” என்கிறார். இவ்வாறு பகவான் தாராள மனதுடன் அர்ஜுனனுக்கு சுதந்திர மளித்து விட்டார். பகவத்கீதையிலுள்ள விசேஷம் இதுவே. ஆனால் பகவானுக்கு மீண்டும் தயை வந்து விட்டது. அளிக்க விருந்த சுதந்திரத்தை அவர் திரும்பப் பெற்றுக் கொண்டார். அவர், “ அர்ஜுனா, நீ தன் விருப்பம், சாதனை ஆகிய அனைத்தையும் விட்டு விட்டு என்னைச் சரணடை ” என்றார். இவ்வாறு தம்மிடம் சரண் புகும்படி தூண்டி, தானே கொடுக்கவிருந்த சுதந்திரத்தைத் திரும்பப் பெற்றுக்கொண்டுவிட்டார். இதன் பொருள் “ நீ உன் மனதில் சுதந்திரமாக விருப்பமெதுவுமே எழச் செய்யாதே. ‘ என் விருப்பமல்ல, அவன் விருப்பமே நடக்கட்டும் ’ என்று இரு ” என்பதே. எனக்கு தானே ‘ இந்த சுதந்திரம் எனக்கு வேண் டாம். நான் என்பதேயில்லை. எல்லாம் நீயே ’ என்ற அனுபவம் ஏற்பட வேண்டும். அந்த ஆடு உயிர் வாழும் பொழுது “ மே, மே, மே ......” என்று கத்துகிறது. அதாவது “ நான், நான் நான் ” என்று சொல்லுகிறது. ஆனால் இறந்த பிறகு, அதன் நரம்பை நாணகத் திரித்து வில்லில் பூட்டிய பிறகோ அது, “ துஹீ, துஹீ, துஹீ, நீயே, நீயே, நீயே ” என்று சொல்லுகிறதென்று தாது கூறுகிறார். இப்பொழுதோ, எல்லாம் “நீயே, நீயே, நீயே” தான்.

ஞாயிறு, 19–6–’32.

---

# அநுபந்தம்

## குண விளக்கம்

['கீதைப் பேருரைகள்' அத்தியாயம் இரண்டு, பக்கம் 24-ல் ரஜோ குணமும் தமோ குணமும் ஒப்பிடப்பட்டிருக்கிறதே, அதைப் படித்த ஒருவர் தமக்கு எழுந்த சங்கையை விநோபாஜிக்குத் தெரிவித்தார். அவர் எழுப்பிய சங்கையும் விநோபாஜி அளித்த சமாதானமும் கீழே தரப்படுகின்றன.]

சங்கை : 'கீதைப் பேருரைகள்' அத்தியாயம் இரண்டில் கர்மம் புரிகிறவர்களின் இருவகைப் போக்கைக் கூறும் முகத்தான் நீங்கள் ரஜோ குணத்தையும் தமோ குணத்தையும் ஒப்பிட்டிருக்கிறீர்கள். 'பெற்றால் பயனுடன் சேர்த்தேதான் பெறுவேன்' என்பது ரஜோ குணத்தின் தன்மை என்றும், 'விட்டால் காரியத்தையும் சேர்த்தே தான் விடுவேன்', என்பது தமோகுணத்தின் தன்மை என்றும் கூறியிருக்கிறீர்கள். இரண்டு போக்குகளினிடையிலும் வேற்றுமையில்லை யென்று நீங்களும் சொல்லுகிறீர்கள். இரு போக்குகளுமே ரஜோ குணத்தில் அடங்கிவிடுகின்றன என்பது என் அபிப்பிராயம். 1, 3, 9, என்ற கணக்குப்போல தமோ குணம், ரஜோ குணம், ஸத்வ குணம் ஆகியவை ஒன்றுக்கொன்று வெகு தொலைவிலுள்ளவை. ரஜோ குணமும் தமோ குணமும் ஒரேப்போக்கின் ஆக்கம் அழிவு என்ற மாறுமுகங்களாக மாட்டா. கர்மத்தைப் புரிந்து பயனைத் துறத்தல் என்பது ஸத்வ குணம். 'ஏற்றால் பயனுடனேயே ஏற்பேன்' என்பதும் 'விட்டால் கர்மத்துடனேயே விடுவேன்' என்பதும் ரஜோ குணத்திலேயே அடங்கவேண்டும். 'பயனைமட்டும் பெறுவேன்; ஆனால் கர்மம் புரியமாட்டேன்' என்ற போக்கு தமோகுணமாகும். இதிலிருந்து வேறான போக்கொன்றும் இருக்கக் கூடும். அதுதான் அலட்சிய புத்தி என்பது. அது காரணமாக கர்மம் செய்தால் செய்தோம், இல்லாவிட்டால் இல்லை; பயனிடத்தில் விருப்பமோ அக்கரையோ, தேவை

யுணர்ச்சியோ மோகம் முதலியவையோ இருப்பதில்லை. இதற்கு மாருக, பயன் கிட்டுமாஞல் ஏற்ருல் ஏற்ரும் இல்லாவிட்டால் இல்லை; கர்மத்தின் அவசியமோ, கர்மம் புரிந்தாகவேண்டுமென்ற பொறுப்புணர்ச்சியோ தோன்றுவ தில்லை. இந்தப் போக்கு மனதின் நிலையை அனுசரித்து மூன்று குணங்களிலும் இருத்தல் சாத்தியமே. ஞான சூன்ய நிலையில் இந்தப் போக்கு தமோ குணத்திற்கும் ஒருபடி கீழே இறங்கிவிட, தியான நிலையிலோ இது ஸாத் விக போக்கினும் ஓங்கி நிற்கும்.

சமாதானம்: உமது கருத்தோட்டம் எனக்குப் பிடித் தது. முக்குணங்களைப் பற்றிப் பலவகையில் ஏற்கெனவே ஆராயப்பட்டிருக்கிறது; அவ்வாறு ஆராய்தல் கூடும். தமோ குணத்தைவிடத் தாழ்ந்ததோ அல்லது ஸத்வ குணத்தைவிட ஓங்கியதோ ஆன போக்குகள் இருப்பதாகக் கருதப்படுவதில்லை. உலகனைத்தையும் முக்குணங்களுள் பகுக்கவேண்டும். முக்குணங்களின் தொடர்பற்ற நிலை யொன்றுண்டு. அதைக் குணங்களைக் கடந்த நிலை யென்று உணரவேண்டும். அந்நிலையில் எத்தகைய விருத்தி அல்லது போக்கும் இராதாகையால் அது நிவிருத்தி அல்லது போக்கற்ற நிலை எனப்படுகிறது. ஆனல் நிவிருத்தி என்பது பிரவிருத்திக்கு மாருனதல்ல. பிர விருத்திக்கு மாருனதும் ஒருபோக்கே; அதை தமோ குணம் எனல் வேண்டும்.

இதுவரையில் சொன்னதை முன்னுரையாக வைத்துக் கொண்டு முக்கியமான பிரச்னைக்கு வருவோம். தத்துவ ரீதியில் முக்குணங்களே பிரகிருதி அல்லது இயற்கையை உருவாக்குகின்றன. இயற்கையில் மூன்றும் ஒரே வகையில் தேவையே. இருக்கை, போக்கு, ஒளி ஆகிய மூன்றும் சேர்ந்து வாழ்க்கை அமைகிறது. இது தத்துவ நோக் காகும். இதில் மேல், கீழ் என்ற வேற்றுமை எதுவுமே இல்லை.

நீதி நோக்கு இதிலிருந்து வேருகும். இந்நோக்கின் படி தமம், ரஜம், ஸத்வம் என்ற இவை ஒன்றுக்கொன்று உயர்ந்த குணங்களாகும். சாதாரணமா இம் முறையி லேயே மக்கள் சிந்திக்கிருர்கள்.

சிருஷ்டி தத்துவத்தை விளக்கும் இயற்கை அல்லது

தத்துவ நோக்கொன்று, நீதி நோக்கொன்று ஆகிய இவ் விரண்டிலிருந்தும் வேறுபட்ட சாதனை நோக்கொன்றும் உண்டு. அதன்படி ரஜமும், தமமும் ஒன்றுக்கொன்று விளைவாகவோ, உரை கல்லாகவோ, ஒன்றை யொன்று நிரப்புபவையாகவோ உள்ளன. அவை இரண்டும் சேர்ந்து அமைவது ஒன்றே. ரஜோ குணம் களைக்க தமோ குணமும், தமோ குணம் களைக்க ரஜோ குணமும் தோன்றுகின்றன ; இவை யிரண்டிலிருந்தும் ஸத்வ குணம் வேறாகும். அதுவே சாதகர்களுக்கு உற்ற தோழன். ரஜோ குணமும் தமோ குணமும் சேர்ந்து அசுர சம்பத்தாக, ஸத்வ குணம் தேவ சம்பத்தாகிறது. இவற்றினிடையே பூசல் நடந்தவண்ணமிருக்கிறது.

கீதையில் இயற்கை, நீதி, சாதனை ஆகிய மூன்று வகையிலும் சிந்தனை செய்யப்பட்டிருப்பதைக் காண் கிறோம். நானோ இயற்கை முறையை விட்டு, நீதி சாதனை ஆகிய நோக்குடனேயே பெரிதும் சிந்தித்துக்கொண்டிருக் கிறேன். ஒரு சமயம் நீதி நோக்குடனும், ஒரு சமயம் சாதனைக் கருத்துடனும் என் சிந்தனை நடைபெறும். சங்கை எழுந்த இடத்தில் உள்ளது சாதனை நோக்காகை யால் ரஜோ குணமும் தமோ குணமும் ஒன்றெனக் கருதப் பட்டிருக்கின்றன.

* * * * *

# எமது காந்தீய—ஸர்வோதய இலக்கியம்

## காந்திஜி எழுதியவை

| | ரூ. | அ. |
|---|---|---|
| ஸர்வோதயம் | ... 0 | 5 |
| (ரஸ்கினின் 'Unto This Last' இன் சாரம்) 3-ம் பதிப்பு | | |
| ஆசிரம வாழ்க்கை | ... 1 | 4 |
| (சத்தியாக்ரஹ ஆசிரமத்தின் சரித்திரம், ஆசிரம தத்துவங்களின் விரிவான விளக்கம்) | | |
| ராட்டை—தத்துவ விளக்கம் | ... 1 | 4 |
| (ஸ்ரீகிருஷ்ணதாஸ் ஜாஜூஜி தொகுத்ததின் மொழி பெயர்ப்பு; காந்திஜி ராட்டைத் தத்துவத்தைப் பற்றி எழுதியதும் பேசியதும்) | | |
| ராமநாமம் | (அச்சில்) | |
| (பாபுவின் கட்டுரைகளும், சொற்பொழிவுகளும், கடிதங்களும் அடங்கியது) 2-ம் பதிப்பு. | | |
| நீதி தர்மம் | (அச்சில்) | |
| (காந்திஜி குஜராத்தியில் எழுதியதன் மொழி பெயர்ப்பு) 3-ம் பதிப்பு | | |
| சமூகத்தில் ஸ்திரீகளின் ஸ்தானம் | ... 0 | 4 |
| (தொகுத்தவர்: சங்கர்லால் பேங்கர்) பாக்கெட் சைஸ் —நான்காம் பதிப்பு | | |
| சர்க்காவும் அஹிம்சா சமுதாயமும் | ... 1 | 0 |
| ('புதிய கதரியக்கம்' என்னும் 'தினமணி வெளியீட்டி'ன் புதிய திருந்திய பதிப்பு) | | |
| காந்தி ஆசிரம பஜனாவளி | (அச்சில்) | |
| (நாகரியிலும் தமிழிலும் சுலோகங்கள்; தெளிவான தமிழ் அர்த்தம் கொண்டது) 4-ம் பதிப்பு. | | |

## கஸ்தூரிபாவின் சரித்திரம்

| | | |
|---|---|---|
| எமது பா முதல் பாகம் | ... 1 | 4 |
| ,, இரண்டாம் பாகம் | ... 1 | 4 |

(வனமாலா பரீக், ஸுசீலா நய்யார் எழுதியது. "பல இடங்களிலிருந்து வேறு எவருக்கும் கிடைத்திராத பல செய்திகளைச் சேகரித்து, அழகுபெற வர்ணித்திருப்பதை இதில் காண்கிறேன்" என்று காந்திஜி பாராட்டியது)

## காந்திஜியைப் பற்றியவை

ரூ. அ.

**காந்திக் காட்சிகள்** ... 1 4
(காகா காலேல்கர் எழுதியது; காந்திஜியுடன் ஏற்பட்ட அனுபவங்களும் கேள்விப்பட்டவையும்; வேறெவரும் வெளியிடாத 101 காட்சிகளின் சித்திரம்)

**பாபூ—என் தாய்** ... 0 12
(மனு காந்தி எழுதியது. தேசத் தந்தை குமாரி மனு காந்திக்கு மட்டும் தாயும் ஆனார். இது எப்படி என்பதைக் கதை கதையாக விளக்கும் நூல்) இரண்டாம் பதிப்பு

**பாப்பாவின் காந்தி** ... 0 12
(ஜுகத்ராம் தவே குழந்தைகளுக்காக எழுதிய காந்திஜியின் வாழ்க்கைச் சித்திரம்) மூன்றாம் பதிப்பு

## வினோபாஜியின் அறிவுரைகள்

**ஹைதராபாத் பிரசங்கங்கள்** ... 0 8
(ஹைதராபாத்திலும் மற்ற இடங்களிலும் வினோபாஜி செய்த பிரார்த்தனைப் பிரசங்கங்களின் தொகுப்பு)

**வீரபாண்டிப் பிரசங்கங்கள்** ... 0 8
(திருப்பூர் வீரபாண்டியில் செய்த பிரார்த்தனைப் பிரசங்கங்கள்—கதர் மூலம் கிராம ராஜ்யம், அரசியல் அதிகாரமும் ஊழியமும், பயிற்சி முகாமின் மகத்துவம் முதலிய விஷயங்கள் அடங்கியது)

**காந்திஜியின் குரல்** ... 0 6
(காந்திஜியின் நினைவு வரும்போதெல்லாம் படிக்கத் தக்க உயரிய நூல்) மூன்றாம் பதிப்பு

## தத்துவ நூல்கள்

**காந்தீய நவநீதம்** ... 2 0
(கிஷோரிலால் மஷ்ரூவாலா எழுதியது. "மிகப் பரந்த விஷயங்களை சகோதரர் கிஷோரிலால் சுருங்கச் சொல்லி விளக்கியிருப்பது இதன் சிறப்பாகும்" என்று காந்திஜி பாராட்டிய 'காந்தி விசார் தோஹனி'ன் மொழிபெயர்ப்பு) இரண்டாம் பதிப்பு

**கதர் தத்துவமும் சேவையும்** ... 0 12
(நா. ராமசுவாமி எழுதியது. சர்க்கா சங்கத்தின் இலட்சியம், வேலை முறை, சம்பூர்ண கிராம சேவை முதலியவற்றை விளக்குவது)

| | ரூ. அ. |
|---|---|
| **ராட்டைப் புரட்சி** | ... 0 6 |

(தீரேந்திர மஜும்தார் எழுதியது. ராட்டை மூலமாக அஹிம்சைப் புரட்சி ஏற்படுவதை விளக்கும் நூல்) இரண்டாம் பதிப்பு

**சுயராஜ்யமும் சர்க்காவும்** ... 0 8

(தீரேந்திர மஜும்தார் எழுதியது. சுதந்திரம் கிடைத்த பின்பு கதரின் அவசியம் என்ன என்ற கேள்விக்கு ஆணித்தரமான பதில்கள் அடங்கியது)

**சுயராஜ்யத்தின் உண்மைப் போர்**-முதல் பாகம் ... 0 3

„ „ இரண்டாம் பாகம் ... 0 3

(தீரேந்திர மஜும்தார் எழுதியது. உண்மையான சுயராஜ்யப் போராட்டம் இனிமேல்தான் ஆரம்பிக்க வேண்டும் என்பதை விளக்குவது)

**இதென்ன சுயராஜ்யம் ?** ... 0 3

(தீரேந்திர மஜும்தார் எழுதியது. இந்த சுயராஜ்யத்தால் என்ன பயன், யாருக்குப் பயன் என்பதைக் கூறுவது)

## கதர் சாஸ்திரம்

| | | | |
|---|---|---|---|
| **நூற்புக் கணிதம்** | முதல் பாகம்— | 3-ம் பதிப்பு | ... 0 6 |
| | இரண்டாம் பாகம் | „ | ... 0 8 |
| | மூன்றும் பாகம் | | ... 0 14 |
| | நான்காம் பாகம் | | ... 1 0 |

(கிருஷ்ணதாஸ் காந்தி எழுதியது. கதர் சாஸ்திரத்திலும் கணிதத்திலும் முதல் ஸ்தானம் பெற்ற நூல்)

**நூற்புக் கலையின் நுணுக்கங்கள்** ... 1 0

(கிருஷ்ணதாஸ் காந்தி எழுதியது. நூற்போருக்கு வேண்டிய எல்லா விவரங்களும் கொண்டது) மூன்றும் பதிப்பு

**தக்ளியால் நூற்பதெப்படி ?** ... 0 8

(சத்தியன் எழுதியது. தக்ளியைப் பற்றிய விரிவான சாஸ்திரீய நூல்) மூன்றும் பதிப்பு

**கைராட்டை : அதன் சரித்திரமும் புத்துயிரும்** ... 1 8

(புன்தம்பேகர், என். எஸ். வரதாச்சாரி எழுதியது. காந்திஜியின் முன்னுரை கொண்டது ; பரிசு பெற்ற நூல்) இரண்டாம் பதிப்பு

| | ரூ. அ. |
|---|---|
| **கிஸான்-பெட்டி-ஈரிழை ராட்டை** (பிரபாகர் திவான் எழுதியது. இந்த ராட்டைகளின் யந்திர நுணுக்கம், உபயோகிக்கும் விதம் முதலான எல்லா விவரங்களும் அடங்கியது) | ... 1 0 |
| **நரம்பு செய்தல்** (சத்தியன் எழுதியது. பஞ்சடிக்கும் ஸ்தலங்களிலேயே நரம்பு செய்யும் எளிய முறையை இதில் காணலாம். வினோபாஜியின் முன்னுரையுடன் கூடியது) | ... 0 8 |
| **பட்டை போட சுலப வழி** (கேசவ் தேவ்தர் எழுதியது. வீட்டிலேயே சுலபமாகப் பட்டை போடும் வழியை விவரிப்பது) இரண்டாம் பதிப்பு) | ... 0 4 |
| **பருத்திப் பிரச்னை** (பருத்திச் சாகுபடி பற்றிய எல்லா விவரங்களும் அடங்கியது) | ... 0 6 |

## ஸமக்ரசேவை நூல்கள்

| | |
|---|---|
| **மலஜல சுத்தி** (வல்லபசுவாமி எழுதியது. கிராம சமூக சேவைத் தொண்டர்களுக்கு உகந்த கைப்புத்தகம்) | ... 0 8 |
| **சுயம்பூர்ண கிராமம்** (ஆராய்ச்சிக்குப் பின் ஆதாரபூர்வமாகக் கொடுக்கும் விவரங்களை இதில் காணலாம்) | ... 0 5 |
| **புக்கர் வாஷிங்டன்** (வ. வே. சு. ஐயர் எழுதியது. தன்னம்பிக்கையாலும் முயற்சியாலும் தாழ்த்தப்பட்ட சமூகத்தை உயர்த்திய நீக்ரோ மகானின் சரித்திரம்) இரண்டாம் பதிப்பு | ... 0 8 |
| **தன்னம்பிக்கை** (எமர்ஸன் எழுதியது. வ. வே. சு. ஐயரின் மொழி பெயர்ப்பு) மூன்றும் பதிப்பு | ... 0 12 |
| **துப்புரவு விஞ்ஞானம்** (தீரேந்திர மஜும்தார் எழுதியது. சமூக சேவை செய்வோருக்கும் பள்ளிக்கூடங்களுக்கும் இன்றியமையாத நூல்) 2-ம் பதிப்பு | ... 0 8 |

---

**ஸர்வோதயப் பிரசுராலயம்**

தேவ்ஜி காலனி :: திருப்பூர்